அனைத்திந்திய நூல் வரிசை

# மய்யழிக் கரையோரம்

மலையாள மூலம்

எம். முகுந்தன்

தமிழாக்கம்

இளம்பாரதி




நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# முன்னுரை

நூற்றாண்டுகால மலையாள நாவல் வரலாற்றை மூன்று கட்டங்களாகப் பிரித்து விவாதிப்பது இந்த இலக்கியப் பிரிவின் ஆராய்ச்சிக்கு உதவியாக இருக்கும். இவ்வாறு கூறும்போது அவற்றுள் சில உபகட்டங்களைக் காணத் தேவையில்லை என்பதை மனதில் கொள்ள வேண்டும். சமூக நாவல் அரங்கத்தில் சந்துமேனோனுக்கும், வரலாற்று நாவல் அரங்கத்தில் ஸிவி. ராமன்பிள்ளைக்கும் உள்ள இடம் அவர்களுடைய சந்ததிகளின் காலத்தில் மேம்பட்டிருக்கிறது. அவர்கள் விட்டுச் சென்ற பாதையில் சில நாவலாசிரியர்கள் அவர்களுக்குப் பிறகு கால் நூற்றாண்டுக் காலத்திற்குத் தொடர்ந்து நடந்தார்கள் என்றாலும், சராசரியிலிருந்து உயர்ந்து நிற்கின்ற படைப்புகள் மூன்றோ நான்கோ மட்டுமே அக்காலகட்டத்தில் உருவாகியிருந்தன என்பதே முழு உண்மை. இரண்டாம் கட்டம் தொடங்குவது அதற்குப் பின் நாற்பது ஆண்டுகளில், கேசவதேவும் தகழியும் சிறுகதையிலிருந்து விலகிச் சென்று பெரிய பின்புலம் கொண்ட கதைகளில் பிரவேசிக்கும்போதுதான். புனைவியலை முற்றாக ஒதுக்கிவிடாமல் யதார்த்தப் போக்கின் மூலம் சாதாரண மக்களின் வாழ்க்கையையும், அவர்களுடைய பிரச்சினைகளையும் ஓர் அறைகூவல் முழக்கத்துடன் வெளியிடும் முயற்சியில் இவர்கள் பெரிதும் முன்னேற்றம் கண்டார்கள். இந்தக் காலகட்டத்தில் மலையாள நாவல், எண்ணிக்கையிலும் வகைப்பாட்டிலும் பெரிதும் மலர்ச்சி பெற்றது. அறுபதுகளில் ஆரம்பிக்கும் மூன்றாவது கட்டம் என்பது நவீன கதையின் புறப்பாடு குறிக்கும் ஓர் எல்லைக்கோடு. எம்டி.வாசுதேவன் நாயர், பாறப்புறத்து முதலிய ஏராளமான நாவலாசிரியர்கள் பெயரெடுத்ததே இந்தக் காலகட்டத்தில் தான்; ஏறத்தாழ கடந்த கால் நூற்றாண்டில், இந்தத் தலைமுறையில் மறக்க முடியாத ஒரு நாவலாசிரியர்தான் 'மய்யழிக் கரையோரம்' (மய்யழிப்புழயுடெ தீரங்களில்) என்ற இந்த நாவலின் படைப்பாளியான எம்.முகுந்தன். (பிறப்பு 10-9-1942).

இவருடைய படைப்புகளான ஆவிலாயிலே சூர்யோதயம், டெல்லி, ஈலோகம் அதிலொரு மனுஷ்யன், ஹரித்துவாரில் மணிகள் முழங்குன்னு, ராவும் பகலும், தெய்வத்தின்றெ விக்ருதிகள் ஆகிய நாவல்களும் சில சிறுகதைத் தொகுதிகளும் மலையாளத்திற்குப் பரிசாகக் கிடைத்திருக்கின்றன. ஒவ்வொரு நாவலுக்கும் அதனதன் நோக்கமும் தனித்தன்மையும் உண்டென்பது உண்மைதான். ஆனாலும் "மய்யழிக் கரையோரம்" என்ற இந்த நாவலுக்கு, மலையாள நாவல்களின் மத்தியில் மட்டுமல்லாமல் இந்திய நாவல்களின் மத்தியிலும் ஒரு தனித்த இடம் உண்டு என்பதுதான் என்னுடைய தீர்மானமான

தீர்மானமான கணிப்பு. ஒரு கலப்பு சமூகத்தின் தேய்வை இவ்வளவு நுணுக்கப் பொலிவுடனும் ஆழமாகவும், அதே சமயம் இதயம் கவரும் முறையிலும் சித்திரித்துள்ள நாவல்கள், இந்திய மொழிகள் அனைத்தையும் எடுத்துக்கொண்டாலும் மிகவும் அரிதென்றே கூறலாம். பல நிறங்களும் இயல்புகளும் கொண்ட ஐரோப்பிய நாகரிகங்கள் இந்திய மண்ணைக் கைப்பற்றத் தொடங்கி ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகள் ஆகிவிட்டன. அவற்றிடையே பிரிட்டன் மூலமான நாகரிகத் தாக்கம் அதிகமாகப் பரவியது. ஆனால் போர்ச்சுக்கீசு, டச்சு, பிரான்ஸ் ஆகிய நாடுகள் மூலமான தாக்கம் சில பிரதேசங்களில் அதிக வலுவாகவும் முனைப்பாகவும் ஏற்பட்டதாகக் கருத வேண்டும். அவற்றில் பிரெஞ்சு ஆட்சி மூலமான நாகரிகக் கலப்பு ஏற்பட்ட இரண்டு காலனிகள் - பாண்டிச்சேரி, மாஹி (மய்யழி) என்ற பிரதேசங்கள்.

கேரளத்தில் கோழிக்கோடு, கண்ணனூர் ஆகிய மாவட்டங்களுக்கு நடுவே ஒன்பது சதுர கிலோமீட்டர் பரப்பளவு மட்டுமே உள்ள ஒரு சிறிய இடம்தான் மய்யழி. பிரெஞ்சு நாகரிகமும் மலையாள நாகரிகமும் இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேலாகக் கலந்திணைந்த ஓர் அடையாளக் குறியீடு இந்த மய்யழி. 1981-இல் எடுக்கப்பட்ட மக்கள்தொகைக் கணக்கின்படி மய்யழியின் மக்கள் தொகை 28,413 மட்டுமே. உலகத்தின் முக்கிய நாகரிகங்களில் ஒன்றான பிரெஞ்சு நாகரிகத்தின் தொடர்பு உண்டாக கேரளத்தில் வாய்ப்பாக அமைந்த ஓரிடம் இந்த மய்யழி. நாகரிகத்துடன் அதிகத் தொடர்பில்லாதவர்கள் என்ற போதிலும் குடிப்பழக்கம் உள்ளவர்களுக்கு மய்யழி மறக்க முடியாத ஓரிடமாக அமைந்திருந்தது; குறிப்பாக, சுற்று வட்டாரத்தில் மதுவிலக்கு கடுமையாக இருந்தபோது, அரபிக்கடலும் மய்யழி ஆறும் சங்கமமாகும் இந்தக் கடற்கரைப் பகுதி ஒரு பிரெஞ்சுக் காலனி ஆனது 1741-இல். பின்னர் 1947-ஆகஸ்டில் பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து இந்தியா சுதந்திரம் பெற்றுவிட்ட போதிலும் பாண்டிச்சேரி, மய்யழி, கோவா ஆகிய பிரதேசங்கள் காலனிகளாகவே தொடர்ந்தன. ஆனால் சுதந்திரப் போராட்டக் காற்று அங்கேயும் வீசாமலிருக்கவில்லை. மய்யழியில் எழுந்த தீவிரப் போராட்டத்தின் பலனாக 1948-அக்டோபரில் அந்தப் பிரதேசம் தற்காலிகமாகச் சுதந்திரம் பெற்றது. அதிகக் கால இடைவெளி இல்லாமல் அது மீண்டும் பிரெஞ்சுக் காரர்களின் .காலனி ஆதிக்கத்தின்கீழ் வந்தது. அதற்குப் பிறகு ஆறு ஆண்டுகள் வரை தொடர்ந்து போராடியதன் விளைவாக 1954-இல் பிரெஞ்சுக் காரர்கள் மய்யழியைவிட்டு சொந்த நாட்டிற்குத் திரும்பிப் போனார்கள். இந்தப் போராட்ட நிலையை மையமாக்கி, அங்கே அரசியலும் சமூக உணர்வும் நாகரிகமும் சார்ந்த வாழ்க்கைப் போக்குகளைச் சித்திரித்துப் புனைந்த ஒரு கதைச் சிற்பம்தான் முகுந்தனுடைய இந்த நாவல்.

இந்தப் படைப்பு ஒரே சமயத்தில் ஒரு வட்டாரத்தின் கதையும், அங்கேயுள்ள ஒரு குடும்பத்தின் கதையும், அதிலுள்ள ஒரு தனி மனிதனின் கதையும் ஆகும். சமுத்திரமும் நதியும் சங்கமிக்கும் கேரளத்தின் இதர பிரதேசங்களைப் போல வேளாண்மை, மீன்பிடித்தல், நெசவு முதலிய தொழில்கள் செய்யும் சாதாரண மக்களின் ஊர்தான் மய்யழி. அங்கே பல

மதக்காரர்களும் ஜாதிக்காரர்களும் உண்டு. இருநூறுக்கும் அதிகமான ஆண்டுகள் பிரான்சின் நாகரிகம், தனது பல வகை கௌரவங்களுடன் நிலைத்திருந்த ஒரு சிறிய காலனியாகத்தான் நாம் மய்யழியை இந்த நாவலில் காண்கிறோம். உயர்தர வாழ்க்கை வசதிகளைப் பெற்றிருந்த வெள்ளைக்காரர்களைத் தெய்வத்தைப் போல மதிக்கவும் போற்றவும் செய்யும் சாதாரணமானவர்களே அங்கிருந்த மக்களில் பெரும்பகுதியினர். அன்னியர் நடத்திக் கொண்டிருந்த சுரண்டல் நடவடிக்கைகளின் இரகசியத்தைப் புரிந்துகொண்டு அவர்களை விரட்டுவதற்கான வழிகளைக் குறித்து ஆராயும் அறிவுஜீவிகளும் அந்தக் கூட்டத்தில் இல்லாமலில்லை.

இந்த நாவலில் மிகவும் குறிப்பிடத்தக்க பாத்திரம் - தாசன் என்ற இளைஞன். ஒரு சாதாரண குடும்பத்தில் பிறந்த இவன் படிப்பில் அதிக கெட்டிக்காரன் என்பதால் ஊர்க்காரர்களின், ஆட்சியாளர்களின் பார்வையில் செல்லமாக வளர்ந்து வருகிறான். சாதாரணமான ஒருவனுக்குக் கிடைப்பதான ஏற்றமும் பிற உன்னத நிலைகளும் தருவதாக இந்த இளைஞனின் கையில் வந்து சேர்ந்த அரிய வாய்ப்புக்களை நிராகரித்துவிட்டு ஒரு சோக நாயகனாகி முடிந்த கதை நெஞ்சில் நிலைத்திருக்கும். அவனுடைய குடும்பச் சூழ்நிலை என்ன? தாசனின் தந்தையான தாமுவுக்கு பெரிய படிப்பு எதுவும் இல்லாவிட்டாலும் வெள்ளைக்காரர்களின் உதவியால் ஒரு ரைட்டர் வேலை கிடைத்தது. கெட்டிக்காரனான தாசனைப் பாண்டிச்சேரிக்கு அனுப்பிப் படிக்க வைத்து பெரிய உத்தியோகஸ்தனாக ஆக்கவேண்டுமென்பது அவருடைய குடும்பத்தின் ஒவ்வோர் உறுப்பினருடைய ஆசை.

இந்த நாவலில் சிறப்பம்சம் - துடிப்புமிக்க கதாபாத்திரமான குறும்பியம்மா-தாமுரைட்டரின் அம்மா. அவளுக்குப் படிப்பறிவு இல்லாவிட்டாலும் சில வெள்ளைக்காரர்களை நட்புறவுடன் பராமரிப்பதில் அவள் வெளிப்படுத்தும் கனிவு, கவரும் தன்மையது. அவளுடைய யானைத்தந்த மூக்குப்பொடி டப்பி இந்தக் கதையில் ஒரு மந்திரசக்தி வாய்ந்த சின்னமாக விளங்குகிறது. அந்தப் பொடியால் அவள் மயக்கி வென்றவர்களில் மிகவும் முக்கியமானவர் லெஸ்லீதுரை என்ற சுமுகமான வெள்ளைக்காரர். குதிரைவண்டியில் பயணம் செய்யும் அவர் குறும்பியம்மாவின் வீட்டிற்கு அருகில் வரும்போது வண்டியை நிறுத்தி அவளுடைய உபசரிப்பை ஏற்றுக் கொள்வது ஒரு நியதியாக இருந்தது. அதில் குறம்பியம்மாவுக்கும் பெரிய பிடிப்பு உண்டாகியிருந்தது.

அரசாங்கத்தின் உதவியுடன் பாண்டிச்சேரி கல்லூரியில் சேர்ந்து, படித்து முடித்து முதலிடம் பெற்ற தாசன் மய்யழியை வந்தடைந்தபோது உயர்ந்த உத்தியோகமோ, பாரிசில் மேற்படிப்பை ஏற்றுக் கொள்வதற்கான வசதியோ, விருப்பப்பட்டதைச் செய்து தர வாக்குறுதி கொடுத்த ஒரு கடிதம் மூப்பன்துரையிடமிருந்து கிடைத்தது. தாமுரைட்டரும் மனைவியும் அவர்களுடைய ஒரே மகளான கிரிஜாவும் அதில் பெரும் மகிழ்ச்சி அடைந் தார்கள். குறும்பியம்மாவைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். அவரவர்க்குப் பழக்கமான ஒரு கனவு உலகத்தில் திளைத்தார்கள் என்றுதான் கூற வேண்டும். "அவன் கோட்டும் தொப்பியும் அணிந்து ஒரு துரையைப் போல வருவான்." குறும்பியம்மாவுக்கு அவனைப்பற்றி எப்போதும் இதே கனவு.

மய்யழியில் வாழ்க்கை நாடகங்களின் நேரடி சாட்சி இந்தக் கிழவி. இவர்களை யெல்லாம் நிராசைக்குள்ளாக்கிவிட்டு தாசன் திசை மாறினான். காரணம் தன்னுடைய குருநாதரான குஞ்ஞனந்தன் மாஸ்டரின் பிரேரணைக்கு ஆட்பட்டு அவன் சிந்தித்து முடிவெடுத்து, நாட்டின் சுதந்திரத்துக்காகவும் முன்னேற்றத் திற்காகவும் தியாகம் செறிந்த ஒரு வாழ்க்கைப் பாதையை ஏற்க வேண்டும் என்பதுதான்.

வெள்ளைக்காரர்களின் கூட்டத்தில் குடித்துவிட்டு மயங்கித் தான் தோன்றித்தனமான வாழ்க்கை நடத்துபவர்களும், அவ்வாறல்லாத சில நல்ல மனிதர்களும் மய்யழியில் உண்டு. அதைப்போலவே கலப்பினக் காரர்களான சட்டைக்காரர்களின் கூட்டத்திலும் இருவகையானவர்களும் இருந்தார்கள். மய்யழிக்காரர்களில் பெரும்பான்மையானவர்கள் வெள்ளைக்காரர்களிடமிருந்து கிடைப்பதான ஒத்தாசைகளுக்காகவும் உதவிகளுக்காகவும் வேண்டி எந்த வேடமும் புனைவதற்குத் தயங்காதவர்கள். இந்த நாவலின் கதாபாத்திரங்களில் இயல்பாகவே வேறுபடை போடும் சில ஜோடிகள் உண்டு. தாசனும் அச்சுவும், கிரிஜாவும் சந்திரிகாவும். இரு பாலார்க்கும் காதல் வாழ்வில் தடைகளும் வைராக்கியங்களும் இருந்தன. எப்போதும் கத்தியுடன் நடப்பவனும், எதையும் செய்யத் தயங்காதவனுமான ஒரு ரவுடி அச்சு. இந்தக் கொடூரநெஞ்சன் தாசனின் சகோதரியும் தன்னை வெறுப்பவளுமான கிரிஜாவைச் சொந்த மாக்கிக் கொள்ள மற்றொரு பிறவி எடுத்தது போல மனமாற்றம் பெறும் கதை சுவையானது. கத்திக்குப் பதிலாக ஏதோ ஓர் ஆயுதத்தைப் பிரயோகித்து அவன் கிரிஜாவை அடைகிறான். 'அன்பினால் நான் உன்னுடைய கண்ணீரைத் துடைப்பேன். அன்பினால் நான் என்னுடைய கடந்த காலத்தைச் சுட்டெரித்து அழிப்பேன். அன்பினால் நான் உன்னைப் பணியச் செய்வேன்.' என்கிறான். அது நடக்கவும் செய்தது.

அதே சமயம், எல்லா வகையிலும் நல்லவனான தாசன் தனது காதலியான சந்திரிகாவுடன் உறுதியான பந்தத்தில் ஆட்படுவதில் வந்து சேரும் இடர்பாடுகளை அறியும்போது, சிலர் அவதிப்படவும் அழியவும் விதிக்கப்பட்டவர்களோ என்ற பெரிய கேள்வி நமக்கு எழும். இந்த பந்தத்தைப் பெரிதும் எதிர்க்கும் நபர் சந்திரிகாவின் தந்தை பரதன்தான். தாசன் அவரைப் பார்த்துக் கடைசியில் நேரடியாக ஒரு வேண்டுகோள் விடுக் கிறான்: "அறிவு தெரிஞ்சதிலேருந்து ஒருநாள்கூட மன அமைதியோட நான் இருந்ததில்லே. மய்யழியோட சுதந்திரம் மத்த எல்லாருடைய கண்ணீரையும் முடிவுக்குக் கொண்டு வந்திரிச்சி, என்னோடதைத் தவிர. இன்னிக்கு என்னோட ஒரே சந்தோஷம் சந்திரிகாதான். அவ இல்லேன்னா எனக்குப் பைத்தியம் பிடிச்சிரும்." அப்போது தியாகமூர்த்தியான தாசனுக்குப் பரதனிட மிருந்து கிடைத்த பதில் எவருடைய இதயத்தையும் பிளப்பதாக இருந்தது. "உனக்குப் பைத்தியம் பிடிக்காம இருக்கிறதுக்காக என் மக விபச்சாரம் பண்ணணும்னு நீ சொல்றியா?" கடைசியில் கற்பிதக் குறியீடான வெள்ளியாங்கல்லைச் சுற்றிப் பறக்கும் தும்பிகளாகத் திரியவே தாசனுக்கும் சந்திரிகாவுக்கும் முடிந்தது. அதே சமயம் தாசனுடன் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த பலர் உன்னத இடங்களை எட்டிப் பிடித்து லௌகிக சுகங்

களைத் தாராளமாக அனுபவித்தார்கள். இதுதான் மய்யழிக் கரையோர வாழ்க்கையில் நாம் சந்திக்கு அவலம்.

ஒரு கலப்பு நாகரிகத்தின் சிறப்புக்கள். குறிப்பாகவும் பொதுப்படை யாகவும் முடிவடைவது பற்றி உணர்வூட்டமும் கலைநயமும் கொண்ட முகுந்தனுடைய இந்த நாவலில் முதலிலிருந்து கடைசி வரை காண்கிறோம். அதில் நாட்டு வழக்குகளும் பிரெஞ்சு கலந்த பிரயோகங்களும் அவர் ஏற்றுக் கொண்ட செயற்பாட்டை எதார்த்தமாக்குகின்றன. குறம்பியம்மாவின் அரட்டைத்தனமான கிளைக்கதைகள் மூலம் குழந்தைகளுக்குக் கிடைக்கும் உபாக்கியானங்கள் (இடையச் சிறுமி குபேரன் செட்டியார் கதைகளும் குருட்டு நம்பிக்கைகளும்) இந்தச் சூழ்நிலைக்கு ஒரு பின்னணி அமைத்து மினுக்குகின்றன என்று கூறவேண்டும். கார்ட்டூனில் அமைவதான குறைவான கோடுகள் போன்று குறைவான சொற்களைப் பயன்படுத்தி அதிக பலத்தை ஊட்டுவதான வர்ணனைகளும், உருவகமாக மொழியைப் பிரயோகித்து உண்மைகளை வெளிப்படுத்தும் திறமையும் இந்தப் படைப்பின் தனிச்சிறப்பு என்று கூறவேண்டும்.

சில எடுத்துக்காட்டுகளைக் கூறுகிறேன்:

> மய்யழிக்கு மேலே கருத்த அமாவாசை இருட்டு அழுகிக் கிடந்தது. இருட்டில் கத்திமுனை மின்னியது. மரணத்தின் பற்களைப் போன்று.
>
> நகைகள் அணிந்தும் சரிகை உடுத்தியும் அவள் நடந்தால் மய்யழியில் ஆண்களுக்குத் தூக்கம் கெடும்.
>
> குன்றின் அடிவாரத்தில் புயல்காற்றை கர்ப்பம் தரித்த கடல் சலனமற்றுக் கிடந்தது.
>
> சமுத்திரமும், நதியும் சங்கமித்ததற்கு நான் போய் நின்று சாட்சியம் வகித்த ஆற்றின் மேலாகப் பாலம்.
>
> அடுத்த நாள் வானம் கர்ப்பவதி ஆயிற்று. அதைத் தொடர்ந்து முறைப்படியான பிரசவம் போல மழை பெய்தது.

மய்யழியின் எல்லா வேறுபாடுகளோடும் கலப்புகளோடும் உயர்வு தாழ்வுகளோடும் இணைந்த ஓர் ஒட்டுமொத்த சித்திரம் நமக்கு இந்த நாவலில் கிடைக்கிறது. ஐரோப்பிய நாகரிகத்தின் ஆன்மீகச் சின்னங்களான சிலுவைகளும் தேவாலயங்களும், லௌகிகச் சின்னங்களான மதுக்கடைகளும் வேசி இல்லங்களும் அங்கே உண்டு. அதைப் போன்றே நாட்டுப்புற வாழ்க்கையின் மேன்மைகளும் குறைபாடுகளும் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. இரண்டும் சேர்ந்து இடைகலந்த இந்தக் கலப்பு நாகரிகத்திற்கு அதற்குரிய தனித்தன்மை உண்டென்று கூற வேண்டியதில்லை அல்லவா! காரணம், உணர்வுள்ள ஒரு நாகரிகம் சலனமற்றுத் தேங்கிக் கிடப்பதில்லை. அது எடுக்கவும் கொடுக்கவும் செய்யும். அவ்வாறான கொடுத்து வாங்கும் பரிமாற்றத்தின் மூலம் நாகரிகத்தொடுவானம் பரந்திருக்கும் சிறிய மய்யழியின் துடிப்பான ஓர் ஏடுதான் சிறப்பு மிக்க இந்த நாவல்.

**1-4-1991**

—முனைவர் கே.எம். ஜார்ஜ்

# 1

முன்னர், அதாவது தாசனின் பிறப்புக்கு முன்பு:

விசாலமான ற்யூ த் றஸிதாம்ஸ் நெடுஞ்சாலை அப்போது சமனமற்றதும் குறுகலுமான ஒரு சாலையாக இருந்தது. ற்யூ த லா ப்ரிஸோம், ற்யூ த்யு கூவர்ண மாம் முதலிய மற்ற நெடுஞ்சாலைகளும் அதைப் போலத்தான் இருந்தன. கடல்பாலத்தில் கடலையும் ஆற்றையும் கரை அமைப்பாகப் பிரித்து வைக்கும் வெளுத்த மதிலோ, அதனருகில் வரிசையாக நின்று சமுத்திரத்தையும் நதியையும் ஒளிரச் செய்யும் மின்சார விளக்குகளோ அப்போது ஏற்பட்டிருக்கவில்லை. ற்யூ த் லெக்லீஸ், ற்யூ த் றஸிதாம்ஸ் முதலிய பிரதான சாலைகளில் மட்டும் அதிக தூரம் இடைவெளி விட்டு ஊன்றிய மரக்கம்பங்களில் எண்ணெய் விளக்குகள் மங்கலாக எரிந்துகொண்டிருந்தன. பாதி இரவுக்கு முன்னதாகவே விளக்குத் திரி எரிந்து பொசுங்கி மய்யழி ஊரை இருட்டில் ஆழ்த்திவிடும்.

'குன்றின் உச்சியில் மூப்பன்துரையின் பங்களாவில் மட்டும் நள்ளிரவு கடந்தாலும் சர ராந்தல்கள் பிரகாசித்துக்கொண்டிருக்கும். பங்களாவின் பின்புறம், குன்றின் அடிவாரத்தில் சமுத்திரம். பங்களாவின் ஜன்னல்களினூடே பாயும் சர ராந்தல்களின் வெளிச்சம் ஜன்னல்களின் தோற்றமாய்த் தண்ணீரில் பரந்து கிடக்கும். சூரியன் உதித்து உயரும்போது கழிமுகக் கடலோரம் சென்று நின்று நோக்கினால் பைன் மரங்களின், யூகலிப்டஸ் மரங்களின் பின்னணியில் மூப்பன்துரையின் மனோகரமான பங்களா சமுத்திரத்தில் பிரதிபலித்துக்கொண்டிருப்பதைக் காண முடியும்.

அக்காலத்தில் மூப்பன்துரையைத் தவிர வேறு யாருக்கும் கார் இருக்கவில்லை. தாவீதுதுரை, நொத்தேர் லெஸ்லீதுரை, மேயர் செக்குமூப்பர், ஸெர்ழாம் ஆம் றெத்ரேத் குஞ்ஞிக்கண்ணேன் முதலியோர் குதிரை வண்டிகளில்தான் பயணம் செய்தார்கள். அவர்களுக்குச் சொந்தமாக வண்டிகளும் குதிரைகளும் இருந்தன. வண்டிக்காரர்களும் இருந்தார்கள். கூட்டத்தில் மிகவும் நல்ல குதிரை, கலப்பினக்காரரான லெஸ்லீதுரையினுடையதுதான்.

"லெஸ்லீதுரையோட குதிரேல்ல, அதொரு மாதிரிக் குதிரையாக்கும்." குறம்பியம்மா சொல்வாள். "தலையைத் தூக்கிக்கிட்டுப் பாய்ற அதோட பாய்ச்சலைப் பார்க்கணுமே!"

வெள்ளை நிறத்ததும், அதிக ரோமக்குஞ்சம் கொண்டதும், துடிப்புள்ளதுமாயிருந்தது லெஸ்லீதுரையின் குதிரை.

மூப்பன்துரையின் கார் கப்பலில் வந்திறங்கியது. மய்யழி ஊர்மக்கள் அதுவரை காரைப் பார்த்ததே இல்லை. முதுகு வழியாகத் தீயும்

புகையும் துப்பிக்கொண்டு தினமும் இரண்டு தடவை ஒரு பஸ் மய்யழியின் ஊடாகக் கடந்து போவதுண்டு - அதிகாலையில் வடக்குத் தலைச்சேரிக்கும், சாயந்திரம் திரும்பித் தெற்காக வடகரைக்கும். அந்த பஸ் மட்டுமல்லாமல் மய்யழியின் மக்களுக்குப் பார்க்க வாய்ப்பளித்த மற்றொரு மோட்டார் வாகனம்—அடிக்கடி வடகரைச் சந்தைக்குப் போகவும் வரவுமாக இருக்கும் ஒரு லாரியாகும்.

“கொறம்பியம்மா, நீங்க கார் பாக்கப் போகலியா?”

உடுத்தி அலங்கரித்து கார் பார்ப்பதற்காகத் துறைமுகத்துக்குப் போய்க் கொண்டிருந்தாள் குஞ்ஞிச்சிருதை அவள் அந்தக் காலத்தில் நாடறிந்த ஒரு விபசாரியாயிருந்தாள். குஞ்ஞிச்சிருதையின் பெயர் கிழக்கே பாண்டிச்சேரி வரையிலும் வடக்கே மங்கலாபுரம் வரையிலும் பரவியிருந்தது.

குஞ்ஞிச்சிருதையை ஆராதித்து வந்தவர்களில் முக்கியமானவர் நியாயாதிபதியான தாவீது துரை.

“காரை எனக்கும் பாக்கணும்னு இருக்கு குஞ்ஞிச்சிருதே”

“அப்படின்னா என்னோட வாங்களேன் கொறம்பியம்மா.”

குஞ்ஞிச்சிருதை காத்திருந்தாள். ஆனால் குறம்பியம்மா தயங்கி நின்றாள்.

“தாமுகிட்ட ஒரு வார்த்தை சொல்லணுமில்ல?”

கார் துறைமுகத்தில் வந்திறங்கிவிட்டது என்றறிந்ததும் குறம்பியம்மாவுக்கு இருப்புக் கொள்ளவில்லை. தாமு விடியற் காலையிலேயே வெளியே போயிருந்தான். அவன் வந்ததும் அனுமதி பெற்றுக்கொண்டு போக வேண்டும். தாமுக்காகக் காத்திருந்த குறம்பியம்மா கண்ணில் எண்ணெய் விட்டபாதிரியாய் இருந்தாள்.

“நீங்க வரல்லியா கொறம்பியம்மா?”

சாலையில் நின்றபடி குஞ்ஞிச்சிருதை மீண்டும் கேட்டாள்.

“இங்கே வந்து உக்காரு. கொஞ்சம் சாயாத் தண்ணி குடி. அதுக்குள்ளாற தாமுவும் வந்திருவான்.”

“அய்யோ... பத்து மணிக்கு தாவீது துரை பங்களாவுக்குப் போகணுமே கொறம்பியம்மா...”

“அப்படீன்னா நீ நட...”

குறம்பியம்மா அலுத்துக்கொண்டாள். குஞ்ஞிச்சிருதைக்கு எப்போதும் அவசரம்தான்.

எவனோ ஒரு வெள்ளைக்காரன் அன்பளிப்பாகக் கொடுத்த சென்ட்டின் காட்டமான நெடியைப் பரப்பிக்கொண்டு குஞ்ஞிச்சிருதை நடக்கலானாள். மனது நிறைய மூப்பன்துரையின் காரைப் பற்றியதான எண்ணத்துடன் தாமுவுக்காகக் காத்திருந்த குறம்பியம்மா வெளியில் பார்த்துக்கொண்டிருந்தாள்.

தாமு வந்து சேர்ந்தபோது உச்சிப் பொழுதாகிவிட்டது.

“ஏண்டா, தாமு, நான் காரு பாக்கப் போகட்டுமாடா?”

“சாயங்காலம் ஆகட்டும், புழுதி வாரிப் போட்டால் கீழே விழாத கூட்டம் கடல்புறத்திலேருக்கு.”

மூப்பன்துரையின் காரைப் பார்ப்பதற்காக மய்யழி ஊர்மக்கள் எல்லாரும் துறைமுகத்தில் குழுமியிருந்தார்கள்.

சாயங்காலம் கூட்டம் குறைந்தபோது தாமு அம்மாவைக்

கூட்டிகொண்டு துறைமுகத்துக்குப் போனான். குறம்பியம்மா கண் நிறையக் காரைப் பார்த்தாள். அவளுக்கு அதை ஒரு தடவை தொட்டுப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் உண்டாயிற்று. ஆனால் காரைச் சுற்றிலும் ஆயுதமேந்திய போலீஸ்காரர்கள் காவல் நின்று கொண்டிருந்தார்கள்.

"அடியே கௌசு. . .

கார் பார்த்துவிட்டுத் திரும்பி வரும்போது சாலையில் நின்றபடியே குறம்பியம்மா கூப்பிட்டுச் சொன்னாள், "கண்ணாடி மாதிரி பளபளக்குது. முகம் பார்த்து பொட்டு வச்சிக்கலாம். நீ பார்த்தேயில்ல கௌசு. . ."

தூணில் சாய்ந்து நின்றபடி கௌசு சிரித்தாள்.

குறம்பியம்மா முற்றத்தில் காலை நீட்டி உட்கார்ந்திருந்தாள். மனம் நிறைய காரைப் பற்றியதான நினைப்புகள். அந்த நேரத்திலும் காரைப் பார்த்துவிட்டு ஆட்கள் திரும்பி வந்துகொண்டிருந்தார்கள். கூட்டத்தில் உன்னி நாயரும் நண்பர்களும் இருந்தார்கள்.

"நீயும் பார்த்தேயில்ல கொறம்பி?"

"பார்த்தேன் நாயரே, அதென்ன பளபளப்பு - கண்ணாடி மாதிரியில்ல மின்னுது!"

"ஆனா பிரான்சிலே இதைவிட ஓசத்தியான காருண்டு."

உன்னிநாயரின் பின்னால் கெந்திக்கெந்தி வந்த குஞ்சக்கன் தெரிவித்தான். தார்பூசிய மரக்கம்பங்களில் முனிசிபல் விளக்குகள் ஏற்றுபவன் குஞ்சக்கன். தோளில் ஏணியும் கையில் எண்ணெய் டின்னும் இருந்தன.

குஞ்சக்கன் சொன்னதைக் குறம்பியம்மா கேட்டாளா? நெடுந் தொலைவில் குதிரைக் குளம்படிகள். குறம்பியம்மா காது கொடுத்துக் கேட்டாள். முனைத் திருப்பத்தில் லெஸ்லீதுரையின் குதிரை வண்டி தென்பட்டது. சுழலும் மரச் சக்கரங்களின் கரகரப்போசை. குதிரையின் கழுத்தில் மணிகுலுங்கல்.

குதிரை வண்டி நிதானமாகக் குறம்பியம்மாவின் வாசல் முன்பாக வந்து நின்றது. தொப்பி அணிந்திருந்த தலையை வெளியே நீட்டி லெஸ்லீதுரை கேட்டார். "கொறம்பி, கொறம்பி, கொஞ்சம் பொடி தர்றியா?"

குறம்பியம்மாவிடம் யானைத் தந்தத்தில் செய்த ஒரு பொடிடப்பி இருந்தது.

"கொறம்பி, கொறம்பி, கொஞ்சம் பொடி தர்றியா?"

லெஸ்லீதுரை வழக்கம்போல் கேட்டார்.

"அதென்ன துரே, அப்படிக் கேட்கணுமாக்கும்?"

கேட்காமலேயே குறம்பியம்மா லெஸ்லீதுரைக்குப் பொடி கொடுக்க மாட்டாளா என்ன? அவள் முற்றத்தில் எழுந்து நின்றாள். முழுங்கால்வரை உடுத்தியிருந்த ஒரு முண்டு மட்டுமே ஆடை. காதுகளில் தங்கத்தாலான பெரிய தக்கைகள், கழுத்தில் அட்டிகை.

லெஸ்லீதுரை வண்டியிலிருந்து கீழே இறங்கினார். அவர் கால்சராயும் கோட்டும் அணிந்திருந்தார். கால்களில் ஓசையெழுப்பும் பாப்பாஸ் மிதியடி. அந்தக்காலத்தில் மய்யழியில் மிகவும் பெரிய பரிஷ்கார் பதவியிலிருந்தார் நொத்தேர் லெஸ்லீதுரை.

"உக்காருங்க துரை. . ."

குறம்பியம்மா உடுத்தியிருந்த முண்டினால் பெஞ்சைத் துடைத்து சுத்தம் செய்தாள். லெஸ்லீதுரை தலையிலிருந்து தொப்பியைக் கழற்றியபடி பெஞ்சில்உட்கார்ந்தார். தொப்பியை மடியில் வைத்துக்கொண்டார்.

"ஒரு சிட்டிகை போதும் கொறம்பி."

குறம்பியம்மா மடியிலிருந்து யானைத் தந்தத்தில் செய்த டப்பி எடுத்துத் துரைக்கு நேராக நீட்டினாள். துரை ஒரு சிட்டிகைப் பொடியை உள்ளங்கையில் எடுத்துக்கொண்டார். ரத்தம்போல் சிவந்த கை. மய்யழியில் வேறு எந்தக் கலப்பினத்தவர்களுக்கு உண்டு இந்த நிறம்? லெஸ்லீதுரையைப் பார்த்தால் அசல் வெள்ளைக்காரனென்றே தோன்றும்.

லெஸ்லீதுரை உள்ளங்கையிலிருந்து பொடியை நுள்ளியெடுத்து மூக்கில் உறிஞ்சினார். செவ்வந்திப் பூப்போன்ற சிவந்த முகம் மேலும் சிவந்தது. பொடியின் மயக்கத்தில் துரை கண்மூடி இருந்தார்.

"துரை, எனக்கொரு ஆசை. . ."

நிலைப்படியில் சாய்ந்தவாறு குறம்பியம்மா துரையைப்பார்த்தாள்.

"கொறம்பிக்கு என்ன ஆசை? அதை நிறைவேத்த நான் இருக்கேனில்ல!"

லெஸ்லீதுரை கண்ணைத் திறக்கவில்லை. பொடியின் மயக்கம் குறையும் வரை துரை இப்படிக் கண்மூடி இருப்பது வழக்கம்.

"துரை ஒரு காரு வாங்கணும்."

"காரா?"

"மூப்பன்துரையோட காரு போல ஒரு கார். கண்ணாடி மாதிரி பளபளக்கிற கார். பார்த்தா முகம் தெரியணும்."

"காரெதுக்கு கொறம்பி? நமக்குக் குதிரை வண்டி போதாதா?"

"இது ஒண்ணுதான் ஆசை. . ."

மூப்பன்துரையின் காரைப் பார்த்தபோது தொடங்கியதுதான் குறம்பியம்மாவின் இந்த ஆசை. கால்சராயும் தொப்பியும் அணிந்து கண்ணாடி போலப் பளபளக்கும் காரில் லெஸ்லீதுரை பயணம் செய்வதாக இதற்குள் எத்தனையோ தடவை குறம்பியம்மா கனவு கண்டுவிட்டாள்.

"வாங்க மாட்டீங்களா துரை?"

"அதுக்குப் பணம் வேண்டாமா கொறம்பீ? "

அந்தக் காலத்தில் ஒருகார்வாங்குவது என்பது ஒரு கப்பல் வாங்குவதைவிடக் கடினமாக இருந்தது. அந்தக் காலத்தில் ஆட்களுக்கு கார்களைவிட அதிகமான கப்பல்கள் இருந்தன அல்லவா?

ஆனாலும் கார்வாங்குவதைப் பற்றி யோசிக்கலாமென்று லெஸ்லீதுரை வாக்குக் கொடுத்தார். குறம்பியம்மாவுக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. துரைக்குப் பக்கத்தில் போய் நின்று இணக்கமாக அவள்கேட்டாள். "இன்னும் கொஞ்சம் பொடி வேணுமா?"

"ஒரு சிட்டிகை தாயேன்."

குறம்பியம்மா டப்பி திறந்து துரையின் உள்ளங்கையில் பொடியைத்தட்டிக் கொட்டினாள். பொடியின் மயக்கத்தில் துரையின் கண்கள் மீண்டும் மூடிக்கொண்டன.

"துரே, அந்த வாழையிலைக்கோரனோட சீக்குதீருமா துரே?"

"அவனுக்குப் புத்துநோயாக்கும்."

"அது தீர்ற சீக்கா துரே?"

"புத்து வந்தா தீருமா கொறம்பி?"

"அட கடவுளே! அவனும் குடும்பத்தாரும் திக்கில்லாதவங்களா ஆயிட்டாங்களே. . ."

வாழையிலைக் கோரன் கூலி வேலைக்காரனாயிருந்தான். பொண்டாட்டியும் பால்குடி மறக்காத மூன்று குழந்தைகளும் இருந்தார்கள். திடீரென்று கன்னத்தில் புற்றுநோய் வந்திருந்தது.

லெஸ்லீதுரையும் குறம்பியம்மாவும் அவ்வாறு ஊர்விவகாரங்களைப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஒன்றாகச் சேர்ந்து பொடி போட்டார்கள். அப்படியே அந்திப்பொழுதாகிவிட்டது.

"நான் வரட்டுமா கொறம்பீ?"

துரை எழுந்தபடி தொப்பியை எடுத்துத் தலையில் வைத்தார்.

"போறீங்களா?"

குறம்பியம்மாவின் குரலில் பிரிவாற்றாமையின் வேதனை.

"நாளைக்கும் நான் வருவேனில்ல கொறம்பீ?"

லெஸ்லீதுரை குறம்பியம்மாவைப் பார்த்துச் சிரித்தார்.

அவர் குதிரை வண்டியில் ஏறி மூப்பனின் பங்களாவுக்குத் திரும்பினார். அங்கே தினமும் இரவுகளில் குடியும் சாப்பாடும் நடக்கும். லெஸ்லீதுரை மட்டுமல்லாமல் தாவீதுதுரை, செக்குமூப்பர், ஸெர்மாம்ஆம் றெத்ரேத் குஞ்ஞிகண்ணேன் முதலியோர் மூப்பன்துரையின் நிரந்தர விருந்தாளிகளாயிருந்தார்கள். பங்களாவில் குடியும் சாப்பாடும் நடக்கும்போது வெளியில் வரிசை வரிசையாய் நிற்கும்குதிரை வண்டிகளில் படுத்து குதிரை வண்டிக்காரர்கள் கிறங்கிப்போவார்கள். குதிரைகள் அசைபோடும்.

நள்ளிரவு கழிந்தால்குடித்து போதையேறிய மூப்பன்துரையின் விருந்தாளிகளை ஏற்றிக்கொண்டு குதிரை வண்டிகள் வரிசையாக ற்யூத் றஸிதாம்ஸ் சாலை வழியாகப்போவதைப் பார்க்கலாம்.

மறுநாளும் லெஸ்லீதுரை வந்தார். தினமும் வெயில் சாயும்போது குறம்பியம்மா லெஸ்லீதுரைக்காக முற்றத்தில் காத்துக் கொண்டிருப்பாள்-நிரப்பப்பட்ட பொடிடப்பியுடன். லெஸ்லீதுரை தினமும் வருவார். குதிரை வண்டியை சாலையில் நிறுத்திவிட்டு தொப்பியணிந்த தலையை வெளியில் நீட்டிக்கொண்டு கேட்பார். "கொறம்பி, கொறம்பி, கொஞ்சம் பொடி வச்சிருக்கியா?"

"அதென்ன துரே? அப்படி ஒண்ணு கேக்கணுமாக்கும்?"

வழக்கம்போல் குறம்பியம்மா சொல்வாள்.

ஒரு நாள் லெஸ்லீதுரை வராவிட்டால் அன்று குறம்பியம்மாவுக்கு உறக்கம் வருவதில்லை.

குறம்பியம்மாவுக்கு நினைவு தெரிந்த முதல் ஐரோப்பியன், லெஸ்லீதுரையின் அப்பா க்லெமாம்துரைதான்! அசாதாரணமான உயரம் அவருக்கு. போதாதற்கு நரைத்த கொம்பன்மீசையும். ற்யூத் லெக்லீஸில் க்லெமாம்துரைக்கு சாராயக் கடை இருந்தது. சாராயம் விற்று அவர் ஏராளமான பணம் சம்பாதித்தார்.

சவடால் அடிக்கும் இயல்பு கொண்ட க்லெமாம்துரை சாராயக் கடையிலிருந்து கொண்டு தன்னுடைய குடும்பப் பெருமையைப் பற்றியும்,

தன்னுடைய பிள்ளைகளைப் பற்றியும் விவரிப்பார். க்லெமாம்துரையின் சவடால்களில் பிரசித்தமானதுதான் பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலீஷ்காரர்களுடன் இந்தியாவில் வைத்து யுத்தம் செய்த லாலிபிரபுவின் சந்ததி என்னும் தற்பெருமையாகும். அவருடைய நரம்புகளில் பிரெஞ்சு நாட்டு ரத்தம் ஓடுகிறதாம்.

"தைஸா தாம் த்யூ கோம்த் லாலி."(லாலிபிரபுவின் சந்ததியாக்கும்.)

சாராயக் குப்பிகள் நிறைந்து கிடக்கும் சின்ன அலமாரிகளுக்கு முன்பாக நெஞ்சு விரிய உட்கார்ந்து, மீசையை நீவிக்கொண்டு க்லெமாம்துரை சொல்வார்.

சாராயக்கடை வாடிக்கையாளர்களில் பெரும்பாலோர் போலீஸ்காரர்களாக இருப்பார்கள். பணப்பெட்டிக்குப் பின்னால் உட்கார்ந்துகொண்டு க்லெமாம்துரை சொல்லும் சவடால்களைக்கேட்டு, குடித்து போதையேறிய போலீஸ்காரர்கள் தலையாட்டுவார்கள். க்லெமாம்துரைக்கு அனுசரணையான நண்பர்களாக இருந்தார்கள் அவர்கள். நீண்ட பெஞ்சுகளில் வரிசையாக அமர்ந்து அவர்கள் சாராயம் குடிப்பார்கள். எதிரில் மேசைமீது இரைந்து கிடக்கும் சிவப்புத் தொப்பிகள்.

தன்னுடைய சவடால்களைக் கேட்டுப் போலீஸ்காரர்கள் தலையாட்டுவதைப் பார்க்கும்போது க்லெமாம்துரை மகிழ்ச்சியடைவார். அவர் வேலைக்காரர்களிடம் சொல்வார்.

"இன்னும் கொஞ்சம் சாராயம் ஊத்து நம்ம போலீசுக்கு."

வேலைக்காரர்கள் வள்ளல்களாகி அவர்களுடைய கிளாஸ்களில் கொஞ்சம் சாராயம் ஊற்றுவார்கள். அப்போது போலீஸ்காரர்கள் கிளாஸ் உயர்த்தி ஆரவாரத்துடன் சொல்வார்கள்.

"அலா ஸாம்த்தே த்யு தெஸாதாம் த்யு கோம்த் லாலி"

(லாலிபிரபுவின் சந்ததியான தங்களுடைய ஆரோக்கியத்துக்காவும் நீண்ட ஆயுளுக்காகவும் வேண்டி நாங்கள் குடிக்கிறோம்.)

அதைக் கேட்டு க்லெமாம்துரை தன்னுடைய நரைத்த கொம்பன் மீசையை நீவியபடி பணப்பெட்டியின் பின்புறம் உட்கார்ந்திருப்பார்-பாதி மூடிய கண்களுடன் விட்டேத்தியாக.

இரவு மிகவும் தாமதமாகவே போலீஸ்காரர்கள் வெளியேறுவார்கள். சந்தடியற்றிருக்கும் ந்யூ த் லெக்லீசினூடே பிரெஞ்சிலும் தமிழிலும் மலையாளத்திலும் க்லெமாம் துரையின் பெருமைகளைப் பாடிக்கொண்டு தள்ளாடும் கால்களுடன் அவர்கள் நடந்து போவார்கள்.

சாராயக்கடை க்லெமாம்துரையின் மூத்த மகன்தான் லெஸ்லீதுரை. லெஸ்லீ அழகனாகவும் படிப்பில் கெட்டிக்காரனாகவும் இருந்தான். க்லெமாம்துரை வாலிபனான லெஸ்லீயை பிரான்சுக்கு அனுப்பிப் படிக்க வைத்தார். லெஸ்லீதுரை தேர்வுகள் ஒவ்வொன்றாகத் தேறிக்கொண்டிருந்தான்.

"பாசாகாம விட்டிருவானா? கோம்த் லாலியோட ரத்தம்தானே உன்னோட நரம்பிலும்?"

க்லெமாம்துரை தன்னுடைய நண்பர்களான போலீஸ்காரர்களிடம் சொல்வார். அவர்களும் தலையை ஆட்டி ஒப்புக்கொள்வார்கள்.

முறையாகப் படித்து முடித்து லெஸ்லீதுரை பட்டத்துடன் திரும்பி வந்தபோது க்லெமாம்துரை துறைமுகத்தில் மகனை வரவேற்கச் சென்றார்.

க்லெமாம்துரையின் சாராயம் குடிக்கும் போலீஸ்காரர்கள் எல்லோருமே லெஸ்லீயை வரவேற்பதற்காகத் துறைமுகத்திற்கு வந்திருந்தார்கள்.

அன்று க்லெமாம்துரை மய்யழி நெடுக சாராயத்தை ஓடவிட்டார்.

அக்காலத்தில் மய்யழியில் போலீஸ்காரர்களில் பெரும்பாலோர் பாண்டிச்சேரியிலிருந்து வந்த தமிழர்கள். அப்போது பிரெஞ்சுக் காரர்களுக்கு எதிராக மக்கள் கிளர்ந்து எழவில்லை. மய்யழி மக்கள் அனுசரணையுள்ள ஆட்டுக்குட்டிகளாயிருந்தார்கள். அவர்கள் உழைப்பதும் உண்பதும் உறங்குவதும் மட்டும்செய்யும் வளர்ப்பு மிருகங்களாயிருந்தார்கள். போலீஸ்காரர்களுக்குத் தனிப்பட்ட வேலை எதுவும் இல்லாதிருந்தது. அவர்கள் சாராயம் குடித்தும் விபசாரம் செய்தும் நடமாடித் திரிந்தார்கள்-வெள்ளைக்காரர்களையும் கலப்பினக்காரர்களையும் குறித்துப் பெருமை பாடிக்கொண்டு.

லெஸ்லீதுரை மய்யழியில் நீதிமன்றத்தில் நியமிக்கப்பட்டார். வாலிபப் பருவத்திலேயே ஏராளமாகப் பணம் சம்பாதித்தார். விரைவிலேயே ரியூ த் ரஸிதாம்ஸில், கடலையும்ஆற்றையும் பார்த்தபடி, லெஸ்லீதுரையின் பங்களா உயர்ந்து எழுந்தது.

அழகனும் பரிஷ்காரும் பணக்காரருமான லெஸ்லீதுரையை மய்யழியில் கன்னிப்பெண்கள் ரகசியமாகவும் வெளிப்படையாகவும் காதலித்தார்கள்.

"என்ன மாதிரி களை! என்ன மாதிரி மிடுக்கு!"

வெள்ளைக் குதிரை பூட்டிய வண்டியில் பலேத் ழ்யுஸ்த்தீஸ் வழியே போகும் லெஸ்லீதுரையைக் குறம்பி கண்ணிமைக்காமல் பார்த்து நிற்பாள். அப்போது குறம்பி வாலிபமும் உடல்வாகும் சேர்ந்து முதிர்ந்த இளவட்டமாக இருந்தாள்.

படிப்பு முடிந்தது. வேலை வந்தாயிற்று, வீடு கட்டியாயிற்று. இனி லெஸ்லீக்கு ஒரு கல்யாணமும் செய்துவிட வேண்டியதுதான். க்லெமாம்துரை ஆசைப்பட்டார். ஆனால். . .

"என் லெஸ்லீக்குப் பொருத்தமான ஒரு பொண்ணு இந்த மய்யழியிலே இருக்கா?"

க்லெமாம்துரை தன்னெதிரில் வரிசையாய் உட்கார்ந்து குடித்துக்கொண்டிருந்த போலீஸ்காரர்களைப் பார்த்தார்.

"நோம், நோம், மோஸ்யேம்."

போலீஸ்காரர்கள் மறுக்கும் அர்த்தத்தில் தலையை ஆட்டினார்கள்.

லெஸ்லீதுரைக்குப் பொருத்தமான கன்னிப்பெண்கள் சட்டைக்காரிகளிடையே இல்லாமலில்லை. ஆனால் க்லெமாம் துரைக்குப் பெரியதோர் ஆசை உண்டாகியிருந்தது... ஓர் அசல் வெள்ளைக்காரனின் மகளாயிருக்க வேண்டும் லெஸ்லீயின் மனைவி. அதைப் பார்த்துவிட்டுத்தான் க்லெமாம்துரைக்குக் கண்மூட வேண்டும்.

அர்மாம்துரை ஏதோ வியாபாரமாக மலபாருக்கு வந்தவர். வியாபாரம் கொழித்து வளர்ந்ததும், துரையும்மனைவியும் மற்றவர்களும் மய்யழிக்கு வந்துநிலையாகக் குடியேறிவிட்டார்கள். பட்டாளத்தில் ஒரு மகன் இருந்தான். அவன் பணம் அனுப்பிக் கொண்டிருந்ததால் அர்மாம்துரையும் குடும்பமும் பட்டினி கிடக்காமல் கழிந்தது.

ஒரு நாள் வெள்ளைக் குதிரை பூட்டிய வண்டியில் க்லெமாம்துரை அர்மாம்துரையின் வீட்டு வாசலில் வந்திறங்கினார். அவர்கள் நெடுநேரம்

பேசிக்கொண்டிருந்தார்கள். பணமில்லாவிட்டாலும் அசல் வெள்ளைக் காரல்லவா அர்மாம்துரை! மகள் மிஸ்ஸியைப் பார்த்தபோது, சூரியனைப் பார்த்தது போன்று க்லெமாம்துரையின் கண்கள் பூத்துப்போயின.

க்லெமாம்துரை ர்யூ த் லாப்ரிஸோன் வழியாக மிக வேகமாகக் குதிரை வண்டியை ஓட்டி மகளின் எதிரில் போய் நின்றார்.

"மின்னுற நீலக் கண்கள். சுருண்டு சுருண்டு கிடக்கும் தங்க நிறத் தலைமுடி. . ."

கைகளை மேலே உயர்த்தித் தன்னுடைய நீண்ட கால்களால் கிழட்டு க்லெமாம்துரை நாட்டியமாடினார்.

அவ்வாறாக அர்மாம்துரையின் மகள் மிஸ்ஸிக்குத்தான் லெஸ்லீதுரையின் மனைவிப் பதவியை அலங்கரிக்கும் சௌபாக்கியம் உண்டாயிற்று. அவ்வாறு தலைமுறைகளுக்கிடையே எங்கேயோ நழுவிப்போயிருந்த லாலிபிரபுவின் ரத்தத்தைத் தேடிய க்லெமாம்துரையின் பயணம் தொடங்கியது.

"துரைக்குப் பொருத்தமான மேடம். மேடத்துக்குப் பொருத்தமான துரை!"

"என்ன மாதிரியான பொருத்தம்!"

சாயங்காலம் பரஸ்பரம் கைகோத்துப் பிடித்துக்கொண்டு லெஸ்லீதுரையும் மிஸ்ஸியும் கடற்கரையில் காற்று வாங்கப்போவதைப் பார்த்துக்கொண்டிருக்கும் மய்யழி ஊர்க்காரர்கள் பேசிக்கொள்வார்கள்.

அதையெல்லாம் கண்டும் கேட்டும் மனநிறைவுடன்தான் சாராயக்கடைக்கார க்லெமாம்துரை கண்மூடினார்.

## 2

மேயர் செக்குமூப்பர், ஸெர்மாம் ஆம் றெத்ரேத் குஞ்ஞிகண்ணேன் முதலியோர் கலப்பினச் சமூகத்தாரில் பணக்காரர்களாகவும் முக்கியஸ்தர்களாகவும் இருந்தார்கள். அவர்கள் மய்யழியின் மண்ணில் பிறந்தவர்களே என்றாலும் தலைமுறைகளுக்கு முன்னதாக பிரெஞ்சுக் குடியுரிமை கொண்டிருந்தவர்கள்.

செக்குமூப்பர் நல்ல இளவட்டப் பருவத்தில் பிரான்சுக்குச்சென்று உயர்ந்த கல்வி பெற்றார். அங்கேயே வேலையிலும் நுழைந்தார். முப்பத்தாறு ஆண்டுகள் பிரான்சில் வாழ்ந்த பின்னர் வெள்ளைக்கார மனைவியுடன் மய்யழிக்குத் திரும்பி வந்து புனித கன்னிமேரி தேவாலயத்தின் நிழலில் ஒரு மாளிகையைக் கட்டிக்கொண்டார். காலப்போக்கில் மூப்பன்துரையின் வலது கையாக மாறினார் செக்குமூப்பர். பிற்காலத்தில் மய்யழியின் மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

செக்குமூப்பர் கருங்காலி மரம் போல நல்ல கறுப்பு. முப்பத்தாறு ஆண்டுக்கால ஐரோப்பாவின் குளிர் அவரது தோலுக்கு எந்த நிற மாற்றத்தையும் தரவில்லை. ஆறடி உயரமும் அதற்கேற்ற பருமனும். தினமும் சாயுங்காலம் தன்னுடைய மேடத்துடன் கை கோத்துக் கொண்டு

செக்குழுப்பர் சவாரிக்குக் கிளம்புவார். அப்போது வீடுகளிலிருந்து பெண்களும் குழந்தைகளும் எல்லோருமாக அதைப் பார்ப்பதற்காக வெளியில் வந்து நிற்பார்கள்.

"என்ன மாதிரியான துடிச்ச ஆம்பிளை இது!"

"என்ன மாதிரியான பகட்டு இது!"

மய்யழி ஊர்க்காரர்கள் செக்குழுப்பரும் மேடமும் கண்ணிலிருந்து மறையும்வரை பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

"கொஞ்சம் நிறம் கூடுதலா இருந்திருந்தா..."

குறம்பியம்மா ஆதங்கப்படுவாள். மய்யழியில் கோட்டும் கால்சராயும் உடுத்தும் எல்லாவீர புருஷன்மாரையும் இணக்கமாக ஆராதிப்பவளல்லவா குறம்பியம்மா!

லெஸ்லீதுரையைப் போல செக்குழுப்பர் தன்னைவிட எளியவர்களிடம் பழக்கம் வைத்துக்கொள்வதில்லை. எத்தனையோ தடவை இந்தச்சாலை வழியாகக் கடந்து போனதுண்டு. ஒரு தடவையாவது குறம்பியம்மாவைப் பார்த்துச் சற்று சிரித்ததோ, அவளோடு ஒரு வார்த்தை பேசியதோ இல்லை. குறம்பியம்மாவுக்கு அதுகுறையாகத் தென்படவில்லை

"அம்மாடி, செக்குழுப்பர் பிரான்சிலேருந்து வந்த ஆளில்ல!"

குறம்பியம்மாவின் நியாயவாதம் அதுதான். பிரான்சில் எவ்வளவோ காலம் வாழ்ந்திருந்து வெள்ளைக்காரியைத் திருமணமும் செய்துகொண்ட செக்குழுப்பர், மேயர்செக்குழுப்பர், தேங்காய்க் கடைக்காரக் கேளுவச்சனின் ஈழவப் பெண்டாட்டியைப் பார்த்துச் சிரிப்பதா? அவளோடு நைச்சியம் பேசுவதா?

லெஸ்லீதுரையும் பிரான்சுக்குச் சென்று படித்தவர்தான். உயர்ந்த உத்தியோகஸ்தர்தான். ஆனாலும் செக்குழுப்பரைப்போல் லெஸ்லீதுரை மய்யழி ஊர்க்காரர்களிடமிருந்து விலகி நிற்பவரல்ல. லெஸ்லீதுரை செக்குழுப்பரைவிட ஆடம்பரமாக உடையணிந்துகொண்டு மய்யழியில் அக்காலத்தில் மிகவும்நல்ல குதிரை பூட்டிய வண்டியில் போய்வரவும் செய்தார். அதே சமயம் கேளுவச்சனைப் போல இருந்தவர்களிடமும் தோளில் கைபோட்டு நடப்பதிலும் தயக்கம் காட்டவில்லை. எவ்வளவோ காலம், தினமும் லெஸ்லீதுரை, குறம்பியம்மாவின் கையிலிருந்து பொடி வாங்கி உறிஞ்சினார். மிஸ்ஸியும் குறம்பியம்மாவும் தோழிகளாயிருந்தார்கள். லெஸ்லீதுரையின் மகன் கஸ்தோன்துரையும் குறம்பியம்மாவின் மகன் தாமுவும் ஆத்ம நண்பர்களாயிருந்தார்கள்.

சீமானான லெஸ்லீதுரை.

சீமாட்டியான மிஸ்ஸி.

சீமானான கஸ்தோன்துரை.

ஈழவனான குறம்பியம்மாவின் கணவன் கேளுவச்சன் கோட்டும் கால்சராயும் எதுவும் அணிவதில்லை. முழங்கால் வரையிலான ஒரே ஒரு முண்டுமட்டும்தான் கேளுவச்சனின் ஆடை. வீட்டிற்கு வந்ததும் அந்த ஒற்றை முண்டையும் களைந்து விடுவான். ஆடை உடுத்துவதைக் கேளுவச்சன் வெறுத்தான். ஒரு நிமிடம் எங்கேயாவது அடங்கி அமரும் சுபாவம் கேளுவச்சனுக்கு இல்லை. ஒரு கோவணத்தை மட்டும் கட்டிக்கொண்டு *வீட்டின் எல்லைக்குள் அவன் நடமாடுவான். தென்னையின் வேரைத்தோண்டி உரமிடுவான். வாசலில் மழைத்

தண்ணீர் கட்டிக்கிடக்காமலிருக்க வாய்க்கால் வெட்டுவான். எப்பொழுதும் இப்படி ஏதாவது செய்த வண்ணமாகவே இருப்பான்.

கால்சராயும் கோட்டும் தொப்பியும் அணிந்து நடக்கும் வீரபுருஷர்களை ஆராதிக்கும் குறம்பியம்மாவுக்கு கேளுவச்சன் கணவனாகக் கிடைக்கப் பெற்றது விதியின் விபரீதம்.

இரவு முழுவதும் காற்றும் தூறலுமாயிருந்தது. கண்ணியற்று விழுந்து கிடக்கும் தேங்காய்களைப் பொறுக்குவதற்காகக் கேளுவச்சன் தோப்புக்குச் சென்றான். குண்டும் குழியுமாக எங்கிலும் தளம் கட்டிக்கிடந்த சிவந்த மழைத்தண்ணீர், பாதையில் உடைப்பெடுத்துப் பெருக்கெடுத்துக் கொண்டிருந்தது. முனிசிபல் விளக்கின் கண்ணாடிச் சில்லுகள் ஏனோ விழுந்து கிடந்தன. கால்களில் இடறின, தண்ணீர்குடித்து வீங்கிச் செத்த தவளைகள்.

"அடியே கொறம்பீ. . ."

கேளுவச்சன் ஒருகாலை நொண்டிக்கொண்டு திரும்பி வந்தான்.

"என்னவோ கடிச்சிருச்சி"

இடது குதிகாலிலிருந்து இரத்தம் ஒழுகிக்கொண்டிருந்தது.

இரத்தத்தைப் பார்த்ததும் அவளுக்கு நெஞ்சு துடித்தது. மழைக்காலதில் பொந்துகளில் தண்ணீர் நிறையும்போது பாம்புகள் வெளிப்படும். கடித்துவிட்டால் விஷத்தை இறக்குவது பெரும்பாடாகிவிடும்.

"என் மச்சானுக்கொண்ணும் வந்திரக்கூடாது. . . ."

குறம்பியம்மாவின் நீர் நிறைந்த கண்கள் புனித கன்னிமேரியின் தேவாலய உச்சியிலுள்ள சிலுவை மீது பதிந்தன.

அவள் ஓலைக்குடையை எடுத்து வந்தாள்.

"முண்டு வேண்டாமா?"

"இந்த மழையிலேயா?"

முண்டு உடுக்காமல் கோவணம் மட்டும்தான். ஒருகாலை நொண்டிக்கொண்டு கேளுவச்சன் மலைச்சாதி கடுங்ஙனின் வீட்டுக்குச்சென்றான்.

கடுங்ஙனின் மந்திர சக்திக்கு முன்னால் இறங்காத விஷமுண்டோ? ஒரு தடவை எட்டு நாழிகைத் தொலைவில் கிழக்கிலிருந்து விஷம் தீண்டிய ஒரு மாப்பிள இனத்துக் குழந்தையைக் கடுங்ஙனிடம் எடுத்துக்கொண்டு வந்தார்கள். விஷம் தலைக்கேறியிருந்தது. விஷம் இறங்க வேண்டுமானால் ஒரே ஒரு வழி மட்டும்தான்–கடித்த பாம்பைக் கொண்டுவர வேண்டும். மலையன் கடுங்ஙனோ அதைச் செய்தும் முடித்தான். எட்டு நாழிகைத் தொலைவிலிருந்து மய்யழி ஆற்றில் நீந்திக் கடந்து பாம்பு வந்தது. மாப்பிளக் குழந்தையின் தலையிலிருந்து விஷத்தை இறக்கி எடுத்த பிறகு கடுங்ஙனின் கைகால்கள் மரத்துப்போயின.

"என்ன கேளுவச்சா?"

"என்னவோ கடிச்சிருக்குப்பா."

கடுங்ஙன் குடிசை வாசலில் நின்றுகொண்டிருந்தான். அவனுக்குக் குளிகன் கடுங்ஙன் என்றொரு பெயரும் உண்டு. பகவதி பூசைக்காலத்தில் அதை நடத்தி வைப்பது கடுங்ஙன்தான். குளித்து முண்டுமாற்றி நெற்றியில் விபூதி இட்டு யாருக்காகவோ காத்துக்கொண்டிருப்பதுபோல் இருந்தது குளிகன் வாசலில் நின்றிருந்தது.

“நான் உங்களுக்காகக் காத்திருக்கேன் கேளுவச்சா”

இன்ன நேரத்தில் இன்ன ஆளைப் பாம்பு கடிக்குமென்று முன்கூட்டியே அறிந்தவனாக்கும்!

ஒரு காலை நொண்டிக்கொண்டு கேளுவச்சன் குடிசைக்குள் வந்தான். அவன் நடந்து வந்த வழியே மழைநீரில் இரத்தக் கறைகள் தென்பட்டன.

கேளுவச்சன் கோரப்பாயில் உட்கார்ந்தான். கடுங்ஙன் நாகமந்திரத்தை உச்சரித்தான்.

ஐந்து நிமிடம் கழிந்தது.

“இனி நீங்க போகலாம். ஆனா ஒரு விஷயம். நாளைஇந்நேரம் வரைக்கும் கண் இமை மூடக்கூடாது. அப்படி மூடினா அதுக்குப் பெறகு நான் பொறுப்பில்லே.”

இருபத்துநான்கு மணி நேரத்துக்கு உறங்கக்கூடாது. கண் மூடினால் குளிகனின் மந்திரத்துக்குப் பலனில்லாமல் போய்விடும். கேளுவச்சன் தலையாட்டினான். காதிலிருந்து அரையணா எடுத்து கடுங்ஙனுக்குத் தட்சணை கொடுத்தான்.

கேளுவச்சன் வீட்டுக்குத் திரும்பிப் போகவில்லை. அதற்கு முன்பாகவே வழியில் விழுந்து இறந்தான்.

விவரம் அறிந்த குறம்பியம்மா ஒரு கருங்கல்சிலை போல நின்றாள்.

“என்னவன் போயிட்டானே... என்னை விட்டுப் போயிட்டானே...”

மய்யழி ஊர்மக்கள் எத்தனையோ இரவும் பகலும்தொடர்ந்து குறம்பியம்மாவின் அழுகுரலைக் கேட்டார்கள். பின்னர் ஒரு நாள் அவளுடைய அழுகை வெறும் தேம்பலாகச் சுருங்கியது. காலப்போக்கில் குறம்பியம்மா தன்னுடைய வேதனையை மறந்தாள்.

“கொஞ்சம் வெளுப்பு கூடியிருந்திருந்தா. . . .”

செக்குமூப்பர் மேடத்துடன் சவாரிக்குக் கிளம்பியபோது வழக்கம்போல் குறம்பியம்மா தனக்குத்தானே பேசத் தொடங்கி விட்டாள். அவளுடைய மூளை மறுபடியும் கால்சராயும் தொப்பியும் அணிந்த வீரபுருஷன்மாரைக் குறித்துச் சிந்திக்கவும் கனவுகாணவும் தொடங்கியது.

க்லெமாம்துரை போலீஸ்காரர்களுக்கு மட்டும்தான் இனாமாகச் சாராயம் வழங்கினார். ஆனால் லெஸ்லீதுரையிடமிருந்து சாராயம் குடிக்காத மேட்டுக்குடி ஆண்கள் அக்காலத்தில் மய்யழியில் அபூர்வம். லெஸ்லீதுரை எப்போதும் விருந்துகள்கொடுத்துக் கொண்டே இருப்பார். தாராளமாகப் பரிசுகள் கொடுப்பார். கத்தோர்ஸ்ழுயியே, நோயேல் முதலிய நல்ல நாட்களில் தர்மசாலை அனாதைகள் எல்லோரையும் பங்களாவுக்கு அழைத்து வந்து விருந்துகளும் பரிசுகளும் கொடுப்பார்.

தன்னுடைய தந்தையைக் காட்டிலும் தயாளனாக இருந்தார் லெஸ்லீதுரை.

மிஸ்ஸி இரண்டுகுழந்தைகளைப் பெற்றெடுத்தார் - அல்பேரும் கஸ்தோனும். கஸ்தோனை மிஸ்ஸி பெற்றெடுத்த அதே ஆண்டுதான் தாமுவைக் குறம்பியம்மா பெற்றெடுத்திருந்தாள்.

அல்பேர் தெம்மாடியாய் வளர்ந்தான். ஆசிரியரை ஏமாற்றிவிட்டுப் பள்ளிக் கூடத்திலிருந்து வெளியேறி விடுவான். படிப்பை நிறுத்திய அல்பேர்துரை குடித்தும் பெண்களை வேட்டையாடியும் சிறிது காலம்

மய்யழியில் வாழ்ந்திருந்தான். போர்மூண்ட போது பட்டாளத்தில் சேர்ந்து காணாமல் போய்விட்டான். அதற்குப்பிறகு அல்பேர்துரையைப் பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது போயிற்று.

"என்னோட விதிதான் கொறம்பீ..."

மிஸ்ஸியின் நீலக்கண்களில் கண்ணீர் வந்து நிறையும்.

அல்பேரைக் குறித்துப் பலர் பலவிதமான கதைகளைச் சொன்னார்கள். அல்பேர் சண்டையில் இறந்துவிட்டான். அல்பேர்துரை கப்பல் விபத்தில் மூழ்கி இறந்தான். அல்பேர்துரை மனைவியும் மக்களுமாக பிரான்சில் சுகமாக இருக்கிறான். அல்பேர்துரை. . . .

இதற்கிடையே பட்டாளத்திலிருந்து பென்ஷனாகி ஸெர்ழாம் குஞ்ஞீகண்ணோன் மய்யழிக்கு வந்து சேர்ந்தார். ஸெர்ழாம் ஆம் றெத்ரேத் (பென்ஷன் பெற்ற சார்ஜன்ட்) குஞ்ஞீகண்ணோனும் அல்பேர்துரையைப் பற்றித் தகவல் சொன்னார்.

"அல்பேரை நான் பார்த்தேன், ஸைகோன்லே."

"உண்மையாவா!"

மிஸ்ஸியின் நனைந்த கண்களில் சூரியோதயம்.

"நான் இந்தக் கண்ணாலே பார்த்தேனாக்கும்."

குஞ்ஞீகண்ணோன் தொடர்ந்தான்.

"ர்யூ த் லப்லாஸி வழியா கையிலே ஒரு சீசா பிடிச்சி பாட்டும் பாடிக்கிட்டு அல்பேர் நடந்து போனான், ஒரு பட்டாளத்தானின் தோளிலே கையைப் போட்டுக்கிட்டு."

"எங்கேயானாலும் சரி, என்னோட மகன் உயிரோட இருக்கானில்ல அதுபோதும்..."

மிஸ்ஸி கைக்குட்டை கொண்டு கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். அல்பேர் குடிகாரனும் பெண்பித்தனும் ஆகிவிட்டான். பாசமில்லாதவனாகிவிட்டான். ஆனாலும் மிஸ்ஸிக்கு அல்பேர் மீதுள்ள பாசம் எள்ளளவும் குறையவில்லை. அல்பேர் சைகோனில் இருக்கிறான். பூமியில் எங்கேயாவது ஒரு மூலையில்கூட இருக்கட்டும். உயிரோடிக்கிறான் என்று கேள்விப்பட்டதே போதும், மிஸ்ஸிக்கு நிம்மதியாக இருந்தது.

கஸ்தோன் அல்பேரைப்போல் இருக்கவில்லை. இயல்பான குணமுள்ளவன், அதிபுத்திசாலி. பரீட்சைகள் ஒவ்வொன்றாகத் தேறி, பாண்டிச்சேரிக்குச் சென்று மேற்படிப்பு படித்தான். லெஸ்லீதுரைக்குக் கஸ்தோனைக் குறித்துப் பெரிய எதிர்பார்ப்புகள் ஏற்பட்டிருந்தன.

"கஸ்தோனை நான் பிரான்சுக்கு அனுப்பப் போறேன் கொறம்பி."

ஒரு நாள்பொடி போட வந்தபோது லெஸ்லீதுரை சொன்னார்.

"நிசம்மாவா துரை?"

"அவனை நான் டாக்டராக்குவேன்."

"கடவுளே!. . . நிசம்மாவா துரை?"

"நிஜம்தான் கொறம்பீ. அஞ்சு வருஷம் மட்டும் போகட்டும் — கஸ்தோன் டாக்டர்."

"இங்கே இருக்கிறவங்களுக்கு ஏதும்சுகக்கேடு வந்தா பார்க்கிறதுக்கு ஒருஆள் வேணும்தான். கடவுளே!"

"உனக்கு சுகக்கேடு வந்தால் என்னோட மகனாக்கும் உன்னை சொஸ்தமாக்கணும்."

"அதுக்கான யோகம் இங்கே இருக்கிறவங்களுக்கு இருக்கா துரை ?"

"இருக்கு, கொறம்பீ, இருக்கு. மய்யழியிலே மாதா நினைச்சா நடக்காதது என்ன இருக்கு ?"

"என் மாதாவே, என்னோட கஸ்தோனை டாக்டராக்கணும்!"

உடனே மாதாக்கோயில் கோபுரத்து உச்சியில் தெளிவான ஆகாயத்தில் துல்லியமாகத் தெரிந்த சிலுவையை நோக்கிக் குறம்பியம்மா கண்களை மூடினாள்.

கஸ்தோன் கையில் குழாயுடன் தன்னை சொஸ்தப்படுத்த வருவதான பகல்கனவு கண்டுகொண்டு, கதவின்மீது சாய்ந்துகொண்டு கஸ்தோனின் தந்தையான லெஸ்லீதுரையின் முன்பாகப் புன்னகை வீசியபடி குறம்பியம்மா கேட்டாள்.

"சிகிச்சைக்கு வர்றப்போ கஸ்தோனோட கையிலே காசு தரணுமா துரை ?"

யானைத் தந்தத்தில் செய்த பொடிடப்பியிலிருந்து ஒரு சிட்டிகைப் பொடியெடுத்து உறிஞ்சி அதனுடைய கிறுகிறுப்பில் கண் மூடியிருந்த லெஸ்லீதுரை சொன்னார்.

"கஸ்தோன் உன்னோட மகனும்தானே கொறம்பீ ?"

அதைக் கேட்டு உண்டான ஆனந்தத் திளைப்பில் குறம்பியம்மா சொன்னாள்.

"செல்ல மகனாக்கும் எனக்கு தாமுவும் கஸ்தோனும் ஒரே மாதிரிதான்."

மறுநாள் கஸ்தோன் தாமுவைத் தேடி வந்தபோது குறம்பியம்மா ஓடி வந்தாள். அருகில்பிடித்தமர்த்தி தலையிலும் கன்னத்திலும் தடவிக்கொடுத்தாள். லெஸ்லீதுரையின் அதே சிரிப்பு. அதேபார்வை. ஒரு நோக்கில் லெஸ்லீதுரையின் கடந்துபோன யௌவனத்தை கஸ்தோனில் மறுதரிசனம் செய்வது போலிருந்தது.

தாமுவும் கஸ்தோனும் நண்பர்களாயிருந்தார்கள். அவர்கள் தினமும் சேர்ந்தே நடப்பதற்குச் செல்வார்கள். சேர்ந்தேதான் அவர்களை எப்போதும் பார்க்க முடியும். தாமுவுக்கு கஸ்தோனைப் போல உயர்ந்த படிப்பு எதுவும் அமையவில்லை. தாமு ஐந்தாம் வகுப்பு தேறியபோது குறம்பியம்மா லெஸ்லீதுரையிடம் சொன்னாள்.

"தாமு இனிபடிக்கமாட்டான்."

"அதென்ன கொறம்பீ"

"ஆண்துணைன்னு அவன் ஒருத்தன்தானே எனக்கிருக்கிறது ? எனக்கும் வயசாயிரிச்சி. அவனுக்கொரு வழியைக் காண்பிச்சுட்டா அது போதும்."

லெஸ்லீதுரை சற்று யோசித்துவிட்டுச் சொன்னார்.

"தாமுக்குவுக்குப் படிக்கணும்னு தோணலேன்னா நாளையிலேருந்து கோர்ட்டுக்குப் போகட்டும்."

அப்படித்தான் பலேத்ழ்யூஸ்தீஸ்ஸில் தாமுவுக்கு ரைட்டர் வேலை கிடைத்தது.

லெஸ்லீதுரை கஸ்தோனை பிரான்சுக்கு அனுப்பிவைப்பதற்கான ஆயத்தங்களைச் செய்தபோது ஒரு நாள் குறம்பியம்மா துரையின் பங்களாவுக்குச் சென்றாள்.

"கொறம்பியா ?"

மிஸ்ஸி கேட்டுக்கு ஓடிச் சென்று கொண்டியை நீக்கி கேட் திறந்து வரவேற்றாள். அவர்கள் நெருக்கமாக உட்கார்ந்தபடி நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். ஊர் விவகாரங்களையும் வீட்டு விவகாரங்களையும் பேசினார்கள். கேக்கும் தேநீரும் சாப்பிட்டார்கள். கடைசியில் குறம்பியம்மா விஷயத்துக்கு வந்தாள்.

"மிஸ்ஸிகிட்டே ஒரு விஷயம் சொல்லணும்னு எதிர்பாத்துகிட்டே இருந்தேன்."

"என்ன குறம்பி?"

மிஸ்ஸி குறம்பியம்மாவோடு மேலும் நெருக்கமாக உட்கார்ந்தாள்.

"தாமுக்கு வயசு வந்தாச்சி, அவனுக்கொரு நல்லதைச் செஞ்சி வைக்கணும்."

"பத்திருபது வயசாச்சில்ல தாமுவுக்கு?"

அந்தக் காலத்தில் பதினெட்டு வயதில் ஆண்கள் திருமணம் செய்துகொண்டார்கள். மய்யழியில் ஆண்கள் தாடியும் மீசையும் வந்ததுமே தந்தைமார் ஆகிவிடுவார்கள். குறம்பியம்மாவைத் திருமணம் செய்துகொண்டபோது கேளுவச்சனுக்கு வயது பதினேழு. குறம்பியம்மாவுக்கு பன்னிரண்டு. கல்யாணம் முடிந்து கணவனுடைய வீட்டிற்குச் சென்ற பிறகுதான் அவள் திரண்டாள். திரளும்வரை கணவனின் அம்மாவுடன்தான் இரவில் படுக்கை.

"கஸ்தோனுக்கும் தாமுவுக்கும் ஒரே வயசு. . ."

"ரெண்டு மாசம் கஸ்தோன்தான் மூத்தவன்"

"கஸ்தோன் ஆவணியில்... தாமு ஐப்பசியிலே"

குறம்பியம்மா டப்பியிலிருந்து கொஞ்சம் பொடி எடுத்து உறிஞ்சினாள்.

"கஸ்தோன் பிரான்சுக்குப் போறானில்ல? கண்ணுக்கெட்டாத அளவு தூரம். . ."

குறம்பியம்மா என்னவோ சொல்லிக்கொண்டே இருந்தாள். திடீரென்று மிஸ்ஸி நினைவுகளில் தன்னை மறந்தாள். பிரான்ஸைப் பற்றிச் சோகமான நினைவுகளே மிஸ்ஸிக்கு உண்டு. அவள் முற்றிலுமாக மாறிப்போயிருந்தாள். பேருக்குமட்டுமே மிஸ்ஸி இன்று வெள்ளைக்காரி. மய்யழிக்கு வந்து தங்க நேர்ந்து எத்தனையோ ஆண்டுகள் கழிந்துவிட்டன. இன்று மய்யழியின் மக்களைப் போலவே மலையாளம் பேசுகிறாள். அவர்களுக்கிடையே வாழ்கிறாள். ஆனாலும் பிரான்ஸ் என்று கேட்கும்போது மிஸ்ஸி மௌனியாகிவிடுவாள். பிறந்த பூமியின் குரல் காதுகளில் ஒலிக்கும்.

குறம்பியம்மா தொடர்ந்தாள்.

"பிரான்சுக்குப் போறதுக்கு முன்னாலே கஸ்தோனுக்கு நல்லது நடத்த வேண்டாமா மிஸ்ஸி?"

மிஸ்ஸியும் அதைப் பற்றி யோசித்துக்கொண்டுதான் இருந்தாள். குறம்பியம்மாவின் அபிப்பிராயத்தைக் கேட்டு மிஸ்ஸிக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று.

"என்னோட மகனைப் பத்தின கவலை எனக்கில்லாமப் போனா என்ன? உனக்கு இருக்குல்ல கொறம்பி?"

லெஸ்லீதுரைக்கும் மகிழ்ச்சி உண்டாயிற்று.

திருப்தியடைந்த குறம்பியம்மா தனது பொடிடப்பியை

எடுத்துக்கொண்டு வீட்டிற்கு திரும்பினாள். கல்யாண விஷயத்தை அறிந்தபோது கஸ்தோன்துரையின் முகம் காகிதம்போல் வெளிறியது.

"வேண்டாம் பப்பா, எனக்கிப்போ கல்யாணம் வேண்டாம் பப்பா."

கஸ்தோன் பீதியுடன் தந்தையின் முகத்தைப் பார்த்தான். மகனின் உணர்வு மாற்றம் லெஸ்லீதுரையை அதிர்ச்சியடையச் செய்தது.

தனக்குத் திருமணம் வேண்டாமென்று கஸ்தோன்துரை உறுதிபடச் சொன்னான். லெஸ்லீதுரையும் மிஸ்ஸியும் தளர்ந்துபோனார்கள். மூத்த மகனான அல்பேர் அவர்களுக்கு இல்லாதாகிப் போனான். அவனுக்குக் கல்யாணம் செய்து பார்க்கும்யோகம் லெஸ்லீதுரைக்கும் மிஸ்ஸிக்கும் ஏற்படவில்லை. கஸ்தோனில் அல்பேரையும் சேர்த்து அவர்கள் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

கஸ்தோன் திருமணம் செய்துகொள்ள வில்லையானால் க்லெமாம் குடும்பம் கஸ்தோனுடன் முடிந்துவிடுமல்லவா?

"கஸ்தோன்கிட்ட ஏதோ கோளாறு இருக்கு. நான் ஊகிச்சதுதான்."

கைகளில் முகம்தாங்கி நாற்காலியில் லெஸ்லீதுரை சிந்தனை வசப்பட்டவராக உட்கார்ந்திருந்தார்.

இளமைக் காலத்துக்குரிய துடிப்பும் மகிழ்ச்சியும் கொண்ட ஒரு வாலிபனாகத்தான் இருந்தான் கஸ்தோன். வயதுக்கு வந்ததும் கஸ்தோனின் நடவடிக்கையில் சோர்வு தென்பட்டது. மகிழ்ச்சி வற்றியது. கஸ்தோன் எப்போதும் சிந்தனையில் ஆழ்ந்தவனாகக் காணப்பட்டான். ஏதோ ஒன்று கஸ்தோனை வருத்திக்கொண்டிருந்தது. ஏதோ ஒரு ரகசிய துக்கம்... மய்யழியின் மாதா மட்டுமே அறிந்திருந்த துக்கம்.

"தாமுவோட கல்யாணம் முதல்லே முடியட்டும்."

குறம்பியம்மா லெஸ்லீதுரையையும் மிஸ்ஸியையும் சமாதானப்படுத்தினாள்.

"கஸ்தோன் அதுக்குப் பெறகு வந்து சொல்வான் — பப்பா... எனக்கும் கல்யாணம்வேணும்னு."

குறம்பியம்மா தாமுவின் திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளில் மூழ்கினாள். பெண்பார்த்தாள். திருமணத்தேதியும் நிச்சயிக்கப்பட்டது.

சில நாட்களாகிவிட்டன தாமு கஸ்தோனைச் சந்தித்து. கஸ்தோன் ஒளிந்து நடமாடத் தலைப்பட்டான். ஒருநாள் தாமு கஸ்தோனைக் கண்டுபிடித்துவிட்டான். மக்கள் நடமாட்டமில்லாத கடற்கரைப் பகுதியில் துரை கண்களில் நீர்மல்க உட்கார்ந்திருந்தான்.

"நான் உன்னோட கூட்டாளியில்லையா? என்கிட்ட சொல்லு. என்ன ஆச்சி கஸ்தோன் உனக்கு?"

கஸ்தோன் பேசாமல் கடலைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

"சொல்லு... "

தாமு தன்னுடைய நண்பனுடன் நெருக்கமாக உட்கார்ந்தான்.

"இனிமேயும் ஒளிக்கக்கூடாது, எனக்குத்தெரிஞ்சாகணும். இல்லேன்னா இனிமே நான் உன் கூட்டாளியில்லே."

கஸ்தோன் சிறிது நேரம் ஒரு சிலை போல உட்கார்ந்திருந்தான். கஸ்தோனின் நீலக் கண்களிலிருந்து சூடான கண்ணீர் வழிந்தது. கடைசியில் மய்யழியிலுள்ள மாதாவுக்கு மட்டுமே தெரிந்திருந்த அந்த ரகசியத்தை கஸ்தோன் தாமுவிடம் சொன்னான்.

தாமு உரக்கச் சிரித்தான்.

"நீ ஒருமடையன், இன்னிக்கே பப்பாகிட்டப் போய்ச் சொல்லு உனக்கும் கல்யாணம் வேணும்னு."

கஸ்தோன்துரை அதிர்ச்சியுடன் தாமுவின் முகத்தைப் பார்த்தான்.

"இல்லாட்டி வேண்டாம் – நானே சொல்லிடுறேன், லெஸ்லீதுரைகிட்ட . ."

தாமு எழுந்து கடற்கரை ஓரமாக நடந்தான். அவன் நேராகப் பலேத்ழ்யூஸ் தீஸ்ஸிற்குச் சென்று லெஸ்லீதுரையைச் சந்தித்தான்.

"கஸ்தோன் சம்மதிச்சாச்சி."

"நிஜம்மாவா?"

லெஸ்லீதுரையின் நரையேறிய கண்களில் சூரியப்பிரவாகம் உண்டாயிற்று. தேவாலய கோபுர உச்சியிலிருந்த சிலுவை மீது துரையின் கண்கள் தம்பியல்பாகச் சென்றன. சாராயக்கடைக்கார க்லெமாம்துரையின் குடும்பம் முடிவடைந்துவிடாது. கஸ்தோன்துரையின் கல்யாணம் தலைமுறைகளின் நீண்ட பரம்பரைகளுக்குப் பிறப்புக் கொடுக்கும். அவ்வாறு க்லெமாம்துரையின் சந்ததியினருக்கு இனியும் தலைமுறைகளினூடே லாலிபிரபுவின் இரத்தம் தேடுவதான பயணம் தொடரும்.

பாண்டிச்சேரியிலிருந்து விலை மிக்க சாராய வகைகள் வந்தன. லெஸ்லீதுரையின் பங்களாவுக்கு முன்பாக மய்யழியின் எல்லாக் குதிரை வண்டிகளும் எப்போதும் நின்றிருந்தன. கஸ்தோன்துரையின் திருமண வைபவத்திற்கு மய்யழியின் மக்கள் எல்லோரும் அழைக்கப்பட்டிருந்தார்கள். திருமணம் முடியும்வரை மய்யழியில் ஒரு திருவிழாவின் கோலாகலம் இருந்தது.

"இப்படி ஒரு கல்யாணத்தை என் ஆயுசிலே நான் பார்த்ததேயில்லே கொறம்பீ!"

தோளியில் ஏணியும் கையில் மண்ணெண்ணெயுமாய் நொண்டிக்கொண்டு வந்த குஞ்சக்கன் சொன்னான். அதைக் கேட்டுக் குறம்பியம்மா கிறுகிறுத்தாள்.

கஸ்தோன்துரையின் மணப்பெண் பாண்டிச்சேரியில் முன்னாள் மேயரான ஷெவாலியே இந்த்தியாஸ்துரையின் மகளான தெரசா ஆவாள். கட்டு மீறிய பருவம். நல்ல உடல்வாகு. சாராயத்தின் நிறமாயிருந்தன அவளுடைய கண்கள். உதடுகள் கடல்பாலத்துக் கோய்யேத்திப் பூக்களின் சிவப்பு.

திருமணம் நடந்தேறிய மறுநாள் கஸ்தோன்துரையும் மணப்பெண்ணும் தேனிலவுக்காகப் பாண்டிச்சேரிக்குக் கப்பல் ஏறினார்கள்...

தேனிலவு போன கஸ்தோன்துரை திரும்பிவந்தான் பார்த்தால் அடையாளம் தெரியாதபடி மாறிப்போயிருந்தான். கன்னங்களில் வளர்ந்து கிடந்த நீல ரோமங்கள். வளைந்த முதுகு. நிரந்தரமான துக்கத்தின் உறவாகிவிட்ட கண்கள்.

"இதென்ன ஏமாத்து வேலை!"

மய்யழி மக்கள் அதிர்ந்துபோனார்கள். தாமு சில நாட்களுக்கு கோர்ட்டுக்குப் போகவில்லை. லெஸ்லீதுரையும் மிஸ்ஸியும் நடைப்பிணமானார்கள்.

பாண்டிச்சேரியிலிருந்து வந்த அன்று கஸ்தோன்துரை பங்களாவின் மாடியில் தன்னுடைய அறைக்குச் சென்று கதவைத் தாழிட்டுக்கொண்டான். பின்னர் அந்த அறையிலிருந்து வெளியே வரவேயில்லை. கஸ்தோன்துரையின் உலகம் நான்கு சுவர்களுக்குள் சுருங்கிவிட்டது. அவனை அதற்குப் பிறகு யாரும் பார்க்கவில்லை. சூரிய ஒளியை ஏற்காமல் உடம்பு வெளிறி வெளுத்தது. தலைமுடி தோள்வரை வளர்ந்து தொங்கியது. கண்கள் நித்திய துக்கத்தின் விளக்குகளாயின.

ஒரு நாள் பாதி இரவு கழிந்தபோது, மய்யழி மக்கள் உறங்கிக் கொண்டிருந்தபோது, மூப்பன்துரையின் விருந்து முடிந்துகடைசிக் குதிரை வண்டியும் போய்விட்டபோது, லெஸ்லீதுரையின் பங்களாவின் மாடியிலிருந்து கிதார் இசை ஒலித்தது.

துக்கத்தில் ஆழ்ந்தவனின் சங்கீதம், அலிப்பிறப்பின் சங்கீதம்.

காலம் கடந்து சென்றது.

லெஸ்லீதுரைக்கு அல்பேர் என்றைக்கோ நஷ்டமாகிவிட்டான். கஸ்தோன் இறந்ததற்குச் சமமாகிவிட்டான். அந்த வேதனையிலிருந்து லெஸ்லீதுரைக்கு விமோசனம் கிடைக்கவில்லை. அந்த வேதனையுடனேயே லாலிபிரபுவின் சந்ததி என்ற உரிமை பெற்ற க்லெமாம்துரையின் அருகில் நெஞ்சில் ஒரு சிலுவையுடன், லெஸ்லீதுரை இன்று நிரந்தர ஓய்வு கொள்கிறார்.

# 3

ஜீவபிந்துவின் நிறமும் இமய சிகரத்தின் அமைதியும் கலந்த ஒரு விடிகாலையாக இருந்தது தாசன் பிறந்த நேரம்.

சாமக்கோழிகள் கூவின. கன்னிச் சவ்வு நிகர்த்த மெல்லிய படலமாக இருட்டு மய்யழியை மூடிக் கிடந்தது. வராந்தாவில் விரித்திருந்த ஜமக்காளத்தில் படுத்திருந்த தாமுரைட்டர் உறங்கிக்கொண்டிருந்தான். கௌசுவுக்கு மாதம் நெருங்கிவிட்டதால் வெளியில்தான் படுக்கை.

"எனக்கு முடியலேம்மா..."

"கடவுளே !"

தாமு விழிப்படைந்து காது கொடுத்துக் கேட்டான். கௌசுவின்குரல் மறுபடியும் வந்தபோது அவன் எழுந்து உள்ளே போனான்.

உள்ளே வெளிச்சத்தைவிடப் புகையை அதிகம் பரப்பிக் கொண்டிருந்த முட்டை விளக்கு ஏற்றிவைக்கப்பட்டிருந்தது. கலைந்துகிடக்கும் தலைமுடிக்கிடையில் நீர் நிறைந்த இரண்டு கண்கள். ரத்தப் பொலிவு இல்லாத முகம்.

"கௌசுவுக்கு வலி தொடங்கிரிச்சி!"

குறம்பியம்மா தெரிவித்தாள். தாமுரைட்டரின் கண்கள் மனைவியின் கைத்தண்டையின் மீது பதிந்தன. ரத்தம் கசிந்துகொண்டிருந்தது. உடுப்பு முண்டிலும் ரத்தம் தென்பட்டது.

"இதென்ன கௌசு ?"

படைப்பின் வேதனையை அனுபவிக்கும் கௌசுவுக்குப் பேச

முடியவில்லை. குறம்பியம்மாதான் பதில் சொன்னாள்.

"அவ கடிச்சது."

ரைட்டர் தனது கையில் கடி ஏற்றதுபோல் சற்றே நெளித்தான்.

"அய்யோ! "

"கொஞ்சம் பேசாம இரும்மா!"

குறம்பியம்மா கௌசுவின் அருகில்இருந்து அவளுடைய தலைமுடியை கோதிவிட்டுத் தேற்ற முயன்றாள்.

"பொண்ணாப் பொறந்தா இதையெல்லாம் பொறுத்துத்தான் ஆகணும்."

ரைட்டர் என்ன செய்வதென்று தெரியாமல் சிறிது நேரம் அங்கேயே நின்றிருந்தான். பிறகு மருத்துவச்சியைக் கூட்டிவரப் புறப்பட்டான்.

"இந்த நேரங்கெட்ட நேரத்திலே அவ வருவாளா?"

தாமு வெளியேறிப் போகும்போது குறம்பியம்மா தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள்.

கிரகண ராத்திரியின் சூன்யமும் மௌனமும். புனித கன்னிமேரி தேவாலயம் முற்றிய இருட்டில் மூடிக்கிடந்தது. ஆள்சந்தடியற்ற பாலத்தின் அடியில் மய்யழி ஆறு ஓடிக்கொண்டிருந்தது.

தாமு சத்திரத்துக்கு அருகிலுள்ள மருத்துவச்சி குஞ்ஞாணியின் வீட்டை நோக்கிவேகமாக நடந்தான். ந்யூ த்பு கூவர்ணமான் சாலையை அடைந்தபோது தொலைவில் குதிரை வண்டிகளின் வரிசையை அவன் கண்டான். நடுச்சாமத்தின் நிசப்தத்தில் குளம்படி ஓசையும் மணி ஓசையும்! மங்கலான வானத்தின் கீழே, சமுத்திரத்தின் மற்றும் ஆற்றின் கரையோரங்களில், குதிரைவண்டிகள் ஒன்றன் பின் மற்றொன்றாகப் போய்க் கொண்டிருந்தன.

குதிரைவண்டிகள் அருகில் வந்தபோது தாமுரைட்டர் சாலையின் ஓரத்தில் போய் நின்றான். வண்டிகள் ஒவ்வொன்றாக அவனைக் கடந்து போயின. வண்டிக்குள் தூங்கிக் கொண்டிருக்கும் தொப்பி வைத்த தலைகள். சாராய போதையில் மயங்கிக் கிடந்த தாவீதுதுரை, மேயர் செக்குமூப்பர், ஸொர்மாம் ஆம் றெத்ரேத் குஞ்ஞிகண்ணேன் முதலிய வீரபுருஷன்மார்.

"தாவீதுதுரையோட வண்டியும் போயாச்சி."

குறம்பியம்மா யாருடனென்றில்லாது பேசினாள்.

சிறிது நேரம் தலையை அலைக்கழித்து உருட்டிப் புரட்டிய பின்னர் வியர்த்த முகத்துடன் அசையாதபடி கௌசு படுத்துக்கிடந்தாள்.

மூப்பன்துரையின் விருந்து முடிந்து குதிரைவண்டிகள் கடந்துபோய்விட்ட பின்னரும் குறம்பியம்மாவுக்குத் தூக்கம் வரவில்லை. தலைக்கடியில் பொடிடப்பியுடன் படுத்திருந்த அவள் காது கொடுத்துக் கேட்டாள். குளம்படிகளின் தாளத்திலும் மணி கிலுக்கலின் ஓசையிலும் சக்கரங்களின் இரைச்சலிலும் மய்யழியிலிருந்த எல்லாக் குதிரைவண்டிகளையும் குறம்பியம்மா இனம் கண்டுகொள்வாள். பார்க்காமலே அவள் சொல்லிவிடுவாள்.

"தாவீதுதுரையோட வண்டியும் போயாச்சி."

எல்லாக் குதிரைவண்டிகளின் தாளத்தையும் ஸ்வரத்தையும் அவள் மனதில் பதிந்து வைத்திருந்தாள். குறிப்பாக லெஸ்லீதுரையின் குதிரைவண்டியினுடையதை. லெஸ்லீதுரை மறைந்துவிட்டார். ஆனாலும்

இன்றைக்கும் ஆயிரம் குதிரை வண்டிகளின் தாளங்களிலிருந்தும் ஸ்வரங்களிலிருந்தும் லெஸ்லீதுரையின் குதிரைவண்டியின் தாளத்தையும் ஸ்வரத்தையும் குறம்பியம்மா பிரித்தறிவாள்.

"குஞ்ஞாளியம்மா!"

தாமு மருத்துவச்சி குஞ்ஞாணியின் கதவைத் தட்டிக் கூப்பிட்டான்.

"யாரு இந்த நட்ட நடுராத்திரியிலே?"

"நான்தான், தாமு."

"எந்த தாமுப்பா?"

"தஸ்தாவேஜு எழுதற தாமு."

"உனக்கு இப்போ என்ன வேணும்?"

"கொஞ்சம் கதவைத் திற குஞ்ஞாணியம்மா."

உள்ளே வெளிச்சம் தெரிந்தது. கையில் முட்டைவிளக்குடன் குஞ்ஞாணியம்மா கதவைத் திறந்தாள். முன்னந்தலையில் கட்டி முடிந்த உலர்ந்த முடி. நீட்டி வளர்த்த காதுகள் தோள்களைத் தொடுவதாயிருந்தன.

"கௌசுவுக்கு இடுப்புவலி ஆரம்பிடுச்சி. நீங்கதான் வரணும். கௌசுவோட கஷ்டத்தைப் பார்த்துக்கிட்டு நிக்க முடியலே குஞ்ஞாணியம்மா எனக்கு."

"நீ நட, பொழுது விடியறதுக்குள்ளே நான் அங்கே வந்து சேர்றேன்."

"அய்யோ, குஞ்ஞாணியம்மா...!"

குஞ்ஞாணியம்மாவின் இயல்பாக இருந்தது அது. யாராவது போய்க் கூப்பிட்டால் வரமாட்டேன் என்று சொல்வாள். கூடுதலான பணம் கிடைப்பதற்கான தந்திரம்.

"ரைட்டரே, நீ ஒரு ஆம்பளையில்லே? உன்கூட இந்தப் பாதி ராத்திரியிலே நான் எப்படி ஒத்தையா வருவேன்?"

கோபத்தைத் உள்ளடக்கிக்கொண்டு கேட்டான்.

"என்ன உனக்கு வேண்டியது? சொல்லு, தர்றேன். கடவுளை நெனச்சிக்கிட்டு கொஞ்சம் வா."

குஞ்ஞாணியம்மாவின் கண்கள் பேராசையால் மிளிர்ந்தன.

"என்ன தருவே?"

"கால் ரூபா."

அப்போது கால ரூபாய் என்பது பெரிய தொகையாக இருந்தது. குஞ்ஞாணியம்மா திருப்தியடைந்தாள். முண்டு மாற்றிக்கொண்டு தாமுவுடன்கூடவே புறப்பட்டாள்.

"என் ராசாத்தி, கொஞ்சம் அழாம இரு. கௌசு... மருத்துவச்சி இப்பம் வந்திருவா. என் தங்கக் கண்ணுல்ல..."

குறம்பியம்மா அழுதுகொண்டிருந்த கௌசுவை சமாதானப்படுத்திக் கொண்டிருந்தாள். கௌசு உதடுகளைக் கடித்துக் குதறியிருந்தாள். வாய் முழுக்க ரத்தம்.

தாமுவும் மருத்துவச்சியும் வந்து சேர்ந்ததும் குறம்பியம்மாவுக்கு நிம்மதியாயிற்று.

தாமுவின் எதிரிலேயே கதவுகள் அடைக்கப்பட்டன. படைப்பின் ரகசியங்கள் அவனுக்குத் தெரியக்கூடாது. உருவாக்க மட்டுமே தாமுவுக்கு உரிமையுண்டு. வெளியில் விரித்திருந்த ஜமக்காளத்தில் உட்கார்ந்து பீடிகளை ஒவ்வொன்றாகப் புகைத்தான்.

குஞ்ஞாணியம்மாவாக்கும் உள்ளே இருப்பது! கைராசியான

மருத்துவச்சி. எத்தனையோ பிறப்புக்களுக்கு உதவியாக இருந்தவள். தாமுவுக்கு நிம்மதி ஏற்பட்டது. ஆனாலும் உள்ளேயிருந்து கௌசுவின் அலறலைக் கேட்கும்போது தன்னை அறியாமல் நடுங்கினான்.

"கௌசு, அழாதேம்மா. . .'

குறம்பியம்மாவுக்கும் கௌசுவின் கஷ்டத்தைப் பார்த்துக்கொண்டு இருக்க முடியவில்லை. அவள் முனகலாக அழத் தொடங்கினாள். வேகவேகமாக வேலையில் ஈடுபட்டிருந்த மருத்துவச்சி அதைப் பார்த்து இரைந்தாள்.

"நீங்க போய்ப் படுத்துத் தூங்குங்க, கொறம்பியம்மா."

"என் மாதாவே, என் கௌசுவை. . ."

"நீங்க போறீங்களா இல்லையா இங்கேருந்து?"

மருத்துவச்சி குறம்பியம்மாவை வெளியேற்றினாள். ஏதோ முணுமுணுத்துக்கொண்டு அவள் பத்தாயத்தின் மீது ஏறி உட்கார்ந்தாள். முப்பத்தாறு ஆண்டுகாலம் கேளுவச்சனுடன் படுத்துக்கிடந்தது இதே பத்தாயத்தின் மேலேதான். அந்தக் கேளுவச்சன் இன்று எங்கே? பத்தாயத்தின் அருகே அறையின் மூலையில் குழிவான பானையில் செவ்வந்திப் பூக்களின் இதழ்களுக்கிடையில். . .

குறம்பியம்மா மடியிலிருந்து பொடிடப்பியை வெளியிலெடுத்தாள். ஒரு சிட்டிகை பொடியை மூக்குக்குள் தள்ளிய பின்னர் பத்தாயத்தின்மேல் நீட்டிப் படுத்தாள். கௌசுவின் சத்தம் இப்போது கேட்கவில்லை. குறம்பியம்மாவின் கண்கள் மெள்ள அயரத் தொடங்கின.

தொலைவில் குளம்படி ஓசை. ஏராளமான குஞ்சி ரோமங்களுள்ள துடிப்பான வெள்ளைக் குதிரையின் குளம்படிகள். குறம்பியம்மா துள்ளியெழுந்தாள். அவளுடைய காதுகள் ஆயிரம் காதுகளின் கேட்கும் சக்தியைப் பெற்றன. நெஞ்சு துடித்தது. குளம்படி ஓசைநெருங்கி நெருங்கி வந்தது. வண்டிச் சக்கரங்களின் கரகரப்பு ஓசை. குளம்படி ஓசையும் சக்கரங்களின் ஒலியும் திடீரென்று நின்றன.

"கொறம்பி,கொறம்பி, கொஞ்சம் பொடி தர்றியா?"

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு இறந்துபோன லெஸ்லீதுரையின் குரல். குறம்பியம்மா உச்சிமுதல் உள்ளங்கால் வரை வியர்த்தாள். அசைய முடியாமல், குரல் கொடுக்க முடியாமல் அவள் அப்படியே கிடந்தாள். நேரம் போய்க்கொண்டிருந்தது.

கடைசியாகக் குளம்படியோசை விலகி விலகிப் போய்க்கொண்டிருந்தது.

எங்கேயோ ஒரு சேவற்கோழி கூவியது. தேவாலயத்திலிருந்து விடிகாலை மணியோசை முழங்கிற்று. மய்யழியில் காலைக்கிரணங்கள் பரவின.

ஒரு குழந்தையின் பலவீனமான அழுகுரல், கூடவே தாமுவின் மகிழ்ச்சி நிறைந்த குரல்.

"அம்மா, ஆண்..."

அவ்வாறாக தாசன் பிறந்தான். அவ்வாறாக உலகாயதம் மீறிய ரகசியங்களை கர்ப்பம் தரித்துக் கிடக்கும் சமுத்திரத்தின் தொலைவில் நிலைகொண்டுள்ள, பிறப்புக்களுக்கிடையில் ஆத்மாக்களின் ஓய்விடமான வெள்ளியாங்கல்லிலிருந்து ஒரு தும்பி மய்யழிக்குப் பறந்து வந்தது.

# 4

காகம் கரைவதற்கு முன்பு தாசன் விழித்தெழுந்தான். விழித்ததும் கட்டிலிலிருந்து ஊர்ந்து இறங்கி அம்மாவைத் தேடிச் சென்றான். ட்ரௌசர் இறுக்கம் தளர்ந்து சரிந்துகிடந்தது. இடுப்பில் கட்டியிருந்த கறுப்பு அரைஞாண் கயிறு வெளியில் தெரிந்தது.

"இன்னிக்குத்தானேம்மா நான் ஸ்கூலுக்குப் போறேன்?"

"கண்ணு, எந்திரிச்சிட்டியா?"

திண்ணையில் தொங்கவிடப்பட்டிருந்த வெண்கல விளக்கை ஏற்றிக்கொண்டிருந்த கௌசு தாசனைப் பார்த்து ஆச்சரியப்பட்டாள். தினமும் காலையிலும் அந்தியிலும் ஏழு திரிகளிட்டு அந்த விளக்கை கௌசு ஏற்றிவைப்பாள். அந்தியில் தாசன் முற்றத்து பெஞ்சில் உட்கார்ந்து கொண்டு அந்த விளக்கு வெளிச்சத்தில் தோத்திரம் சொல்வான். அப்போது குறும்பியம்மாவும் அவனருகில் வந்து உட்கார்ந்திருப்பாள். அவள் தோத்திரம் சொல்ல மாட்டாள். தாசன் சொல்லி முடிக்கும் வரை கண்களை மூடியபடியே இருப்பாள். தோத்திரம் சொல்லி முடித்து கூப்பிய கைகளைப் பிரிப்பதற்கு முன்பாக தாசன் மௌனமாகப் பிரார்த்திப்பான்.

"எனக்கு நல்ல புத்தி தரணும். அம்மாவுக்கும் அப்பாவுக்கும் பாட்டிக்கும் சுகக்கேடு எதுவும் வரக்கூடாது. . . "

இரவு உறக்கத்தில் இடையிடையே விழித்தெழுந்து தாசன் கேட்டுக்கொண்டே இருந்தான.

"பொழுது விடிஞ்சிரிச்சா? ஸ்கூலுக்குப் போகணுமில்லே!"

"இந்த நடுராத்திரியிலேயா நீ ஸ்கூலுக்குப் போகப்போறே?"

தாமுரைட்டர் மகனை அருகில் சேர்த்தணைத்து, தோளில் தட்டிக்கொடுத்தான்.

ரைட்டரும் குறும்பியம்மாவும் இன்னும் எழுந்திருக்கவில்லை. வெளிறிய வெளிச்சத்தில் தொலைவில் தேவாலய கோபுரத்தின் உச்சிச்சிலுவை தெளிவாகத் தெரியத் தொடங்கியது. சிறிது நேரம் கழித்து தேவாலயத்திலிருந்து விடிகாலை மணி அடித்தது.

தினமும் மூன்று நேரம்அந்த மணி அடிக்கும் - விடிகாலையிலும் உச்சிப்பொழுதிலும் அந்தியிலும்.

"எப்பம்மா ஸ்கூலுக்குப் போகணும்?"

"இன்னும் ரொம்ப நேரம் இருக்கு, கண்ணு... படுத்துத் தூங்கு. நேரம் வந்ததும் அம்மா கூப்பிடுவேனில்ல?"

அதைக்கேட்டு தாசன் ஏமாற்றமடைந்தான். ஸ்கூலுக்குப் போக அவனுக்கு அவசரம். நாட்களை எண்ணிக்கொண்டே இருந்தவன். தினமும் அதிகாலையில் அடுத்த வீட்டு வனஜா ஸ்கூலுக்குப்போவதைப் பார்க்கும்போது துக்கம் உண்டாகும். சின்னப் பாவாடை உடுத்தி, கண்ணுக்கு மையிட்டு, தலையில் பூ வைத்துக்கொண்டு அவள் ஸ்கூலுக்குப் போவதைக் கண்ணிலிருந்து மறையும்வரை பார்த்துக்கொண்டிருப்பான். அவளுடைய கையில் ஸ்லேட்டையும் புத்தகங்களையும் பார்க்கும்போது பொறாமை தோன்றும். மழைக்காலத்தில் ஒரு சின்னக் குடையையும் பிடித்துக்கொண்டு வனஜா

போவாள்.

ஒரு நாள் வனஜா ஸ்கூலுக்குப் போவதைப் பார்த்துக்கொண்டிருந்த தாசனின் கண்களில் திடீரென்று நீர் பெருக்கெடுத்தது.

"என் கண்ணு... எதுக்காக அழுறே?"

கௌசு ஓடி வந்தாள்.

"எனக்கு ஸ்கூலுக்குப் போகணும்."

தாசன் தேம்பி அழுதான். கௌசுவுக்குச் சிரிப்பும் அழுகையும் வந்தன. தாசனை அவள் மடியில் உட்கார்த்தி வைத்து சேலைத் தலைப்பால் கண்ணைத் துடைத்தாள்.

"அடுத்த வருசம் நீயும் ஸ்கூலுக்குப் போகலாம். கண்ணு இப்போ சின்னக் குழந்தையில்ல?" கௌசு சமாதானப்படுத்திப் பார்த்தாள். ஆனால் தாசனின் கண்ணீர் நிற்கவில்லை.

பள்ளிக்கூடம் போக வேண்டுமென்பதான அடங்காத ஆர்வம். அறிவைத் தேடுவதான பொறுத்துக்கொள்ள முடியாத தாகம். ஒருநாள் அந்த ஆர்வம் அணை கடந்தது.

கௌசு குளித்துக்கொண்டிருந்தாள். ரைட்டர் கோர்ட்டுக்குப் புறப்பட்டுப் போயிருந்தான். குறம்பியம்மா களஞ்சியப் பத்தாயத்தின்மேல் படுத்தபடி சோர்ந்து மயங்கிக் கிடந்தாள். இரவில் அவளுக்குத் தூக்கம் இல்லை அல்லவா! மூப்பன்துரையின் விருந்து முடிந்து வீரபுருஷன்மார்களின் குதிரைவண்டிகள் கடந்துபோவதைப் பார்ப்பதற்காகக் காத்திருப்பாள். அதுமுடிந்து தனது காதுகளுக்கு ஆயிரம் காதுகளின் கேட்கும் சக்தி ஏற்றுக் காத்திருப்பாள் - அவளுக்கு மட்டுமே புலப்படுவதான லெஸ்லீதுரையின் குதிரை வண்டியை எதிர்பார்த்து, அவளுக்கு மட்டுமே கேட்க முடிந்ததான அமரனாகிவிட்ட லெஸ்லீதுரையின் குரலை எதிர்பார்த்து.

தாசன் யாரும் பார்க்காதபடி பெட்டியைத்திறந்து சலவை செய்த ஷர்ட்டும் ட்ரௌசரும் வெளியிலெடுத்து உடுத்திக்கொண்டான். ரைட்டர் கோர்ட்டிலிருந்து கொண்டு வந்திருந்த காகிதக்கட்டிலிருந்து நீல நிறமுள்ள ஒருநோட்டை உருவி எடுத்தான். பிறகு அவன் கிளம்பினான்.

காவி நிறம் பூசிய பள்ளிக்கூடத்தைப் பல தடவை பார்த்திருக்கிறான். ஒருதடவை அம்மாவின் கையைப் பிடித்துக்கொண்டு ர்யூ த் லெக்லீஸ் வழியாக நடந்தபோது சொல்லியிருப்பாள்.

"பெரியவன் ஆனதும் கண்ணு படிக்கிற ஸ்கூல் இதுதான்."

அவள் பள்ளிக்கூடத்தைச் சுட்டிக்காட்டினாள்.

காவி நிறம் பூசிய அந்தப் பள்ளிக்கூடத்தின் தோற்றத்தை மனதில் சுமந்தபடி தாசன் சாலை வழியே நடந்தான். சிறிது நடந்த பிறகு அவனுக்கு வழி தெரியவில்லை. எதிரில் மூன்று சாலைகள். கிழக்கே போகும் ர்யூ த் ஸிமித்தியேர். அது இரிமிஸில் முடிவடையும். அங்கேதான் நெஞ்சில் சிலுவையுடன் க்லெமாம்துரையும் லெஸ்லீதுரையும் மீளாத் தூக்கம் கொண்டிருக்கிறார்கள். மேற்கே போவது ர்யூ த்யு கூவர்ணமாம். அது ர்யூ த் ரெஸிதாம்ஸில் மய்யழி ஆற்றங்கரையுடன் முடிவடைகிறது. புனித கன்னிமேரியின் தேவாலயத்திற்கு எதிரில் நீண்டுநீண்டு செல்லும் ர்யூ த் லெக்லீஸ்.

சாலைகள் சந்திக்குமிடத்தில் எந்த வழியாகப் போவது என்று

தெரியாமல் தாசன் நின்றிருந்தான். அவனுடைய கண்கள் நிறைந்திருந்தன. இதற்குள் நான்கைந்து பேர் சுற்றிலும் கூடிவிட்டார்கள்.

"தம்பீ, என்னப்பா?"

பதில் சொல்லாமல் தாசன் தேம்பி அழுதான்.

"எங்கப்பா போறே?"

"எனக்கு ஸ்கூலுக்குப் போகணும்..."

நோட்டை இறுகப் பிடித்துக்கொண்டு, நீர் நிறைந்த கண்களுடன் அவன் சுற்றிலும் கூடியிருந்தவர்களை மாறி மாறிப் பார்த்தான். அழுகைக்குப் படிப்படியாக சக்தி கூடியது. யாரையும் அவனுக்குத் தெரியாது. எல்லோருமே அறிமுகமற்றவர்கள்.

"இது தாமு ரைட்டரோட மகன்."

கோயிலில் கப்பியார் தாசனைப் பார்த்து அறிமுகமாகியிருந்தது. ஒருவர் ரைட்டரை அழைத்து வர கோர்ட்டுக்குப் போனார். கப்பியார் தாசனைத் தூக்கிக் கொண்டு சேகரின் சாயாக் கடைக்கு நடந்தார்.

"எனக்கு ஸ்கூலுக்குப் போகணும்."

கப்பியாரின் கையிலிருந்தவன் அழுதான். கப்பியாருக்கு புரிந்தது. யாருக்குப் தெரியாமல் அவன் பள்ளிக்கூடம் போய்க்கொண்டிருக்கிறான். கப்பியார் வியப்படைந்தார். பால்மணம் மாறாத பச்சிளம் குழந்தை!

ஒரு வருடம் கடந்துவிட்டது. இன்று தாசன் பள்ளிக்கூடம்போகிறான். இப்போது சாலைகள் சந்திக்குமிடத்தில் எப்படிப் போவதென்று தெரியாமல் குழம்பித்தடுமாற வேண்டியதில்லை. ந்யூ த் லெக்லீஸில் காவி நிறம் பூசிய பள்ளிக்கூடம் தனது வாசலைத் திறந்து வைத்திருக்கும்.

குறம்பியம்மா எழுந்தவுடன் முற்றத்திற்கு வந்து காலை நீட்டி உட்கார்ந்தாள். டப்பியிலிருந்து ஒரு நுள்ளல் பொடி எடுத்து மூக்குக்குள் திணித்தாள். அன்றைய முதலாவது பொடி.

தாசனை இழுத்து மடியிலிருத்தி குறம்பியம்மா சொன்னாள்.

"எங்கண்ணு நல்லா படிக்கணும்."

"உம்..."

"படிச்சி பெரிய்ய ஆளாகணும். லெஸ்லீதுரையைப் போல நொத்தேர் ஆகணும்."

குறம்பியம்மா தாசனின் நெற்றியில் முத்தமிட்டாள். பாட்டியின் ரவிக்கையற்ற மார்பின் சூடேற்று அமர்ந்திருந்தான் அவன்.

"அதாவது... எங்கண்ணு கோட்டும் தொப்பியும் மாட்டிக்கிட்டு நடக்கிறதை பாட்டி ஒரு தடவை பார்க்கணும்."

பொடியுடனும் எதிர்காலக் கனவுகளுடனும் மயக்கத்தில் தாசனை நெஞ்சோடு சேர்த்து அணைத்துக்கொண்டு, தியானத்தில் இருப்பது போலக் குறம்பியம்மா உட்கார்ந்திருந்தாள். அப்போதுதான் குஞ்ஞிச்சிருதை அந்த வழியே வந்தாள்.

"கொறம்பியம்மா என்ன இருந்தபடி கனவு காணறாப்பில?"

குஞ்ஞிச்சிருதை முத்துக்கள் போன்று தன் பற்களைக் காட்டிச் சிரித்தாள். தாவீதுதுரையின் வீட்டில் இரவு இருந்துவிட்டுத் தன் வீட்டுக்குத் திரும்பிக்கொண்டிருந்தாள் அவள். தங்கச் சரிகைமுண்டு கசங்கியிருந்தது. அலட்சியமாய் வாரிச்செருகிய தலைமுடி. உறக்கச் சடவில் இருந்தபோதிலும் சிரிக்கின்ற கண்கள்.

"கொறம்பியம்மா சீக்கிரமாவே எந்திரிச்சீட்டீங்களா இன்னிக்கு?"

"தாசன் இன்னிக்கு ஸ்கோலுக்கு போறான்"

"ரைட்டர் மகனா? அவனுக்கு ஸ்கோல் போற வயசாச்சா?"

குஞ்ஞிச்சிருதை மூக்கில் விரல் வைத்தாள்.

"ஆவணியிலே கணக்குப்படி வயசு அஞ்சாச்சி. காலம் பறக்குது குஞ்ஞிச்சிருதே! நீ எதுக்கு நின்ன காலிலேயே நிக்கறே? வந்து உக்காரு."

குஞ்ஞிச்சிருதை சாலையிலிருந்து முற்றத்திற்குப் படியேறி வந்தாள். கௌசு உள்ளேயிருந்து ஒரு நாற்காலி எடுத்து வந்து முற்றத்தில் போட்டாள். குஞ்ஞிச்சிருதை நாற்காலியில் உட்கார்ந்து ஒரு கொட்டாவி விட்டாள்.

ஒற்றை இரவு மட்டுமல்ல, பல இரவுகளின் தூக்கம்

"உன் துரை எப்ப வந்தாப்பில?"

தாவீதுதுரை மய்யழியில் இல்லை. அலுவல் காரணமாக துரை இடையிடையே பாண்டிச்சேரி செல்வதுண்டு.

"நேத்து சுருக்கல் கப்பல்லே. வந்த பிறகுதான் ஆளனுப்பிக் கூப்பிட்டாரு."

"உன்னைப் பார்க்காம துரைக்குத் தூக்கம் வர்றதில்லேன்னு ஆயிரிச்சி, அப்படித்தானே குஞ்ஞிச்சிருதே?"

தாவீதுதுரை மட்டும்தான் குஞ்ஞிச்சிருதையைத் தன்னுடைய பங்களாவுக்குக் கூப்பிட்டனுப்புவார். மற்றவர்கள் குஞ்ஞிச்சிருதையுடன் பார்வைப் பழக்கத்தோடு சரி. அதற்குக் காரணம் இருந்தது. தாவீதுதுரை திருமணம் ஆகாதவர். தனது பெரிய வீட்டில் சமையல்காரனும் வேலைக்காரனுமாக துரை வாழ்ந்து வந்தார். தாவீதுதுரை திருமணமாகாமல் வாழ்வதற்குப் பின்னணியில் ரகசியம் எதுவுமில்லை. கஸ்தோன்துரையின் தலைவிதியல்ல அவருடையது. அதற்கு விடைதான் குஞ்ஞிச்சிருதை

"ஆனாலும் அந்த துரைக்கு உன் அப்பன் வயசு இருக்குமில்ல குஞ்ஞிச்சிருதை . . ."

"கொறம்பியம்மா, வயசானவங்களுக்குத்தானே குஞ்ஞிச்சிருதைங்க தேவைப்படுது.?"

குஞ்ஞிச்சிருதை புன்சிரிப்பை வீசினாள். தாவீதுதுரை உள்ளிட்ட மய்யழியின் வீரபுருஷன்மாரைச் சிறையிட்ட புன்சிரிப்பு.

வாட்டசாட்டமான உயரக் குறைவான உடம்பு. வேகமான நடை. தங்கத்தின் நிறம். அழகான பச்சரிசிப் பற்கள். மேயர் செக்குமூப்பரும் தாவீதுதுரையும் மற்றவர்களும் குஞ்ஞிச்சிருதையின் வாசலைத் தட்டிக் கூப்பிடுவதில் என்ன அதிசயம்?

"எங்கே தாசன்? என் செல்லக்கண்ணனைக் கொஞ்சம் பார்த்துக்கிடுறேன்."

"தாசன் குளிக்கிறான்."

கௌசு பதில்சொன்னாள். குஞ்ஞிச்சிருதை கிணற்றுக்குச் சென்றாள். அவளைக் கண்டு தாசன்வெட்கப்பட்டான். குஞ்ஞிச்சிருதை சிரித்தாள்.

"வெக்கம் எதுவும் வேண்டாம்ப்பா. எனக்கும் உங்கம்மாவோட வயசாச்சி."

தாசன்அவளுக்கு எதிராகத் திரும்பி நின்றுகொண்டான்.

"கௌசு, நீ ஏன் தாசனுக்கு ஒரு தங்கச்சரடு செஞ்சிக் கொடுக்கலே?"

தாசனின் இடுப்பில் கட்டியிருந்த கயிற்றைப் பார்த்து குஞ்ஞிச்சிருதை கேட்டாள். ஓரிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு வாங்கிய கறுத்தகயிறு. அதுவும் நைந்து போயிருந்தது. இதற்குள் பல தடவை அறுந்து போனதை கௌசு முடிச்சுப்போட்டிருந்தாள். தாசன் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டிருந்தான்.

"குஞ்ஞிச்சிருதே உனக்குத் தெரியாது, எப்படி நான் இங்கே காலம் தள்றேன்னு."

தங்கச்சரடு குறித்துக் கேட்டபோது கௌசுவிடமிருந்து அவளையறியாமல் ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது.

போகும்போது குஞ்ஞிச்சிருதை மடியிலிருந்து இரண்டணாவை வெளியிலெடுத்தாள். ஜார்ஜ் மன்னர் உருவம் பொறித்த ஒரு மஞ்சள் நாணயம்.

"ஸ்கோலுக்குப் போறப்போ முட்டாயி வாங்கிக்கோ!"

குஞ்ஞிச்சிருதை காசை தாசனுக்கு நேராக நீட்டினாள். அவன் தயங்கி நின்றபோது அவள் நாணயத்தை அவனுடைய கையில் பலவந்தமாகத் திணித்தாள்.

காசை மறைப்புத்திண்டின்மேல் வைத்துவிட்டு தாசன் குளியலைத் தொடர்ந்தான். குளித்து, கஞ்சி குடித்து, வெளுத்த ட்ரௌசரும் சட்டையும் அணிந்து அவன் பள்ளிக்கூடம் போகத் தயாரானான். கையில் சிலேட்டும் நோட்டும். பையில் சிலேட்டு துடைப்பதற்கான ஈரத்துணியும் தண்ணீர் நிரப்பிய மைக்கூடும் எடுத்துவைத்திருந்தான்.

"வலது காலை முதல்லே வச்சி எறங்கு. கடவுளை நெனச்சிக்கோ!"

பாட்டிசொன்னது போல வலது காலை எடுத்துவைத்து இறங்கத்தான் ஆயத்தப்படுத்தினான். ஆனால் அவசரத்தில் இறங்கியபோது முதலில் வாசல் படிக்கட்டில் வைத்தது இடது காலைத்தான்.

அந்தக் காலத்தில் மய்யழியில் மூன்று பிரெஞ்சுப் பள்ளிக்கூடங்கள் இருந்தன-எக்கோல் த் ஃபீய், எக்கோல் த் கர்ஸோம், கூர்கோம்-ப்ளமாம்தேர். முதலில் சொன்னது பெண்களுக்கான பள்ளிக்கூடம். வனஜா அங்கேதான் படித்துக்கொண்டிருந்தாள். தாசன் சேரப்போவது எக்கோல் த் கர்ஸோமில். எக்கோல் த் ஃபீயிலும், எக்கோல் த் கர்ஸோமிலும் சர்த்திஃபிகா தேறிய பின்னர் குழந்தைகளுக்கு கூர்கோம்ப்ளமாம்தேரில் சேர வேண்டும்-ப்ரவேய்க்குப் படிக்க வேண்டுமானால்.

அப்பாவின் கையைப் பிடித்துக்கொண்டுதாசன் பள்ளிக்கூடத்துககு நடந்தான். வழியில் அவர்கள் மிஸ்ஸியின் வீட்டிற்குச் சென்றார்கள்.

லெஸ்லீதுரையின் பங்களா ஒரு மயானம் போலத் தூங்கி வழிந்தது. வாசலில் ஒரு கடைசியில் குதிரையில்லாத ஒரு குதிரைவண்டி முடங்கிக் கிடந்தது. லெஸ்லீதுரையின் குதிரைவண்டி திடீரென்று மய்யழிச் சாலைகளிலிருந்து தலைமறைவாயிற்று. ஏராளமான ரோமக்குஞ்சமுள்ள வெள்ளைக் குதிரையின் குளம்படி ஓசையைக் குறம்பியம்மா மட்டுமே இன்று கேட்டுக்கொண்டிருக்கிறாள்.

மிஸ்ஸி பங்களாவின் உள்ளேயிருந்து வெளியே வந்தாள். கணுக்கால்வரை எட்டுவதான கறுத்த உடுப்புதான் ஆடை. லெஸ்லீதுரையின் மரணத்திற்குப் பின்னர் கறுப்பு உடை மட்டுமே

மிஸ்ஸியின் ஆடை.

"மிஸ்ஸி, தாசனை ஸ்கூல்லே சேர்க்கிறோம்."

தாசன் அருகில் வந்து முழங்காலிட்டபோது அவனைக் கட்டிப்பிடித்து மிஸ்ஸி முத்தமிட்டாள். அவள் தாசனுக்கு கேக் கொடுத்தாள். மிஸ்ஸியின் கேக் மய்யழி மக்களிடையே பிரசித்தம். கிறிஸ்துமஸ், ரிபப்ளிக் தினமான காத்தோர்ஸ்ழுயியே முதலிய விசேஷ நாட்களில் மிஸ்ஸி கேக் செய்வாள். மிஸ்ஸியின் கேக் சாப்பிட வாய்த்த மய்யழி மக்கள் பேறுபெற்றவர்கள்.

தாமுரைட்டர் அரவமில்லாமல் மாடியை நோக்கிச் சென்றான். சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த தளவிரிப்பு விரித்த, மாடிப்படி முடிவடையும் இடத்துக்கதவு அடைத்திருந்தது. எவருக்காகவும் அந்தக் கதவு திறக்கப்படுவதில்லை. மூன்று வேளையும் மிஸ்ஸி படியேறி பிளேட்டுகளும் கோப்பைகளும் எல்லாவற்றையும் உயரக்குறைவான மேசையின்மீது வைப்பாள். சிறிது நேரம் கழித்து வேலைக்காரி அலங்கோலமான பாத்திரங்களைத் திருப்பி எடுத்து வருவாள். எவரும் கஸ்தோன் துரையைப் பார்க்க முடியாது. தாமுரைட்டர் கஸ்தோனைப் பார்த்து மூன்று ஆண்டுகளாகிவிட்டிருந்தன.

நள்ளிரவின் மார்பில் ஓய்வெடுக்கும் மய்யழி மக்களை கித்தாரிலிருந்து வெளிப்படும் பேடியின் புலம்பல் இசை ஒரு கெட்ட கனவு போல தினமும் தாலாட்டித் தூங்க வைக்கும். அதனால் மட்டுமே அவர்கள் அறிந்திருந்தார்கள்—பேடிதுரை தன்னுடைய துன்பமயமான வாழ்க்கையைத் தொடர்ந்து கொண்டிருக்கிறார் என்று.

"நல்லா வரணும்."

மிஸ்ஸி தாசனின் தலையில் கை வைத்து ஆசீர்வதித்தாள். தனிமை மற்றும் துன்பத்தின் கூடுகளான மிஸ்ஸியின் கண்கள் அப்போது நனைந்திருந்தன.

ரியூ த் லெக்லீஸ் சாலையை அடைந்தபோது ரைட்டர்மடியிலிருந்து இரண்டு மெழுகுவத்திகளை எடுத்து தாசனிடம் கொடுத்தான்.

"மாதாவுக்கு எதிரிலே ஏத்தி வைக்கணும்."

அவர்கள் கோயிலுக்குள் படியேறிச் சென்றார்கள். புனித கன்னிமேரியின் விக்கிரகத்திற்கு எதிரில் உள்ளங்கையினால் தடுத்து மறைத்தபடி தாசன் மெழுகுவத்திகளை ஏற்றிவைத்தான். திடீரெனத் தேவாலயத்தில் சரராந்தல்கள் அசைந்து ஒலியெழுப்பின. வளைவு அமைப்பிலான ஜன்னலை கடந்து வந்த காற்று தாசன் ஏற்றி வைத்த மெழுகுவத்திகளை அணைத்தது. ஒருநிமிடம் வாழ்ந்து அலைக்கழிந்து மரித்த தீச்சுடர்களின் மணம் மட்டும் எஞ்சி நின்றது.

தன்னை அறியாமலே ரைட்டரிடமிருந்து ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது.

தேவாலயத்திற்கு எதிரில்தான் தாசனின் பள்ளிக்கூடம். காவி நிறத்திலான பெரிய கட்டிடம். எவ்வளவோ காலம் தாசன் கனவு கண்டு நடந்து பழகிய பள்ளிக்கூடம். தந்தையின் கையைப் பிடித்துக்கொண்டு, காதுகளில் தன் இதயத் துடிப்புகள் கேட்க, தாசன் பள்ளிக்கூடத்தின் படிக்கட்டுகளில் ஏறினான்.

பள்ளிக்கூடம் இல்லாத ஒருநாள் குறம்பியம்மாவின் மடியில் உட்கார்ந்தபடி தாசன் கேட்டான்.

"என்னை யாரு பெத்தது?"

"உங்கம்மா, கௌசு"

பொடியின் மயக்கத்தில் கண்மூடியிருந்த குறம்பியம்மா பதில் சொன்னாள்.

"நான் அம்மாவோட வயித்திலேருந்தா வந்தேன்?"

"உம்!"

சிறிதுநேரம் கதகதப்பும் நாற்றமும் கொண்ட குறம்பியம்மாவின் மார்பில் தலை சாய்ந்து தாசன் சும்மா இருந்தான். அம்மா அவனைப் பிரசவிப்பதற்கு முன்பு அவன் எங்கே இருந்தான்? தாசன் நினைத்துப் பார்த்தான். அவனுக்கு விடை கிடைக்கவில்லை.

"பாட்டி, நான் எங்கே இருந்தேன் — அம்மா என்னைப் பெர்றதுக்கு முன்னாலே?"

மய்யழியில் எல்லாப் பாட்டிமார்களுக்கும் இந்தக் கேள்விக்கு ஒரு பதில்உண்டு.

"வெள்ளியாங்கல்லின் மேல்."

தொலைவில் சமுத்திரத்தில் ஒரு பெரிய கண்ணீர்த் துளிபோல் இருக்கும் வெள்ளியாங்கல். அங்கே இருந்துதான எல்லா மய்யழி மக்களும் வருவது. சூரியனைப்போலப் பிரகாசிக்கும் வெள்ளியாங்கல்லில் பிறப்புக்குக்காகக் காத்திருக்கும் ஆத்மாக்கள் தும்பிகளைப் போலச் சிறகடித்துப் பறந்துகொண்டிருக்கும்.

"பாட்டி, எங்கே இருக்கு வெள்ளியாங்கல்?"

"அங்கே... கடலுக்குள்ளே."

"பார்த்தாத் தெரியுமா?"

"காத்தும் கோளும் இல்லேன்னா பார்க்கலாம்."

"பாட்டி பார்த்திருக்கீங்களா?"

"உம்."

யானைத் தந்தத்தில் செய்த டப்பியிலிருந்து ஒரு நுள்ளல் பொடி எடுத்து உறிஞ்சி, கிளாவுற்று முன்ஜன்ம நினைவுகளில் இருப்பது போன்ற நிலையில் அவள் தலையை ஆட்டினாள்.

மறுநாள் பள்ளிக்கூடப் போகும்வழியில் தாசன் கடல்புறம் சென்றான். அலைகள் இல்லாததும், மௌனத்தின் காம்பிர்யம் இணைந்ததுமான சமுத்திரத்தில் அங்கெங்கோ தொலைவில் ஒரு கனவு போலத் தென்படுவதான வெள்ளியாங்கல். அதன் உச்சியில் தும்பிகளைப்போல் சிறகடித்துப்பறக்கும் ஆத்மாக்கள், பிறப்புக்கும் மறுபிறப்புக்கும் காத்திருக்கும் ஆத்மாக்கள். பிறப்புகளுக்கிடையில் சிறிது நேரம் ஓய்வு தேடி வந்த ஆத்மாக்கள்...

ஆளில்லாத கடற்கரையில், கடலைப் பார்த்துக்கொண்டு, தாசன் நீண்ட நேரம் நின்றான்.

அன்று அதிகத் தாமதமாகவே அவன் பள்ளிக்கூடம் சென்றான். இரண்டு பீரியடுகள் நடந்து முடிந்திருந்தன.

# 5

கரடிதுரை இறந்துவிட்டான்.

க்லெமாம்துரையையும் லெஸ்லீதுரையையும் போல் மய்யழியின் மக்களால் மறக்க முடியாத மற்றொரு சட்டைக்கார இனத்து நபர்

றோபேர்துரை அல்லது கரடிதுரை.

குள்ள உருவம். கையிலும் காலிலும் முகத்திலும் மட்டுமல்லாமல் கழுத்துப் பகுதியிலும் ரோமம் தென்படும். அதனால்தான் றோபேர்துரைக்குக் கரடிதுரை என்ற பெயர் வந்தது. க்லெமாம்துரையைப் போலவோ, லெஸ்லீதுரையைப் போலவோ றோபேர்துரை பிரதாபம் பொருந்தியவனாக இருக்கவில்லை. தையல் போட்ட ஒரு கால்சட்டையும், ஒட்டுத்துணியிட்டு காலரும் கைகளும் இல்லாத சட்டையும்தான் எப்போதும் உடுத்தும் உடை. ஆயுளின் பெரும்பகுதி கள்ளுக்கடையில்தான் கழிந்தது.

றோபேர்துரை ஐந்தாம் வகுப்பு வரைதான் படித்திருந்தான். கரடிதுரையைப் பொருத்தவரையில் பள்ளிக்கூடத்திற்குப் போவதென்பது தூக்கு மரத்தை நோக்கிப் போவதற்குச் சமமானது. பள்ளிக்கூடத்தின் பெயரைக் கேட்டாலே றோபேருக்கு அபஸ்வரமாயிருக்கும். றோபேரின் பப்பா கப்ரீயல்துரை தினமும் காலையில் ஒரு குவளையில் தண்ணீருடன்வந்து கெஞ்சுவார்.

"மோம் பெத்தீ எந்திரி. மேம்ஷேர் பெத்தீ, எந்திரி."

எருமையைப் போலப் படுத்துறங்கும் றோபேர் அசைந்துகொடுக்க மாட்டான். மீண்டும் நான்கைந்து தடவை கப்ரீயேல்துரை கூப்பிடுவார். அப்போதும் றோபேர் அசைவதில்லை. அப்போது குவளைத் தண்ணீரை றோபேரின் முகத்தில் கொட்டிவிட்டு கப்ரீயேல்துரை ஓடிவிடுவார். தண்ணீர் முகத்தில் பட்டதும் ஓர் அலறலுடன் றோபேர் துள்ளி எழுவான். தலையணையைப் பிறாண்டிக்கொண்டு தரையில் படுத்து உருளுவான். நிதானப்பட்டு றோபேர் எழுந்து வெளியில் வரும்போது கப்ரீயேல்துரை சாவி எடுத்துக் கொண்டு உப்பங்கழிக்குப் போயிருப்பார்.

றோபேர் பல் தேய்ப்பதோ முகம் கழுவுவதோ கிடையாது. தீனி முடித்து வெளியே வரும்போது, தோளில் ஏற்றிச் சுமந்து செல்லும் பொக்கன் புத்தகப்பையுடன் வாசலில் நின்றுகொண்டிருப்பான். உப்பு வியாபாரியான கப்ரீயேல் துரைக்கு க்லெமாம்துரையைப் போலக் குதிரைவண்டி கிடையாது. றோபேரோ எனில் நடந்து பள்ளிக்கூடம் போகத் தயாராக இல்லை. எனவேதான் றோபேரைச் சுமந்து பள்ளிக்கூடத்தில் கொண்டுபோய் விடுவதற்குப் பொக்கன் நியமிக்கப் பட்டிருந்தான்.

றோபேர் ஒவ்வொரு வகுப்பிலும் ஓரிரண்டு ஆண்டுகள் தோல்வி கண்டான். ஐந்தாவது வகுப்பை எட்டியபோது வயது பதினைந்து ஆகியிருந்தது. அப்போதும் றோபேரின் அன்றாட நடவடிக்கைகளில் எந்த மாற்றமும் வந்து சேரவில்லை. வழக்கம் போலவே குவளையில் தண்ணீர் எடுத்து வந்து கப்ரீயேல்துரை கெஞ்சுவார்.

"மோம் பெத்தீ, மோம்ஷேர் பெத்தீ, எந்திரி."

அப்போதும் காலையில் பொக்கன் வருவான். தன்னைவிட உயரமான றோபேரைத் தோளில் தூக்கிக்கொண்டு அவன் பள்ளிக்கூடத்திற்குப் போவான். அந்தக்காலத்தில் மய்யழியில் அது ஒரு சாதாரணக் காட்சியாக இருந்தது.

ஒரு சமயம் விரும்பத் தகாத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. வழக்கம்போல குவளையில் தண்ணீர் எடுத்துப் போய் றோபேரின் முகத்தில் கொட்டிவிட்டு கப்ரீயேல்துரை ஓடினார். அன்று வழக்கத்திற்கு மாறாக

றோபேர்துரை பின்னாலேயே ஓடிச்சென்று பப்பாவை நையப் புடைத்தான். வாசலில் புத்தகப்பையுடன் காத்துநின்ற பொக்களை அடித்து விரட்டினான். அத்துடன் றோபேர்துரையின் படிப்பு முடிவடைந்தது.

இதற்குப் பிறகு உடம்பு நிறைய ரோமம் வளர்ந்துவிட்டது. அத்துடன் கரடிதுரை என்ற பெயரும் கிடைத்தது.

தினமும் காலையில் கப்ரீயேல்துரை உப்பங்கழிக்குப் புறப்படும்போது கரடிதுரை வந்து பணம் கேட்பான்.

"எதுக்குடா உனக்குப் பணம்?"

"கள்ளு குடிக்க."

கப்ரீயேல்துரை பணம் கொடுப்பார். ஆனால், சாயுங்காலம் உப்பங்கழிக்குச் சென்று கரடி மறுபடியும் காசு கேட்பான்.

"எதுக்குடா உனக்கு இப்பம் பணம்?"

"குஞ்சிருதே கிட்டப் போக."

அதைக் கேட்டு கப்ரீயேல்துரை நெஞ்சில் சிலுவை போட்டுக்கொள்வார்.

"வெளியே போடா!"

"நீ தரலேன்னா எங்கேருந்து எனக்குப் பணம் கிடைக்கும்? பணம் தருவியா மாட்டியா?"

கரடிதுரை தெளிவுபடுத்தினான்.

"நீ எனக்கு எதாச்சும்வேலை வாங்கித் தா. நான் அதுக்குப் பிறகு பணம் கேக்கலே."

ஐந்தாம் வகுப்புக்கூடத் தேறாத றோபேருக்கு என்ன வேலையென்று கப்ரீயேல் துரை தேடித் தர முடியும்? சிபாரிசு செய்ய வேண்டுமானால் உப்பு வியாபாரியான கப்ரீயேல்துரைக்கு என்ன தகுதியும் மரியாதையும் இருக்கின்றன ஊரில்? அவர்கலங்கினார். கடைசியில் கப்ரீயேல்துரை புனித கன்னிமேரி கோயிலின் பாதிரியாரைச் சரணடைந்தார்.

அப்படித்தான் கரடிதுரை தேவாலயத்தில் மணியடிப்பவனாக மாறினான். கரடி வேலையில் சேர்ந்த நாள் தேவாலயத்தின் உச்சியில் பிரும்மாண்டமான மணிகள் புயல் சாற்றுப் போன்று அசைந்தாடி மய்யழி உச்சியில் முழங்கின. அன்று அந்த மணி முழக்கம் மய்யழிக்கு வெளியே எத்தனையோ நாழிகைகள் தொலைவுவரை கேட்டது. பாதிரியார் அகமகிழ்ந்தார், கப்ரீயேல்துரையும்.

தினமும் சூரியன் மய்யழி ஆற்றின் மேற்பரப்பில் உதிப்பது தேவாலயத்திலிருந்து ஒலிக்கும் விடிகாலை மணியோசையைக் கேட்டுக்கொண்டுதான். றோபேர்துரை மணியடிப்பவனாக மாறிய மறுநாள், ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு முதன்முதலாக, தேவாலயத்திலிருந்து விடிகாலை மணியோசை முழங்கவில்லை. முந்தின நாள் இரவு குடித்து உணர்விழந்த கரடிதுரை உப்பங்கழியின் வெளிப்பரப்பில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான்.

அவ்வாறு கப்ரீயேல்துரை அல்லல்பட்டுத் தேடிக்கொடுத்த வேலை கரடிதுரைக்கு இல்லாது போயிற்று.

"கரடிதுரை போறான் — கரடிதுரை போறான்."

றோபேர்துரையைப் பார்த்ததும் குழந்தைகள் அலறி ஓலமிடும். அதைக் கேட்டு கப்ரீயேல்துரை கண்ணீர் வடிப்பார். கப்ரீயேல்துரைக்கு

ஒரே ஒரு மகன்.

நள்ளிரவுவரை கரடி கள்ளுக்கடையில் உட்கார்ந்து தின்பதும் குடிப்பதுமாக இருப்பான். கள்ளுக்கடையில் கரடிதுரையின்கூட்டாளி யானைக்காலன் அந்தோனி. யானைக்கால் மட்டுமல்லாமல்அவனுக்குப் பார்வைக்கோளாறும்இருந்தது. ஃபுட்பாலின் பருமனுள்ள விரைப்பைகள். இருவரும் ஒருமித்துதான் நள்ளிரவில் கடையிலிருந்து வெளியேறுவார்கள். அந்தோனி வேலை பார்ப்பது சத்திரத்தில். இருவரும் தத்தமது வசிப்பிடங்கள் வரை கதைகள் சொல்லிக்கொண்டும் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் ஒருமித்து நடப்பார்கள்.

மய்யழியில் இருந்த மற்ற சட்டைக்காரர்களுக்கு எல்லாம் தெரிந்துதான் இருந்தது. அவர்களுக்குக் கோபம் பொங்கி வழிந்தது. கிழவன் கப்ரியேல் துரையின் மீதிருந்த அனுதாபம் ஒன்றினால் மட்டுமே அவர்கள் அடங்கிக்கிடந்தார்கள். இல்லாவிட்டால் மய்யழியில் சட்டைக்காரர்களின் முகங்களில் கரியைப் பூசி நடக்கும் கரடியை அவர்கள் சும்மா விட்டுவிடுவார்களா என்ன?

ஒரு நாள் கரடிதுரை குடித்துக்கொண்டிருந்தபோது, சுமைகாரன் பொக்கன் கடைக்குள் நுழைந்தான்.

"ஒரு கோப்பை கள்ளும் புளிக்கறியும்."

பொக்கன் தலையில் கட்டியிருந்த துண்டை எடுத்துத் தோளில் போட்டுக்கொண்டு ஒரு மூலையில் உட்கார்ந்தான். கள் ஊற்றிய கோப்பையை வாய்க்குக் கொண்டுபோனபோது கரடியின் குரல் கேட்டது.

"நீ பொக்கன்தானே?"

"ஆமா!"

பொக்கன் கோப்பையை மீண்டும் மேசைமீது வைத்தான். அப்போதுதான் அவன் கரடி துரையைப் பார்க்கிறான். பொக்கன் பவ்யமாக உட்கார்ந்திருந்தான். கரடி எழுந்திருந்து பொக்கனுக்கு அருகே சென்றான்.

"எந்திரிடா"

பொக்கன் எழுந்து நின்றான். கரடி அவனுடைய கோபபையிலிருந்த கள் முழுவதையும் ஒரே மடக்கில் குடித்து முடித்தான்.

"வாடா வெளியே!"

கரடி கட்டளையிட்டான். என்னவோ நடக்கப்போகிறது! கடைக்கார உன்னிநாயரும் நண்பர்களும் உற்றுப்பார்த்தார்கள். கரடிதுரை பொக்கனின் கையைப் பற்றிக்கொண்டு வெளியே நடந்தான். உன்னிநாயருக்கும் நண்பர்களுக்கும் நெஞ்சு பதைத்தது.

"முரட்டுத்தனமா எதுவும் செய்திடாதே கரடி நீ."

உன்னிநாயர்கெஞ்சினார். அடிப்பதற்காகத்தானிருக்கும் என்றுதான் உன்னிநாயர் எண்ணினார். அவர் நினைத்தது தவறு. தள்ளாடும் கால்களில் நேராக நிற்க முயன்று, அடைந்து போகும் கண்களை நேராகப் பார்க்க முயன்றபடி, கரடிதுரை ஓர் ஆணையிட்டான்.

"தூக்குடா என்னை!"

பொக்கன் கரடிதுரையை உறுத்துப் பார்த்தான். உன்னிநாயரும் நண்பர்களும் ஒன்றும் புரியாமல் நின்றார்கள்.

"ஏண்டா, தூக்குன்னு சொன்னேனில்ல உன்கிட்ட?"

கரடிதுரை கையை ஓங்கினான். உன்னிநாயரும் நண்பர்களும் திகைத்து நின்றார்கள். பொக்கன் அசையாமல் நின்றிருந்தான். பள்ளிக்கூடத்திற்குப்போய்க்கொண்டிருந்த பழைய றோபேரல்ல இது. பொக்கனும் பழைய பொக்கனல்ல. தலையெல்லாம் நரைத்துப்போய் முதுகும் கூன் விழுந்திருந்தது.

"பொக்கா, துரை சொல்றது கேக்குதில்ல?"

உன்னிநாயர் தாக்கீது கொடுத்தார். கரடியின் சுபாவம் உன்னிநாயருக்கு நன்றாகவே தெரியுமல்லவா? பொக்கன் கைகூப்பியபடி நின்றிருந்தான். சுற்றிலும் ஆட்கள் கூடியிருந்தார்கள். எல்லாருடைய முகங்களிலும் எதிர்பார்ப்பு. பயமும்கூட! கோபக்காரனான கரடி முஷ்டியை மடக்கிக்கொண்டு முன்னே பாய்ந்தான்.

"நான் தூக்குறேன்... என்னை ஒண்ணும் செய்திடாதீங்க!"

கிழவன் பொக்கன் கரடியின் காலில் விழுந்தான். அவன் எழுந்து துண்டை எடுத்து இடுப்பில் இறுகக் கட்டினான். கரடிதுரை அவனுடைய தோளில் தலையின் இரண்டு பக்கமும் ஒவ்வொரு கால் இட்டு உட்கார்ந்தான்.

"இறுக்கிப் பிடிங்க துரை"

உன்னிநாயரும் நண்பர்களும் நின்றபடி சிரித்தார்கள்.

"நட."

கரடி ஆணையிட்டான். வில்லைப்போல் வளைந்த முதுகுடன் பொக்கன் நடக்கத் தொடங்கினான். பட்டப் பகல் என்றதால் சாலை நெடுக ஆட்கள் இருந்தார்கள். உன்னிநாயரும் நண்பர்களும் கைகொட்டிச் சிரித்தார்கள்.

பொக்கனின் தலையை இறுக்கப் பிடித்துக்கொண்டு கரடிதுரை அதே வேளையில் ஆணையிட்டுகொண்டிருந்தான்.

"கூடார வீட்டுப் பக்கமா போ."

"பள்ளிக்கூடத்துப் பக்கம்"

"பாலத்துக்கு..."

கிழவன் பொக்கன் கரடிதுரையைச் சுமந்துகொண்டு கூடார வீடும் பள்ளிக்கூடமும் கடந்து பாலத்தை நோக்கி நடந்தான். மூச்சுத்திணறியபடி. ஒவ்வொரு நிமிடமும் வளைந்துகொண்டிருந்த சரீரத்துடன் பொக்கன் மய்யழியை வலம் வந்தான். அந்த அல்லாட்டத்தின் பாதிப்பு சாகும்வரை பொக்கனை விடவில்லை.

கப்ரீயேல்துரை இறந்ததும மற்ற சட்டைக்காரர்கள் கரடிதுரையைத் தங்களிடமிருந்து விலக்கிவிட்டார்கள். சிலர் அவனைக் கடிந்தார்கள். சிலர் அவனுக்கு உபதேசம் செய்தார்கள். ஆனால் கரடிதுரையின் தலைவிதியின் கடிவாளம் அவர்களுடைய கையிலில்லை. அவன் வழக்கம்போல் குடித்தும் விபச்சாரம் செய்தும் வல்லடிகள் செய்தும் வாழ்க்கை நடத்தினான். தானே அவமானப்பட்டும், மற்ற சட்டைக்காரர்களுக்கு அவமானத்தைத் தேடித் தந்தும் கரடிதுரை வாழ்ந்திருந்தான்.

"பீட்டர், பீட்டர்..."

உறங்கிக்கொண்டிருந்த பீட்டரை எமிலி குலுக்கி எழுப்பினாள். பீட்டர் மல்லாந்து படுத்தபடி தூங்கிக்கொண்டிருந்தான். பீட்டருக்கு கரடிதுரையினுடையதைப் போன்ற அதே உடல்வாகும்

நடவடிக்கைகளும். உடம்பு முழுவதும் ரோமமும் உண்டு.

"பப்பா இன்னும் வரல்லேப்பா, ஒருதரம் போய்ப் பார்த்திட்டு வா பீட்டர். . ."

எமிலி கெஞ்சினாள். தேவாலயத்து விடிகாலை மணியும் அடித்துவிட்டிருந்தது. காகம் கரைந்தது. ஆனாலும் முந்தின நாள் வீட்டிலிருந்து போன கரடிதுரை திரும்பி வரவில்லை.

வயதான பின்னர் கரடிதுரை கள்ளுக்கடையில் நிரந்தரமாகத் தங்கிவிட்டான் என்றுதான் சொல்ல வேண்டும் நள்ளிரவு கடந்தாலும் துரை வெளியேறுவதில்லை. எஞ்சியிருக்கும் கள்ளை ஊறல் பீப்பாயில் ஒளித்துவைத்துவிட்டு உன்னிநாயர் தெரிவிப்பார்.

"துரை, போயிட்டு நாளைக்கு வா. . ."

கரடிதுரை அசைவதில்லை. யாராவது தூக்கி நிறுத்தி வெளியில் கொண்டுவந்து உட்கார்த்திவைப்பார்கள். உன்னிநாயர் கடையைப் பூட்டிவிட்டு வீட்டுக்குப் போவார். கரடிதுரை இருந்த இடத்தில் இருந்தபடியே தூங்குவான். இல்லாவிட்டால் பாதையோரத்திலோ தெருவோரத்திலோ போதையில் கிறங்கிக் கிடப்பான். விடிகாலை மணி அடித்தும் காகம் கரைந்தும் துரை திரும்பி வராமலிருந்தால் எமிலி பீட்டரை சரணடைவாள்.

"உன்னோட பப்பாயில்லையாப்பா? கொஞ்சம் போய்ப்பாரு."

"உன்னோட துரைதானே? நீயே போ."

பீட்டர் திரும்பிப் படுத்தான். அவன் முரண்டுபிடிப்பவன். றோபேர்துரைக்கு கரடிதுரை என்று பெயர் வைத்த மய்யழி மக்கள் பீட்டருக்கும் ஒரு பெயர் வைக்கத் தவறவில்லை — டிம்பன்துரை. ஒரு தடவை கூடாரமனையின் முன்னால் உன்னிநாயரும் நண்பர்களும் பீட்டரை டிம்பன்துரை என்று அழைத்தார்கள். பீட்டர் அவர்களை சாலையில் கிடத்தி உதைத்துத் தள்ளினான். குஞ்ஞாணனின் முன்வரிசைப் பல்லொன்று போயிற்று. அந்த சம்பவத்திற்குப் பிறகு மய்யழியின் மக்களின் எவருக்கும் டிம்பன்துரை என்று கூப்பிட தைரியம் வரவில்லை.

பீட்டர் திரும்பிப் படுத்தபோது எமிலி றோபேர்துரையைத் தேடி வெளியே புறப்பட்டாள். தினமும் இதுவழக்கமாகிவிட்டது. பாலத்து சிமெண்ட் பெஞ்சிலும் சத்திரத்து வாசலிலும் உப்பங்கழியிலும் புனித கன்னிமேரியின் தேவாலப் படிக்கட்டுகளிலும் எமிலி துரையைத் தேடுவாள். அங்கே எங்கேயும் தட்டுப்படவில்லையானால் ற்யூ த் லாகார் சாலையிலுள்ள உன்னிநாயரின் கடையை நோக்கி நடப்பாள். வழியில் குஞ்சக்கனோ மலையன் கடுங்ஙனோ யாராவது சொல்வார்கள்

"அதோ அந்த முக்கிலே கெட்க்காரு உங்க துரை."

அவர்கள் சுட்டிக் காட்டிய இடத்தை நோக்கி நடப்பாள் எமிலி. விளக்குக் கம்பத்தின் அடியில் ஒரு நாயைப் போலச் சுருண்டு படுத்துத் தூங்கிக்கொண்டிருப்பான் றோபேர்துரை. எமிலி துரையைத் தாங்கலாகப் பிடித்து எழுப்புவாள். நரைத்த தாடிமீசையில் ஒட்டிப்பற்றியிருக்கும் வாந்தியைத் துடைத்துச் சரிசெய்வாள். தொலைவில் பறந்துபோய்க் கிடக்கும் தொப்பியை எடுத்துக்கொண்டு வந்து தலையில் வைப்பாள். தனது தோளில் தலையைச் சாய்க்கச்செய்து நடக்க வைத்து துரையை ற்யூ த் லாகார் வழியே எமிலி வீட்டைநோக்கி நடப்பாள். புனித

கன்னிமேரி தேவாலயத்திற்கு முன்பாக வரும்போது எமிலியின் கண்கள் நிறைவது வழக்கமாகிவிட்டது.

"அவளுக்குன்னு ஒரு கஷ்டம். . ."

மய்யழியின் மக்கள் அனுதாபம் கொள்வார்கள். மனைவியின் தோளில் தலை சாய்த்து தடுமாறித்தடுமாறி நடந்து போகும் இந்த அநாகரிகக் கிழவன் பங்களாவும் குதிரைவண்டியும் வைத்திருந்த லெஸ்லீதுரையின் இனத்தைச் சேர்ந்தவன்தான். தனது நரம்புகளில் லாலிபிரபுவின் ரத்தத்தைப் பாரம்பரியமாகக்கொண்ட க்லெமாம்துரையின் இனத்தைச் சேர்ந்தவன்தான். மய்யழி மக்கள் எப்படி அனுதாபப்படாமலிருப்பார்கள்?

ஒருநாள் தப்பட்டையும் கோலுமாய் பைதல் கள்ளுக்கடைக்குள் நுழைந்தான்.

"கரடிதுரே, உங்களுக்குத்தெரியுமா சேதி? உங்க மகனோட கல்யாணம் முடிஞ்சாச்சி!"

கண்ணை மறைத்திருந்த தொப்பியை உயரே நிமிர்த்தியபடி கரடிதுரை பைதலை வெறித்துப் பார்த்தான். மய்யழி முனிசிபாலிட்டியில் தப்பட்டைஅடிப்பவன் பைதல். ரிபப்ளிக் தினத்தன்று மூப்பன்துரை மய்யழி மக்களுக்கு அரிசியும் துணியும் கொடுக்கும்போது, புயல் காற்று வீசுவதற்கான சாத்தியக்கூறுகள் உண்டாகும்போது, அல்லது அதைப் போன்று ஏதாவது விசேஷங்கள் நடைபெறும்போது பைதல் தப்பட்டையும் கோலுமாகச் சாலைகள்தோறும் அலைவான். சேடய வடிவிலான தப்பட்டை மீது கோல்கொண்டு அடித்து ஆட்களைக் கூப்பிட்டு வரவழைத்து, அரசு முத்திரையுள்ள காகிதச் சுருளை விரித்து உரக்கப் பிடித்து விவரம் தெரிவிப்பான்.

"பீட்டர் கல்யாணம் முடிஞ்சாச்சி."

கரடிதுரை வெறித்துப் பார்ப்பதை அறிந்து பைதல் மறுபடியும் சொன்னான்.

"நிசம்மாவா பைதல்?"

உன்னிநாயரும் நண்பர்களும் பைதலைச் சூழ்ந்து கூடிவிட்டார்கள். அவன் தப்பட்டையும் கோலும் மேசைமேல் வைத்து விட்டு விவரித்தான்.

"ரெஜிஸ்டர் கல்யாணம். சத்தியமா! யாரு பொண்ணுன்னு தெரியுமா?"

"யாரு?"

உன்னிநாயரும் நண்பர்களும் ஒரே குரலில் கேட்டார்கள்.

"ராமன் மேஸ்திரியோட இளைய மகள் — ஜானு."

றோபோர்துரையின் மகன் பீட்டர்துரை ஒரு ஹிந்துப்பெண்ணைத் திருமணம் செய்திருக்கிறான். உன்னிநாயரும் நண்பர்களும் மூக்கின்மேல் விரல்வைத்தார்கள்.

வாங்கிய மீன்கறியைத் தொட்டு நக்கிக்கொண்டிருந்த றோபோர்துரை சட்டென்று எழுந்து வெளியேறினான்.

"நீங்க எங்கே போறீங்க கரடிதுரை?"

பதில் சொல்லாமல் கரடிதுரை ந்யூ த் லாகார் வழியே நேராக நடக்கத் தொடங்கினான்.

திருமணம் முடிந்து மனைவியை வீட்டில் கொண்டுபோய் விட்டதற்குப் பிறகு வலை எடுத்துக்கொண்டு பீட்டர் பாலத்துக்குப்

போயிருந்தான். பீட்டர் மீன் பிடித்துக் கொண்டிருந்தபோதுதான் கரடிதுரையின் அலறலைக் கேட்டான்.

"நாயோட மகனே... யாரைக் கேட்டுடா நீ அந்தப் பறச்சியே..."

கரடிதுரை முடிக்கவில்லை. முரடனான பீட்டரின் கண்ணிலிருந்து கிளம்பிய தீ அவனை நிசப்தனாக்கியது.

"எனக்குப் பிடிச்சவளை நான் கல்யாணம் பண்ணிக்குவேன். நீ யாருடா கேக்குறதுக்கு?"

கரடிதுரை பீட்டரின் குரல்வளையை எட்டிப் பிடித்தான். திமிறி விலகி நின்று பீட்டர் எச்சரிக்கைக் குரல் கொடுத்தான்.

"அடிச்சி நொறுக்கிப் பல்லெல்லாம் பேத்திருவேன்... சொல்லிப்புட்டேன்!"

கரடிதுரை மரத்துப்போன கைகளோடு விறைத்தபடி நின்றான். பின்னர் தன் வீட்டை நோக்கி நடந்தான். பீட்டர் பின்புறமிருந்து உரத்துச் சொன்னான்.

"எங்கேடா நீ போறே? ஜானுகிட்ட போறேல்ல, அடாவடித்தனம் ஏதும் பண்ணினே... உன் எலும்பையெல்லாம் நான் நொறுக்கிப்புடுவேன்."

பீட்டரின் பயமுறுத்தலைப் பொருட்படுத்தவில்லை கரடிதுரை. தன்னுடைய மகனை மயக்கியெடுத்த ராமன் மேஸ்திரியின் மகளை இரண்டு வார்த்தை கேட்க வேண்டும்... தன்னுடைய வீட்டைவிட்டு விரட்டியடிக்க வேண்டும். கோபத்துடன் கரடிதுரை நடந்தான். வாசலில் நின்றபடி கரடிதுரை கூப்பிட்டுச் சொன்னான்.

"கூத்திச்சி... எறங்கி வாடி வெளியே!"

ஜானு வந்தாள். புள்ளிகளிட்ட பிளவுசும் வெள்ளை முண்டும். நெற்றியில் பெரிய சாந்துப்பொட்டு. காற்றில் அலைபாயும் கூந்தல். கூம்பி நிற்கும் மார்பகங்கள். கரடிதுரை அந்த அழகியைக் கண்டு பிரமித்து நின்றான்.

"என்னப்பா?"

"கொஞ்சம் தண்ணி."

கரடிதுரை முற்றத்து பெஞ்சின்மேல் உட்கார்ந்து பெருமூச்சுவிட்டான். ஜானு ஒரு குவளை நிறைய உப்பு கலந்த நீராகாரம் கொண்டு வந்தாள். குடித்து முடிக்கும்வரை பக்கத்திலேயே நின்றிருந்தாள்.

"இன்னும் கொஞ்சம் வேணுமாப்பா?"

"உம்."

ஜானுவின் முகத்தையும் நெஞ்சையும் மாறி மாறிப் பார்த்தபடி கரடிதுரை முணுமுணுத்தான். ஜானு மீண்டும் நீராகாரம் கொண்டுவந்து கொடுத்தாள். அன்றும் மறுநாளும் கரடிதுரை பல தடவை தண்ணீர் கேட்டான். ஐந்து நிமிடங்களுக்கு ஒருமுறை கரடிதுரை வீட்டுக்குள் குரல்கொடுப்பான்.

"ஜானு, பப்பாவுக்குக் கொஞ்சம் தண்ணி."

சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் இரவு பீட்டரின் நெஞ்சில் தலைவைத்துப் படுத்துக்கொண்டு ஜானு அழுதாள்.

"என்னாலே இங்கே சமாளிக்க முடியாது?"

அதைக் கேட்டு பீட்டர் திகைத்தான்.

"அப்பா. . ."

"அவன் என்ன செஞ்சான் உன்னை?"

"அப்பா தூங்க முடியாமத் தொந்திரவு பண்றாரு."

அவள் பீட்டரின் நெஞ்சில் தலையைப் புதைத்துக்கொண்டு தேம்பி அழுதாள். பீட்டர் அன்று தூங்கவே இல்லை. றோபேர்துரை சில நாட்களாக வெளியில் எங்கும் போகவில்லை. வராந்தாவிலேயே முடங்கிக் கிடப்பான். பீட்டர் அதை கவனிக்காமலில்லை.

"ஏம்ப்பா பீட்டர், உங்கப்பனுக்கு என்னாச்சி! கிழவனைக் காணவே காணோமே?"

உன்னிநாயர் கேட்டார்.

"நீயா, உங்கப்பனா? யாரு கல்யாணம் பண்ணிக்கிட்டது?"

கள்ளுக்கடையில் கூட்டமாகச் சிரிப்பு முழங்கியது. பீட்டர் தலையைக் குனிந்தபடி இரண்டு கோப்பையைக் குடித்தான். அதற்கு மேல் கொஞ்சம் சாராயமும் உள்ளே ஏற்றிக்கொண்டு கடையிலிருந்து வெளியேறியபோது நேரம் நள்ளிரவைத் தாண்டியிருந்தது.

வீட்டில் விளக்கு அணைந்திருந்தது. முற்றத்தில் றோபேர்துரை இரவில் படுத்துக்கிடக்கும் பெஞ்ச் வெறுமையாக இருந்தது. சாத்தி வைத்திருந்த கதவை மெதுவாகத் தள்ளித் திறந்து பீட்டர் உள்ளே சென்றான். ஜானு படுத்திருக்கும் அறை வாசலில் கிழவன் பதுங்கியபடி நின்றிருந்தான். மங்கிய வெளிச்சத்தில் ஒருக்களித்துப்படுத்திருந்த ஜானுவையும் பீட்டர் பார்த்தான்.

பீட்டரைக் கண்டதும் சற்று நடுங்கினான். ஏதோ முணுமுணுத்தபடி கிழவன் முற்றத்திற்குச் சென்று படுத்தான்.

"எந்திரி."

கிழவன் கண்ணைத் திறந்தபோது கையில் கயிற்றுடன் எதிரில் நின்றிருந்தான் பீட்டர். தண்ணீர் கோரும் குத்துப்பாளையிலிருந்து கழற்றிய நீளமான கயிறு. பீட்டர் கிழவனைத் தூக்கி நிறுத்தித் திண்ணை மரத்தூணின் அருகில் கொண்டுபோய் நிறுத்தி கயிற்றினால் தூணோடு சேர்த்துக் கட்டினான். அதன் பிறகு அவன் எதற்கோ வீட்டுக்குள் போனான்.

"என்னெக் கொல்றானே... ஓடி வாங்களேன்... என்னெக் கொல்றானே. . . !"

கயிற்றினால் கட்டுண்ட கரடிதுரை உரக்கக்கூச்சலிட்டான். அப்போதுதான் பீட்டர் திரும்பி வந்தான். கையில் பெரிய குப்பி நிறைய மண்ணெண்ணெய். பீட்டர் எண்ணெயைக் கிழவனின் தலையில் ஊற்றினான். கால்சட்டைப் பையிலிருந்து தீப்பெட்டி எடுத்து உரசி தலைக்கு தீ வைத்தான்.

★ ★ ★

றோபேர்துரைக்குக் குதிரைவண்டியோ பங்களாவோ கிடையாது. ஊரில் சொத்துசுகம் இருக்கவில்லை ஆனாலும் பெரும்புள்ளியான லெஸ்லீதுரையை அடக்கம் செய்த அதே மயானத்தில்தான் அவனும் அடக்கம்செய்யப்பட்டான். அது மட்டுமல்ல, இரிமினில் அவர்களுடைய கல்லறைகள் அடுத்தடுத்து உரசியபடி நிற்கின்றன. அவர்கள் மய்யழியில் சட்டைக்காரர்களுக்கிடையே இரண்டு வகைப்பட்டவர்களாய்

வேறுபட்டு இருந்ததுடன், மனிதனின் இருவேறு முகங்களாகவும் இருந்தார்கள். அவர்கள் படைப்பின் ஒரே சட்டதிட்டத்துக்கு ஆட்பட்டவர்களாகத்தான் பிறப்பெடுத்தார்கள். ஆனாலும் வேறுபாடான தலைவிதிகள் ஏற்று வெவ்வேறான பாதைகள் வழியே காலத்திரைக்குப் பின்புறம் மறைந்து முடிந்தார்கள்.

மய்யழியில் சட்டைக்காரர்களின் கதை இங்கேயும் முடிவடையவில்லை. அவர்கள் இதற்கு மேலும் வாழ்ந்திருந்தார்கள். அவர்கள் கால்சராயும் தொப்பியும் அணிந்து, வைப்பாட்டிகளையும் நாய்களையும் வளர்த்து, ரிபப்ளிக் தினத்திலும் கிறிஸ்துமஸ்ஸிலும் அன்னதானம் செய்து வாழ்ந்து வருகிறார்கள். அவ்வாறு சட்டைக்காரர்களின் ரத்தம் புதிய நரம்புகளைத் தேடியும் கண்டுபிடித்தும், தலைமுறைகளினூடே சஞ்சரித்துக் கொண்டிருக்கிறது.

# 6

முன்னொரு காலத்தில் பிரான்ஸில்...

குறம்பியம்மா டப்பியைத் திறந்து ஒரு நுள்ளல்பொடி எடுத்து உறிஞ்சிவிட்டு சொல்லத் தொடங்கினாள். குறம்பியம்மாவின் மடியில் அமர்ந்து அவளுடைய கழுத்தில் கைகளை வளைத்துப் போட்டபடி தாசன் கேட்டுக்கொண்டிருந்தான்.

முன்னொரு காலத்தில் பிரான்ஸில் ஓர் இடையப் பெண்குழந்தை வாழ்ந்து வந்தாள். தங்க நிறமாயிருந்தது அவளுடைய தலைமுடி. கவர்ந்திழுக்கும் பிரகாசமான நீலக்கண்கள். தொம்றெமி கிராமத்தில் பசுமை நிறைந்த மைதானங்களிலும் நீலத் தெளிவான நீர் நிறைந்த ஆற்றங்கரைகளிலும் அவள் தன்னுடைய ஆடுகளை மேய்த்துக்கொண்டு நடந்து செல்வாள்.

ஒருநாள் ஆற்றங்கரையில் தன்னுடைய ஆடுகளுடன் இருந்தபோது அவள் ஓர் அசரீரியைக் கேட்டாள்.

"இடையச் சிறுமியே, உன்னுடைய பிறந்த நாட்டுக்கு ஆபத்து. . . ."

அவள் தன்னுடைய நீலக்கண்களை ஆகாயத்தை நோக்கி உயர்த்திப் பார்த்தாள். ஆகாயத்தின் நெடுந்தூர நீலப் பரப்பில் வெள்ளைச் சிறகுகளை அடித்துக்கொண்டு மைக்கேல் தேவதூதன் பறந்து வந்தான். இடையச் சிறுமி முழங்காலிட்டாள்.

"இடையச் சிறுமியே, ஆயுதம் ஏந்து..."

தேவதூதன் அவளுடைய தலைக்கு மேலே சிறகடித்து வட்டமிட்டுப் பறந்தான்.

பிறந்த நாட்டை ஆங்கிலேயர்கள் நான்கு திசைகளிலும் சுற்றி வளைத்துக் கொண்டார்கள். பிரான்ஸ் நாட்டு அரசகுமாரர்கள் ஒவ்வொருவராக ஆயுதங்களைக் கீழே போட்டார்கள்.

"ஜான், உன்னால் மட்டுமே பிரான்ஸைக் காப்பாற்ற முடியும். இடையச் சிறுமியே, படைக்களத்திற்குப் போ..."

இடையச் சிறுமி முழங்காலிட்டு ஆகாயத்தை நோக்கி உயர்த்திய கண்களுடன் கைகூப்பி இருந்தாள். அவள் பார்த்துக் கொண்டிருந்தபோதே தேவதூதன் வெள்ளைச் சிறகுகள் அடித்து மேலே பறந்தான். படிப்படியாக ஒருவெள்ளைப் புறாவைப் போன்று சிறிதாகி ஆகாய நீலப்பரப்பில் மறைந்தான்.

பிறந்த நாட்டைக் காப்பாற்ற தொம்றெமியில் இடையச்சிறுமியினால் மட்டுமே முடியும். தன்னுடைய ஆடுகளைக் கூப்பிட்டு, காதுகளில் தேவதூதனின் திவ்விய சேதியைச் சொல்லி, நீலக் கண்களில் ஆனந்தக்கண்ணீருடன் அவள் குடிசையை நோக்கி நடந்தாள்.

"பப்பா, மம்மி, நான் யுத்தத்துக்குப் போறேன். . ."

"மகளே, நீயா?"

இடையச் சிறுமி சொன்னதைக் கேட்டு அவர்கள் திகைத்தார்கள். ஆனால் தேவதூதனின் கட்டளையைப் பற்றி அறிந்தபோது அவர்களும் முழங்காலிட்டார்கள்.

பிறந்த நாட்டின் மானம் காப்பதற்காக இடையச் சிறுமி போருக்குப் புறப்பட்டாள். அவள் வோக்குலேர் என்ற பட்டணத்திற்கு சென்று அங்கு அரசாட்சிசெய்துவந்த கப்பித்தேன் றோபேர் த் போதிக்குறியிடம் ஆயுதங்கள் கேட்டாள்.

"பராக்கிரம சாலிகளான ராஜாக்களே தோற்றுப் புறமுதுகு காட்டியிருக்கும் போது, இடையச் சிறுமியே, நீ ஆங்கிலேயரை என்ன செய்ய முடியும்?"

கப்பித்தேனும் பட்டணவாசிகளும் இடையச் சிறுமியைப் பார்த்துச் சிரித்தார்கள். அவர்கள் அவளைக் கேலி செய்தார்கள்.

இடையச் சிறுமி சோர்வடையவில்லை.

மைக்கேல் தேவதூதனை தியானித்துக்கொண்டு நீலக்கண்கள் நிறையக் கண்ணீருடன் இடையச் சிறுமி ஷீனோம் என்ற நாட்டை நோக்கி நடந்தாள். மனம் இளகிய ஷீனோன் மன்னர் அவளுக்குப் படையும் ஆயுதங்களும் கொடுத்தார். தளிர்க்கொடி போன்றிருந்த கையில் வாளேந்தி அவள் ஓர்லயான்ஸ் நோக்கிப் படையைச் செலுத்தினாள். ஆங்கிலேயரோடு போரிட்டுத் தோற்கடித்த பட்டணங்கள் ஒவ்வொன்றாகக் கைப்பற்றி அவள் பாரிஸை நோக்கி மார்ச் செய்தாள்.

அப்படி இடையச் சிறுமி தாய் நாட்டின் மானம் காத்தாள்.

ஆனால், கோம்பியேஞ்ஞில் நடந்த சண்டையில் அவள் படுகாயமடைந்து மண்ணில் விழுந்தாள். தூலிப்பு மலர் போன்ற மென்மையான சரீரம் இரத்தத்தில் மூழ்கியது.

போர்க்களத்தில் விழுந்து கிடந்த இடையச் சிறுமியைத் தலைமையாக ஏற்றிருந்த படைவீரர்கள் பயந்து புறமுதுகிட்டு ஓடினார்கள். அனாதையாய்க் கிடந்த சிறுமியை அந்த வழியாக வந்த வியாபாரிகள் தூக்கிக்கொண்டு போனார்கள். அவர்கள் அவளை ஆங்கிலேயர்களுக்குச் சில தங்க நாணயங்களுக்கு விற்றார்கள். . . .

இடையச் சிறுமியைக்கைப்பற்றிய எதிரிகள் மகிழ்ந்தார்கள். தங்களுக்கு இடையூறாக இருந்தவளை, தங்களை அவமானப் படுத்தியவளை, அவர்கள் கொடூரமாகத் தண்டித்தார்கள். இடையச் சிறுமியை உயிருடன் சிதையில் ஏற்றி எரிக்கத் தீர்மானித்தார்கள்.

வ்யேமார்ஷேயில் அவர்கள் தீ மூட்டினார்கள். அடுக்கிய சிதையின் நடுவில் அவர்கள் இடையச் சிறுமியைக் கொண்டு வந்துநிறுத்தினார்கள். அதைக் கண்டு அவள் அஞ்சவில்லை. அவளுடைய கண்கள் மேல்நோக்கி உயர்ந்தன. கைகளைக் கூப்பினாள்...

தீச் சுவாலைகள் நான்கு புறங்களிலும் உயர்ந்தன. தீச்சுடர்கள் அவளைத் தீண்டின. அப்போதும் அவள் ஓலமிடவில்லை. மேல்நோக்கிய கண்களுடன், கூப்பிய கைகளுடன் நின்றிருந்தாள். படிப்படியாக அவள் உயிருடன் எரிக்கப்பட்டாள்...

குறம்பியம்மாவின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. தாசனின் கண்களிலும் நீர் நிறைந்தது.

மய்யழியில் எந்தப் பாட்டியும் கண்ணீர் விடாமல் ழான் தார்க்கின் கதையைச் சொல்ல முடியாது. மய்யழியில் ஒவ்வொரு குழந்தையும் இவ்வாறு உயிருடன் எரிக்கப்பட்ட இடையச் சிறுமியின் கதையைக் கேட்டுத்தான் வளர்கிறது. லெஸ்லீதுரையின் குழந்தைப் பருவத்தில் க்லெமாம்துரை லெஸ்லீயை மடியிலிருத்தி அந்தக் கதையைச் சொன்னார். இடையச் சிறுமியின் சோகக் கதையைக் கேட்டு அழாத குழந்தைகள் மய்யழியில் கிடையாது.

குறம்பியம்மா புறங்கையினால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். மடியிலிருந்து டப்பியை எடுத்துக் கொஞ்சம்பொடி எடுத்து உறிஞ்சினாள். அந்த மயக்கத்தில் கண்மூடியிருந்தாள். தாசன் திண்ணைத்தூணில் சாய்ந்திருந்தான். அவனுடைய மனம் முழுவதும் வ்யே மார்ஷேயிலிருந்த சிதையும் அதன் நடுவில் கைகூப்பி நிற்கும் இடையச் சிறுமியும் இருந்தார்கள். அவனுடைய கண்கள் நிறைவதும் வழிவதுமாயிருந்தன.

சிறிது நேரம் கழித்து குஞ்சக்கன் நொண்டிக்கொண்டு அந்த வழியே வந்தான். தோளில் ஏணியும் கையில் மண்ணெண்ணெய் டின்னும் இருந்தன.

தாசனின் வீட்டுக்கு முன்பாக ஒரு விளக்குக்கம்பம் இருந்தது. தினமும் காலையில் அதில் எண்ணெய் ஊற்றவும், புகைபிடித்த கண்ணாடியைத் துடைத்துச் சரிப்படுத்தவும் குஞ்சக்கன் வருவான். அப்போது முற்றத்தில் கால் நீட்டி உட்கார்ந்திருக்கும் குறம்பியம்மா சொல்வாள.

"கொஞ்சம் ஜாஸ்தி ஊத்து குஞ்சக்கா."

"உனக்குத் தெரியாதா கொறம்பி, குப்பி மொதலாளியோட சொபாவம்?"

முனிசிபாலிட்டி விளக்குகளை ஏலம் எடுத்தது குப்பி முதலாளி. அவர் கஞ்சனாயிருந்தார். இரவில் தெருக்களில் நடந்து விளக்குகளைச் சரிபார்ப்பார். நள்ளிரவுக்குப் பின்னரும் ஏதாவது விளக்குகள் எரிந்து கொண்டிருப்பதைப் பார்த்தால் குப்பி முதலாளி கோபித்துக்கொள்வார்.

"நீ நம்ம கண்ணிலே மண்ணை வாரிப் போடணும்னு நினைக்கிறே, இல்லே?"

முதலாளி குஞ்சக்கனைத் திட்டுவார். குஞ்சக்கன் முதலாளிக்கு பயந்து நடுங்கினான். அதனால் அவன் விளக்குகளில் அளவாக எண்ணெய் ஊற்றுவான். நள்ளிரவுக்கு எவ்வளவோ முன்னதாகவே தாசனின் வீட்டுக்கு முன்புள்ள விளக்குத்திரி கருகி அணைந்துவிடும்.

ஆனால் சில விளக்குகள் பொழுது விடிந்தாலும் அணையாதிருந்தன. தாவீதுதுரை, மேயர் செக்குமுப்பன், ஸெர்மாம் ஆம் றெத்ரேத் குஞ்ஞிகண்ணேன் முதலியோரின் வீடுகளுக்கு முன்பு இருக்கும் விளக்குகள் அவை. முக்கியஸ்தர்களான எல்லா மய்யழி மக்களின் வீடுகளுக்கு முன்பாகவும் விளக்குகள் அமைந்திருந்தன.

"துரே, எனக்கும் ஒரு விளக்கு வேணும்."

ஒரு நாள் குஞ்ஞிச்சிருதை காதலன் தாவீதுதுரையிடம் சொன்னாள். அவளுடைய வீடு இருந்த அதே தெருவில்தான் ராமன் போலீசின் வீடு. அதனால் அந்தத் தெருவின் விளக்கு வழக்கம்போல் அவருடைய வீட்டுக்கு முன்பு இடம் பெற்றிருந்தது.

குஞ்ஞிச்சிருதையின் ஆசையை தாவீதுதுரை நிறைவேற்றி வைத்தார். மறுநாளே தார் பூசிய ஒரு விளக்குக் கம்பம் அவளுடைய வீட்டுக்கு முன்பு தென்பட்டது.

தினமும் குப்பி முதலாளி ஓசையிடும் செருப்பும் துருக்கித் தொப்பியும் அணிந்து அத்தரின் மணம் பரப்பிக்கொண்டு வந்து நின்று கூப்பிட்டுவிசாரிப்பார்.

"குஞ்ஞிச்சிருதே, உன் விளக்கு எரியுதில்ல?"

"எரியுது மொதலாளி."

குஞ்ஞிச்சிருதை சொல்வாள். ஒரு நாள் அவளுடைய விளக்கு பொழுது புலர்வதற்குள் அணைந்து போயிற்று.. அன்று குப்பி முதலாளிக்குக் கோபம் வந்தது.

"உன்னோட இன்னொரு காலையும் நான் அடிச்சி ஒடிக்கப்போறேன். பார்த்துக்கோ."

அவர் குஞ்சக்கனை எச்சரித்தார். அதிலிருந்து பொழுது பொலபொலவென்று வெளுத்தாலும் குஞ்ஞிச்சிருதையின் விளக்கு அணையாமலிருந்தது.

குஞ்சக்கன் ஏணி மீது வலித்து ஏறி விளக்கின் கண்ணாடிக் கூடு திறந்தான். எண்ணெய் ஊற்றிக்கொண்டிருந்தபோதுதான் அவன் ஒருகாட்சியைக் காண நேர்ந்தது. குஞ்சக்கனின் நொண்டிக்கால் வழியாக ஒரு நடுக்கம் மேல்நோக்கிப் பரவியது. முன்னால் லத்திக்கம்பு வீசிக்கொண்டு ராமன்போலீஸ். பின்னால் கம்பௌண்டர் சிசுபாலனும் பியூன் பார்க்கவனும்!

குஞ்சக்கன் ஏணி மேலிருந்து கீழே குதித்து ஓடி, தாசனின் வீட்டுக்குள் ஓடி ஒளிந்தான்.

குஞ்சக்கனுக்கு வயது அதிகமாகிவிட்டது. பிள்ளைகளும் பிள்ளைகளுக்குப் பிள்ளைகளும் என்றாகிவிட்டது. ஆனாலும் அம்மை குத்திக் கொள்வதென்றால் பயம்தான்! ஆண்டுதோறும் ஒரு போலீஸ்காரனின் துணையோடு சிசுபாலனும் பார்க்கவனும் இப்படி வருவார்கள். அவர்கள் வீடுதோறும் ஏறியிறங்கி, வைசூரி வராமலிருக்க அம்மை குத்துவார்கள். குஞ்சக்கனுக்கு அவர்கள் இதுவரை அம்மை குத்தியதில்லை. அதற்கு அவன் பிடிகொடுத்ததில்லை.

"நீ எதுக்கு குஞ்சக்கா இப்பிடி படப்பிலே தீ பிடிச்ச மாதிரி ஓடி வர்றே?"

"கொறம்பீ, அம்மை குத்தறவங்க வர்றாங்க. எங்கே இப்போ நான் ஒளிஞ்சிக்கிடுறது?"

"குஞ்சக்கா... வீட்டுக்குப் பின்னாலே போய் இருந்துக்கோ"

அவனுடைய நடுக்கத்தைப் பார்த்து அனுதாபம் கொண்டாள் கௌசு. அவளுக்குச் சிரிப்பும் வந்தது.

ராமன்போலீசும் கூட வந்தவர்களும் திண்ணைக்குப் படியேறினார்கள்.

"ஸ்தோத்திரம் மொஸ்யே!"

கௌசு சேலைத் தலைப்பினால் பெஞ்சைத் துடைத்து சுத்தம் செய்தாள். ராமன் போலீஸ் லத்திக் கம்பும் தொப்பியும் மடியில் வைத்துக்கொண்டு உட்கார்ந்தார். பார்க்கவன் கையிலிருந்த நிறம் மங்கிய பெரிய ரிஜிஸ்தரைத் திறந்துபெயர்சொல்லி கூப்பிட்டார்.

மதாம் குஞ்ஞீபறேம்பில் கேளன். ஸ்வாஸாந்த் த்ரவாஸான் (அறுபத்து மூன்று வயது).

மொஸ்யே குஞ்ஞீபறேம்பில் தாமு. தீராம் தான். (முப்பது வயது)

மதாம் தாமு. வேம்த்ரவாஸன். (இருபத்துமூன்று வயது)

மொஸ்யே குஞ்ஞீறேம்பில்தாசேன். ஸெத்தான். (ஏழு வயது)

அதற்குப் பிறகு கம்பௌண்டர் சிசுபாலன் அவர்கள் ஒவ்வொருவருக்கும் அம்மை குத்தினார். வெளியே இறங்கிப் போகும் போதுதான் அனாதையாகக் கிடக்கும் ஏணியை அவர்கள் பார்த்தார்கள்.

"அவன் வருசாவருசம் ஒளிஞ்சி திரியறான்."

"இந்தத் தடவை அவனை நான் சும்மா விடமாட்டேன்."

ராமன்போலீஸ் கோபத்துடன் நாலாபக்கமும் குஞ்சக்கனைத் தேடினார்.

"குஞ்சக்கன் எங்கே கொறம்பியம்மா?"

"நான் பார்க்கலேப்பா"

குறம்பியம்மா கண்மூடியிருந்தாள். சிசுபாலனும் பார்க்கவனும் தங்களுக்குள் ஏதோ பேசிக்கொண்டார்கள். ராமன்போலீஸ் மீசையை நீவினார்.

"கொறம்பியம்மா, உங்ககிட்டே சொல்லிட்டேன்... இந்த வருசம் அவனெ நான் சும்மா விடப்போறதில்லே. இந்த வருசம் அவனுக்கு அம்மை குத்தலேன்னா என் பேரு ராமன் போலீசில்லே".

ராமன் போலீசும் கூட்டாளிகளும் முக்கு திரும்பி மறைந்தவுடன் குஞ்சக்கன் வெளியில் வந்தான். கண் நிறைய நன்றிப் பெருக்குடன் அவன் குறம்பியம்மாவைப் பார்த்தான். மீண்டும் ஏணி மேலேறி வேலையைத் தொடர்ந்தான்.

"குஞ்சக்கா, கொஞ்சம் ஜாஸ்தியா ஊத்திட்டுப் போ." குஞ்சக்கன் அவ்வாறே செய்தான். அவன் விளக்கு நிறைய எண்ணெய் ஊற்றினான்.

அன்று தாவீதுதுரையின் மாளிகைக்கு முன்பிலான விளக்குக்கு நிகராக, மேயர்செக்குமுப்பரின் மாளிகைக்கு முன்பிலான விளக்குக்கு நிகராக, ஸொர்ஷாம் ஆம் றெத்ரேத் குஞ்ஞீகண்ணனின் வீட்டுக்கு முன்பிலான விளக்குக்கு நிகராகக் குறம்பியம்மாவின் வீட்டுக்கு முன்பிலான விளக்கும் விடியும்வரை எரிந்து கொண்டிருந்தது. ஏழு மணி ஆன பின்னரும் அணையவில்லை. அதைப் பார்த்துக் குறம்பியம்மா மகிழ்வடைந்தாள். ஒரு நாளாவது தன்னுடைய விளக்கும் விடியும்வரை எரிந்ததல்லவா!

காலையில் குறம்பியம்மா தாசனை மடியிலிருத்தி, குஞ்சக்கனின்

நொண்டிக் காலைப் பற்றியதான கதையைச் சொன்னாள்.

குஞ்சக்களின் தாத்தா- குறம்பச்சனின் வீடு மேட்டுக்கோயிலின் பக்கத்தில் இருந்தது. வீட்டுக்கு முன்னால் நின்று பார்த்தால் கோயிலின் மூன்று மண்டபங்களும் அன்னதான அறைகளும் தெரியும். சூரியன் அஸ்தமிக்கும்போது கோயில் முற்றத்துக் கொடிமரத்தின் நிழல் குறம்பச்சனின் வீட்டு முற்றத்தைத் தொடும்.

குறம்பச்சனும் மற்ற மய்யழி மக்களைப் போலவே மீசை முளைப்பதற்கு முன்பாகவே குடிக்கத் தொடங்கியிருந்தான். வீடுகளுக்கு வெள்ளையடிக்கும் வேலையிலிருந்தான் குறம்பச்சன். ஆடி மாதம், இரவும்பகலும் தொடர்ந்து மழை பெய்து கொண்டிருந்தது. இரண்டு ட்ராம் அறக்குக்கான வழி தெரியாமல் குறம்பச்சன் திண்ணையில் குந்தியிருந்தான். சரக்கை உள்ளே தள்ளி நாற்பத்தெட்டு மணி நேரம் கழிந்துவிட்டது. யாரும் கடன் தருவதற்கில்லை; எடுத்து விற்பதற்கோ அடகு வைப்பதற்கோ எதுவும் இல்லை. தேங்காய்த் துருவலைக் கடையில் அடகு வைத்துத்தான் முந்தாநாள் இரண்டு ட்ராம் குடித்தது.

திண்ணையில் குந்தியிருந்த குறம்பச்சன் திடீரென்று தேவவாக்கு கிடைத்ததுபோல் எழுந்தான். மழை பெய்துகொண்டே இருந்தது. மூன்று நேரமும். குறம்பச்சன் துண்டை எடுத்துத் தலையில் கட்டிக்கொண்டு வெளியில் இறங்கினான்.

கோயில்.தோட்டத்தில் குலைதள்ளி நின்றிருந்த ஒரு கதளிக்குலையை யாருக்கும் தெரியாமல் வெட்டியெடுத்தான். குலையைத் துண்டினால் மறைத்து மூடினான். ஒளிந்தும் பதுங்கியும் கள்ளுக்கடையை நோக்கி நடந்தான்.

"கால் குப்பி அறக்கும் என்னோட தேங்காத்துருவியும்."

குறம்பச்சன் குலையை அன்புநாயரின் காலடியில் வைத்தான். உண்ணிநாயரின் தாத்தா அன்பு நாயருடையதுதான் அந்தக் கடை. அன்புநாயர் எதுவும் சந்தேகப்படாமல் கால் குப்பி அறக்கு கொடுத்தார். அறக்கை உள்ளே தள்ளி குறம்பச்சன் வெளியில் வந்தபோது அடகு வைத்திருந்த தேங்காய்த் துருவியையும் திருப்பிக்கொடுத்தார்.

அறக்கின் மயக்கத்தில் தேங்காய்த்துருவியையும் கட்கத்தில் வைத்துக்கொண்டான். ஒரு பாட்டும் பாடிக்கொண்டு குறம்பச்சன் குறுக்கு வழியாக நடந்தான். நள்ளிரவு கடந்த நேரம். வெளியே ஆகாயத்திலிருந்து மழைத்தூறல்கள் சிதறி விழுந்து கொண்டிருந்தன. கோயில் முற்றத்துச் செண்பகத்திலிருந்து மயக்கி ஆட்படுத்தும் நறுமணம் வெளிவந்து கொண்டிருந்தது.

கோயில் வாசலை அடைந்தபோது ஏதோ ஒரு சத்தம் கேட்டுக் குறம்பச்சன் நின்றான். சிலம்புகளின் ஒலி, மங்கிய இருட்டில் ஒரு வெள்ளை உருவம். குறம்பச்சனின் நெஞ்சு பதைத்தது, மயக்கம் பறந்தது. அரண்ட கண்களுடன் அவன் திகைத்து நின்றான்.

"என் குலை எங்கே?"

குருத்தோலை உடுத்திய கால்களுடன் சிலம்பணிந்த தேவதை கோயில் முற்றத்திலிருந்து இறங்கி வந்தது.

பயத்தினால் குறம்பச்சனின் தலையில் முடி சிலிர்த்து நின்றது. உடம்பு முழுவதும் எழுந்து நின்ற ரோமங்கள்.

"எங்கே என் குலை?"

உக்கிரமூர்த்தியான குலதெய்தவத்தின் கேள்வி. குறம்பச்சன் தெய்வத்தின் கால்களில் விழுந்தான்.

"அடியேனுக்கு மாப்பு தரணும்"

தேவதை தனது கால்களில் விழுந்துகிடக்கும் குறம்பச்சனைச் சிலம்பணிந்த காலினால் எட்டி உதைத்து, உரக்கக்கூச்சலிட்டுக்கொண்டு படிக்கற்கள் மேலேறி கோயிலுக்குள் தாவிப் போயிற்று. மண்டபத்திலிருந்து மீண்டும் ஓரிரண்டு கூவல்கள் கேட்டன.

குறம்பச்சன் செண்பகப் பூக்கள் உதிர்ந்து விழுந்து கிடந்த தரையில் சலனமற்றுக் கிடந்தான். கட்கத்திலிருந்த தேங்காய்துருவி தொலைவில் துள்ளி விழுந்து கிடந்தது. எவ்வளவு நேரம் விழுந்து கிடந்தான் என்று குறம்பச்சனுக்கு தெரியாது. கடைசியில் எழுந்து நடக்கத் துணிந்தபோது நொண்டலானான். வலது கால் நொண்டியாகியது.

குறம்பச்சனின் மகன் குஞ்ஞிக்குட்டி பிறந்தபோது குஞ்ஞிக்குட்டியின் வலது கால் நொண்டி.

குஞ்ஞிக்குட்டியின் மகன் குஞ்சக்கன் பிறந்தபோது குஞ்சக்கனின் வலது கால் நொண்டி.

"ஆனா குஞ்ஞானனுக்கு அப்படி இல்லையே?"

கதை கேட்டுக்கொண்டிருந்த தாசன் கேட்டான். அதைக் கேட்டு குறம்பியம்மா சற்று எரிச்சல்பட்டாள். குஞ்சக்கனின் மகன்தானே குஞ்ஞானன்? அவனுக்குக்காலில் முடமில்லையே?

"அது, தேவதையோட கோபம் தீர்ந்து போச்சி, அதானலேதான்."

குறம்பியம்மா டப்பியிலிருந்து ஒரு நுள்ளல் பொடிஎடுத்து உறிஞ்சினாள்.

"இனி கண்ணு போயி விளையாடு."

ஆனால் தாசன் போகவில்லை. பள்ளிக்கூடம் இல்லாத நாளாக இருந்தது. தாசன் பள்ளிக்கூடம் இல்லாத நாளில் குறம்பியம்மாவின் நிழலைவிட்டுப் போக மாட்டான். அது அவனுக்குக் கதைகளின்-பழங்கதைகளின் நாளாக இருக்கும். ரைட்டர் காலையிலேயே எழுந்து கோர்ட்டுக்குப் போய்விடுவான். கௌசுக்கு வீட்டு வேலைகளைப் பார்ப்பதற்கே நேரம் சரியாக இருக்கும். அதுவும் தவிர தாசனின் தங்கை பிறந்து வந்திருந்த காலமும்கூட.

குறம்பியம்மாவுக்குக் குறிப்பிட்ட வேலை என்று எதுவும் கிடையாது. அவள் முற்றத்தில் காலை நீட்டி உட்கார்ந்திருப்பாள். பொடி போட்டுக்கொண்டும் வழியே போகும் குஞ்சக்கன், குஞ்ஞானன், குஞ்ஞிச்சிருதை என்று யாராவது கூப்பிட்டு நிறுத்தி அளவளாவி நேரம் போக்குவாள். இல்லாவிட்டால் கிரிஜாவை மடியில் கிடத்தி விளையாட்டுக் காட்டுவாள்.

"பாட்டி, ஒருகதை சொல்லு"

தாசன் குறம்பியம்மாவின் நிழலைவிட்டுப் போக மாட்டான்.

"பாட்டிக்கு ஒரு முக்காத்துட்டுக்குப் பொடி வாங்கித் தா"

"அப்படீன்னா கதை சொல்லுவியா?"

குறம்பியம்மா ஒப்புக்கொண்டாள். அவள்மடியிலிருந்து நடுவில் ஓட்டையுள்ள முக்கால்துட்டு நாணயத்தை எடுத்துக் கொடுத்தாள். அதை விரலில் நுழைத்துக்கொண்டு தாசன் முக்குக் கடைக்கு ஓடினான். ஓடியபடியே திரும்பிவந்தான்.

"சொல்லு பாட்டி!"

பெருமூச்சு விட்டுக்கொண்டு பொடியுடன் அவன் அவளுக்கு எதிரில்வந்து நின்றான். குறம்பியம்மா சிகரெட் பெட்டிக்குள்ளிருக்கும் அலுமினியக்காகிதத்தில் மடித்திருந்த பொடியைத் தனது டப்பியில் கவனமாகக் கொட்டி அடைத்து மடியில் வைத்துக்கொண்டாள்.

"சொல்லு!"

தாசன் அவளுடைய மடியில் உட்கார்ந்தான்.

"என்ன கதையை தாசா பாட்டி உனக்குச் சொல்லணும்.?"

குறம்பியம்மா தனக்குத்தெரிந்த எல்லாக் கதைகளையும் இதற்குள் சொல்லிவிட்டிருந்தாள். பல கதைகளை எத்தனையோ தடவைகள் மறுபடியும் சொன்னதுண்டு. இனி எந்தக் கதையைத்தான் அவள் சொல்வது?

"சொன்ன கதையை மறுபடியும் சொல்லவா? சிங்கம் முயல் கதை?"

"இல்லே, புதுக் கதை"

"புதுக் கதைக்கு பாட்டி எங்கே போறது?"

குறம்பியம்மா சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தாள். பிறகு குரலைத் தாழ்த்தி அவள் தாசனின் காதில் சொன்னாள்.

"புதுக் கதை சொல்றேன். ஆனா யாருகிட்டேயும் சொல்லக் கூடாது. சொல்லுவியா?"

"இல்லே"

தாசன் தலையாட்டினான். அவனுடைய கண்கள் மின்னின. மகிழ்ச்சியால் அவனுடைய மனம் துள்ளிக் குதித்தது.

குறம்பியம்மா அதுவரை சொல்லிவராத ஒரு கதையைச் சொல்லத் தொடங்கினாள்.

குஞ்ஞிம்மாணிக்கத்தின் காலத்தில் அவளைப் போல அழகான வேறொரு பெண் மய்யழியில் கிடையாது. புடம்போட்ட தங்கத்தின் நிறமாயிருந்தாள் அவள். நகைகள் அணிந்தும் பட்டு உடுத்தியும் அவள் நடந்தால் மய்யழியில் ஆண்களுக்கு உறக்கம் கெடும். குறிப்பாக வெள்ளைக்காரர்களுக்கு. துறைமுகத்துக்குக் கப்பல்வரும்போது கடலில்வைத்தே குஞ்ஞிம்மாணிக்கத்தின் பெருமைகளைக் கேள்விப்படும் வெள்ளைக்காரர்கள் அவளை அடைய அவசரப்படுவார்கள்.

ஒரு சமயம் பட்டு வியாபாரம் செய்வதற்காகத் தமிழ்நாட்டிலிருந்து ஒரு செட்டியார் வந்தார். வெள்ளைக்காரர்களுடைய, சட்டைக்-காரர்களுடைய பெண்களுக்குப் பட்டுத்துணி விற்று செட்டியார் பணத்தை அள்ளிக் குவித்தார்.

கறுத்த, தடித்த உடம்பு. எட்டுவிரல்களிலும் தங்க மோதிரங்கள். கழுத்தில் தங்கச்சங்கிலி. சில்க் சட்டை. மய்யழியின் மக்கள் செட்டியாருக்கு ஒரு பெயர்வைத்திருந்தார்கள். குபேரன் செட்டியார்.

"குஞ்ஞிம்மாணிக்கம். . ."

தலையில் பட்டுத்துணியைக் கட்டியவாறு வாசலில் வந்து நின்று குபேரன் செட்டியார் குரல்கொடுத்துக் கேட்டார்.

"வரட்டுமா?"

குஞ்ஞிம்மாணிக்கம் தலையை நீட்டி எட்டிப் பார்த்தாள்.

"இன்னிக்கு வேணாம். உள்ளே பெர்னார்துரை இருக்காரு."

குபேரன் செட்டியார் நிராசையுடன் திரும்பிப் போனார்.

"இன்னிக்கு குஞ்ஞிம்மாணிக்கம்."

மறுநாள் மீண்டும்வந்து ஆசையாக செட்டியார் வற்புறுத்தினார்.

"அய்யோ! அந்தோனிதுரை இருக்காரு உள்ளே..."

"நாளக்கி குஞ்ஞிம்மாணிக்கம்?"

குபேரன்செட்டியாரின் ஆசை நிறைவேறவில்லை.

குஞ்ஞிம்மாணிக்கம் கதவடைத்துத் தாழிட்டாள். செட்டியார் அன்றைக்கும் மனமொடிந்து திரும்பிப்போனார்.

மறுநாள் செட்டியார் வாசற்படி ஏறி வந்தார். மூட்டையை அவிழ்த்து விலைமதிப்பான பட்டு ரகங்களை எடுத்து குஞ்ஞிம்மாணிக்கத்தின் காலடியில் பரப்பி வைத்தார். குஞ்ஞிம்மாணிக்கம் எரிச்சலுடன் பட்டுச் சேலைகளை விரித்தும் புரட்டியும் பார்த்தாள்.

"இன்னிக்கி?"

குஞ்ஞிம்மாணிக்கம் அதைக் கேட்காதது போல ஒரு வெண்பட்டை எடுத்து நோட்டம் பார்த்தாள்.

"வரட்டுமா?"

செட்டியார் பையிலிருந்து தங்கச்சங்கிலியிட்ட தங்க கடிகாரத்தை எடுத்து குஞ்ஞிம்மாணிக்கத்தின் கால்டியில் வைத்தார்.

"இப்பம்வேணாம். பிரான்சிஸ் துரை இருக்காரு உள்ளே!"

குஞ்ஞிம்மாணிக்கம் வெண்பட்டும் தங்க கடிகாரமும் எடுத்துக்கொண்டு உள்ளே நடந்தாள். கதவுகளைத் தாழிடவும் செய்தாள்.

குபேரன்செட்டியார் தினமும் வந்தார். தினமும் பொன்னும் பட்டும் காண்பித்தார். ஆனாலும் ஒருபோதும் குஞ்ஞிம்மாணிக்கத்தை அடைய முடியவில்லை. செட்டியாருக்கு வியாபாரத்தில் நாட்டம் குறைந்தது. பட்டெடுக்கக் காஞ்சிபுரம் போகவே இல்லை. வெள்ளைக்கார சட்டைக்காரப் பெண்கள் பட்டு கிடைக்காமல் ஆவலாதி சொன்னார்கள்.

நாட்கள் செல்லச்செல்ல குபேரன்செட்டியார் மெலிந்து போனார். கண்கள் தாழ்ந்தன, மெலிந்த கைவிரல்களிலிருந்து மோதிரங்கள் நழுவி விழுந்தன. கடைசியில் ஒரு நாள் செட்டியார் குஞ்ஞிம்மாணிக்கத்தை அடைய முடியாமலே கடைசி மூச்சை விட்டார்.

தினமும் குஞ்ஞிம்மாணிக்கம் ஆம்பல் பூக்கள் மலர்ந்துகிடக்கும் குளத்தில் குளிக்கச் செல்வாள். முண்டு களைந்துவிட்டு முழங்காலளவுத் தண்ணீரில் நின்றுகொண்டு கிண்ணத்திலிருந்து எண்ணெய் எடுத்துத் தேய்த்துக்கொள்வாள். கட்டவிழ்த்த தலைமுடி நிர்வாணமான மார்பகங்களையும் இடுப்பையும் மறைத்திருக்கும்.

குஞ்ஞிம்மாணிக்கம் குளிக்கும்போது குளத்தின் கரையில் தாழம்புதரிலிருந்து ஒருசீழ்க்கை ஒலிகேட்டது. உள்ளங்கையினால் தொப்புளை மறைத்துக்கொண்டு அவள் நாலாப்பக்கமும் பார்த்தாள். யாருமில்லை. சுற்றுப்புறம் எங்கேயும். ஆம்பல் பூக்களின் நடுவில், தாழம்பூக்களின் நறுமணச் சூழலில், அவளுடைய குளியல்தொடர்ந்தது.

மறுநாளும் தாழம்புதரிலிருந்து ஒரு சீழ்க்கையொலி கேட்டது அன்றும் குஞ்ஞிம்மாணிக்கம் யாரையும் பார்க்கவில்லை.

மூன்றாம் நாள் தாழம்புதரிலிருந்து படம்விரித்த பாம்பு வெளிவந்தது.

குளத்தின் கரையில் படம் விரித்துக்கொண்டு பாம்பு குஞ்ஞிம்மாணிக்கத்தின் அழகை நுகர்ந்தது.

மறுநாள் குஞ்ஞிம்மாணிக்கம் ஆம்பல் குளத்திற்கு குளிக்கப் போவதில்லை. அப்போது பாம்பு அவளைத் தேடி வந்தது. முற்றத்தில் பூங்கொடிகளில் தொங்கிக்கொண்டு ஒளிந்திருக்கும் பாம்பு சீழ்க்கை அடித்தது.

"பெருங்காயத்தை கலக்கி வீடு பூராவும் ஊத்துங்க!"

மந்திரவாதியான மலையன் குஞ்ஞூராமன் வழி சொன்னான்.

"பெருங்காய வாசன இருந்தா பாம்பு போன வழியிலே புல்லுகூட முளைக்காது."

குஞ்ஞிம்மாணிக்கம் பெருங்காயத்தைக் கரைத்து வீட்டைச் சுற்றிலும் தெளித்தாள். ஆனாலும் பலன்கிடைக்கவில்லை. பாம்பு மறுபடியும் வந்தது. ஒருநாள் அது திண்ணையைத் தாண்டி உள்ளேயே வந்துவிட்டது. பயந்து அரண்டுபோன குஞ்ஞிம்மாணிக்கம் மீண்டும் மலையன் குஞ்ஞூராமனைப் போய்ப் பார்த்தாள்.

"அவ்வளவுக்கு ஆயிரிச்சா?"

கோபத்தால் மலையனின் கண்ணிலிருந்து தீ பறந்தது. சுட்ட கோழியைப் பறக்க வைப்பவனாக்கும் மலையன் குஞ்ஞூராமன். கொத்திய பாம்பை மறுபடியும் வரவழைத்து விஷத்தை அதைக்கொண்டே கொத்தி எடுக்க வைப்பவன்.

"என்னைக் காப்பாத்தனும்"

குஞ்ஞிம்மாணிக்கத்தின் மை தீட்டிய கண்கள் நீர் நிரம்பித் ததும்பின அவளுடைய இறுகிப்போன உதடுகள் மரத்துப்போயின.

மலையன் குஞ்ஞூராமன் தீப்பந்தங்களும் மஞ்சள்பொடியுமாக முன்னேற்பாட்டுடன் குஞ்ஞிம்மாணிக்கத்தின் வீட்டுக்குச்சென்றான். செம்புத்தகட்டில் மயில்தாமிரமும் புளகதாமிரமும் சேர்த்து எட்டு திரிசூலங்கள் அமைந்ததான அஷ்டகோணச்சக்கரம் வரைந்தான். ஓம் க்ஷிபஸ்வாஹா என்ற மந்திர எழுத்துக்கள்.

'கிரந்தீமம்சேத்ய, கிரணதிருரும்பாம்ருதரஸம்

ஹ்ருதித்வாமாதத்தே ஹிமகரசிலாமூர்த்தமிவ ய:'

மலையன் தீப்பந்தங்களுக்கு நடுவில் சம்மணம் போட்டு உட்கார்ந்து, ஓரக்கண்களால் தீப்பந்தங்களைச் சரிபார்த்தபடி, பாம்புடனான போராட்டம் தொடங்கியது.

'ஸஸர்ப்பணாம் தர்ப்பம் சமயதி சகுந்ததாதிப இவ

ஜீவரப்ளுஷ்டான் திருஷ்ட்யா ஸுகயதி ஸுதாதாரஸிரயா'

மலையன் மஞ்சள் பொடியை வாரி நாலாபுறமும் தூவிக்கொண்டு எழுந்தான்.

"இனிமே அவன் இங்கு கால் வைக்க மாட்டான்."

குஞ்ஞிம்மாணிக்கத்திற்கு நிம்மதியாயிற்று. அவள்கொடுத்த வெள்ளி நாணயத்துடன் மலையன் போனான். தீப்பந்தங்கள் அணைந்தன. எரிந்த நெய்யின் மணமும் மஞ்சள் பொடியின் மணமும் மட்டும் எஞ்சின.

மறுநாள் காலையில் கூடுவிட்டு வெளியில் வந்த பலிகாக்கைகள் குஞ்ஞிம்மாணிக்கத்தின் வீட்டைச் சுற்றிலும் சூழ்ந்துகொண்டு சிறகடித்தன. கரைந்து ஆரவாரம் செய்தன. பட்டுமெத்தையில்

குஞ்ஞிம்மாணிக்கம் நகைகள் அணிந்து சலனமற்றுப் படுத்திருந்தாள். நிர்வாணமான மார்பில் தலைசாய்த்து செத்துக்கிடந்தது பாம்பு.

"யாரு தெரியுமா அந்த பாம்பு?"

குறம்பியம்மா டப்பியிலிருந்து ஒரு நுள்ளல் பொடியெடுத்து உறிஞ்சினாள். அவள்தொடர்ந்தாள்.

"குபேரன் செட்டியார்."

தன்னுடைய மடியில் தலை வைத்துப் படுத்திருந்த தாசனின் முதுகில் தட்டிக்கொடுத்தபடிகுறம்பியம்மா சன்னமாகப் பாடினாள்.

"செவ்வந்தி பூப்போல வெள்ளெக்காரன்

கோழி கோட்டுக் கரையிலே கப்பலிறங்கி. . . ."

தாசனின் கண்கள் மெதுவாக மூடிக்கொண்டன.

-அவ்வாறு, உயிருடன் எரிக்கப்பட்ட தோம்ரெமி கிராமத்து இடையச் சிறுமியின் கதை, பாம்பாக மாறித் தன்னுடைய காதலியை அடையப் பெற்ற குபேரன்செட்டியாரின் கதை, கோழிக்கோடு கரையில் கப்பலிறங்கிய வெள்ளைக்காரனின் கதை ஆகியவற்றைக் கேட்டபடி தாசன் வளர்ந்தான்.

# 7

"மாஷே, நீங்க ரெடியா?"

குஞ்ஞனந்தன்மாஸ்டரின் வீட்டின் முன்பு ஜட்கா வண்டியைக் கொண்டுவந்து நிறுத்திவிட்டு வண்டிக்காரன் கேளன் குரல்கொடுத்தான்.

லெஸ்லீதுரையினுடையதைப் போல வேகமானதும் நிமிர்ந்த தலையுள்ளதும் அல்ல கேளனின் குதிரை. அதனுடைய முதுகெலும்புகள் எல்லாமே துல்லியமாகத் தெரியும். ரோமக்குஞ்சங்களில் ஊர்ந்து திரியும் உண்ணிகள். கேளனுடைய குதிரையைப் பார்த்தால் வழக்கத்தைவிட அதிகமாக வளர்ந்த ஒரு நாயோ என்று தோன்றும்.

புகைவண்டி நிலையம் ஒரு நாழிகைத் தொலைவில் இருந்தது. அதிகமான புகைவண்டிகள் அந்த வழியாகப் போவதில்லை. காலையில் கோழிக்கோட்டுக்கு ஒரு லோக்கல் போகும். இரவு தங்களுடைய காமக்கிழத்திகளுடன் தூங்கிவிட்டு மாப்பிளமார் காலையில் வடகரைக்கும் நாதாபுரத்திற்கும் வந்து போவது அந்த வண்டியாயிருந்தது. லோக்கல் போய்விட்ட பிறகு ஜட்காவுடன் கேளன் குஞ்ஞனந்தன் மாஸ்டரின் வீட்டை அடைவான்.

"மாஷே. . ."

"கேளா, இதோ இப்பம் வந்திட்டேன்."

குஞ்ஞனந்தன்மாஸ்டரின் அக்கா லீலா வாசலுக்கு வந்தாள். கேளன் வண்டியிலிருந்து கீழே இறங்கி ஒரு பீடியைப் பற்ற வைத்துத்தனது குதிரை மீது சாய்ந்து நின்றான்.

குஞ்ஞனந்தன்மாஸ்டர் நிலைக்கண்ணாடியின் எதிரில் தனது பிரதிபிம்பத்தைப் பார்த்தபடி நின்றுகொண்டிருந்தார். நெற்றிக்கு மேலாக முடியெல்லாம் நரைத்துப்போயிருந்தது. முப்பது வயதிலேயே கிழவனாகிவிட்டிருந்தார். ஆஸ்பத்திரியில் இரண்டு வார வாழ்க்கை

அவரைத் தடிக்கச் செய்திருந்தது. ஆனால் முகத்தின் தளர்ச்சி நீங்கியபாடில்லை. பித்தம் பிடித்தது போன்றதான பொலிவற்ற முகம்.

குஞ்ஞனந்தன் மாஸ்டர் மீண்டும் கண்ணாடியைப் பார்த்து நின்றார். அவர் தனது முகத்தை உற்றுப் பார்த்தபடி தானே பேசிக்கொண்டார். "மறுபடியும் கேளனோட ஜட்காவண்டி. மறுபடியும் காலையில் குளித்து முடித்து ஸ்கூலுக்கு யாத்திரை... எல்லாவற்றையும் நான் மறுபடியும் தொடங்குகிறேன். நான் சாகவில்லை"

"குஞ்ஞனந்தா, நீ என்ன யோசிச்சிட்டிருக்கே?"

"நான் சாகலேன்னு, லீலாக்கா."

அதைக் கேட்டு லீலாவின் முகம் வாடியது.

"ஆஸ்பத்திரியிலேருந்து உயிரோட திரும்பிவருவேன்னு நான் நினைக்கவே இல்லேக்கா. உன்கிட்ட உண்மையைச் சொல்லணுமில்ல."

அவருடைய வெளிறிய முகத்திலிருந்து ஒருமந்தகாசம் வெளிப்பட்டது. லீலா பேச்சை மாற்றினாள்.

"அந்தக் கேளன் உனக்காகக் காத்துக்கிட்டிருக்கான்."

குஞ்ஞனந்தன் மாஸ்டர் மீண்டும் ஒருமுறை கண்ணாடியைப் பார்த்தார். தப்பிப் பிழைத்த மகிழ்ச்சி அவருடைய கண்களில் மின்னி நின்றது. கட்டில் மீது கிடந்த புத்தகங்களை எடுத்துக்கொண்டு வேகமாக அவர் வாசலை நோக்கி நடந்தார். வாசற்படிக்கட்டில் தாவி இறங்கினார். தான் ஒரு நோயாளி என்ற உண்மையை அவர் மறந்தார். தன்னுடைய இதயத் துடிப்புகளைக் கேட்டு அவருடைய காதுகள் சிலிர்த்தன.

"மாஷுக்கென்ன ஒருகுஷி. . . ."

"கேளன் உண்மையைச் சொல்லு, நான் கோழிக்கோட்டிலேருந்து உயிரோட திரும்பி வருவேன்னு நீ எதிர்பார்த்தியா"

"நீங்க என்ன இப்படிப் பேசறீங்க மாஷே? நீங்க இளவட்டம்தானே?"

மாஸ்டரின் கேள்வியைக் கேட்டுக் கேளன் திணறிப்போனான். இளவட்டமானாலும் தீராத நோயாளி. கேளனுக்கு அதுதெரியும். அவன் ஜட்காவின் பின்வழியைத் திறந்து கொடுத்தான். ஏதோ மாப்பிளயின் அத்தர் மணத்தைத் தக்கவைத்துக் கொண்டிருந்த சிவப்புத் தோல்சீட்டில் மாஸ்டர் உட்கார்ந்தார். வண்டி குலுக்கிக்கொண்டு நகர்ந்தது.

பள்ளிக்கூடம் இரண்டு பர்லாங் தூரம்தான். ஆனாலும் மாஸ்டர்போவதும் வருவதும் குதிரைவண்டியில்தான். இரண்டு பர்லாங் நடப்பதற்கான தெம்புகூட அவருக்கு இல்லாதிருந்தது.

தடித்து ஊதிய, இரத்தம் வற்றிப்போன இந்த உடம்பு எந்த நிமிடமும் சலனமற்றுப் போகலாம். அடுத்த நிமிடமாகவும் இருக்கலாம், நாளையாகவும் இருக்கலாம். கழுத்துவரை கம்பளி போர்த்தியிருக்கும் நிலையில் தனது உயிர்த்துடிப்புகள் மரணத்தின் குளம்படியாய் மாஸ்டருக்குத் தோன்றும். மரணத்தின் பாரம் எப்போதும் அவரை நெருக்கி அழுத்தியபடி இருந்தது.

"என்னதான் ஆனாலும் இந்த நிமிடம் நான் சாகமாட்டேன்" ஜட்கா குலுங்கிப் புறப்பட்டதும் குஞ்ஞனந்தன் மாஸ்டர் தனக்குள் சொல்லிக்கொண்டார். அவருக்கு நிம்மதி ஏற்பட்டது. தான் வாழ்ந்து கொண்டிருப்பதான உணர்வு படிப்படியாக அவருடைய நரம்புகளிலிருந்து நரம்புகளுக்கென்று படர்ந்து பரவியது. நான் வாழ்ந்து

கொண்டிருக்கிறேன் — மாஸ்டரின் கால்விரல்களிலிருந்து தொடங்கி உச்சிவரை மகிழ்ச்சி பொங்கி நிறைந்தது. அந்த ஆனந்த நினைவில் அவர் தன்னை மறந்திருந்தார்.

அவ்வப்போது உருவாகும் இவ்வாறான வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்பதான உணர்வு மாஸ்டரின் வாழ்க்கையில் மிகவும் பெரிய மகிழ்ச்சியாக மாறியது. இதில் படர்ந்திருந்த ஓர் ஆனந்தம் அவருடைய வாழ்க்கையில் வேறு எதுவும் இல்லை. ஜட்கா தாளலயத்துடன் போய்க்கொண்டிருந்தபோது மாஸ்டர் பழைய நிகழ்ச்சியை நினைத்துப் பார்த்தார்.

ஒரு நள்ளிரவில் சிறுநீர் கழிப்பதற்காக மாஸ்டர் வெளியே போனார். நட்சத்திர ஒளியில் பளிச்சிட்ட தேவாலய கோபுர உச்சியில்சிலுவை. தார் பூசிய கம்பங்களில் சுடரும் விளக்குகள். தொலைவில் சமுத்திரத்தின் சாந்தகம்பீரமான முழக்கம் கேட்டுக்கொண்டிருந்தது. குந்தியமர்ந்து சிறுநீர் கழித்துக்கொண்டிருந்தபோது திடீரென்று மாஸ்டருக்கு ஓர் எண்ணம் தோன்றியது—நான் வாழ்ந்துகொண்டிருக்கிறேன். அவர் சிலிர்த்தார். சிறுநீர் முற்றுமாகக் கழித்து முடிக்காமல் அவர் எழுந்து நடந்தார்.

அதிகம் நடக்க முடியாது என்று தெரியும். பனியில் இருக்கக் கூடாது என்றும் தெரியும். ஆனாலும் ஆள் நடமாட்டமற்ற சாலை நெடுக நடந்தார். முண்டு ஒன்று மட்டுமே கட்டியிருந்தார். தான் வாழ்ந்து கொண்டிருப்பதைக் குறித்து அமைதியாக முனகிக்கொண்டு மகிழ்ச்சியில் திளைத்தபடி ரியூ த் லெக்லீஸ் வழியாக, ரியூ த் கூவர்னமான் வழியாக, ரியூ த் லா ப்ரிஸோன் வழியாக நடந்தார்... ரோமங்களில்கூட நிறைந்து நின்ற மகிழ்ச்சி... அவர் தன்னைத் தானே மறந்து போயிருந்தார்.

கோழி கூவியபோது குஞ்ஞானந்தன்மாஸ்டர் திரும்பி வந்தார். வாசல் படிக்கட்டில் ஏற முடியவில்லை. கவிழ்ந்தடித்து விழுந்தார். வாயிலிருந்து நுரையும் எச்சிலும் வழிந்தன.

லீலாவின் கூக்குரல்கேட்டு எல்லாரும் ஓடி வந்தார்கள். கேளன் தன் ஜட்காவுடன் டாக்டரை அழைக்கப்போனான்.

பன்னிரண்டு மணி நேரத்திற்குப் பிறகுதான் மாஸ்டருக்கு பிரக்ஞை திரும்பி வந்தது. ஒரு வாரம் அவர் படுக்கையில் கிடந்தார்.

நல்ல வாலிபப் பருவத்திலேயே தொடங்கியதுதான் இந்த ரோகம். எவ்வளவோ மருந்துகள் கஷாயமெல்லாம் கொடுத்தாயிற்று. பலன் ஏதுமில்லை. அழியூரிலிருந்து வந்த ராமுட்டி வைத்தியர் காசநோய் என்று கூறினார். அவர் கஷாயத்தை எழுதிக்கொடுத்தார். அந்தக் காலத்தில் காசத்திற்கான கஷாயத்துடனான மருந்துப் பக்குவம் ஆட்டின் பாலாக இருந்தது.

"கறந்து சூடு ஆறுறதுக்கு முன்னாலே குடுக்கணும். படுத்திருக்கிற கட்டில் காலிலேயே ஆட்டைக் கட்டி வைச்சால் நல்லது."

ராமுட்டி வைத்தியர் சொன்னார்.

குஞ்ஞனந்தன் மாஸ்டரின் தந்தை அன்றே வடகரைச் சந்தையிலிருந்து ஓர் ஆட்டை வாங்கி வந்தார். மாஸ்டருக்கு அப்போது இளமைப்பருவம். கால்சட்டை போட்டு நடமாடும் பருவம். குஞ்ஞனந்தன் படுத்திருந்த கட்டிலின் காலில் ஆட்டைக் கட்டிவிட்டு இரண்டு நேரமும் பால் கறந்து குடிக்க வைத்தார்கள். அறையில்

எப்போதும் ஆட்டின் துர்நாற்றம். சாணமிட்டு மெழுகிய தரைமுழுக்க ஆட்டுப் புழுக்கை.

ஆட்டுக்குப் பால் வற்றியது. குஞ்ஞனந்தன் மாஸ்டரின் தந்தை இறந்தார். ஆனாலும் மாஸ்டரின் ரோகம் குணமாகவில்லை.

குஞ்ஞனந்தன் எங்கெங்கெல்லாமோ ஏழாம் வகுப்புவரை படித்தார். அதற்கு மேல் படிக்க உடல்நிலை இடம் தரவில்லை. ஏழாம் வகுப்பில் அந்தக்காலத்தில் ஒரு பெரிய பரீட்சை இருந்தது. பரீட்சை தேறிய குஞ்ஞனந்தனுக்கு 'எக்கோல் த் கர்ஸோ'வில் ஆசிரியர் வேலை கிடைத்தது.

"நீ படிப்புச்சொல்லித்தரப் போகணுமா?"

எழுந்து நடக்க முடியாத குஞ்ஞனந்தன் படிப்புச் சொல்லித் தரப்போவதாகச் சொன்னபோது குஞ்ஞாட்டிமாமன் இரைந்தார்.

"உனக்குத் திங்க கொள்ள இருக்கிறதுக்கான வழியை உங்கப்பா செஞ்சிவச்சிட்டுப் போயிருக்காரு. இங்கேயே விழுந்து கிட"

"பணம் இல்லாம இல்லே மாமா. . . ."

"பின்னே எதுக்கு?"

மாமாவுக்குப் புரியவில்லை.

"எப்பவும் இப்படி சும்மா இருக்கிறதுக்கு எனக்குப் பிடிக்கலே."

"சொகமில்லாதவங்க சும்மா அலையாம இருக்க வேணாமா?"

தாய்மாமன் சொன்னது குஞ்ஞனந்தனுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. தன்னை ஒரு நோயாளியாக யாராவது நோக்கினால் மாஸ்டருக்கு அது பிடிப்பதில்லை.

"எழுந்து நடக்க முடியாதபடி சீக்கு எதுவும் எனக்கு இல்லே. சொல்லித் தர முடிகிற காலம் வரைக்கும் நான் படிப்பு சொல்லிக் கொடுப்பேன்."

குஞ்ஞனந்தன் உறுதிபடச் சொன்னான்.

ஆசிரியர்கள் கிடைப்பது அரிதாக இருந்த காலம் அது. மாதத்தில் பத்தோ பதினைந்தோ நாட்கள் மட்டுமே அவர் பள்ளிக்கூடத்திற்குப் போவார். மற்ற நாட்களில் படுத்துக் கிடப்பார். இருந்தபோதிலும் பள்ளிக்கூடம் போவதை நிறுத்தவில்லை. நடக்க முடியாத நிலை வந்தபோது கேளனின் ஜட்காவை ஏற்பாடு செய்துகொண்டார்.

ஜட்கா ர்யூ த் லிமித்தியேர் வழியாக சேகரின் பெட்டிக்கடை முன்பாகச் சென்றது.

"கேளா, கொஞ்சம் நிறுத்து."

மாஸ்டர் தலையை நீட்டி வெளியே பார்த்தார். தாசன் கிரிஜாவின் கையைப் பிடித்துக்கொண்டு நடந்து வந்தான். அவளுடைய கையில் சிலேட்டு.

"ஏறுங்க."

மாஸ்டர் ஜட்காவின் கதவைத்திறந்து கொடுத்தார். தாசன் தயங்கி நின்றான். கிரிஜாவின் பெரிய கண்கள் ஜட்காவைப்பார்த்து மலர்ந்தன. அவள் இதுவரை குதிரை வண்டியில் ஏறியதில்லை போலிருந்தது.

"ஏறிக்குங்க"

தயக்கத்துடன் தாசன் வண்டியில் ஏறினான். மாஸ்டர் கிரிஜாவைப் பிடித்து மடியில் இருத்திக்கொண்டார்.

"தங்கச்சிதானே?"

"ஆமா மொஸ்யே."

"எந்த வகுப்பு?"

"ஒண்ணாவது."

ஜட்காவின் குலுக்கலில் கிரிஜா மனம் லயித்திருந்தாள். மாஸ்டரும் தாசனும் பேசிக்கொண்டிருந்தார்கள். குஞ்ஞனந்தன் மாஸ்டர் தாசனின் வகுப்பாசிரியர்.

எக்கோல் த் கர்ஸோனுக்கு எதிரில் ஜட்கா நின்றது. மாஸ்டரும் தாசனும் கீழே இறங்கினார்கள்.

"கேளா, தாசனோட தங்கச்சியை அவளோட ஸ்கூல்லே விட்டிரு."

கேளன் கிரிஜாவைக் கூட்டிக்கொண்டு ர்யூ த் கூவர்ணமான் வழியாக வண்டியை ஓட்டிப்போனான். கிரிஜாவின் பள்ளிக்கூடம் ர்யூ த் லா ப்ரிஸோனில் இருந்தது.

பின்னர் அதுவே ஒரு வழக்கமாகிவிட்டது. வழியில் தாசனையும் கிரிஜாவையும் பார்க்கும்போது மாஸ்டர் வண்டியை நிறுத்தச் சொல்வார். மாஸ்டரும் தாசனும் தங்கள் பள்ளிக்கூடத்துக்கு முன்பாக இறங்கியதும் கேளன் கிரிஜாவைக் கூட்டிக்கொண்டு அவளுடைய பள்ளிக்கூடத்துப் போவான்.

அந்த வருடம் வகுப்பில் முதலாமவனாக தாசன் இருந்தான். அறிவாளியான, குழந்தைகளுக்கு அமையப்பெறாத தன்மானமுள்ள, அந்தச் சிறுவனைக் குஞ்ஞனந்தன் மாஸ்டருக்கு நன்றாகவே பிடித்துப் போயிருந்தது.

"த்ரே பியேன்."

அவர் தாசனை அவனுடைய தோளைத் தட்டிப் பாராட்டினார். இதய நோயாளியான குஞ்ஞனந்தன் மாஸ்டர் தாழ்ந்த குரலில் நெப்போலியனையும் ரூசோவையும் பற்றி உரையாடுவார். அவர் கணக்கும் வரலாறும் கற்பித்தார். மிகவும் மெதுவாகத்தான் அவர் பேசுவார். சுருக்கமான வார்த்தைகளில் தெளிவாக எல்லாவற்றையும் விவரித்துச் சொல்வார். யாரையும் கோபித்துக்கொள்ள மாட்டார்.

"அவன் எப்படி சொல்லித் தருவான். நெஞ்சிலேயில்ல அவனுக்கு சீக்கு?"

தாசன் குஞ்ஞனந்தன் மாஸ்டரைப் பற்றிப் புகழ்ந்து பேசுவதைக் கேட்கும்போது குறம்பியம்மா அதிசயிப்பாள்.

"நல்ல கெட்டிக்காரன்தான். என்னத்தைச்சொல்ல, விதிதான்."

குஞ்ஞனந்தன் மாஸ்டரைப்போல வாழ்க்கையில் அங்கபங்கம் அடைந்த மற்றொரு மனிதரல்லவா கஸ்தோன்துரை? ஆனால் அவர்கள் இருவரும் இரண்டு வழிகளில் சஞ்சரித்தார்கள். எந்த நிமிடமும் தான் மடிய நேரலாம் என்பது மாஸ்டருக்குத் தெரியும். வாழ்வதில் மகிழ்ச்சி கண்டுகொண்டிருந்தார் அவர். பேடிதுரையோவெனில் தாமாகவே ஒரு சிறைச்சாலையை உருவாக்கிக்கொண்டு அதில் வாழ்ந்துகொண்டிருந்தார்.

கஸ்தோன்துரை தன்னுடைய பிறப்பு முழுவதுமே வித்தின்வழியாகத் திரும்பிப் போய்விட வேண்டுமென்று விரும்ப, குஞ்ஞனந்தன் மாஸ்டர் பிரபஞ்சத்தில் எதிர் நீச்சல் போட விரும்புகிறார். அவர்கள் இருவரும் எதிரெதிர் துருவங்களாயிருந்தார்கள்.

தன்னுடைய ஊரில் கம்யூனிசத்திற்கான வித்திட்டது குஞ்ஞனந்தன் மாஸ்டர்தான். கோழிக்கோட்டுக்கு சிகிச்சைக்காகப் போய்விட்டுத்

திரும்பிவந்த அன்று வெளிமுற்றத்தில் கண்ணாடிச் சட்டமிட்ட மூன்று படங்கள் காணப்பட்டன. நடுவில் காரல் மார்க்ஸின் படம் இருபுறமும் லெனினும் ஸ்டாலினும்.

"இந்த தாடிக்காரரும் மீசைக்காரரும் யாரு மாஸ்டர்?"

தெருவில் இருந்தபடி குஞ்ஞிச்சிருதை படங்களைப் பார்த்தாள். பின்னர் வெளிமுற்றத்திற்குப் படியேறி வந்தாள். கண்களில் வியப்புத் தோன்ற அவள் கேட்டாள்.

"சந்நியாசியா மாஸ்டர், அந்த நடுவிலே இருக்கிற ஆளு?"

மாஸ்டர் சிரித்தார்.

"இந்த மீசைக்காரர் மாஸ்டர்?"

குஞ்ஞிச்சிருதை ஸ்டாலினுக்கு நேராக விரலைச் சுட்டிக் காட்டிக் கேட்டாள்.

"கொம்மீஸரா அது?"

அந்தக் காலத்தில் போலீஸ் அதிகாரியாயிருந்தார் கொம்மீஸ்ஸார் லோறேன் துரை. அவருக்கு ஸ்டாலினுக்கு இருந்ததைப் போன்ற மீசை இருந்தது.

"அவர் ஒரு பெரிய ஆளு."

"மூப்பன்துரையைவிட பெரிய ஆளாக்கும்?"

"மூப்பன்துரையைவிட எவ்வளவோ பெரிய ஆள்."

குஞ்ஞிச்சிருதை திகைத்து நின்றாள். அவளுடைய கண்ணுக்கு உலகத்தில்மிகவும் பெரிய ஆள் மூப்பன்துரைதான்! குஞ்ஞிச்சிருதையின் கண்ணுக்கு மட்டுமல்ல! மய்யழி மக்களின் எல்லாக் கண்களுக்கும். மூப்பன்துரை ஓர் அவதாரம் என்று நம்புபவர்கள்கூட இருந்தார்கள். அந்த மூப்பன்துரையைவிடப் பெரியவரா, குஞ்ஞனந்தன் மாஸ்டரின் இந்த மீசைக்காரர்?

"குஞ்ஞிச்சிருதே, கொஞ்சம் காப்பி?"

லீலா ஒரு கிளாஸ் காபி கொண்டு வந்தாள். பால்சேர்க்காத கடுங்காபி. அதில் தேங்காய்த்துருவல் இடப்பட்டிருந்தது.

"பாலில்லே குஞ்ஞிச்சிருதே அந்த செட்டிச்சி இன்னும் வரல்லே?"

குஞ்ஞிச்சிருதைக்குப் பால் கலவாத காபி கொடுப்பதில் லீலாவுக்கு சங்கடமாக இருந்தது. குஞ்ஞிச்சிருதைக்கு எந்தப் படி ஏறினாலும் பால் கலந்த காபியோ தேநீரோ கிடைக்கும். தாவீதுதுரையுடனான அவளுடைய நெருக்கம் நாளுக்குநாள் அதிகமாகிக் கொண்டே இருந்தது. அதனால் அவளுடைய அந்தஸ்தின் அளவும் கூடிக்கொண்டே இருந்தது.

"காப்பி எதுவும் வேண்டாம் லீலா. தாவீதுதுரை பங்களாவிலே குடிச்சிட்டுதான் வர்றேன்."

"உனக்கு இனிமே எங்களோட காப்பி எதுவும் தேவையில்லே, துரை இருக்காரில்லே..."

"சீக்கிரமா தாவீதுதுரை உன்னைக் கல்யாணம் கட்டிக்குவாரா குஞ்ஞிச்சிருதே?"

மாஸ்டர் சொன்னதைக்கேட்டு குஞ்ஞிச்சிருதையின் கன்னங்கள் சிவந்தன. அவள் காபி குடித்து கிளாஸை பெஞ்சில் வைத்துவிட்டு சொல்லிக்கொண்டு புறப்பட்டாள். வாசற்படியில்இறங்கி நின்று அவள் மாஸ்டரை நோக்கித் திரும்பினாள்.

"அந்த போட்டோ. . . ."

அவள் ஸ்டாலின் படத்திற்கு நேராகக் காட்டினாள்.

"அந்தப் போட்டோ எனக்குத்தருவீங்களா மாஸ்டர்?"

"அதைத் தர முடியாது. வேறே போட்டோ கொடுத்தால்சரிதானா?"

"போதும், அதைப் போல மீசையுள்ள ஆள் போட்டோ. தரணும் மாஸ்டர். . ."

மாஸ்டர் தலையை ஆட்டிச் சம்மதித்தார். அவள்நடந்து போவதை அவர் பார்த்தபடி நின்றார். உடுத்தியிருந்த முண்டின் அகலமான தங்கச்சரிகை இளவெயிலில் மின்னிக்கொண்டிருந்தது.

குஞ்ஞிச்சிருதையைப் போலவே மற்றவர்களுக்கும் மாஸ்டரின் வெளிமுற்றத்துப் படங்கள் யாருடையவை என்று புரியவில்லை. ஆனால், ஒரு நாள் மூப்பன் துரையின் வலது கையான ஸெர்ஜாம் ஆம் றெத்ரேத் குஞ்ஞிகண்ணேனின் மகனான ஸெக்ரத்தேர் கருணன் சாயங்காலத்து சவாரியின்போது மாஸ்டருடைய வெளிமுற்றத்திற்கு முன்பாக வந்து நின்று கோபத்துடன் வினவினார்.

"இலே கொம்யூனிஸ்த். ." (அவன் கம்யூனிஸ்ட்டா?)

# 8

முனிசிபல் விளக்குகளின் திரிகள் எரிந்து முடிந்தன. உன்னிநாயரின் கள்ளுக்கடையும் அடைத்தாகிவிட்டது. கடையிலிருந்து தினமும் கடைசியாக வெளியேறுவது பாண்டுக்காரன் கணாரிதான். அவன்பாட்டுப் பாடியபடி சாலையில் நடந்து போனான். கணாரி கடந்து போன பின்னர் மீண்டும் அமைதி.

குறம்பியம்மா பத்தாயத்தின் பரண் மீது திறந்த கண்களுடன் படுத்திருந்தாள். அவளுக்கு இப்போதெல்லாம் தூக்கம் வருவதில்லை. சில நாட்கள் கோழி கூவும்வரை இப்படிக் கண்கள் திறந்தபடிப் படுத்திருப்பாள். பகலிலும் தூக்கம்கிடையாது. வழியே போகும் யாரையேனும் கூப்பிட்டு நிறுத்தி அளவளாவியும், பொடி உறிஞ்சியும் பொழுதை நெட்டித் தள்ளுவாள்.

முன்பெல்லாம் தாசனுக்குக் கட்டுக்கதைகளும் பழங்கதைகளும் சொல்லிக் கொண்டிருப்பாள். மூாந்தார்க்கின், குபேரன்செட்டியார் ஆகியவர்களைப் பற்றிய கதைகளை எத்தனை தடவைகள் அவள் அவனுக்குச் சொல்லியிருக்கிறாள். தாசனுக்குக் கேட்கக் கேட்கச் சலிப்பு வராத கட்டுக்கதைகள், பழங்கதைகள்.

இப்போது தாசன் குழந்தையல்ல. கட்டுக்கதைகளின், பழங்கதைகளின் உலகத்திலிருந்து அவன் தொலைவில் போய்விட்டான். அவனுடைய இடத்தை கிரிஜா பிடித்துக்கொண்டாள்.

"முன்னொரு காலத்திலே பிரான்சிலே..."

குறம்பியம்மா கிரிஜாவை மடியிலிருத்தி, யானைத்தந்தத்துப் பொடிடப்பி திறந்து ஒரு நுள்ளல் பொடி உறிஞ்சி, மூாந்தார்க்கின் கதையைச் சொல்லத் தொடங்கினாள். கதைசொல்லி முடிக்கும்போது குறம்பியம்மாவின் கண்கள் வழக்கம்போல் நிறைந்தன. கிரிஜாவின்

கண்களும் தேம்பி அழுதன.

சிறிது காலம் கழித்தால் அவளுடைய கண்களும் அழாமலிருக்கப் பழகிவிடும். ஆனால் கட்டுக்கதைகளும் பழங்கதைகளும் அத்துடன் முடிந்துவிடுவதில்லை. மூாந்தார்க்கின் கதையையும் குபேரன்செட்டியார் கதையையும் சொல்லிக் கொடுக்கப் பாட்டிமார்கள் இனியும் தோன்றுவார்கள்.

அவர்களுடைய மடியிலிருந்தபடி அந்தக் கதைகளைக் கேட்பதற்காக வெள்ளியாங்கல்லிலிருந்து தும்பிகள் இனியும் வரும். . .

தாசன் சற்று எட்டத்திலிருந்து படித்துக்கொண்டிருந்தான். ரைட்டர் கவனமாக எழுதி முடித்த தஸ்தாவேஜ் கடுதாசிகளை அடுக்கி வைத்துக் கொண்டிருந்தார்.

"அரிசியில்லே"

கௌசுவம்மா ரைட்டரின் அருகில் வந்து நின்றாள்.

"சாயங்காலம் வாங்கிடலாம்."

"மத்தியானம் குழந்தைங்க ஸ்கூல்லேருந்து வருமே. . ."

தஸ்தாவேஜு கட்டும் குடையும் எடுத்துக்கொண்டு கோர்ட்டுக்குப் புறப்பட்ட ரைட்டர் யோசித்தபடி நின்றார்.

"எங்கேயாவது பக்கத்திலே நாழி அரிசி வாங்கிக்கோ"

"மத்தவங்களுக்கும் வெக்கம் மானம் இருக்குல்ல."

பக்கத்து வீட்டில் க்ரெஃபியெ சுகுமாரன்தான் குடியிருந்தார். பெரிய அரசாங்க ஊழியர். இரண்டு நாட்களுக்கு முன்பு அங்கிருந்து கடன் வாங்கிய அரிசியை இன்னும் திருப்பிக்கொடுக்கவில்லை. இனியும் எப்படி அங்கே போய்க் கேட்பது?

"என்னாலே முடியாது?"

தாமுரைட்டர் எரிச்சலுடன் நின்றார்.

"எப்படியாச்சும் ஒரு வழி இருக்கான்னு பாருங்க."

கடைசியில் ஒரு பெருமூச்சுடன் தஸ்தாவேஜுக் கட்டைக்கட்கத்தில் இறுக்கிப் பிடித்துக்கொண்டு அவர் வாசற்படி இறங்கினார். அப்போது தன்னுடைய பொடிடப்பியைப் பார்த்தபடி குறம்பியம்மா முறையிட்டாள்.

"வர்றப்போ ஒரு முக்காத்துட்டு பொடியும் வாங்கிக்கோ."

யானைத் தந்தத்துப் பொடிடப்பி வெறுமையாகிக் கிடந்தது. முன்பெல்லாம் காலணா பொடியே போதுமானதாயிருந்தது. இரவு தூக்கம் கெட்டதால் அரையணா பொடிகூடப் போதவில்லை.

அந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டுதான் தாசன் பள்ளிக்கூடத்திற்குப் புறப்பட்டான். கிரிஜாவின் கையைப் பிடித்துக்கொண்டு நடக்கும்போது அவன் தீர்மானித்துக் கொண்டான். இன்னிக்கு மத்தியானம் சோறு இருக்காது.

ஆனால், பள்ளிக்கூடம் முடிந்து வந்தபோது கிண்ணத்தில் சோறு.

"அரிசி எங்கேருந்து கிடைச்சதும்மா?"

கௌசு ஒரு நிமிடம் அவனுடைய முகத்தை நோக்கியிருந்தாள். வீட்டில் பிரச்சினைகள் தீர்ந்தபாடில்லை. அவள் குழந்தைகளுக்கு அதெல்லாம் தெரியாமல் பார்த்துக்கொண்டாள். முதன் முதலாக தாசன் இப்படிக் கேட்கிறான்.

அவன் வளர்ந்துகொண்டிருக்கிறான்.

"எங்கேருந்தும்மா?"

அவன் மீண்டும் கேட்டான்.

"உனக்கு அதெல்லாம் தெரிய வேண்டாம்."

"க்ரெபியேக்காரங்க வீட்லேருந்து வாங்கினதா?"

கௌசு அதற்கு பதில் சொல்லவில்லை. அவள் நிலைப்படியில் தலை குனிந்தபடி நின்றிருந்தாள். இடையிடையே முண்டுத் தலைப்பினால் கண்ணைத் துடைத்துக் கொண்டாள்.

தாசனால் சாப்பிட முடியவில்லை. அவன் எழுந்து போனான்.

"கௌசு, உன்னோட கஷ்டமெல்லாம் தீரும். மகளே, தாசன் கொஞ்சம் பெரியவனாகட்டும். அவனுக்கு ஒருவழி பிறக்கட்டும்."

குறம்பியம்மா கௌசுவின் அருகே வந்து நின்று அவளைத் தேற்றினாள்.

சாயங்காலம் தாசன் மந்திரம்சொல்லி முடித்த பிறகு தினமும் படிக்க உட்காருவான். அன்று குறம்பியம்மா அவனுக்கு அருகில்சென்று நின்றாள்.

"நல்லாப் படிக்கணும். படிச்சி பெரியவனாகணும்."

குறம்பியம்மாவின் கண்கள் அவளையும் அறியாமல் தேவாலயத்து உச்சியின் சிலுவையை நோக்கித் திரும்பின. அவளுடைய கண்கள் நிதானமாக மூடிக்கொண்டன.

"என் மாதாவே! என் தாசனுக்கு நல்ல வழி காட்டணும். . . ."

முட்டைவிளக்கு முன்பாக உட்கார்ந்துபடிப்பதைஅவள் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு புரியாத மொழியில்அவளுக்குப் புரியாத விஷயங்களைப் பற்றியதான புத்தகங்களை அவன் படித்தான். குறம்பியம்மாவுக்கு பிரெஞ்சு மொழியில் சில சொற்கள் மட்டுமே தெரிந்திருந்தன. முன்னர் லெஸ்லீதுரை சுகம்தானா என்ற அர்த்தத்தில் ''ஸவா''என்று வினவும்போது காதுகளில் பாம்படங்களை ஆட்டிக்கொண்டு குறம்பியம்மா சொல்வாள்.

"ஊயி மொஸ்யே."

ஆனாலும் தாசன்படிப்பதைப் புரிந்துகொள்ளும் அளவுக்கு பிரெஞ்சு அவளுக்குத் தெரிந்திருக்கவில்லை.

குறம்பியம்மா நள்ளிரவுவரை தாசன்படிப்பதைக் கண் விழித்திருந்து கேட்பாள். அப்படியே இருந்தபடி அவள் மனக்கோட்டைகளைக் கட்டுவாள். படிப்படியாக அவள் அவனில் ஒரு லெஸ்லீதுரையை உருவாக்கிக் கொள்வாள். ஒருநாள் அவள் சொன்னாள்.

"என்னோட தாசன் நொத்தறாவான். கோட்டும் சூட்டும் போட்டுக்கிட்டு குதிரைவண்டியில் போவான்."

பொடியின் கிறக்கத்தில் கண்மூடியிருந்தாள். கோட்டும் தொப்பியும் அணிந்து குதிரை வண்டியில் சஞ்சரிக்கும் தாசனைப்பற்றிய பகல்கனவை அவள் கண்டுகொண்டிருந்தாள்.

வெளியில் முனிசிபல் விளக்குகள் திரியெரிந்து முடிந்து அணைந்துபோயிருந்தன. பேண்டுக்காரன் கணாரியின்பாட்டு விலகிவிலகிச் சென்றது. தாசன் இப்போதும் உட்கார்ந்து படித்துக்கொண்டிருந்தான். தலை நிறைய பரீட்சைகள் குறித்தான சிந்தனைகளாயிருந்தன.

மூப்பன்துரையின் பங்களாவில் அன்றைய விருந்து முடிந்திருந்தது.

மேயர்செக்குமுப்பர், தாவீதுதுரை, குஞ்ஞிகண்ணேன் முதலியோருடைய குதிரைவண்டிகள் மணி கிலுக்கிக்கொண்டு ஒவ்வொன்றாகச் சென்றுவிட்டன. மய்யழி அமைதியாகிவிட்டது. மூப்பரின் குன்றின் அடிவாரத்தில் அலையடிக்கும் கடலின் ஓசை அமைதிக்கு அழுத்தம் சேர்த்துக் கொண்டிருந்தது.

வழக்கம்போல பத்தாயத்தின்மேல் படுத்திருந்த குறம்பியம்மாவின் கண்ணிலிருந்து தூசன்மறையத் தொடங்கினான். முட்டை விளக்கின் சிவந்த வெளிச்சம் அவளுடைய கண்களை எட்டவில்லை. அவளுடைய காதுகளை ஏதோ ஒருதூரலோசை ஆட்கொண்டது. உடம்பு சலனமற்றுக் கிடந்தது.

தொலைவிலிருந்து ஒரு குதிரைவண்டி புறப்பட்டு வருவதான கிலுக்கம் கேட்கவில்லையா? குதிரையின் குளம்படி ஓசை கேட்கவில்லையா? குறம்பியம்மாவின் நெஞ்சு துடித்து. அவளுடைய காதுகள் அனேக காதுகளின் கேட்கும் திறனைப் பெற்றன.

அடுத்தடுத்து வருவதான குளம்படி. குண்டும் குழியும் நிறைந்த சாலையில்போகும் வண்டிச் சக்கரங்களின் அரவம், குதிரையின் கழுத்து மணியோசை. சக்கரங்களின் கரகரப்பும் குளம்படி ஓசையும் திடீரென்று நின்றன. வீட்டுக்கு முன்பாக வண்டி வந்து நிற்பதாக தோன்றியது.

வண்டியின் கதவுகள் திறக்கப்படும் ஓசை. குதிரையின்கழுத்து மணி சற்றே அடங்கியது.

"குறம்பி, குறம்பி. . . ."

மரணத்தினால் நிசப்தமாக்க முடியாத லெஸ்லீதுரையின் குரல், சாலையில் நின்றபடி அவர்கூப்பிட்டுக் கேட்கிறார்.

"குறம்பி, குறம்பி, கொஞ்சம் பொடி தர்றியா?"

சரளைமண்ணில் பதியும் பூட்ஸ். துரை வண்டியிலிருந்து கீழே இறங்கியதாகத் தோன்றியது.

"குறம்பி, குறம்பி. . ."

கூர்மையான காதுகளுடன் சிலிர்க்கும் சரீரத்துடன், குறம்பியம்மா சலமற்றுக் கிடந்தாள். லெஸ்லீதுரை வாசற்படி ஏறினார். அங்கிருந்து வராந்தாவுக்கு ஏறிவரும் பூட்ஸின் ஒலி.

"ஒரு நுள்ளு பொடி தருவியா குறம்பி?"

"அதென்ன துரே. . . ."

பேச வேண்டுமென்று விரும்பினாலும் நாக்கு அசையவில்லை முண்டு மடிப்பிலிருந்து யானைத் தந்தத்தாலான டப்பியை வெளியிலெடுக்க முயன்றாலும் கை அசையவில்லை.

பெஞ்சின் பழையதான கால்கள் அசைந்து ஓசையுண்டாக்கின. லெஸ்லீதுரை வராந்தாவில் பெஞ்சின்மேல் உட்கார்ந்திருக்கவேண்டும். தொப்பியை எடுத்து மடியில் வைத்துக்கொண்டதாகத் தோன்றியது.

"தருவியா குறம்பி? ஒருநுள்ளு பொடி தருவியா, நீ?"

லெஸ்லீதுரை கெஞ்சினார்.

அதைத் தொடர்ந்து நிசப்தம். சிறிது நேரம் கழிந்தது. வராந்தாவில் பெஞ்ச் மீண்டும் அசைந்தது. படிக்கற்களில் இறங்கிப்போகும் பூட்ஸின் ஓசை. குதிரையின் கழுத்துமணி ஓசையிட்டது. சக்கரங்கள் கரகரத்தன.

விலகி விலகிச் செல்லும் குளம்படி ஓசை.

குறம்பியம்மா, தேம்பி அழுதாள்.

"பாட்டி . . ."

தாசன் புத்தகத்திலிருந்து கண்ணை நிமிர்த்தினான். பத்தாயத்தின் மேல் எழுந்து உட்கார்ந்து குறம்பியம்மா தேம்பி அழலானாள். தாசன் ஒரு நிமிடம் அதைப் பார்த்தான். பின்பு மீண்டும் புத்தகத்தைத் திறந்து படிக்கத் தொடங்கினான். இது இன்றைக்கு முதல்தடவை அல்லவே. தினம் பாதி இரவில் குறம்பியம்மா எழுந்திருந்து இப்படி அழுவாள்... அது ஒரு வழக்கமாகியிருந்தது.

"அம்மா!"

தாமுரைட்டர் அவர்படுக்கையிலிருந்து எழுந்து பேசினார்.

"ஒருத்தன் சாப்பாடும் தூக்கமும் இல்லாம உக்காந்து படிக்கிறது நீ பார்க்கலையா? அவனுக்குப் பரீட்சையைப் பத்தித்தான் நெனப்பு இருக்கணும். அழுறதைப் பார்த்து ஒருவேளை. . . ."

ரைட்டர் கோபத்துடன் உள்ளே திரும்பிப் போனார்.

"அம்மாவுக்கு ஏன் தெரியமாட்டேங்குது, கடவுளே! தினமும் எந்திரிச்சி இப்படி அழுறாங்களே. . . ."

கௌசுவும் விழித்தெழுந்து கட்டிலில் உட்கார்ந்தாள்.

"ஏதாச்சும் கனவு கண்டிருப்பா. நீ படுத்துத் தூங்கு, கௌசு"

குறம்பியம்மா புறங்கையால் கண்ணைத் துடைத்துக்கொண்டு மீண்டும் பத்தாயத்தின்மேல் படுத்தாள். சிறிது நேரம் கழிந்ததும் சாமக் கோழிகள் கூவின. குறம்பியம்மா அயரத் தொடங்கினாள். அவளுடைய வேதனையை யாரறிவார். . . .

குறம்பியம்மா உறங்கிய பின்னும் தாசன் படிப்பதை நிறுத்தவில்லை. முட்டை விளக்கிலிருந்து எழுந்த புகை படர்ந்து கண்கள் கலங்கின. ஓசை அடங்கியது.

சர்த்திபிகா பரீட்சை நெருங்கி வருகிறது. இதுவரை எந்த வகுப்பிலும் தோல்வி கண்டதில்லை. வகுப்பில் மிகவும் புத்திசாலியான பையன் என்ற பெயரும் உண்டு. மாஸ்டர் பல தடவை சொன்னதுண்டு.

"உன்னை மாதிரி ஒரு பையனுக்குப் படிப்புச் சொல்லித் தர முடிஞ்ச நான் பாக்கியசாலிதான். நல்லாப் படி . நீ அபாரமான காரியங்களைச் செய்வே!"

வகுப்பில் தாசனைவிட கணக்கில் அதிக மார்க் வாங்கும் ஓரிரண்டு பேரிருந்தார்கள். ஆனால், அவர்களுடைய உலக ஞானம் குறைவாக இருந்தது. தாசன் நிறைய படிப்பான். அந்தக் காரணத்தினால் குஞ்ஞனந்தன் மாஸ்டர் அவனிடம் பிரத்தியேகக் கவனம் செலுத்தத் தொடங்கினார். மாஸ்டரே பள்ளிக்கூட நூலகத்திலிருந்து புத்தகங்களைத்தேர்தெடுத்துக் கொடுப்பார். அப்படித்தான், தாசன் ஹ்யூகோவின் "ஹெர்னானி" போமார்ஷேயின் "மரியாழ் த் பிகாறோ" போன்றவற்றைப் படிக்கத்தொடங்கினான்.

தினமும் காலையில் கேளனின் குதிரைவண்டி வந்து வீட்டுக்கு முன்னால் வந்து நிற்கும். தலையை வெளியில் நீட்டி குஞ்ஞனந்தன் மாஸ்டர் கூப்பிடுவார்.

"தாசா! கிரிஜா! வாங்க."

மாஸ்டருடைய வீட்டிலிருந்து பள்ளிக்கூடத்திற்குப் போகும் வழி அது அல்ல. தாசனையும் கிரிஜாவையும் தம்முடன் அழைத்துப்

போகத்தான் அவர் அந்த வழியாக வருவது.

"மாஷே, தாசன் தேறிவிடுவானா?"

அதைக் கேட்டு வண்டியிலிருந்தபடி மாஸ்டர் மெல்லிதாகச் சிரித்தார்.

"நல்ல கேள்வி! உங்களுக்கு இன்னமும் உங்க மகனைப் புரிஞ்சிக்க முடியலையா ரைட்டரே?"

"அவன் கணக்கிலே கொஞ்சம் மோசமா இருக்கானே!"

"கணக்கிலே தோக்கறதனாலே அவன் மோசமாயிட மாட்டான்."

வண்டி புறப்படத் தொடங்கியபோது சாலையில் நின்ற ரைட்டரிடம் அவர் சொன்னார்.

"கணக்கைப் பொருத்தவரை நான் ஒத்துக்கிடுறேன். தாசன் சாயங்காலம் வீட்டுக்கு வரட்டும்... பரீட்சை வரைக்கும்."

"மாஷ், இப்படியெல்லாம் செய்யறதுக்கு நன்றியுடையவனா இருப்பேன்" ரைட்டர் மகிழ்ந்தார். மெதுவான குரலில் அவர் தொடர்ந்து சொன்னார்.

"ஆம்பிளைப் பையன்னு இவன் ஒருத்தன்தான் எனக்குஇருக்கான். மாஷுக்குத் தெரிஞ்சதுதான். அவனுக்கு ஒரு வழி உண்டாகணும். எனக்குக் கொஞ்சம் நிம்மதி கிடைக்கும்."

"தாசனைப் பத்தி நீங்க கவலைப்பட வேண்டாம். எனக்கு அது தெரியும்."

தாசன் அவர்களுடைய உரையாடலைக் கேட்டுக்கொண்டிருந்தான். சுயமரியாதை கொண்ட அவனுடைய முகம் மேலும் இறுகியது. அவன் மனதுக்குள் சொல்லிக்கொண்டான். அப்பா கவலைப்படாம இருக்கிற மாதிரி நான்முயற்சி செய்வேன். முடிஞ்சவரை நல்லாப் படிப்பேன். பரீட்சைகளிலே க்ளாஸ்லே பாசாகணும். தரக்குறைவில்லாத ஒரு வேலை சம்பாதிக்கணும். அப்படியாக இந்தக் குடும்பத்திலே ஒரு தாங்கும் தூணாகணும். அம்மா ஒருக்காலும் யாரோட வீட்டுக்கும்போய் அரிசி கடன் வாங்கும்படியா வைக்கக்கூடாது. பாட்டியின் யானைத் தந்த பொடி டப்பி ஒருக்காலும் காலியாக இருக்கக்கூடாது.

செம்மண் நிறைந்த சாலையில் சக்கரங்களின் நீண்டு வளைந்து போகும் வழித்தடங்கள்.

சாயுங்காலம் வழக்கம்போல் குளிக்கப்போகவில்லை. பள்ளிக்கூடம் விட்டு வந்தவுடன் அம்மாவின் கையிலிருந்து ஒரு தம்ளர் வெல்லக்காப்பி வாங்கிக் குடித்துவிட்டுக் குஞ்ஞுனந்தன் மாஸ்டரின் வீட்டுக்கு நடந்தான். கையில் கணக்குப் புத்தகங்களும் நோட்டுப்புத்தகங்களும்.

முதல் முறையாக மாஸ்டரின் வீட்டுக்குப் போகிறான். இதுவரை வெளியே இருந்தபடிதான் பார்த்திருக்கிறான். பெரியவீடு. கேட்டின் இருபுறங்களிலும் சிமெண்டினால் வார்க்கப்பட்ட இரண்டு சிங்கங்கள். அவன் உள்ளே நுழைந்து சென்றபோது கேட்டில் ஒரு சின்னப்பெண் நின்றிருந்தது.

"மாஷ் இல்லே?"

குதிகால் எட்டிய பாவாடை உடுத்தியிருந்த சிறுமி அவனுடைய முகத்தைப் பார்த்தாள். ஆனாலும் பதில் சொல்லாமல்பாதசரங்கள் கிலுங்க உள்ளே ஓடினாள்.

"வா தம்பி."

லீலா வராந்தாவுக்கு வந்து நின்றாள்.

"தம்பி அனந்தா, ரைட்டரோட பையன் வந்திருக்கான்."

மாஸ்டர் தம்முடைய கட்டிலில் படுத்திருந்தார்.

கையிலே புகழ்பெற்ற ஒருசோவின் "கோம்த்ரா ஸோஸ்யால்"என்ற நூல். அவர் சட்டை அணிந்திருக்கவில்லை. மஞ்சள் நிறமான உடம்பு. முன்புறம் மார்பில் காடு போல ரோமம் வளர்ந்திருந்தது. இதற்குள்ளாக அந்த ரோமங்கள் முழுவதும் நரைக்கத் தொடங்கியிருந்தன. அவ்வாறு தரிசு நிலம் போலாகியிருந்தது அவருடைய மார்பு.

எட்டு மணிவரை மாஸ்டர் கணக்குச் சொல்லிக்கொடுத்தார். லீலா இரண்டு தடவை தேநீர் கொண்டுவந்து கொடுத்தாள். பாலும் சர்க்கரையும் கலந்த தேநீர் குடித்த காலம் மறந்து போயிருந்தது. இடையிடையே பாதசரங்கள் அணிந்த சந்திரிகா வாசற்படியில் வந்துமுகத்தைக் காட்டுவாள்.

பரீட்சைக்கு முதல்நாள் வரையிலும் தினமும் மாஸ்டரின் வீட்டுக்குச் சென்றான். பரீட்சை முடிவு தெரிந்தபோது முதலாமவனாக அவன் "சர்த்திபிகா" தேறியிருந்தான்...

★ ★ ★

நிலைக்கண்ணாடியின் முன்பாக நின்றபோது கண்களில் வியப்பு மலர்ந்தது. கைகால்களுக்கு எப்படி இவ்வளவு நீளம் வந்தது? இனி கோலி விளையாட்டு கிடையாது. இனி கிரிஜாவுடன் சண்டையோ சச்சரவோ கிடையாது. துக்கங்களை மனதில் மறைத்துக்கொள்வதான, கண்ணீருக்கு அணைகட்டுவதான, காலம் வந்துவிட்டது.

நழுவிப்போகும் பால்யத்தைப் பற்றிப் புலம்புவதில் பயனில்லை. அவன் வளர்வதற்கு ஆசைப்படும் வேகத்தில் வளர்ந்து பெரியவனானான்.

திடீரென்று கண்ணாடியில் அப்பாவையும் அம்மாவையும் அவன் பார்த்தான். பின்புறம் வாசற்படியில் நின்றுகொண்டு முதன்முதலாக முண்டு உடுத்தியிருந்த மகனை அவர்கள் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அம்மாவின் கண்களில் ஈரம் சுரந்தது.

"கண்ணு, பார்த்தா அடையாளம் தெரியலே!"

அம்மா கண்ணீரை அடக்கி, புன்சிரிப்புச் சிரித்தாள். அப்பா ஒரு பெருமூச்சுடன் வராந்தாவில் சாய்வுநாற்காலியில் சென்று படுத்தார்.

அவர்கள் போன பிறகு மீண்டும் ஒரு முறை கண்ணாடியில் பார்த்துக்கொண்டாள். ஒரு காலத்தில் இந்த நானேதான், என்னுடைய ஆத்மாவாக இருந்து, வெள்ளியாங்கல்லின் முகட்டில் தும்பியைப் போலப் பறந்துதிரிந்து கொண்டிருந்தேன்... ஒரு நிமிடம் அவன் நினைவில் தன்னை இழந்தான். படைப்பு, வாழ்வு, அழிவு பற்றியதான வியப்பு அவனுடைய கண்களில் நிறைந்திருந்தது.

"கடவுளே..."

வராந்தாவில் கால் நீட்டி அமர்ந்து பொடி போட்டுக்கொண்டிருந்த குறம்பியம்மா தாசனைப்பார்த்து அலறிப் புடைத்து எழுந்தாள். அவள் அவனை அணைத்துப் பிடித்தாள். ஆனந்தத்தினால் அவளுக்கு மூச்சடைத்தது. ஏதோ சொல்லிக் கூப்பிடவேண்டுமென்று அவளுக்குத் தோன்றியது.

"கௌசு, அந்தத் துண்டை இங்கே எடுத்துக்கிட்டு வா. . ."

"அம்மா எங்கே இந்த நட்ட நடுப்பகல்லே?"

துண்டை வாங்கி மார்பை மறைத்துக்கொண்டு, தாசனின் கையைப் பிடித்துக் கொண்டு அவள்சொன்னாள்.

"வா..."

எங்கே என்று அவன்கேட்கவில்லை. மிஸ்ஸியின் வீட்டிற்காக இருக்கலாம் அவன் ஊகித்தான். எந்த விசேஷம் நடந்தாலும் பாட்டிக்கு அங்கே போயாக வேண்டும். மிஸ்ஸியிடம் விவரம் சொல்லியாக வேண்டும்.

தாசனின் கையைப் பிடித்தபடி குறம்பியம்மா வெளியே படியிறங்கினாள். சுட்டெரிக்கும் கோடை வெயில். புழுதியின் வரம்பு கட்டிய பாதையினூடே அவர்கள் மிஸ்ஸியின் வீட்டை நோக்கி நடந்தார்கள்.

"மிஸ்ஸி, மிஸ்ஸி, இது யாருன்னு பாரு"

மிஸ்ஸி வெளியில் வந்தாள். தாசனைப்பார்த்து அவள் திகைத்தாள்.

"பிள்ளையாண்டான் பெரியவனாயிட்டானில்ல! அப்பனைவிட தாட்டிகமா இருக்கானில்ல!"

மிஸ்ஸி தன்னுடைய மெலிந்த கைகளினால் தாசனின் கழுத்திலும் முதுகிலுமாகத்தடவிக் கொடுத்தாள். அவளுடைய கைகளிலிருந்து வெதுவெதுப்பபு பரவியது.

மிஸ்ஸி உள்ளே சென்று ஒரு துண்டு கேக் எடுத்துக்கொண்டு வந்து அவனுக்கு ஊட்டினாள். பள்ளிக்கூடத்தில் சேர்ந்த நாள் அவனுக்குக் கொடுத்த கேக். ஸர்த்திபிகா தேறியபோது கொடுத்த கேக்.

"இனிமே தம்பிக்கு கேக்கிடையாது. தம்பி பெரிய ஆளாயாச்சி. கிரிஜாவுக்குத்தான் இனிமே கேக்."

தாசன் கேக் சாப்பிட்டதைப் பார்த்துக்கொண்டிருந்தாள் மிஸ்ஸி. அவன் பெரியவனாகிவிட்டான். இனி அவனுக்காக கேக் செய்ய நேராது. செய்து கொடுத்தால் அவன்சாப்பிடுவானா?

குறம்பியம்மா கஸ்தோனைப் பற்றி நினைத்தாள்.

"தம்பி கஸ்தோனே..."

மாடிப்படியின் முகட்டைப் பார்த்தபடி அவள் குரல்கொடுத்தாள். கஸ்தோன் துரைக்கு அந்தக் குரல் கேட்காது என்று அவளுக்குத் தெரியும். இருந்தாலும் தன்னையறியாமல்அவள் கூப்பிட்டாள்.

குறம்பியம்மா கஸ்தோனைப் பார்த்து ஆண்டுகள் எத்தனையோ கடந்துவிட்டன. கூப்பிட்டால் குரல் கேட்பதான தூரம்தான் அவர்களுக்கிடையே இருந்தது. மாடிப்படியின் அடியில் நிற்கும் குறம்பியம்மாவுக்கு கஸ்தோன்துரையின் அறையைப்பார்க்க முடியும். அதன் கதவுகள் அடைத்துக் கிடந்தன. அந்தக் கதவுகள் யாருக்காகவும் திறக்கப்பட்டதில்லை. பூகம்பம் உண்டானாலும், நெருப்பு மழை பெய்தாலும் அந்தக் கதவுகள் திறக்கப்படுவதில்லை.

குறம்பியம்மா ஒரு பெருமூச்சுடன் மிஸ்ஸியின் அருகில் வந்து நின்றாள். அவளுடைய எண்ணங்களை மிஸ்ஸியினால் அறிந்துகொள்ள முடியும். மிஸ்ஸியின் முகத்தில் புன்சிரிப்பு திடீரென்று மறைந்தது. அங்கே திடீரென்று ஒருமயான அமைதி உருவாகியது.

"என்னோட விதிதான் குறம்பி..."

மிஸ்ஸியின் நீலக் கண்கள் நிறைந்தன.

"மாதாகிட்ட வேண்டிக்குவோம் மிஸ்ஸி. நிச்சயமா அவனோட நிலைமை சரியாகும்."

குறம்பியம்மா மிஸ்ஸியைச் சேர்த்தணைத்து அவளைச் சமாதானப்படுத்த முயன்றாள். அவளால் அது முடியுமா? மிஸ்ஸியைச் சமாதானப்படுத்த யாரால் முடியும்?

தாசனுக்கு கேக் சாப்பிட்டது போதுமென்றாகிவிட்டது. அவனும் பேடிதுரையைக் குறித்து யோசிக்கலானான். நெடுங்காலமாக அவர் அவனைப் பொறுத்தவரை ஒரு கேள்விக்குறியாக இருந்தார். கஸ்தோன்துரையைப்பற்றிய இரகசியம் இரவுபகலாக அவனை அலட்டிக்கொண்டிருந்தது. ஆனால் ஒரு நாள் பேடி என்ற சொல்லுக்கான அர்த்தம் அவனுக்குப் புரிந்தது. அத்துடன் கஸ்தோன்துரையின் இரகசியத்தின் திறவுகோல் அவனுக்குக் கிடைத்தது.

பேடிதுரையின் அவலம் ஒருசிதையைப் போல அவனைச்சுற்றிப் பற்றியெரிந்து படரத்தொடங்கியது. தூக்கம் வராத இரவுகளில் அவனுடைய இளம் மனது மனிதவிதியின் உறைவிடம் தேடி அலைவது ஒரு வழக்கமாகிவிட்டது.

சாயங்காலம் முண்டு உடுத்திக்கொண்டுதான் மாஸ்டரின் வீட்டுக்குச் சென்றான். லீலா அவனைக் கூர்ந்து பார்த்து புன்சிரிப்புச் சிரித்தாள்.

"முண்டு தாசனுக்கு நல்லா பொருத்தமா இருக்கு. சந்த்ரீ, இது யாருன்னு பார்த்தியா..."

மேசையின் அருகில் இருந்து படிக்கும், கணுக்கால்வரை எட்டும் பாவாடை உடுத்திய சிறுமி எழுந்து நின்றாள். அம்மாவுக்குப் பின்னால் நாணபபட்டு நின்றபடி அவளும் தாசனைப் பார்த்தாள்.

அன்றுமுதல் தடவையாக முண்டு உடுத்தினான். நடக்கும்போது காலில் தட்டி உரசும் கறுத்த கரையுள்ள முரட்டு முண்டு. அவனுடைய வளர்ச்சியைக் குறித்து அது அவனுக்கு அறிவுறுத்தும், பொறுப்புகளைக் குறித்து நினைவுறுத்தும். அப்போது அவனுடைய முகம் இறுகும். அவனுடைய தலை நிமிரும்.

# 9

சித்திரை மாதம் பிறந்தது. கிழக்கிலிருந்து இருண்ட மழைமேகங்கள் மய்யழிப்புழையை நோக்கி வந்தன. தேவாலயத்தின் முகட்டில் கோபுரத்தின் உச்சியில் கைவிரித்து நிற்கும் சிலுவையின் முகட்டில் அவை திரண்டு வந்தன. மேகங்களின் நிழல்கள் மய்யழியின் முகட்டில் இருட்டைப் பரப்பின. மூப்பனின் குன்றின் அடிவாரத்தில் புயல்காற்றை கர்ப்பம் தரித்த கடல் சலனமற்றுக் கிடந்தது.

ஆள் நடமாட்டமில்லாத சாலைவழியே கேளனின் ஜட்கா வந்து தாசனின் வீட்டுக்கு முன்பாக நின்றது.

"சார் எங்கே?"

வண்டியில் அவர் இல்லை.

"மாமாவுக்கு சுகமில்லே"

சந்திரிகாதான் பதில்சொன்னாள். வண்டியில் மடிமீதில் புத்தகங்களும் மொட்டைக் குடையுமாக அவள் உட்கார்ந்திருந்தாள்.

"சாருக்கு என்ன"

குஞ்ஞுனந்தன் மாஸ்டருக்கு உடல் நலமில்லை என்று கேட்கும்போது நெஞ்சு துடிக்கும். அவருடைய நோயின் தன்மையைப் பற்றி தாசனுக்குத் தெரியும். மரணத்தின் நூல்பாலத்தின் மீதான தனது மாஸ்டரின் பயணம் அவனை எப்போதும் சங்கடத்திலாழ்த்தும்.

கிரிஜா ஜட்காவில் ஏறி சந்திரிகாவின் அருகில் உட்கார்ந்தாள். தாசன் ஏறிக்கொள்ளவில்லை.

"நான் நடந்தே வந்திர்றேன்."

ஜட்கா குலுங்கிக்கொண்டு நகர்ந்து சென்றது.

வேட்டியை மடித்துக் கட்டிக்கொண்டு தாசன் மாஸ்டரின் வீட்டை நோக்கி நடந்தான். இதற்குள்ளாகவே மாஸ்டர் கடின உழைப்பில் ஈடுபட்டிருந்தார். தனது உடல்நலம் குறித்துச் சிந்திக்காமலே.

எங்கும் வைசூரி பரவிய காலம். பார்கவனும் சிசுபாலனும் வீடுகள்தோறும் ஏறியிறங்கி அம்மை குத்தச் செய்ய அரும்பாடுபட்டார்கள். ஆனால் என்ன பலன். மய்யழி மக்களில் பெரும்பகுதியினர் குஞ்சக்கனின் சுபாவம் கொண்டவர்கள்தாம். அவர்களுக்கு சாவதைவிட பயம் அம்மை குத்திக்கொள்வதில்.

"நான் வைசூரி வந்து செத்தாலும் பரவாயில்லே! நான் அம்மை குத்திக்க மாட்டேன்."

பார்கவனும் சிசுபாலனும் ராமன்போலீசின் கெடுபிடியுடன் அம்மை குத்தச் சென்றபோது பேண்டுக்காரன் கணாரி படுத்துக்கொண்டு கூக்குரலிட்டான். அவனுக்கும் குஞ்சக்கனின் சுபாவம்தான்.

கடற்புறத்தில் நோய் பிடிக்காத ஒருகுடிசைகூட இல்லை. தினமும் இரவில் தீவட்டிகள் புடைசூழ, பொதித்துகட்டிய பாய்கள் ற்யூ த் ஸிமித்தியேர்சாலை வழியாகப் போகும். கொடிகளும் மதச் சடங்கு ஊர்வலங்களும் மய்யழி வழியே கடந்துசென்றன. பலன் எதுவும்ஏற்படவில்லை. கடைசியில் தெய்வ நம்பிக்கை கொண்டவர்கள் தேவாலயத்திலிருந்து வெளுத்தச்சனை வெளியில் இறக்கினார்கள். வெளுத்தச்சனின் விக்கிரகம் ஏந்திய மாரடிப்புப் பிலாக்கண ஊர்வலம் தெருக்களின் வழியே சென்றது. எப்போதும் துக்கமணி முழங்கிக்கொண்டே இருந்தது.

"நானே பார்த்தேன் — இந்தக் கண்ணாலே."

"என்ன கணாரி நீ பார்த்தே?"

குறம்பியம்மா கேட்டாள். தோளில கட்டித்தூக்கிய ஊதுகுழலுடன், நழுவிச் சரிந்த கால்சராயைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு நின்றிருந்தான் கணாரி.

"வெளுத்தச்சனுக்கும் கொடுங்கல்லூரம்மைக்கும் சண்டை."

பிதுங்கிய கண்களுடன் கணாரி அதை விவரித்தான்.

புனித கன்னிமேரியின் தேவாலயத்தின் முன்பாகத்தான் நடந்தது சண்டை. வெள்ளைக்குதிரையின் முதுகில் கையில் ஈட்டியுடன் வெளுத்தச்சன். வெள்ளைச் சேலை உடுத்திக்கொண்டு தலைவிரி கோலத்துடன் நிற்கும் வைசூரியம்மா!

களாரி விடைபெற்றுச் சென்றதும், குறம்பியம்மா ஒருகலத்தில் சாதம் கலக்கி வாசல்படிக்கட்டின் அருகில் கொண்டுவந்து வைத்தாள். அப்படிச் செய்தால் வைசூரி அண்டாது என்பதாக நம்பிக்கை.

பள்ளிக்கூடத்திலிருந்து நண்பகல் திரும்பிவந்த கிரிஜா தெருவில்நின்றுகொண்டே உரத்த குரலில் சொன்னாள்.

"அம்மா பசிக்குது."

அதைக் கேட்டு குறம்பியம்மா காதைப் பொத்திக்கொண்டாள்.

"ஆபத்தைக் கொண்டுவந்திராதேடி நீ. நட்ட நடுப்பகல்லேயா நீ அம்மான்னு கூப்பிடுவே?"

நட்ட நடுப்பகலில் அம்மா என்று கூப்பிடக்கூடாது. அதைக் கேட்டு வைசூரியம்மா வந்துவிடுவாள்!

"இனிமே அம்மான்னு சத்தம்போட்டுக் கூப்பிடக்கூடாது. தெரிஞ்சுதா?"

"கூப்பிடல்லே"

கிரிஜா தலையை ஆட்டி ஒப்புக்கொண்டாள். விரலைக்கடித்துக்கொண்டு அவள் உள்ளே போனாள்.

அதையெல்லாம் கண்டும் கேட்டும் தாசன் உள்ளுக்குள் சிரித்துக்கொண்டான்.

"இங்கே யாருக்கும் வைசூரி வராது. நமக்கெல்லாம்அம்மை குத்தியிருக்கில்ல பாட்டி?"

"அதை இங்கே யாருடா நிச்சயிக்கிறது? கொடுங்கல்லூர் அம்மாகிட்ட விளையாடாதேடா தாசா நீ. நான் சொல்லிப்பிட்டேன்."

"கொடுங்கல்லூர் அம்மாஇல்லே, வைரஸ்தான் வைசூரியைக் கொண்டுவருது."

தாசன் சிரித்தான். குறம்பியம்மா காதுகளைப் பொத்திக் கொண்டாள்.

நள்ளிரவில் தன்னுடைய படிப்பறையின் ஜன்னல் அருகிலிருந்து ரயில் வழியாகச் செல்லும் தீவட்டிகளைப் பார்த்தபடி மாஸ்டர் நின்றிருப்பார். நாள் செல்லச்செல்ல தீவட்டிகளின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டிருந்தது. அதைப் பார்க்கும்போது மாஸ்டரின் நெஞ்சு துடிக்கும். வாழ்க்கையின் விலை என்ன என்பதை அறிந்தவரல்லவா மாஸ்டர்.

மரணம் என்பது அவரைப் பொறுத்த அளவில் மிகவும் பெரிய பிரச்சனை. மரணம் என்றுகேட்கும்போது சாட்டையினால் அடி வாங்கியது போல அவர்நெளிவார். ஒருநாள் கூடுதலாகப் பிழைத்திருப்பதற்காக அவர் எந்தத் தியாகமும்செய்வார். சாப்பிட உணவு வேண்டாம். படுக்கப் பாய் வேண்டாம். உடுத்த ஆடை வேண்டாம். மாஸ்டருக்குக் குறை எதுவும் தெரியாது. அவருக்குப்பிழைத்திருந்தால் மட்டும் போதும் — என்னுடைய நெஞ்சில் சுவாசம்தான் எனக்கு மிகவும்பெரிய ஆனந்தம்.

மயானம் நோக்கிச் செல்லும் தீவட்டிகள் மாஸ்டரைத் தளரச் செய்தன. இவ்வளவு அதிகமான மனிதர்கள் சாவதை அவரால் பார்த்துக்கொண்டிருக்க முடியவில்லை. விடியும்வரை அவர் தனது அறையில் தெற்குவடக்காக நடந்துகொண்டிருந்தார். காலையில் பொங்கும் கண்ணுடன்தான் பள்ளிக்கூடத்திற்குச் சென்றார். அப்போது

அவரைச் சோகத்தில் ஆழ்த்திய ஒருசெய்தி...

முன்வரிசையில் உட்கார்ந்திருக்கும் சிறிலின் பப்பா வைசூரியினால் இறந்துவிட்டார்.

நேற்றிரவு மாஸ்டர் பார்த்த தீவட்டிகளில் ஒன்று சிறிலின் பப்பாவினுடையதாக இருந்திருக்கிறது. அவருடைய மயிர்க்கால்களிடையே ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டது. அன்று அதற்குப் பிறகு மாஸ்டருக்குப் படிப்புச் சொல்லித் தர முடியவில்லை.

"கப்யார் சாகலே; அதுக்கு முன்னாடியே எல்லாரும் அவரைக் கொண்டுபோய்ப் பொதச்சிட்டாங்க"

பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வரும்போது ஜட்காக்காரன் கேளன் இதைச் சொன்னான். அதைக்கேட்டபோது மாஸ்டர் திடுக்கிட்டார். அவருடைய முகம் கறுத்தது.

மாஸ்டரும் அவருடைய மற்ற அறிவுஜீவிகளான நண்பர்களும் தினமும் மாலையில் போய்வரும் இடம் விஞ்ஞான போஷினி வாசகசாலை. மாஸ்டருடைய முயற்சியில்தான் அந்த நூலகம்உருவெடுத்தது. செட்டியாரின் பாழடைந்த வீட்டின் அருகில்தான் நூலகம். கண்ணாடி அலமாரிகளில் பிரெஞ்சு கிளாஸிக்குகளும்பிறவுமாக சுமார் ஐந்நூறு புத்தகங்கள். சில பெஞ்சுகளும் நாற்காலிகளும்.

"சார் இன்னிக்கென்ன ஒரு மௌனம்?"

குஞ்ஞனந்தன்மாஸ்டர் பேசாமல் தலையை நிமிர்த்தி உட்கார்ந்திருந்ததைப் பார்த்து வாசூட்டி கேட்டான்.

"கப்யார் எப்படிச் செத்தார்னு உனக்குத் தெரியுமா?"

"சாகறதுக்கு முன்னாலேயே கொண்டுபோய்ப் புதைச்சிட்டாங்க"

மாஸ்டர் தம்முடைய வெளிறிய உள்ளங்கைகளை ஒன்றிணைத்துப் பிசைந்தார். அவருடைய கண்களில் ஈரம் படர்ந்தது.

வாசூட்டி புத்தகங்களை அடுக்கிவைத்துக் கொண்டிருந்தான். அவர்கள் இருவரையும் தவிர பப்பன் என்றொரு வாலிபனும் அங்கிருந்தான். அவன் கூர் கோம்ப்லமாந்தேறில் மாணவன். மீசை முளைக்கத் தொடங்கியிருந்த பருவம்.

"வாசூட்டி, நாம இப்படி இருந்தாப்போதாது. ஏதாவது செய்தாகணும்."

"என்ன செய்யணும்னு சார் சொல்றீங்க? அம்மை குத்தப் போறப்போ எல்லாரும் ஓடி ஒளியறாங்க. அப்போ நோய்நொடி வராம என்ன செய்யும்? அனுபவிக்கட்டும்."

"அப்படி சொல்லிடக்கூடாது வாசூட்டி. அம்மை குத்திக்க அவங்க சம்மதிக்கலேன்னா அது அவங்களோட அறிவுக்குறைவினாலேதான்."

மாஸ்டர் என்ன உத்தேசித்திருக்கிறார் என்று புரியாமல் வாசூட்டி அவரருகில் வந்து உட்கார்ந்தான்.

"நாமும் கடற்புறம் போகணும். நம்மளாலே முடிஞ்சதைச் செய்யணும்."

வாசூட்டி அதைக்கேட்டு திடுக்கிட்டான். கடற்புறம் முழுவதும் வைசூரி. அங்கே போக வேண்டுமா? அவனால் அதை நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை.

"அந்தக் கேளப்பன் யாரையும் பாக்கி வைக்கமாட்டான். எல்லாரையும் அவன் உயிரோட கொண்டுபோய்ப் புதைச்சிருவான்."

நோயாளிகளுக்குப் பணிவிடை செய்யும் வேலை கேளப்பனுக்கு. உறவினர்கள் உதறித் தள்ளிய நோயாளிகளை வாட்டிய வாழையிலையில்படுக்க வைப்பதும், கஷாயம் கொடுப்பதுமாக எல்லாமே அவனுடைய பணிகளாயிருந்தன. மூக்குமுட்டக் குடித்துவிட்டுக் கடற்புறம் போகும் கேளப்பன் சிறிலின் பப்பாவை உயிருடன் கொண்டுபோய்க் குழியில் மூடியவன்.

"வாகுட்டி, நீ வரல்லேன்னா பரவாயில்லே. நான் போறேன். நான் ஒரு கம்யூனிஸ்ட். கம்யூனிஸ்ட்காரன் மனிதனுக்கு நண்பன். எனக்கு இதைப் பார்த்துக்கிட்டு சும்மா இருக்க முடியது."

பத்திரிகை படித்துக்கொண்டிருந்த பப்பன் சட்டென்று தலை நிமிர்த்தினான். அவனுடைய கண்கள் சூளைகள்போல் சுடர்விட்டன.

"சார்கூட நானும் வர்றேன்."

மாஸ்டரின் முகம் ஒளிர்ந்தது. நீயாவது இருக்கிறாயல்லவா பப்பா...

அன்றே அவர்கள் கடற்புறம் சென்றார்கள். நோய் பிடித்த கூரைக் குடிசைகளுக்குச் சென்று பார்த்தார்கள். குடிக்கத் தண்ணீர் கிடைக்காமல் தவித்தவர்களுக்குத் தண்ணீர் கொடுத்தார்கள். சாவதற்கு முன்பாகவே கேளப்பன் சுருட்டிக் கட்டி வைத்திருந்த வேலுபரக்காயரைக் காப்பாற்றினார்கள்.

"நீ நெருப்போடேயா விளையாடறே?"

மாஸ்டர் கடற்புறத்திற்குச் சென்றிருந்த விவரம் கேள்விப்பட்டு அவியூரிலிருந்து குஞ்ஞூட்டிமாமா ஓடி வந்தார்.

"எந்திரிச்சி நடக்கிற சீவன் இருக்கா குஞ்ஞனந்தா உனக்கு? முதல்லே உன் காரியத்தை நீ பாரு, அதுக்குப் பிறகுபார்க்கலாம் மனிதாபிமானத்தை!"

"என்னோடதுக்கும் மத்தவங்களோடதுக்கும் உயிரிலே என்ன வித்தியாசம் மாமா?"

மாஸ்டர் பின்வாங்கவில்லை. மறுநாள் முதல் அவர் பள்ளிக்கூடத்திலிருந்து விடுப்பு பெற்றார். தினமும் கடற்புறம் சென்றார். கூடவே பப்பனும் இருந்தான்...

சில நாட்கள் கழிந்தன. மய்யழிப்புழை நோக்கி வந்த மேகங்கள் மழையாகப்பொழிந்தன. மய்யழி கழுவித் துப்புரவாக்கப்பட்டது. இலைகளிலிருந்தும் கொப்புகளிலிருந்தும் தெளிவான நீர் வழிந்து விழுந்தது. நிரம்பிக் கிடந்த வயல்களில் சூரிய ஒளிபடர்ந்தது. தேவாலயத்தின் முகட்டில் சிலுவை பளிச்சென்று துலங்கியது.

"இருந்தாலும் அந்தக் குஞ்ஞனந்தனைப் பாராட்டணும்."

குறம்பியம்மா மூக்கின்மேல் விரல் வைத்தாள். மாஸ்டரை ஊர்க்காரர்கள் எல்லோரும் வியப்புடன் பார்க்கத் தொடங்கினார்கள்.

முதல் மழை விழத் தொடங்கியதுமே மாஸ்டர் படுக்கையில் விழுந்துவிட்டார். அவருடைய உள்ளங்கைகள் விஷக்கடி ஏற்றதைப்போல் நீலம்பாரித்தன. தலைச்சேறியிலிருந்து தினமும் டாக்டர் வந்துபோனார். மாஸ்டர் பள்ளிக்கூடம் போக முடியாமல்போயிற்று.

தாசன் மாஸ்டருடைய வீட்டுக்குப்போனபோது அவர்கட்டிலில் கண்மூடிப் படுத்திருந்தார். கட்டிலில் சில புத்தகங்கள் சிதறிக் கிடந்தன.

"நீ ஸ்கூலுக்குப்போகலே?"

"போகணும்."

"ஏன் குதிரைவண்டியிலே போகலே?"

"சாரைப் பார்த்திட்டுப்போகலாம்னு நினைச்சேன்."

தாசன் மாஸ்டரின் அருகே சென்று நின்றான். ரோமங்கள் உதிர்ந்துபோன அவருடைய மார்பு உயர்வதும் தாழ்வதுமாக இருந்தது.

"ராத்திரி நான் ஒருதடைவைக்கூட கண் மூடலே."

லீலா அறைக்குள் வந்தாள்.

"எல்லாம் இழுத்துவிட்டுக்கிட்டதுதான். சொல்லி என்ன செய்ய?"

அவளும் மாஸ்டரைக் குற்றவாளியாக்கினாள்.

"தாசா நீ போயிட்டு வா, மணியடிச்சிருக்கும்."

கண்ணைத்திறக்காமலே மாஸ்டர் சொன்னார். சிறிது நேரம் அங்கே நின்றிருந்தான். அதற்குப் பிறகு புத்தகத்தை எடுத்துக்கொண்டு பள்ளிக்கூடம் நோக்கி நடந்தான்.

ஓரிரண்டு வாரங்கள் கழிந்தன. மாஸ்டர் இப்போதும் படுக்கையில்தான். பள்ளிக்கூடம் விட்டதும் தினமும் சாயங்காலம் தாசன் மாஸ்டரின் வீட்டுக்குப்போவான். பப்பனும் வாசூட்டியும் அங்கே இருப்பார்கள்.

சில சமயம் கணாரனும். மய்யழியில் முதன்முதலாகக் கதர் அணிந்தவர் கணாரன். நீக்ரோவைப் போன்று கறுத்த, ஒளிரும் பற்கள் கொண்ட ஓர் இளைஞர். மாஸ்டரின் அறையில் அவர்கள் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பார்கள்.

அவர்கள் யாரும் இல்லாவிட்டால் லீலாக்காவும் சந்திரிகாவும் மாஸ்டரின் அறையில் இருப்பார்கள்.

"நீ டீ குடிச்சிட்டியா தாசா?"

"குடிச்சிட்டுதான் வந்தேன்."

"இங்கே கொஞ்சம் குடியேன்."

அவர்கள் அவனை அடுக்களைக்கு இட்டுச் செல்வார்கள். வாசற்படிமீது ஒரு பலகையிட்டு தாசன் உட்கார்ந்திருப்பான். தேநீரைத் தயாரித்துக்கொண்டே லீலாக்கா முன்பு சிங்கப்பூருக்குச் சென்றிருந்த கதையைச் சொல்வாள். சந்திரிகாவின் அப்பாவுக்கு அங்கே ஒரு ஷிப்பிங் கம்பெனியில் வேலை.

"லீலாக்காவுக்கு இனிமே சிங்கப்பூருக்குப் போக வேண்டாமா?"

"அதுக்கு எனக்குவயசாயிருச்சில்ல தம்பி?"

அவள் ஒரு கள்ளச்சிரிப்புச் சிரித்தாள். குஞ்ஞனந்தன் மாஸ்டருக்கு மூத்தவள்தான் என்றாலும், பார்ப்பதற்குஅப்படித்தோன்றாது.

"அம்மாவுக்குக் கப்பல்லே ஏறுறதுக்கு பயம்."

சுவரில் சாய்ந்திருந்த சந்திரிகா தலை குனிந்தபடி சொன்னாள். அவள் சற்றே அசைந்தபோது பாதசரங்கள் கிலுங்கின.

ஷிப்பிங் கம்பெனியில் வேலை பார்க்கும் சந்திரிகாவின் அப்பா நிறையப்பயணம் செய்ய வேண்டும். ஆண்டின் முந்நூற்றியறுபது நாட்களும் பயணத்தில்தான் என்று சொல்லலாம். முன்பெல்லாம் லீலாக்கா சிங்கப்பூர் போகாததற்கான காரணம் அதுவாக இருந்தது. இப்போது வேறொரு காரணம் சேர்ந்திருக்கிறது.

"நான் போயிட்டா என்னோட குஞ்ஞனந்தனை யார் பார்த்துக்குவாங்க?"

மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு பரதன் இங்கே ஊருக்கு வந்திருந்தார்.

சென்னையில் கப்பல் இறங்கி அங்கிருந்து ரயிலில் அவர் மய்யழிக்கு வந்தார். உயரம் குறைந்து தடியாக இருப்பார் பரதன்.

பான்ட்டும் புஷ்ஷர்ட்டும் உடை. கைத்தண்டையில் தங்கச் சங்கிலியுள்ள வாட்ச். மூன்று போர்ட்டர்கள் அல்லவா அவருடைய பெட்டிகளைச் சுமந்து வந்தார்கள்! பரதனின் வாட்ச் ஒரு காட்சிப் பொருளாக இருந்தது.

"இது யாரு?"

படியேறி வந்த தாசன் வெளிமுற்றத்தில் நின்றுகொண்டான். பரதனுக்குப் புரியவில்லை.

"இது நம்ம தாமுரைட்டரோட மகனில்லே?"

லீலா நினைவூட்டினாள். பரதன் தாசனின் தோளைத் தட்டிக்கொடுத்தபடி சொன்னார்.

"நான் உன்னைப் பார்த்தப்போ நீ இத்தினியூண்டு இருந்தே"

அவர் கையை நீட்டி அளவிட்டுக் காண்பித்தார்.

"பசங்களெல்லாம் திடீர்னு வளந்துடறாங்க குஞ்ஞனந்தா. யாருன்னு பார்த்தா அடையாளம் தெரியலே."

வீட்டுக்கு வந்து சேர்ந்ததும் அவர் ஷர்ட்டும் பான்ட்டும் களைந்துவிட்டு ஒரு லுங்கி எடுத்து சுற்றிக்கொண்டார். பரதன் ஒரு ரசிகர். தாராளமாகப் பேசவும் சிரிக்கவும் செய்வார். களங்கமில்லாமல் வயிறு குலுங்கச் சிரிக்கும் அவருடைய சிரிப்புக்கு ஒரு தனிப்பட்ட அழகு இருந்தது.

"நீதானே ஸர்திபிகாவிலே ஃபர்ஸ்ட், அப்படித்தானே?"

"ஆமாம்."

"ப்ரவேயிலும் நீ ஃபர்ஸ்ட்டா வரணும்."

பரதன் தாசனின் தோளில் கைபோட்டுக்கொண்டு நடந்தார். உடன் குஞ்ஞனந்தன் மாஸ்டரும் இருந்தார்.

ந்யூ த் லெக்லீஸில் க்லெமாம்துரையின் சாராயக்கடை முன்போல இன்றும் உண்டு. இப்போதும் போலீஸ்காரரும் அங்கே போய் உட்கார்ந்து குடிப்பதும் அரட்டையடிப்பதும் உண்டு.

சாராயக்கடை முன்பாகச் சென்றடைந்ததும் பரதன் நின்றார். அவர் மாஸ்டரையும் தாசனையும் சற்று நேரம்மாறி மாறிப்பார்த்தார்.

"உனக்கு என்னோட மகனாகிற மாதிரியான வயசுதான். குஞ்ஞனந்தன் உன்னோட மாஸ்டர். ஆனாலும் தயங்க வேண்டாம். வரணும்னா வா."

தாசன் தயங்கி நின்றான். இதுவரை மதுவைத் தொட்டதில்லை. சில சமயங்களில் ஆளில்லாத கடற்கரையில் தனியேபோய் உட்கார்ந்திருப்பதுண்டு. சமுத்திரத்தில் வெகுதொலைவில் பிறப்பின் இரகசியங்களை ஏந்தி மின்னி ஒளிர்ந்து நிற்கும் வெள்ளியாங்கல்லில் கண்ணை வைத்து சும்மா உட்கார்ந்திருப்பான். நேரம் கடந்து போவதே தெரியாது. இருட்டில் வீட்டுக்குத் திரும்பிப் போகும்போது சில சமயம் ஆசை உண்டாகும். நானும் குடிக்கணும், நினைவு போகிற வரைக்கும் குடிக்கணும்.

ஆனால், ஒருக்காலும் குடிக்க நேர்ந்ததில்லை. தனக்குள் சபதம் செய்து கொள்வான். கூடாது, தாமுரைட்டரின் குடும்பம் அரைப்பட்டினியாய் இருக்கிறப்போ நான் குடிக்கலாமா? கூடாது.

"வா..."

பரதன் அழைத்தார். குஞ்ஞனந்தன் மாஸ்டர் நகர்ந்து நின்று அவனுடைய முகபாவத்தை கவனித்தார்.

"வேண்டாம். பரதன்சார், நான் போறேன்."

சாராயக்கடை வாசலிலிருந்து திரும்பி நடக்கும்போது நிம்மதி ஏற்பட்டது. உள்ளுக்குள் பிரார்த்தித்துக்கொண்டான்... இந்த எண்ணம் என்றைக்கும் எனக்கு இருக்கணும்... என்றைக்கும்.

# 10

உலகம் கலங்கித் தடுமாறிக்கொண்டிருந்தது. ஹிட்லர் வெர்ஸாய் உடன்படிக்கையை மீறினார். அவ்வாறாக உலக மகாயுத்தத்தின் தீச்சுவாலைகள் படரத் தொடங்கின. இந்தியாவிலோ எனில் எங்கும் குழப்பங்கள். காந்தியின் ஒத்துழையாமை இயக்கம் திசைமாறி இடர்பாட்டில் ஆழ்ந்தது. வினோபாபாவோ சிறையில். காங்கிரஸ் கட்சியில் எஸ்.சி.போஸின் தலைமையில் இடதுசாரி உட்பூசல் தொடங்கியிருந்தது.

மய்யழிலும் தேசிய இயக்கத்தின் அலைகள் உயிர்த்தன. பழைய யூத் லீக் புதுப்பிக்கப்பட்டது. மய்யழியின் சுதந்திரத்தைக் குறிக்கோளாகக் கொண்டு மகாஜனசபை என்றதோர் அமைப்பு உருவெடுத்தது. கணாரன் அதனுடைய தலைவராக இருந்தார்.

"சார், சார்..."

தாவீதுதுரையின் பங்களாவில் இரவில் தூங்கி முடித்து, காலையில் தனது வீட்டுக்குத்திரும்பிப் போகும்போது குஞ்ஞிச்சிருதை மாஸ்டரின் வீட்டு முன்பு வந்து நின்றாள்.

"என்ன குஞ்ஞிச்சிருதே?"

பல்தேய்த்துக்கொண்டு முற்றத்தில் உலர்த்திக்கொண்டிருந்தார் மாஸ்டர். உள்ளங்கையில் உமிழ்நீரில் நனைந்த உமிக்கரி. குஞ்ஞிச்சிருதை முற்றத்தில் படியேறினாள்.

"வெள்ளைக்காரங்க போகணும்னு சார் சொன்னீங்களா?"

"சொன்னேன்."

குஞ்ஞிச்சிருதையின் முகம் வாடிப்போயிற்று.

"அவங்க எங்கே போகணும் சாரு?"

"வெள்ளைக்காரங்க வெள்ளைக்காரங்களோட ஊருக்குப் போகட்டும்."

"எல்லா வெள்ளைக்காரங்களும் போகணுமா சாரு?"

"எல்லாரும்."

"தாவீதுதுரையுமா?"

"தாவீதுதுரையும்தான்."

குஞ்ஞிச்சிருதையின் முகம் காகிதத்தைப்போல் வெளிறிப்போயிற்று. தான் செய்த தவறு அப்போதுதான் குஞ்ஞனந்தன் மாஸ்டருக்குப்புரிந்தது. தாவீதுதுரைக்கும் குஞ்ஞிச்சிருதைக்கும் இடையிலான உறவு அதன்உச்ச

நிலையை எட்டியிருந்தது. அவர் அவளைத் திருமணம் செய்து கொள்ளப்போவதாகச் செய்தி பரவியிருந்தது.

லீலா அடுக்களையில் காபி தயாரித்துக் கொண்டிருந்தாள். ஆனால் காபிக்காகக் குஞ்ஞிச்சிருதை காத்துக்கொண்டிருக்கவில்லை. மாஸ்டரிடம் சொல்லிக்கொண்டு அவள் வெளியில் இறங்கினாள். ஒருபோதும் மறையாத அவளுடைய முகப்பொலிவு அன்று மங்கியது.

"குஞ்ஞிச்சிருதை போயாச்சா?"

காபியுடன் வந்த லீலா நாலாபுறமும் பார்த்தாள்.

"அவ போயிட்டா."

"நீ இதைச் சொல்லி அவளை பயமுறுத்திட்டே. பாவம் குஞ்ஞிச்சிருதே . ."

"இன்னிக்கில்லேன்னா நாளை தாவீதுதுரை போகத்தான் நேரும். தாவீதுதுரை மட்டுமில்லே, எல்லா வெள்ளைக்காரங்களும்தான்."

"மெள்ளப் பேசு குஞ்ஞனந்தா. யாராவது கேட்டால், கடவுளே. . ."

லீலா பயந்தாள். மாஸ்டரின் முகத்தில்உணர்வு மாற்றம் எதுவும் ஏற்படவில்லை. அவர் திடீரென்று பலத்த யோசனைகளில் ஆழ்ந்தார்.

மய்யழியிலிருந்து வெள்ளைக்காரர்களை வெளியேற்றுவது என்பதான கருத்தை யாராலும் ஜீரணிக்க முடியவில்லை. சுதந்திர உணர்வு நீறு பூத்திருந்தது சில அறிவுஜீவிகளிடம் மட்டும்தான். அவர்களோவெனில் விரல் எண்ணிக்கை அளவு மட்டுமே.

குஞ்ஞனந்தன் மாஸ்டர் ஒரு சமயம் தாசனின் வீட்டில் வைத்து சில விஷயங்களைப் பற்றி தாமுரைட்டரிடம் கூறினார்.

"சுதந்திரமா? அப்படீன்னா என்ன சார்?"

ரைட்டருக்குப் புரியவில்லை. சுதந்திரம் என்ற சொல்லுக்கான அர்த்தம்கூட அவருக்கு விளங்கவில்லை. மய்யழிக்கு வெளியே பாரதம் பற்றி எரிந்துகொண்டிருந்தது அவருக்குத் தெரியாது. இந்தக் குழப்படியெல்லாம் எதற்காக வேண்டி? ரைட்டருக்குத் தெரியாது. தன்னுடைய காசநோயும் இடர்பாடுகளுமாக வாழ்ந்துகொண்டிருந்தார் ரைட்டர். அவர் படிப்பது தினப்பத்திரிக்கையல்ல. தஸ்தாவேஜுக் கட்டுக்களைத்தான். கேட்பது கபம் கட்டியிருக்கும் நெஞ்சிலிருந்து வெளிப்படும் தனது சளிஇரைப்பும் இருமலும், இல்லாவிட்டால் மனைவியின் 'அரிசியில்லே', 'சர்க்கரையிலலே', என்ற வழக்கமான பல்லவி.

மய்யழி மக்களில் பெரும்பகுதியினர் ரைட்டரைப் போன்றவர்கள்தாம். எப்படி அவர்களிடம் சுதந்திர உணர்வின் விதைகளை விதைக்க முடியும்? மாஸ்டருக்குப் புரியவில்லை.

"இந்த ஊர்க்காரங்க எருமைங்க. அவங்களை வச்சிக்கிட்டு எப்படித்தான் நாம வேதம் ஓதுறது?" ·

குஞ்ஞனந்தன்மாஸ்டர் தளர்ந்து விட்டிருந்தார். வாசுட்டி புத்தகங்களை அடுக்கிவைத்துக் கொண்டிருந்தான். பப்பன் வழக்கம்போல் பத்திரிகைக்குள் தலைபுதைத்து உட்கார்ந்திருந்தான். மாஸ்டர் சொன்னதைக் கேட்டு அவன் தலைநிமிர்ந்தான்.

"வேதம் ஓதுறதனாலே பலனில்லே. கூப்பிட்டு எழுப்ப முடியாது, அதனாலே தட்டி எழுப்பணும்."

பப்பன் சுபாஷ் சந்திர போஸை ஆராதிப்பவனாக இருந்தான். சில

சமயம் யாரோடு என்றில்லாமல் அவன் பேசுவதைக் கேட்கலாம்.

"நானும் ஒரு லிபரேஷன் ஆர்மி உண்டாக்குவேன். ஐ.என்.ஏ. போல ஒரு ஆர்மி."

அவன் சில சமயங்களில் கணாரனுடன் வாதத்தில்இறங்குவான். கனாரன் ஒரு கடைந்தெடுத்த காந்தி பக்தர். ஒரு சமயம் தோளில் ஒரு கதர்ப்பையைத் தொங்கவிட்டுக் கொண்டு அவர் மய்யழியை விட்டுப் போனார். தண்டி சென்று உப்பு சத்தியாக்கிரகம் செய்து ஜெயிலுக்கும் போனார்.

கணாரன் ஏராளமான சொத்துள்ள ஒரு குடும்பத்தில்தான் பிறந்தார். அவர் ஏழாம் வகுப்புவரை படித்திருந்தால் கணாரனும் குஞ்ஞனந்தனைப் போல ஆசிரியராக ஆகியிருக்கலாம். ஆனால் உத்தியோகத்திலோ குடும்பக் காரியங்களிலோ எதிலும் அவர் ஆர்வம் காட்டவில்லை. குடும்பம் என்பதாக அவரைப் பிணைத்திருந்த ஒரேயொரு கண்ணி தந்தையார்தான்.

"என்ன கணாரா உன்னோட மனசிலேருக்கு? என்னவாயிருந்தாலும் அப்பா என்கிட்டச் சொல்லு."

வீட்டு மாடியில எப்போதும் சிந்தனையில் ஆழ்ந்திருக்கும் கணாரன் அவரை வேதனைக்குள்ளாக்கினார்.

"உனக்குப் பணம் வேணுமா?"

"வேண்டாம்ப்பா"

"கல்யாணம் செய்யணுமா?"

"வேண்டாம்."

கணாரன் தலையாட்டினார்.

பணமும் கல்யாணமும் கணாரனுக்கு வேண்டாம். அப்படியானால் அவனுடைய அந்தப் பருவத்தில் அவனுக்கு என்னதான் தேவை என்று தந்தை திகைத்தார்.

தந்தை இறந்ததும் கணாரன் தனியாளானார். பரம்பரை வழியாகத் தனக்குக் கிடைத்த நிலத்தையும் வீட்டையும் கற்கட்டிடங்களான மூன்று கடைகளையும் அவர் சகோதரிகளின் பேரில் எழுதிக்கொடுத்தார். தண்டிக்குப் போகும்போது கொண்டுபோயிருந்த சாயம்போன கதர்ப்பையை எடுத்துக்கொண்டு வெளியில் இறங்கினார்.

குடியிருக்கப் பெரியதொரு வீடுண்டு. ஆனாலும் அங்கே போவதில்லை. மகாஜன சபையின் ஆபிஸில் பெஞ்ச் மீது ஒரு துண்டை விரித்து அதன்மேல்தான் படுக்கை.

வாசூட்டியின் கதை நேர்மாறானது.

"தெம்மாடித்தனமா அலையறே. காலொடிஞ்ச ஒருஅப்பன்இங்கே கெடக்கிறான் என்கிற கவலை இல்லாம நடக்கிறே, தெம்மாடி."

கயிற்றுக் கட்டிலில் படுத்திருக்கும் பொக்கனச்சன் வாய்விட்டுத் திட்டுவான். அவனுக்குத் தென்னைமரம் ஏறுவது தொழில். ஒரு மழைக்காலத்தில் கால் வழுக்கி இற்றுப்போன தென்னைமரத்திலிருந்து விழுந்தான். இரண்டு கால்களும் முறிந்துபோன பொக்கனச்சன் அதற்குப் பிறகு தென்னைமரமே ஏறவில்லை. இருபத்திரண்டு மணி நேரமும்கயிற்றுக் கட்டிலில் படுக்கைதான். கட்டிலின் அருகில் வைத்த விளிம்பு போன ஒரு பாத்திரத்தில் சிறுநீர் கழிப்பதும் மற்றதும்.

வாசூட்டிக்கு கஜானாவில் குமாஸ்தா வேலை கிடைத்திருந்தது.

ஒரு நாள் ஆபிசுக்குப் போகும் நேரமாகியிருந்தும் அவன் கட்டிலில் மூடிப் போர்த்துக்கொண்டு படுத்திருந்ததைப் பொக்கனச்சன் கண்டான்.

"நான் வேலையை ராஜினாமா பண்றேன். வெள்ளைக்காரன்கிட்டே இனிமே எனக்கு வேலை வேண்டாம்."

வாசூட்டி வெளிப்படையாகச்சொன்னான். பொக்கனச்சனும் கல்லுவம்மாவும் தலையில் இடி விழுந்ததுபோல் உட்கார்ந்து விட்டார்கள். சிறிது நேரத்திற்கு அவர்கள் இருவரும் எதுவும் பேசவில்லை. கடைசியில் கல்லுவம்மா பேச்செடுத்தாள்.

"ஒண்ணுமில்லேன்னாலும் காலொடிஞ்ச ஒரு அப்பன் இருக்காரு உனக்கு. கன்னி கழியாத தங்கச்சிங்க இருக்காங்க. அதையெல்லாம் நெனச்சியா நீ?"

வாசூட்டி எதுவும் பேசாமல் வெளியில் மழை பெய்து கொண்டிருந்ததைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

"போ, பல்லு தேச்சி கொஞ்சம் நீராகாரம் குடிச்சிட்டு கிளம்பு."

கல்லுவம்மா அருகில் வந்து நின்று வாசூட்டியை கஜானாவுக்கு வழியனுப்பி வைக்க முயன்றாள். ஆனால் அவன் அசையவில்லை. அவன் தீர்மானித்து முடிவுகட்டியிருந்தான். . . என்ன வந்தாலும் சரி, நான் இனிமே வெள்ளைக்காரன்கிட்ட வேலை செய்யப் போறதில்லே, நிச்சயம்.

அதைத் தொடர்ந்து அடுப்பு புகையவில்லை. வாசூட்டியின் தங்கைகள் பசித்து அழுதார்கள். கயிற்றுக் கட்டிலின்மேல் படுத்தபடி பொக்கனச்சன் எப்போதும் சாபவசனங்களைப் பொழிந்து கொண்டிருந்தான். கல்லுவம்மா எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டும் கேட்டுக்கொண்டும் உட்கார்ந்திருந்தாள்.

"தெய்வமே, இங்கே இருக்கிறவங்க தலையிலே இடி விழ வச்சிட்டியே நீ!"

சேந்தியின்மேல் குந்தியிருந்த அவள் அழுதாள்.

வாசூட்டி அசையவில்லை. அவன்இதையெல்லாம் முன்கூட்டியே எதிர்பார்த்ததுதான். இரகசிய சந்திப்புகளும் சர்ச்சைகளுமாக அவன் இயங்கினான்.

குஞ்ஞனந்தன்மாஸ்டர் தன்னுடைய ஆரோக்கியத்தை மறந்து ஸ்டடி க்ளாஸ்கள் எடுத்தார். படிப்படியாக சுதந்திரம், சுதந்திரம் என்ற எதிரொலி மய்யழியில் அங்கே இங்கே என்று எங்கும் கேட்கத் தொடங்கியது.

தாசனின் ப்ரவே பரீட்சை அடுத்து வந்தது. அந்த ஆண்டுஅவனைச் சேர்த்து ஆறுபேர் பரீட்சைக்கு உட்கார இருந்தார்கள். மய்யழியில் உயர்ந்த பரீட்சை ப்ரவேதான். அந்தப் பரீட்சை நடக்கும்போது ஊரெங்கும் அதே பேச்சாக இருக்கும்.

"இந்த வருசம் ப்ருகாதீனோட மகன்தான் முதலாவதாக இருக்கும்."

"ஸெக்ரத்தேர் கருணனோட மகன் சேகரன் இல்லே?"

"அவன் ஒண்ணும் படிக்கிறவனில்லே, அவன் ஒருமந்தம்."

"ஸெக்ரத்தேர் கருணனோட மகனுக்கு பரீட்சையிலே பாஸாகிறதுக்கான மூளை வேணாமா?"

மூன்றாம் நம்பர் கள்ளுக்கடை உரிமையாளர் உன்னிநாயர் கண்சிமிட்டிச்சிரித்தார். ஸெக்ரத்தேர் கருணன், மூப்பன்துரையின்

வலது கை அல்லவா? ஊரைஆள்வது அவரல்லவா?

பரீட்சை எழுதுபவர்கள் இரவுபகலாக உடகார்ந்து படிக்கத்தொடங்கினார்கள். மாஸ்டர்மார்களுக்கு நெருக்கடியான சமயம். அவர்கள் விடுப்பு எடுத்துக்கொண்டு குழந்தைகளுக்கு ட்யூஷன் எடுத்தார்கள்.

தாசனை மட்டும் பரீட்சைக் காய்ச்சல் பாதிக்கவில்லை. கவர்ன்மென்ட் சார்ந்த நூலகமான பிப்ளியோத்தே பொதுமக்களுக்காகத் திறக்கப்படுவதற்கு முன்பாகவே தினமும் காலையில் அவன் அதற்கு எதிரில் காத்திருந்தான். நூலகம்திறந்ததும் அறிவுப் பசியுடன் பத்திரிகையைப் பார்ப்பான். யுத்தம் மத்திய தரைக்கடல் நாடுகளில் படர்ந்து பரவியது. லார்டு வேவலின் தலைமையில் இந்தியப் படையினர் இத்தாலியருடன் பொருதினார்கள். அமெரிக்கா யுத்தகளத்தில் இறங்கியது.

“பர்மா தோத்திருமா சார்?”

தாசன் கேட்டான்.

“ஜப்பானியர்கள் பர்மாவைப் பிடிச்சிக்கிட்டா நமக்குஅரிசி கிடைக்குமா?”

யுத்தத்தைப் பற்றி அவன் குஞ்ஞனந்தன்மாஸ்டரிடம் அதிக நேரம் பேசிக்கொண்டிருப்பான். கிடைக்கும் தினப்பத்திரிகைகளையும் மாதப்பத்திரிகைகளையும் வாசிப்பான். அப்படி யுத்த விவகாரங்களைப் பற்றி மாஸ்டர் அளவுக்கு அவனுக்கு அறிவு ஏற்பட்டிருந்தது.

யுத்தம் தாசனை வருத்தமுறச்செய்தது. எதற்காக வேண்டி மனிதர்கள் ஒருவரையொருவர் கொலை செய்கிறார்கள் என்று அவனுடைய இளம் மனம் திகைத்தது.

“கம்யூனிஸ்ட அமைப்பில் மட்டுமே யுத்தம்இல்லாதிருக்கும். சர்வதேச கம்யூனிசம் மட்டும்தான் யுத்தத்திற்கான பரிகாரம்.”

குஞ்ஞனந்தன்மாஸ்டர் சொல்வார்.

தலை நிறைய யுத்தத்தைப்பற்றிய வேதனையுடன், ஒரு ஏசுகிறிஸ்துவைப்போல, சித்தார்த்தனைப் போல தாசன் நடந்தான். மாஸ்டர் உபதேசிக்கும் பாவனையுடன் அவனைப் பார்த்தார்.

“நீ எதுக்காக யுத்தத்தைப் பற்றி யோசிச்சிக்கிட்டு கவலைப்படறே? அதைப்பற்றி எங்களை மாதிரியான பெரியவங்க ஆலோசனை பண்ணிக்கிறோம். நீ போய்ப் படி.”

“படிக்கலேன்னா தாசன் முதலாவதாக வர முடியாது.”

பாதசரங்கள் கிலுங்க சந்திரிகா அங்கே வந்தாள்.

“தாசன், என்னோட புது மாலையைப் பார்த்தீங்களா?”

அவள் ப்ளவுசின் உள்ளேயிருந்து கோதுமை மாலையை எடுத்து வெளியிட்டாள். லாக்கெட் ஆலிலைத் தோற்றத்தில் இருந்தது. அதில் குழந்தை கிருஷ்ணன். தலையில் மயில்பீலி, ஒரு கையில் புல்லாங்குழல்.

“எனக்குப் பொருத்தமா இருக்கா?”

“உம்.”

“எத்தனை பவுன்னு சொல்ல முடியுமா?”

“அஞ்சி.”

“இவ்வளவு சின்ன செயினா?”

அவள் கிண்டலாகச் சிரித்தாள். செயின் மூன்று பவுன்

எடைமட்டுமே.

"எனக்கு இஷ்டம் மணிமாலைதான். ஆனாக்க அம்மா சொன்னாங்க கோதுமை மாலைதான் நல்லதுன்னு."

"மணிமாலை உன்னோட கல்யாணத்துப்போ"

லீலாக்காதான் அதைச் சொன்னார்கள்.

"எதுக்காக உனக்கு நகை பண்ணிப் போடுறாங்க? நீ போட்டுக்கிடத்தானே? பெட்டியிலே வச்சிபூஜை பண்றதுக்கில்லையே?"

சந்திரிகாவுக்கு நிறைய நகைகள் இருந்தன. பரதன் ஒவ்வொரு தடவை வரும்போதும் புது நகைகள் செய்து கொடுப்பார். ஆனாலும் அவள் எதையும் அணிந்துபார்த்ததில்லை. ஒருபோதும் கழற்றி வைக்காதபடி காலில் பாதசரங்கள் மட்டும் இருக்கும். வெள்ளியினால் செய்யப்பட்டவை.

வெளிமுற்றத்தில் இருந்தபடி சந்திரிகாவும் தாசனும் பேசிக்கொண்டிருந்தார்கள். அவள்தான் நிறையப் பேசினாள். சாதாரணமாக எவரோடும் பேசாதவள், எப்போதும் கால்விரல்களைப் பார்த்தபடி நடப்பவள்.

"தாசா, போ, போய்ப் படி."

அந்திவேளை ஆனதும் மாஸ்டர் அவனை வலுக்கட்டாயமாகக் கூப்பிட்டார். ஸெக்ரத்தேர் கருணனின் வீட்டு மாடியில்விளக்கு எரிந்து கொண்டிருந்தது. சேகரன் உரத்த குரலில் வாசிப்பது கேட்டது.

வீட்டிற்குத் திரும்பிச் சென்ற பிறகும்தாசனுக்குப் படிக்க மனம்வரவில்லை. முட்டை விளக்குக்கு முன்பாக கையில் புத்தகத்துடன் இருக்கும்போதும் யுத்தத்தைப் பற்றியதான எண்ணங்கள் அவனிடம் திரும்பி வந்தன.

"என்னப்பா இது? நீ கனவு காண்றியா?"

வாராந்தாவில் சாய்வு நாற்காலியில் படுத்திருந்த தாமுரைட்டர் அவனை கவனிக்க நேர்ந்தது. காசநோய் அதிகரித்துவிட்டதனால் சாயங்காலம் நேரத்துடனேயே அவர் வீட்டிற்கு வந்துவிடுவார். காதுகளை மூடியபடி மப்ளர் கட்டிக்கொண்டு சாய்வு நாற்காலியில் படுத்துவிடுவார், சாப்பிடும் நேரம் வரும்போதுதான் அதிலிருந்து எழுந்திருப்பார். முன்னைப்போல கட்டி வைத்திருக்கும் பத்திரங்களை இரவில் எழுதும் வழக்கமும்விட்டுப்போயிருந்தது.

தந்தையின் குரல்கேட்டு தாசன் புத்தகத்தில் கண்ணைச் செலுத்தினான். அவன் படிக்கத் தொடங்கினான். ஆனால்சிறிது நேரம்போனதும் மீண்டும் அவன் தன்னுடைய சிந்தனையில் ஆழ்ந்துவிட்டான்.

"மத்த பிள்ளைங்க சாப்பாடும் தூக்கமும் இல்லாமப் படிக்கிறாங்க. நீயோ? பெயிலாகணும்கிறதா உன்னோட நெனப்பு!"

ரைட்டர் எழுந்து வந்தார். தாசன் தோல்வியடைவது — அவரால் அதை நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை.

"நான் பெயிலாக மாட்டேன்ப்பா"

"பெயிலாக மாட்டேன்னு சொன்னா மட்டும் போதாது. படிக்கணும். கொஞ்ச நாளா நான் உன்னை கவனிக்கிறேன். என்ன இருக்கு உன் மனசிலே? எதைப் பத்தி நீ அப்படி யோசிச்சிக்கிட்டு இருக்கிறே?"

தாசன் பதில் சொல்லவில்லை. அவன் மீண்டும் புத்தகத்தில்

கவனத்தைச் செலுத்தினான்.

தாமுரைட்டர் மீண்டும் சாய்வு நாற்காலிக்குச் சென்று படுத்தார். அவருடைய மனது கலவரப்பட்டது. என்னவாயிற்று தாசனுக்கு? எப்போதும் சிந்தனை. படிக்க உட்காரும்போதும், சாப்பிட உட்காரும்போதும்... என்னவாயிற்று என் மகனுக்கு?

குஞ்ஞானந்தன்மாஸ்டரைச் சந்தித்தபோது ரைட்டர் அதைப் பற்றிப் பேசினார். மாஸ்டர்அவரை சமாதானப்படுத்தினார்.

"தாசனுக்கு எந்தக் குழப்பமும் இல்லே. நீங்க அவனைப் பற்றி சங்கடப்படவேண்டிய அவசியமே இல்லே?"

"அவன் பாஸாயிடுவானா சார்?"

"வேறே யார்தான் பாஸாவாங்க!"

"எப்போப் பார்த்தாலும் அவன் வேறெங்கேயோ நெனப்பா இருக்கான்."

"பாஸான பிறகு தாசனை என்ன செய்யறதா உங்க எண்ணம்?"

"பாண்டிச்சேரிக்கு அனுப்பிப் படிக்க வைக்கணும், பக்காலாற படிப்புக்கு. அதுக்கான வசதி இல்லே எனக்கு. ஆனாலும் அவனை நான் படிக்க வைப்பேன். அதுக்காக வேண்டி பட்டினி கிடக்கிறது மட்டுமில்லே, சாகவும் நான் தயாரா இருக்கேன், சார்."

"நல்லது. அப்படீன்னா தாசனைப் பாண்டிச்சேரிக்கு அனுப்பிக்கிறதுக்கான ஏற்பாடுகளை இப்பவே செய்திடுறேன்."

மாஸ்டர் புன்னகைத்தார். ரைட்டர் நிம்மதியாகத்திரும்பிச் சென்றார்.

ஒரு நாள் ஸெக்ரத்தேர் கருணன் வழியில்வந்து ரைட்டரைத்தடுத்து நிறுத்தினார். குதிரைவண்டியிலிருந்து தன்னுடைய வலையிட்ட தலையை வெளியில் நீட்டி அவர் கேட்டார்.

"உன் மகனோட படிப்பு எப்படி இருக்குதய்யா?"

சேகரனும் தாசனும் ஒரு வகுப்பல்லவா? ரைட்டருடைய மகன் தன்னுடைய மகனை மிஞ்சிடுவானோ என்று அவருக்கு பயம்.

"ஸர்த்திபிகாய்லே உன்னோட மகன்தானே முதலாவது?"

"ஆமாம் சார்."

ரைட்டர்குனிந்தபடி நின்றார்.

"உம். _"

ஸெக்ரத்தேர் சற்றே முனகிவிட்டு தலையை உள்ளே இழுத்துக்கொண்டார். அவர் தன்னுடைய தலைமுடியை ஒரு கறுத்த வலைப்பின்னலால் கட்டி வைத்திருப்பார். அதற்கும் மேலேதான் தொப்பி அணிவது.

வண்டி புறப்பட்டுத் திருப்பத்தில் ஏறி மறைந்தது.

முட்டைவிளக்கின் அருகில் உட்கார்ந்து கனவு காணும் தாசனின் அருகே சென்று நின்று ரைட்டர் சொன்னார்.

"நீ பெயிலானா, நான் அதுக்குப் பிறகு பிழைச்சிருக்க மாட்டேன். சொல்லிட்டேன்."

அதைச் சொல்லிவிட்டு அவர் தன்னுடைய சாய்வுநாற்காலிக்குச் சென்று படுத்தார். அதற்குப் பிறகு குறம்பியம்மாவின் நேரம். ஒரு நுள்ளல் பொடி எடுத்து உறிஞ்சிய பின் அவள் தாசனின் அருகில் சென்று நின்றாள். தாசன் படிப்பதில் அசிரத்தை காண்பிப்பதை

அவளும் கவனித்துக் கொண்டுதான் இருந்தாள். ரைட்டர் சொன்னதையும் அவள் கேட்டுக்கொண்டுதான் இருந்தாள். குறம்பியம்மாவின் மனது அலைக்கழிந்தது. தாசன் படித்துத் தேறுவது, உத்தியோகஸ்தனாவது என்றெல்லாம் அவள் தினமும் கனவு காண்கிறாளல்லவா? லெஸ்லீதுரையைப் போல கால்சராயும் தொப்பியும் அணிந்து குதிரைவண்டியில் நடமாடுவதைப் பார்ப்பதற்காகக் காத்திருக்கிறாள் அல்லவா?

"தாசா, நல்லாப் படிச்சிருப்பா?"

அப்போதும் முட்டை விளக்குக்கு முன்பாகக் கும்பிட்டபடியாகத் தலை குனிந்திருந்தான் தாசன். விளக்கின் கரியும் புகையும் தாக்கி அவனுடைய கண்கள் கலங்கியிருந்தன.

நேரம் பத்து மணி கழிந்தது. பதினொன்று கழிந்தது. பன்னிரண்டாயிற்று. குஞ்சக்கன் ஏற்றிவைத்த சிம்னி விளக்குகள் திரி எரிந்து அணையத் தொடங்கின. மூப்பன்துரையின் விருந்து முடிந்து வரிசையாகக் குதிரைவண்டிகள் ஒன்றன்பின் மற்றொன்றாகப் புறப்பட்டுச் சென்றன. எண்ணிக்கையில் ஒரு குதிரைவண்டி இப்போது குறைவு. ஸெர்மாம் ஆம் றெத்ரேத் குஞ்ஞிகண்ணேனின் வண்டி.

ஸெர்மாம் ஆம் றெத்ரேத் குஞ்ஞிகண்ணேன் இனி ஒருக்காலும் மூப்பன்துரையின் விருந்தில் பங்கேற்க முடியாது.

நள்ளிரவின் அமைதி, கடல்கூட ஒலியெழுப்பவில்லை. ஓர் இலைகூட அசையவில்லை. தாசன் அரவமில்லாமல் வாசித்துக் கொண்டிருந்தான். திடீரென்று பத்தாயத்தின் மேலிருந்து குறம்பியம்மாவின் அழுகைக்குரல்.

"கொஞ்சம் பொடி தருவியா நீ கொறம்பீ?"

வராந்தாவில் பெஞ்ச் சற்றே அசைந்தது. வாசல்படிக்கட்டுகளில் பதியும் பூட்ஸ் ஒலி. குதிரையின் கழுத்துமணி கிலுங்கியது. சக்கரங்கள் கரகரத்தன. விலகிவிலகிச் செல்லும் குளம்படி ஓசை.

குறம்பியம்மா தேம்பி அழுதாள்.

தாமு ரைட்டரின் வீட்டில் முட்டைவிளக்கு விடியும்வரை எரிந்து கொண்டிருந்தது. கோழி கூவியபோது தாசன் சற்று அயர்ந்தான். உடனேயே விழித்துக்கொண்டு மீண்டும் வாசிக்கத் தொடங்கினான்.

தாசனும் சேகரனும் மட்டும்தான் அந்த ஆண்டு பாஸ் ஆனார்கள். தாசன் அதிக மார்க்குகள் எடுத்திருந்தான். அவனுடைய வெற்றி ஊர்க்காரர்களிடையே பரபரப்பை ஏற்படுத்திற்று.

கோர்ட்டில் அமர்ந்து தஸ்தாவேஜு எழுதிக் கொண்டிருந்தபோதுதான் ரைட்டருக்கு விவரம் தெரிய வந்தது. பேனாவைக் கீழே வைத்துவிட்டு அவர் வீட்டை நோக்கி நடந்தார். நடக்கவில்லை, ஓடவே செய்தார்.

"ஃபெலிஸித்தாஸ்யோம்."

எத்வார்துரை ரைட்டரைப் புகழ்ந்து பாராட்டினார். அவர்கூர் கோம்ப்லமாந்தேறில் பிரின்சிபால். தாசனின் ஆசிரியர்களில் ஒருவர்.

வழிநெடுக ஊர்க்காரர்கள் ரைட்டரைப் புகழ்ந்து பாராட்டினார்கள். அடுத்தடுத்து ஆட்கள் கூடிநின்று பரீட்சை முடிவுகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ரைட்டரின் தலை நிமிர்ந்தது. நோயும் அல்லல்களும் தாக்கி ஒடிந்திருந்த முதுகு நிமிர்ந்தது. தன்மானமும் மகிழ்ச்சியும்கொண்டு

அவருடைய சரீரம் சிலிர்த்தது, தொண்டை அடைத்தது. நாற்பது ஆண்டுகள் வாழ்ந்ததன் பின்னர், வாழ்க்கையில் முதன்முதலாக இன்று அவர் குறிப்பிடத்தக்கவராகிவிட்டார். நேற்றுவரை அவர் அப்படி இருக்கவில்லை. தஸ்தாவேஜு எழுதிக் கொடுத்து, கிடைத்ததை வாங்கிப் பிழைத்திருந்த ஒரு குமாஸ்தா. இப்போது இதோ, ஆச்சரியத்துடனும் மரியாதையுடனும் ஊர்க்காரர்கள் அவரைப் பார்க்கிறார்கள். மேயர் செக்குமுப்பரின் பேரன் தோற்றிருக்கும்போது இதோ என் மகன் வெற்றி பெற்றிருக்கிறான்! ஸெக்ரத்தேர் கருணனுடைய மகனைக்கூட இதோ என் மகன் தோற்கடித்திருக்கிறான். அந்த மகனுடைய தந்தையாக்கும் நான்...

வீட்டிற்குள் சென்றதும் தாமுரைட்டரின் குழிந்த கண்களில் வெள்ளம்பெருகி வந்தது.

மறுநாள் காலையில் தாசன் மூப்பன்துரையின் பங்களாவுக்கு அழைக்கப்பட்டான். எதற்காக இருக்குமென்று நினைத்து தாசன் திகைத்தான். நேரில் புகழ்ந்து பாராட்டுவதற்காக இருக்குமோ! அப்படியானால் அது வழக்கத்திற்குமாறானது. கூர் காம்பலமாந்தேறின் ஒரு மாணவனை பங்களாவுக்கு அழைப்பது – இன்றுவரை இல்லாத வழக்கம்.

"ரைட்டரோட மகன் போறான்!"

சேகரனின் டீக்கடையில் இருந்த யாரோ சொன்னார்கள். எல்லோருடைய கண்களும் தாசனில் பதிந்தன. வேட்டியை மடித்துக் கட்டி, தலையை நிமிர்த்தியபடி பங்களாவுக்குள் நடந்தான். எல்லாரும் பார்த்துக்குங்க, எண்பது சதவீதம்மார்க்கு வாங்கி ப்ரவே பாஸான ரைட்டரோட மகனாக்கும் நான்... பட்டினி கிடந்த தாமுரைட்டரின் மகன்...

பங்களாவுக்கு முன்பாகக் காவல்நின்றிருந்த போலீஸ்காரர் வழிவிலகி நின்றார். பூந்தோட்டத்தின் நடுவே நடைபாதையினூடே அவன் நடந்தான். பங்களாவின் வராந்தாவிலும் ஒரு போலீஸ்காரர் இருந்தார்.

தரையில் சிவப்பு டர்க்கிஷ் தளவிரிப்பு. கண்ணாடிப் பளபளப்புடன் குஷனிட்ட நாற்காலிகள். சுவரை அலங்கரிக்கும் வான்கோகினின் 'ல்ஷாம் த்யு ப்ளே' என்ற உலகப் புகழ்பெற்ற ஓவியம். ஒரு மூலையில் நான்காம் ரிபப்ளிக்கின் பிரஸிடென்ட்டின் பெரியதொரு சிலை.

"மெத்தே–வு."

ஸெக்ரத்தேர் கருணன் நாற்காலியைச் சுட்டிக் காண்பித்தார். அவர் தொப்பி அணிந்திருக்கவில்லை. நெற்றிவரை இறங்கிக் கிடக்கும் கறுத்த வலை. அவர் சுட்டிக் காட்டிய நாற்காலியில் தாசன் உட்கார்ந்தான். தாவீதுதுரையும் மேயர் செக்குமுப்பருமாகச் சேர்ந்து தினமும் வந்து உட்காரும் நாற்காலி.

உள்ளே இருந்த நுழைவு வாசலில் தொங்கிய பட்டுத் திரைச்சீலை விலகியது. தளவிரிப்பில் பதியும் ஷூஸின் அரவம். ஸெக்ரத்தேர் ஒரு புறமாக விலகி வணங்கி நின்றார். பைப்பிலிருந்து வந்த புகை அறையில் பரவியது.

"மொஸ்யே தாஸேன்"

குனிந்தபடி நின்ற கருணன் தாசனை அறிமுகப்படுத்தினார். ஒரு

நிமிட நேரம் நிசப்தம். பங்களாவின் கடல் அலைகள் ஆர்ப்பரிக்கும் ஓசை. சமுத்திரத்தின் கம்பீரமான ஓசை உயர்ந்தது.

"லெத்தா ஸ்ரெமுயீத் த்ராம் ஸ்யூக்ஸே..."

—உன்னுடைய வெற்றியில் அரசாங்கம் மகிழ்ச்சியடைகிறது.

"இல்ஃபோ பூர்ஸ்வீவ்ரஸேத்யுத்"

—நீ படிப்பைத் தொடர வேண்டும்.

"வா அ போந்திஷேரி."

—அதற்காகப் பாண்டிச்சேரிக்குப் போ.

"லெத்தா தாக்கோந்த் ய்யூன் பூர்ஸ்"

—உனக்கு அரசாங்கம் பண உதவி செய்யும்.

"ஸெத்தா ஸொாக்யுப் தெஸோர்மேத் த்வா."

–உன்னுடைய விஷயத்தில் இன்று முதல் அரசாங்கம் கவனம் செலுத்தும்.

சிவப்புத் திரைச்சீலை ஒதுக்கி வழிவிடப்பட்டது. தளவிரிப்பின்மீது நடந்து ஷூ அணிந்த காலடிகள் வெளியேறின.

பெரிய கேட் கடந்து வெளியே வந்தபோது மகிழ்ச்சி மிகுதியினால் தாசன் தன்னை மறந்தான்.

# 11

தாசன் பாண்டிச்சேரிக்குப் போவதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினான்.

"நீ போயிட்டா பாட்டிக்கு யாரு பொடி வாங்கித் தருவாங்க?"

குறம்பியம்மா வினவினாள். எவ்வளவோ காலமாக தினமும் தாசன்தான் பொடி வாங்கிக்கொண்டு வருகிறான். ஆதிமுதல் காலணாப் பொடி. பின்னர் அது போதாதென்று வந்தபோது அரையணாவுக்குப்பொடி என்றாயிற்று. திருப்பத்திலுள்ள செட்டியார் கடையிலிருந்து வாங்கும், அலுமினியக்கடுதாசியில் மடித்த பொடி.

"நானிருக்கேனில்ல பாட்டி, இனிமே பாட்டிக்குப் பொடி வாங்கித் தருவேனில்ல?"

கிரிஜா கேட்டாள். அவள் படிப்பை நிறுத்திவிட்டு வீட்டில் இருந்தாள். சமீபத்தில்தான் அவள் திரண்டது. அதற்குப் பிறகு பள்ளிக்கூடத்திற்குப் போகவில்லை. குடும்பத்தில் பெண்பிள்ளைகள் திரண்டுவிட்டால் அதற்குப் பிறகு பள்ளிக்கூடம் போவதில்லை. பள்ளிக்கூடம் என்றில்லை. வெளியில் எங்கேயும் அதிகமாகப் போக முடியாது.

"நீ பெரிசாயிட்டேயில்லே? உன்னை மூக்குக்குப் போயி பொடி வாங்கி வரச்சொல்ல முடியுமா?"

"வெளியிலே போனா என்னை யாராச்சும் பிடிச்சுகிட்டு போயிருவாங்களா?"

"பெரிசானவங்க வெளியே போகக்கூடாது, வீட்டிலே அடங்கி ஒடுங்கி இருக்கணும்."

கிரிஜா அடங்கி ஒடுங்கி இருக்கும் இயல்பு கொண்டவள்தான். எங்கேயும் போகமாட்டாள். போவதாக இருந்தால் அது சந்திரிகாவின் வீடுவரைக்கும்தான். அவர்கள் தோழிகள்.

"பொடி வாங்கித் தர யாரும் இல்லேன்னாலும் பரவாயில்லே. என் கண்ணு போய்வரட்டும். படிச்சிப் பெரிய ஆளாகி வா."

குறம்பியம்மா தாசனைக் கட்டித்தழுவினாள். மெலிந்து உலர்ந்த கையை அவனுடைய தோளிலிட்டு பெஞ்சின்மீது உட்கார்ந்திருந்தபோது அவளுடைய கண்கள் முற்றாக ஈரமாயின. ஓரிரண்டு ஆண்டுகள் தாசனைப் பார்க்க முடியாது என்பதை நினைத்தபோது அவளுக்கு நெஞ்சு பதைத்தது. அவன் பிறந்ததிலிருந்து ஒரு நாள்கூட அவனைப் பார்க்காமல் இருந்ததில்லை. குழந்தையாய் இருந்த காலத்தில் இரவுபகலாய் அவனை மடியிலிருத்திக் கொஞ்சியும் கதைகள் சொல்லியும் கழித்திருக்கிறாள். அவனுடைய ஒவ்வோர் அங்குல வளர்ச்சியும் அவள் அளந்து திட்டப்படுத்தியதுதான். அவன் வளர்ந்து ஆண்பிள்ளை என்றானதை அவள்மகிழ்ச்சியுடன் பார்த்திருந்தாள். அவன் முதலாமவனாக ப்ராவே தேறியபோது ஆனந்தம்கொண்டு அவள் வாய்விட்டுக் குரல்கொடுத்து இரைந்தாள்...

"படிச்சி பெரியவனாகி கோட்டும் தொப்பியும் எல்லாம் போட்டுக்கிட்டு நடக்கிறப்போ நீ பாட்டியை மறந்திடுவியா?"

யாரையும் நான் மறக்க மாட்டேன். பாட்டி, உங்களுக்கெல்லாம் வேண்டித்தான் நான் வாழ்வேன். தாசன் தனக்குள் சொல்லிக்கொண்டான். அவனை வளைத்திருந்த மெலிந்த கை இறுகிக்கொண்டிருந்தது.

"பாட்டிக்கு உன்னோட சொத்து பணம் எதுவும் வேண்டாம். சாகக் கிடக்கிறப்போ பொடி வாங்க ரெண்டு முக்காத்துட்டு தந்தாப் போதும். அதை நீ தருவியா தாசா?"

"பாட்டிக்கு நான் தினமும்பொடி வாங்கித் தர்றேன், நான் உயிரோட இருக்கிற காலம் வரைக்கும்."

குறம்பியம்மா புறங்கையினால் நனைந்த கன்னங்களைத் துடைத்துக்கொண்டாள். தாசன் ஒருதகரப்பெட்டியில் வேட்டி சட்டையெல்லாம் எடுத்து வைத்தான். கிரிஜாவும் சந்திரிகாவும் அவனுக்கு உதவினார்கள்.

கடந்த இரண்டு மூன்று நாட்களாக சந்திரிகா தாசனின் வீட்டில்தான். இன்று அதிகாலைப்பொழுதிலேயே வந்துவிட்டாள். விழித்துக் கண்ணைத் திறந்தபோது பார்க்க நேர்ந்தது அவளைத்தான். கூடத்தில் மேசைமீது சாய்ந்து நின்று அம்மாவுடன் வம்பளந்தாள். குளித்து அசலாக முடிந்த தலைமுடி. குளித்து ஈரம் காயாத கண்களில் நிறைய மை.

"தாசன்..."

வேறு எவரும் அருகில்இல்லாத சமயம்பார்த்து அவள் அறைக்குள் நுழைந்தாள். வேட்டியும் பனியனும் மட்டும் உடுத்தியிருந்த அவன் கட்டில்மீது உட்கார்ந்திருந்தான். பாண்டிச்சேரியைப் பற்றியும், படிக்கப்போகும் காலேஜைப் பற்றியும் தீவிர சிந்தனைகளாயிருந்தன மனம் முழுவதும்.

கட்டிலின் ஒரு கடைசியில் சாய்ந்து நின்றபடி அவள் அவனைப்

பார்த்தாள்.

"என்ன சந்த்ரீ?"

"நீங்க கடுதாசி போடுவீங்களா?"

"யாருக்கு?"

அவள் பதில் சொல்லாமல் தலைகுனிந்து நின்றாள். வாரி முடியாதிருந்த கூந்தலில் சூடிய சங்குப் பூக்களை அவன் பார்த்தான். நின்ற இடத்திலேயே கால் அசைந்தபோது பாதசரங்கள் கிலுங்கின.

"நீங்க போய்ட்டு எப்போ வருவீங்க?"

"தெரியலே"

"காலேஜ் மூடிட்டா வரணும்."

"பார்க்கலாம்"

கூடத்தில் யாருடைய அரவமோ கேட்டபோது அவள் வேகமாக வெளியேறிப் போனாள். இரு பாதசரங்களும் அப்போது கூட்டாகக் கிலுங்கின. அவள்போனது தாசனுக்கு துக்கத்தைத் தோற்றுவித்தது. நான் காதலை நம்பாதவனல்லவா என்று நினைத்துக்கொண்டான்.

தகரப்பெட்டியில் தேவையானவற்றையெல்லாம் அடுக்கி வைத்தாள். ஆடைகள் மொத்தத்தில் இரண்டு சட்டைகளும் வேட்டிகளும் மட்டுமே. இதுவரைக்கும் ஒரு சட்டை மட்டும்தான் உபயோகித்திருக்கிறான். வெளியில் போகும் போது மட்டுமே சட்டை அணிவான். பயணத்திற்காக வேண்டி மூப்பன்துரை ஒரு சிறிய தொகை கொடுத்தனுப்பினார். அதைக்கொண்டுதான் சட்டை வேட்டியெல்லாம் வாங்கியது.

பெட்டியின் பெரும்பகுதி புத்தகங்கள்தான். அவற்றிடையே குஞ்ஞனந்தன் மாஸ்டர் கொடுத்தனுப்பும் ஒரு நீண்ட கவர். சுப்பராமனிடம் கொடுக்கப்பட வேண்டியது அது. மய்யழியில் இன்றைய நாட்டு நிலைமைகள், சுதந்திர இயக்கம் எதிர்நோக்கும் பிரச்சனைகள், அவ்வாறான பல விஷயங்கள் அந்தக் கடிதத்தில் இருந்தன என்பதை தாசன் அறிவான்.

சுப்பராமன் பாண்டிச்சேரியின் விடுதலைக்காக முயற்சிகள் மேற்கொள்ளும் ஒரு பேராசிரியர். தாசன் குளித்து முடித்து ஆடை மாற்றினான். அப்போதுதான் குஞ்ஞிச்சிருதை அந்த வழியே வந்தாள். தாசன் போகும் விவரம் தெரிந்து வந்திருந்தாள்.

"பாண்டிச்சேரியிலிருந்து வர்றப்போ எனக்கு என்ன வாங்கிட்டு வருவே?"

"என்ன வேணும்னாலும்."

குஞ்ஞிம்மாணிக்கத்துக்குக் குபேரன்செட்டியார் காட்டிய தரத்திலான வைரங்களோ? நகைகளோ?

"எதுவும் வேண்டாம்ப்பா. படிச்சி பெரிய ஆளாகும்போது நினைப்பிலே இருந்தாப் போதும்."

குஞ்ஞிச்சிருதை வராந்தாவில் பெஞ்சின்மேல் உட்கார்ந்தாள். கௌசுவம்மா நீட்டிய செல்லத்திலிருந்து ஒரு துடைக்கான வெற்றிலை எடுத்து, சுண்ணாம்பு தடவி வாயிலிட்டாள்.

"எனக்கும் ஒரு தரம் பாண்டிச்சேரி பார்க்கணும் போலே இருக்கு. ஆண்டவன் உதவினா நானும் ஒருவேளை உனக்குப் பின்னாலேயே வருவேன், தாசா."

"பாண்டிச்சேரின்னு இல்லே, பிரான்சுக்குப் போகணும்னு

நெனச்சாலும் உனக்கென்ன குஞ்ஞிச்சிருதே? உனக்கு தாவீதுதுரையில்லே?"

"ஆண்டவன் உதவனும்னு நினைச்சா, குறம்பியம்மா, நான் பிரான்சுக்குக்கூடப் போவேன்."

"அதிலே என்ன சந்தேகம்?"

குஞ்ஞிச்சிருதை நாணினாள். ஏற்கெனவே சிவந்திருந்த அவளது உதடுகள் மேலும் சிவந்தன. வெட்கப்பட்டபோது அவளுடைய முகம் முழுவதும் சிவந்ததாக தாசனுக்குத் தோன்றியது.

"போய்ட்டு நல்லபடியா வா."

விடைபெற்றுக் கொண்டபோது குஞ்ஞிச்சிருதை தாசனை ஆசீர்வதித்தாள். அவன் முதன்முதலாகப் பள்ளிக்கூடம் போன நாளும் அவள்வந்து அவனை ஆசீர்வதிக்க நேர்ந்தது. மிட்டாய் வாங்குவதற்காக இரண்டணா தரவும் செய்தாள். தாசன் இப்போதும் அதைத் தெளிவாக நினைத்துப்பார்த்தான்.

தெருவில் ஓர் அன்னத்தைப் போல நடந்து போகும் அவளை தாசன் பார்த்தபடி நின்றான். காலம் கடந்து கொண்டுதான் இருந்தது. குஞ்ஞிச்சிருதையிடம் மட்டும் மாற்றம் இல்லை. என்றைக்கும் அவளுக்குப் பதினாறு வயதுதான்.

கேளனின் குதிரைவண்டி வீட்டிற்கு முன்பாக வந்து நின்றது.

தாசன் பெட்டியைக் கையிலெடுத்தான். அவன் ஒவ்வொருவரிடமும் விடைபெற்றுக்கொண்டான். கௌசுவம்மா சோகத்தில் தன்வசம் இழந்திருந்தாள். கண்ணுக்கெட்டாத ஊருக்குப் போகிறான். ஒருவேளை காய்ச்சல் வந்து படுக்க நேர்ந்தால் யார் அங்கே இருக்கிறார்கள் கொஞ்சம் கஞ்சி காய்ச்சிக் கொடுக்க? யார்இருக்கிறார்கள் என்மகனைப் பார்த்துக்கொள்ள?

"கௌசு, சும்மா அழாம இரு. ரொம்ப தூரம் போறதாக்கும். கண்ணீரும் கம்பலையுமாவா வழியனுப்பி வைக்கிறது?"

ரைட்டர் கோபித்துக்கொண்டார். கௌசுவம்மா மேல்முண்டுத் தலைப்பினால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள்.

"ஒண்ணும் மறக்கலேல்ல?"

"மறக்கலேப்பா."

"அப்போ இறங்கி வா."

இடது கால் வைத்துத்தான் இறங்கினான் — அவனறியாமலே. முதன்முதலாகப் பள்ளிக்கூடம் போன நாளன்றும் இப்படித்தான். ஏதோ அனர்த்தத்தின் சூசகங்கள்.

ரைட்டரும் தாசனும் குதிரைவண்டியில் ஏறி உட்கார்ந்தார்கள். வாசலில் எல்லோரும் கூட்டமாக நின்றார்கள். கண் துடைத்துக்கொள்ளும் அம்மாவும் பாட்டியும். துக்கம் இருந்தபோதிலும் அதை மூடி மறைத்துச் சிரிக்கும் கிரிஜா. அவளோடு நெருக்கமாக வாடிய முகத்துடன் நிற்கும் சந்திரிகா. தலைகுனிந்துதான் நின்றிருந்தாள் என்ற போதிலும் அவளுடைய கண்கள் குதிரைவண்டியில்தான்.

குதிரைவண்டி ஒரு முனகலுடன் முன்னோக்கிச் சென்றது.

பாண்டிச்சேரி தொலைவிலிருக்கிறது. கண்ணுக்கெட்டாத தொலைவு. நான் உங்களிடமிருந்து விடைபெற்றுக்கொள்கிறேன்.

# 12

அந்த்ருப்போலீஸ் விடிகாலையிலேயே எழுந்திருந்து பட்டியும் தொப்பியுமெல்லாம் அணிந்தார். ஐந்தரைக்கு மூப்பன்துரையின் பங்களாவில் டியூட்டி இருந்தது.

இருட்டு இன்னும் மறையவில்லை. தேவாலய கோபுரமும் அதன் மேலிருந்த சிலுவையும் பனியில் மூடிக்கிடந்தன. ந்யூ த் றஸிதாம்ஸின் அருகில் நரைத்த சமுத்திரம். சமுத்திரத்திற்குக் காவல் நிற்கும் சவுக்கு மரங்கள் வெளிறியிருந்தன. தொலைவில் பாலம் கடந்து நிழல்கள் போன்று மரம்வெட்டிகள் வந்து கொண்டிருந்தார்கள் — தோள்களில் மரக்கட்டைகளுடன்.

பங்களாவின் வாசலை அடைந்த அந்த்ருப்போலீஸ் திடுக்கிட்டு நின்றார்.

லிபேர்த்தே . .

சுதந்திரம் . . .

மதில்மீது ஒரு பெரிய போஸ்டர். சிவப்பு மையினால் அழகாக எழுதப்பட்டிருந்த பெரியதொரு சுவரொட்டி! முதலில் அந்த்ருப்போலீசுக்கு விவரம் புரியவில்லை. புரிந்து கொண்டபோது அவருக்குக் கோபம் வந்தது. சுதந்திரம் என்று சொல்லிக்கொண்டு சிலபேர் திரிகிறார்கள் — அந்த்ருப்பேலீசுக்கு அது தெரியும். ஆனால், இப்படியொரு தெனாவட்டா அவர்களுக்கு தன்னிடமே காட்டுவதற்கு! கோபத்தினால் அவருடைய தாடை எலும்புகள் விறைத்தன.

பங்களாவின் முன்பக்கம் ஒரு புறத்தில் போலீஸ்காரர் நிற்பதற்கென்று ஒருகாவல் அறை உண்டு. அதில் துப்பாக்கியைப் பிடித்தபடி அயர்ந்து மயங்கிய நிலையில் இருந்தார் பழனிப்போலீஸ். அந்த்ருவின் காலடி ஓசை கேட்டு அவர் துள்ளிஎழுந்தார்.

“பொய்யி பொய்யி. . .”

பழனி நம்பவில்லை. ஆனால் போஸ்டரை நேரில் பார்த்தபோது கடற்காற்றிலும் அவருக்கு வியர்த்தது. இரவு முழுவதும் அவர் காவல் காத்து நின்றிருந்தார். அவரை மூக்கறுத்தது போல ஏதோ ஒரு தெம்மாடி இதைச் செய்திருக்கிறான். கொம்மீஸாருடைய காதுகளுக்கு விவரம் எட்டினால் தொப்பி போனதுதான்.

“அந்த்ரு ஸோவே. . . மீவா?”(அந்த்ரு என்னைக் காப்பாத்துவீங்களா?)

பழனிப்போலீஸ் கெஞ்சினார். அவருடைய நரைத்த கப்படா மீசை கிடந்து துடித்தது.

“பொண்டாட்டி இருக்குது. குழந்தைங்க இருக்குது. என்னைக் காப்பாத்துங்க மோம்ஷேர் அந்த்ரு.”

யாரும் பார்க்காமல் சுவரொட்டியை அகற்றிவிட்டால் போதும், பழனி காப்பாற்றப்பட்டு விடுவார். ஆனால் அந்த்ரு ஒத்துழைக்கவில்லை. நினைக்க நினைக்க அவருக்குக் கோபம் அதிகரித்தது. யாராயிருந்தாலும் சரி, இந்த அடாவடித்தனம் செய்த தெம்மாடிக்கு ஒரு பாடம் கற்றுக்கொடுக்க வேண்டும். பழனிப்போலீசின் வேண்டுகோளை ஏற்காமல் அவர் புகாதியே வெங்கய்யாவின் வீட்டிற்கு நடந்தார்.

புகாதியே போலீஸ்ஸ்டேஷன் மாடியிலேயே குடியிருந்தார். கொட்டாவி விட்டுக்கொண்டு எழுந்து வந்த வெங்கய்யாவிடம் அந்த்ரு

விவரம் தெரிவித்தார். புகாதியேவின் உப்பிய இரத்தம் கொதித்தது.

"நடய்யா..."

தன்னுடைய கைத்துப்பாக்கியை எடுத்து இடுப்பில் செருகிக்கொண்டு வெங்கய்யா ஜீப்பில் குதித்து ஏறினார். தொடர்ந்து அந்த்ருப்போலீசும். புழுதியைக் கிளப்பிக் கொண்டு ர்யூ த்லா ப்ரிஸோன் சாலையின் மேலாகப் படர்ந்திருந்த பனிமூட்டத்தைச் சிதைத்து அரைத்துக்கொண்டு ஜீப் கொம்மீஸார் லப்போர்த்துரையின் பங்களா நோக்கிப் பறந்தது.

"எங்கே போறாங்க காவக்காரங்க இந்தக் காலங்காத்தால?"

சத்திரத்துத் திண்ணையில் உட்கார்ந்து பேன் எடுத்துக் கொன்று கொண்டிருந்த கல்லு ஜீப்பின் ஓசை கேட்டு நிமிர்ந்தாள். அவளருகில் சுருண்டு படுத்திருந்த யானைக்காலன் அந்தோனி தலைதூக்கிப் பார்த்தான்.

அந்தக் காலத்தில் மய்யழியில் போலீஸ்காரர்களில் பெரும்பகுதியினர் பாண்டிச்சேரியிலிருந்தும் காரைக்காலிலிருந்தும் வந்த தமிழர்களாயிருந்தார்கள். அவர்கள் பொதுவாக மடையர்களாகவும் மண்டை காய்ந்தவர்களாகவும் இருந்தார்கள். பொழுது புலரும்போதே குடிக்கப் போய்விடுவார்கள். பாட்டுப் பாடியும் பெண்கள் பின்னே சுற்றித் திரிந்தும் நேரத்தைக் கொல்வார்கள்.

ப்ருகாதியே வெங்கய்யா அந்த வகையைச் சேர்ந்தவராக இல்லை. அவர்புலியைப் போல பயங்கரமாயிருந்தார்.

"அவனா, அவ ர ஒரு எமனாச்சே."

கல்லு சொன்னாள்.

ப்ருகாதியேவின் அதே சுபாவம்தான் கொம்மீஸார் லப்போர்த்துரைக்கும். அவர் கப்பல் இறங்கி வந்த நாளன்றே ஒரு விரும்பத்தகாத நிகழ்ச்சி நடந்துவிட்டது.

யானைக்காலன் அந்தோனிக்கு ஒருகெட்ட பழக்கமுண்டு. சத்திரத்தையடுத்து சர்க்கார் கக்கூஸ் இருந்தபோதும் யானைக்காலன் அதைப் பயன்படுத்துவதில்லை. லப்போர்த்துரை கப்பல் இறங்கிய அன்று வெங்கய்யாவுடன் மய்யழியைச் சுற்றிப்பார்க்கக் கிளம்பினார். துரை புனித கன்னிமேரியின் மனோகரமான தேவாலயத்தைப்பார்த்தார். மெறியையும் பலே த் ம்யூ ஸ்தீச்ஸையும் பார்த்தார். கடைசியில்அவர் ர்யூ த் லா ரலிதாம்ஸ் சென்றார். இடதுபுறம் வரிசையாக அமைந்த பங்களாக்கள். வலதுபுறம் சமுத்திரத்தை நோக்கி ஓடிக் கலக்கும் மய்யழி ஆறு. எதிரில் சோலை மரங்களுக்கும பூந்தோட்டங்களுக்கும் நடுவில் மூப்பன்துரையின் பங்களா. பாலத்தையொட்டி நிறைய சிவந்த மலர்கள் பூத்திருந்த கோய்யேத்தி மரங்கள்.

மய்யழியின் எழில் துரையைக் கவர்ந்திழுத்தது. பாலத்தின் வழியே நடந்தபோது காற்றடித்து சிவந்த மலர்கள் தலையில் பொலபொலவென்று விழுந்துகொண்டிருந்தன.

"ஷார்மாம் ஷார்மாம். . . ."

கடல், ஆறு, பூக்கள், இளங்காற்று ஆகியவற்றின் மயக்கத்தில் மூழ்கி நடந்து கொண்டிருந்தபோது லப்போர்த் துரை ஒருகாட்சியைப் பார்த்தார் ஆற்றங்கரையில் ஒரு பீடியைப் புகைத்துக்கொண்டு குந்தி உட்கார்ந்திருந்த யானைக்கால் அந்தோனி.

துரையின் நெற்றி சுருங்கியது. லமார்த்தினின் கதைகளின், மனேயின் பெயின்ட்டிங்குகளின் நாட்டிலிருந்து வரும் துரையினால் அந்த அசிங்கத்தைப் பார்த்துக்கொண்டிருக்க முடியவில்லை. என்ன நடந்ததென்று வெங்கய்யாவுக்குப் புரிவதற்கு முன்பாகவே துரையின் கால் அந்தோனிக்கு நேராக உயர்ந்திருந்தது.

ஓர் அவலக்குரலுடன் யானைக்காலன் பதறி எழுந்தான். யானைக்கால்களை இழுத்துக்கொண்டு அந்தோனி ஓடினான். கொம்மீஸாரின் கட்டளைப்படி போலீஸ்காரர் அந்தோனியைப் பாலத்தைத்தாண்டி விரட்டியடித்தார்.

ஆனால், யானைக்காலன் எங்கே போவான்? அவன் பிறந்ததும் வளர்ந்ததும் மய்யழியில்தான். அவனுடைய ஊர்தான் அது. அன்றைக்கே அந்தோனி பாலம் தாண்டி மய்யழிக்குத் திரும்பினான்.

லப்போர்த் துரையின் கண்களில் படாமல் இப்போது ஒளிந்து நடமாடுகிறான்.

கொம்மீஸாரின் ஜீப் மூப்பன்சாரின் பங்களாவுக்கு முன்பாக வந்து நின்றது. சுவர்மீது ஒட்டியிருந்த போஸ்டரை அவர் பார்த்தார். வரவிருக்கும் புயலின் சுவரொட்டி! துரை அதைப் பிய்த்தெடுத்து ஆயிரம்துண்டுகளாகக்கிழித்து அரபிக்கடலில் விட்டெறிந்தார்.

போஸ்ட்டரை ஒட்டிய அடாவடிக்காரனைத் தேடிக்கொண்டு ப்ருகாதியே வெங்கய்யாவும் சார்ந்தவர்களும் சாலையில் இறங்கினார்கள். அந்தக் காலத்தில் மய்யழியின் மக்களுக்கு போலீஸ்காரர்களைவிட அடியாட்களிடம்தான் பயம். கண்ணில் இரத்தமில்லாதவர்கள் அவர்கள், குறிப்பாக அச்சு.

போஸ்ட்டர் விவகாரம் ஊரெங்கும் பேசப்படுவதான ஒரு விஷயமாயிற்று.

"நான் சொல்லட்டுமா யாருன்னு?"

அச்சுவுக்குக் கள் பரிமாறிய உன்னிநாயர் வினவினார்.

"யாரு?"

"அந்தக் குஞ்ஞனந்தன் சாரைத் தவிர வேறே யாரு?"

அச்சுவுக்கு மாஸ்டரைப் பற்றிச் சந்தேகம் ஏற்பட்டிருந்தது. ஆனால், இப்போதெல்லாம் எழுந்து நடமாடக்கூடத் தெம்பில்லாதபடி அவர் படுக்கையில் கிடந்தார். வெளியில் வருவதே இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

"எந்திரிச்சி நடக்க சீவனில்லாத அவரா?"

"அவர் இல்லேன்னா அவரோட கூட்டாளிங்க, இல்லாட்டி யாரு?"

அந்த்ருப்போலீஸ் சொன்னார். அச்சு மெல்லிதாக உறுமினான். அந்த்ரு சொன்னது சரிதான். அச்சுவுக்கு அது தெரியும். ஊரில் கலகம் உண்டாக்கப் பார்ப்பது மாஸ்டரும் அவருடைய கூட்டாளிகளும்தான். அவர்களில் யாராவதுதான் போஸ்ட்டர் ஒட்டியிருக்க வேண்டும், நிச்சயம்.

கிளாஸ்களைக் காலிசெய்து அச்சுவும் அந்த்ருப்போலீசும் எழுந்தார்கள். அவர்கள் வெளியேறியபோது உன்னிநாயர் சொன்னார்.

"அச்சு, யாருன்னு தெரிஞ்சால் அவனோட எலும்பை சூப்பாக்கணும், தெரிஞ்சதா?"

அச்சு அமர்த்தலாக உறுமினான். அவன் மிகவும் குறைவாகத்தான்

பேசுவான். வெளிறிச் சிவந்த முகம் எப்போதும் இறுக்கமாயிருக்கும். எப்போதும் சிவந்திருக்கும் கண்கள். வேட்டியை மடித்துக் கட்டி, தலை நிமிர்த்தி நடக்கும்போது காலுக்குக் கீழே பூமி இறங்குவது போலத் தோன்றும்.

அச்சுவும் அந்த்ருப்போலீசும் குஞ்ஞனந்தன் மாஸ்டரின் வீட்டை நோக்கி நடந்தார்கள். இதற்குள்ளாக போஸ்ட்டர் விவகாரம் மேலிடத்தை எட்டியிருந்தது. கொம்மீஸாரும் ஸெக்ரத்தேரும் பிறரும் அதனுடைய அரசியல் பின்னணியைக் குறித்துத்தான் சிந்தித்தார்கள். அச்சுவும் அந்த்ருவும் அதில் அரசியலைப் பார்க்கவில்லை. அவர்களுடைய பார்வையில் அது ஓர் அடாத செயல். மய்யழியில் போலீஸ்காரர்களுக்கும் அடியாட்களுக்கும் சவால் விடும் அடாத செயல்! அதை நினைத்தபோது அச்சுவின் இரத்தம்கொதித்தது.

போலீஸ்காரர்களின், அடியாட்களின் பார்வையில் அவர்கள் இன்று குறி வைக்கப்பட்டவர்கள். மாஸ்டருக்கும் பப்பனுக்கும் அது தெரிந்ததுதான். லீலா சொல்வதுண்டு.

"யோசிக்கணும் அனந்தா, அந்த அச்சு கண்ணிலே ரத்தமில்லாதவனாக்கும்."

"இப்படி சாகக் கிடக்கிற என்னை அவன் என்ன செஞ்சிருவான்?"

போலீஸ்காரர்களையும் அடியாட்களையும் உசுப்பிவிடும் பலவற்றை அவர் செய்திருக்கிறார். வெளிமுற்றத்தில் மாட்டியிருக்கும் மார்க்ஸ், லெனின் ஆகியோரின் போட்டோக்களே அதற்குப் போதும். போஸ்ட்டர் விவகாரம் அவரை இக்கட்டில் மாட்டிவிடத்தான் செய்யும்.

"சார், உங்களைப் பத்தித்தான் எங்களுக்கு பயம்."

"என்னைப் போலுள்ள நோயாளிகளல்ல, பப்பா, இந்த நாட்டுக்குத் தேவை. உன்னையும் உத்தமனையும் போலுள்ள இளைஞர்கள்தான். என்னாலே இனிமே என்ன செய்ய முடியும்? இன்னிக்கா நாளைக்கான்னு புலம்பிக்கிட்டு கிடக்கிறவன்...

"சார் இப்படியெல்லாம் பேசக்கூடாது. நீங்க இனியும் ரொம்பக் காலம் வாழ்ந்திருப்பீங்க."

மாஸ்டர் பேசியதைக்கேட்டு மலையன் உத்தமனின் முகம் வாடியது. மந்திரவாதியும் விஷக்கடி வைத்தியனுமான மலையன் குறம்பனின் மகன். பாம்பாக வந்த குபேரன்செட்டியாரிடமிருந்து குஞ்ஞிம்மாணிக்கத்தைக் காப்பாற்ற முயன்ற மலையன் குஞ்ஞுராமன் அவனுடைய தாத்தா.

மலையன் உத்தமன் கூர் கோம்பலமாந்தேறில் படித்துக் கொண்டிருந்தான். அவனுக்கும் ஓரளவு மந்திரவாதம் தெரியும். விஷம் இறக்குவதும் உண்டு. இதைக்குறித்து பப்பன் விவாதம் செய்வான்.

"நீ ஒரு கம்யூனிஸ்ட்டா?"

"சந்தேகமென்ன?"

"கம்யூனிஸ்ட்டாக இருந்தா முதல்லே மார்க்ஸிஸ்ட்டாகணும். மார்க்ஸிஸ்ட்டாகணும்னா மெட்டீரியலிஸ்டாகணும். நீ மெட்டீரியலிஸ்ட்டா?"

"சந்தேகமென்ன?"

உத்தமனின் நெற்றி சுருங்கியது. பப்பன் அவனை உறுத்துப் பார்த்தான்.

"மெட்டீரியலிஸமும் மந்திரவாதமும் ஒண்ணுக்கொண்ணு ஒத்துப்போகாது."

அப்போது மாஸ்டர் இடைமறித்தார்.

"ஆனாலும் பப்பா, உத்தமனைப் பொறுத்தவரை மந்திரவாதம் ஒரு தொழில். நம்பிக்கையல்ல. அதைப் புரிஞ்சிக்கடணும்."

ஆனால் மலையன் உத்தமனுக்குக் குலத்தொழிலில் நம்பிக்கையில்லை. தலைமுறைகளாக அவனுடைய குடும்பத்தில் விஷக்கடி வைத்தியர்களும் மந்திரவாதிகளும் இருந்தார்கள். தலைமுறைகளாக அவர்கள்தான் மீத்தம்பலத்தில் திருவிழாக் கொண்டாட்டங்களைத் தொடங்கி வைப்பது. அதெல்லாம் வயிற்றுப் பிழைப்புக்காகத்தான். உத்தமனின் பார்வையில்.

மாஸ்டரும் பப்பனும் மற்றவர்களும் பேசிக்கொண்டிருந்தபோது முற்றத்திலிருந்து ஒரு கேள்வி.

"இங்கே யாரும் இல்லையா?"

அச்சுவின் குரல் அவர்களுக்கெல்லாம் அடையாளம் தெரியும். உத்தமன் செய்வதறியாமல் திகைத்தான். மாஸ்டரும் பப்பனும் அச்சுவுக்காகக் காத்திருந்தார்கள்—அவன் வருவானென்று அவர்களுக்குத் தெரியும்.

அச்சு மாடிப்படி ஏறினான். பின்னாலேயே அந்த்ருவும்.

"இங்கே யாரும் இல்லே?"

அச்சு மறுபடியும் கேட்டான். லீலா வெளியே வரவில்லை. அச்சுவுக்கு எதிரே வந்து நிற்க மய்யழியில் எந்தப் பெண்ணுக்குத்தான் தைரியம் வரும்?

"என்ன அச்சு விசேஷம்?"

மாஸ்டர் வேட்டியை சரிப்படுத்திக்கொண்டு வெளியே வந்தார். பப்பனும் உத்தமனும் வெளியே வரவில்லை. பப்பன்சட்டைக் கைகளை மேலேற்றி மடக்கினான். அவன் தயாராக இருந்தான். சச்சரவென்று அச்சு ஆரம்பித்தால் ஒருகை பார்த்துக்கொள்ளலாம்.

லீலா கதவுக்குப் பின்னால் மறைந்து நின்றாள். மனம் பதறியது. மௌனமாக அவள் தெய்வத்தை வேண்டிக்கொண்டாள்.

"காரணம்தெரியுமா நாங்க வந்ததுக்கு?"

அச்சு மாஸ்டரை கீழிருந்து மேலே வரை முறைத்துப்பார்த்தான். நரைத்த ரோமங்களும் குழிந்துபோன கண்களும். வெளிறி வெளுத்த உதடுகள். மரணப் படுக்கையிலிருந்து எழுந்து வந்தது போலிருந்தது. ஆனாலும் அச்சுவின் மனது இளகவில்லை.

"சார், உங்ககிட்ட ஒரு விவரம் கேக்கணும். உண்மையைச் சொல்லணும்."

"என்ன விவரம் அச்சு?"

"மூப்பன்துரை வீட்டிலே யாரு நோட்டீஸ் ஒட்டினது?"

"எனக்குத் தெரியாது."

"சார், உண்மையைச் சொல்றதுதான் உங்களுக்கு நல்லது. உங்களோட இந்த விளையாட்டு நல்லதுக்கில்லே. அச்சுவை உங்களுக்குப் புரியலே. உடம்பு சரியில்லேன்னோ, மார்வலின்னோ அப்படியெல்லாம் நான் பார்க்க மாட்டேன். அடிச்சிப்பல்லெல்லாம் பேத்திருவேன்."

"மூப்பனோட வீட்டிலே நோட்டீஸ் ஒட்டினதை நீ யாரு

கேக்கிறதுக்கு? உனக்கு என்ன அதிகாரம் இருக்கு, அச்சு? யாரு நோட்டீஸ் ஒட்டினாங்கன்னு எனக்குத் தெரியாது. தெரிஞ்சாலும் உன்கிட்ட நான் சொல்லவும் மாட்டேன். கேட்க வேண்டியவங்க வந்துகேட்டா நான் சொல்லிக்கிடுறேன்—வெளியே போடா—"மாஸ்டர் வேட்டியைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு புயல்காற்றைப் போல உள்ளே போனார். கோபத்தினால் அவருக்கு மூச்சு முட்டிற்று. "...பொறுக்கி... கேக்க வந்திருக்கான்!"

அவர் கட்டிலுக்குச் சென்று படுத்தார்.

அவமானப்பட்ட அச்சு உருவிய கத்தியின் பிடியைப் பற்றிப்பிடித்துக் கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் ஒரு நிமிடம் நின்றான். பின்பு ஏதோ முணுமுணுத்துக்கொண்டு வெளியே போனான். பின்னாலேயே அந்த்ருவும்.

"கடவுளே!..."

லீலாவுக்கு மூச்சு சீராயிற்று

"பாதி செத்த என்னை அவன் ஒன்னும் பண்ணிட முடியாது. எனக்கு அது தெரியும்."

மாஸ்டர் யாருடனென்றில்லாது பேசினார். லீலா மாஸ்டரின் அருகில் கட்டிலில் உட்கார்ந்தாள். தம்பியின் மார்பைத் தடவிக்கொடுத்துக்கொண்டு அவள் கேட்டாள்.

"என்கிட்ட சொல்லேன், யார் போஸ்டர் ஒட்டினது?"

"அவன்தான், அங்கே நிக்கிறவன்தான்."

மாஸ்டர் பப்பனுக்கு நேராகச் சுட்டிக்காட்டினார். வாயில் கடித்துப்பிடித்தபடி ஒரு பீடியுடன் நின்றிருந்த அவன் புன்னகை புரிந்தான். லீலா அதிசயத்துடன் அவனைப் பார்த்தாள்.

"நீ இவ்வளவு தைரியசாலியா?"

"தேவைப்பட்டா மூப்பன்துரையோட முதுகை ஒடிப்பேன் நான்."

அவன் மீண்டும் சிரித்தான்.

# 13

மலபாரிலிருந்தும் திருவிதாங்கூரிலிருந்தும் தலைமறைவாகும் அரசியல்வாதிகள், கொலைபாதகர்கள், திருடர்கள் முதலியோர் மய்யழிக்கு வந்து அபயம் தேடுவார்கள். யூனியனைச் சேர்ந்த போலீசாருக்கு அங்கே சென்றவர்களைப் பிடிக்க முடியாது. அவ்வாறு மய்யழிக்கு வந்து அபயம் தேடிய போக்கிரிகளில் ஒருவன்தான் அச்சு. அவன் எந்த ஊரைச் சேர்ந்தவனென்று யாருக்கும், மய்யழி மக்களின் வாழ்கை நாடகங்களின் நேரடி சாட்சியான குறம்பியம்மாவுக்குக்கூட, தெரியாது.

ஒரு நாள் உச்சிப்பகலை அடுத்த நேரம். குறம்பியம்மா வராந்தாவில் உட்கார்ந்து கால் நீட்டிக்கொண்டு பொடிபோட்டுக்கொண்டிருந்தாள். அடுக்களையில் கௌசு சமையல் செய்துகொண்டிருந்த அவசரம். ரைட்டர் கோர்ட்டிலிருந்து வந்திருக்கவில்லை.

அப்போதுதான் ஓர் இளவட்டம் அந்த வழியாக வந்தான். நல்ல பருமன். குள்ளமான உடல்வாகு. நல்ல நிறமும்கூட, வேட்டியை முழங்காலுக்கு மேல் மடித்துக் கட்டியிருந்தான்.

"கௌசு, அவன் யாரு?"

மய்யழியில் ஒவ்வொரு குழந்தையின் வாழ்க்கை வரலாறும் மனப்பாடமான குறும்பியம்மா கேட்டாள்.

"எனக்குத் தெரியலேம்மா, வேறே ஊர்க்காரனாட்டம் தெரியுது."

அடுக்களைத் கதவின் புகைபடிந்த கம்பிகளினூடே உற்றுப் பார்த்துவிட்டு கௌசு சொன்னாள். குறும்பியம்மா கையை கண்ணுக்கு மறைவாக வைத்துக்கொண்டு தெரு வழியே பார்த்துக்கொண்டிருந்தாள்.

"அடியே—அவன் இங்கேல்ல வந்துக்கிட்டிருக்கான்."

முன்பின் தெரியாதவன் முற்றத்துப் படியேறி வந்தான். குறும்பியம்மா விவரம் புரியாமல் எழுந்து நின்றாள். கௌசு ஆர்வத்துடன் பார்த்தபடி நின்றிருந்தாள். அவனுடைய கையில் உருவிப் பிடித்த பேனாக்கத்தியைக் கண்டபோது அவள் பதறிப்போனாள்.

"நீ யாரு?"

"அச்சு."

"எந்த அச்சு?"

"அது இப்பம் தெரிய வேண்டாம். . கெழவி."

அச்சு பெஞ்சை எடுத்துப்போட்டு அதன்மேல் உட்கார்ந்தான். சொன்னதைக் கேட்டு குறும்பியம்மா திணறினாள். அதிகார தோரணையில் அவன் உட்கார்ந்திருந்தது அவளுக்கெதுவும் பிடிபடவில்லை.

"சோறிருந்தா கொஞ்சம் கொண்டு வா"

"நீ யாருன்னு சொல்லலையே?"

"நான் யாராகவாவது இருக்கட்டும். சோறு இருக்கான்னு கேட்டேன்"

"இது நல்ல கதை! வழியிலே போறவங்களுக்கெல்லாம் சோறு வடிச்சிக் கொட்டுற சத்திரமா இது?"

"பேசுறதை கவனிச்சிப் பேசணும். கெழவீன்னுகூட நான் பார்க்கமாட்டேன்."

"கவனிச்சிப் பேச வேண்டியது நீதான். கெழவியாம்—யாருடா கெழவி?"

குறும்பியம்மாவின் நாசிகள் துடித்தன. அவளுக்கு ரோஷம் பொத்துக்கொண்டு வந்தது. எங்கே இருந்தோ உள்ளே நுழைந்தவன். என்ன அடாவடித்தனம் அவனுடைய விவகாரம்.!

"அம்மா, எதுவும் பேசாதீங்க!"

கௌசு சைகை காட்டினாள். அவளுடைய குரலைக் கேட்டு அச்சு அந்தப்பக்கம் பார்த்தான். ரௌத்தரபீமனின் பார்வை.

"கை கழுவுங்க."

கௌசு குவளையில் தண்ணீர் கொண்டுவந்து தடுப்புச்சுவர் மேல் வைத்தாள். அச்சு கையும் முகமும் கழுவிக்கொண்டு உள்ளே போனான். கௌசு கூடத்தில் பலகை போட்டிருந்தாள். எதிரில் தட்டு.

அச்சு மூன்று பேருக்கான சோற்றைத் தின்றான். ஏப்பம் விட்டுக்கொண்டு எழுந்து சென்று கை கழுவினான். அதற்குப் பிறகு இடுப்புவேட்டியை அவிழ்த்து பெஞ்சின்மீது விரித்து அதன்மேல் படுத்தான். வேட்டிக்குக் கீழே சிவப்பு சீட்டித்துணியில் தைத்த நிக்கர்.

தாமுரைட்டர் வந்தபோது அச்சு தூங்கிக்கொண்டிருந்தான். வாய் பாதி திறந்தபடி குறட்டை விட்டது தெருவில் கேட்டது.

அச்சுவைப் பற்றி ரைட்டர் ஏற்கெனவே கேள்விப்பட்டிருந்தார். அவர் எதுவும் பேசாமல் உள்ளே போனார்.

"நீ என்ன பேசாமப் போறே! அடிச்சித் தொரத்து அந்தத் தெம்மாடியை இங்கேயிருந்து."

குறம்பியம்மாவால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. அடாவடித்தனத்துக்கும் ஓர் அளவு கிடையாதா?

"அவனை யாராலும் அடிச்சித் துரத்த முடியாது."

"யாருடா தாமு அவன்?"

"எங்கேயோ இருந்து வந்திருக்கான். சொல்லி என்ன செய்ய — போலீஸ்காரங்களோடகூட சகவாசம். அவனை யாரும் எதுவும் செய்ய முடியலே. நீ பேசாம ஒரு மூலையில போய் உக்காரு."

அரவம் கேட்டு அச்சு எழுந்து விடுவானோ என்றிருந்தது. ரைட்டரின் பயம். அச்சுவை மய்யழியில் பார்க்கத் தொடங்கி இரண்டு மூன்று நாட்களே ஆகின்றன. ஆனாலும் போலீஸ்காரர்களுக்கும் அடியாட்களுக்கும் உற்ற தோழனாகியிருந்தான் அவன். முந்தின நாள் நான்காம் நம்பர் கள்ளுக்கடையில் அச்சு அடிதடியில் இறங்கினான். சாணைபிடித்த கத்தியுடன்தான் திரிந்தான். இதெல்லாம் ரைட்டருக்குத் தெரியும்.

"இங்கே யாரு குடித்தனம்?"

அச்சு கண்திறந்தான். அவன்வேட்டியை எடுத்து இடுப்பில் சுற்றிக்கொண்டான்.

"நான்தான், தாமுரைட்டர்."

ரைட்டர் பவ்யமாகத்தெரிவித்தார்.

"என்னைத் தெரியுமா?"

"தெரியும்."

"தெரிஞ்சிருந்தாலும் கேட்டுக்கோ — அச்சு. நல்லபடியா நடந்துக்கிட்டா நான் நல்லவன். மாறா நடந்தா. . ."

அச்சு தன்னுடைய கத்தியை ஒரு முறை மேலலேஎறிந்து பிடித்தான், அவன் வெளியேறிப் போனான்.

அன்றைக்கே ஒரு கற்பழிப்பு நடந்தது. மய்யழி மக்களைப் பொறுத்தவரை அது ஒரு பெரிய செய்தியல்ல. ஆனால், இந்தத் தடவை அச்சுதான் அதைச் செய்தது. அந்தக் காரணத்தினால் கள்ளுக்கடைகளிலும் சத்திரங்களிலும் எங்கெங்கும் அது பேச்சுக்குரியதாயிற்று.

பனையேறி குமாரன் வீட்டில் இல்லாத சமயம் பார்த்து அச்சு அங்கே சென்றான். குமாரனின் மகள் கமலா மட்டுமே வீட்டிலிருந்தாள். அச்சு அவளை கீழிருந்து மேல்வரை உற்றுப்பார்த்தான். சட்டென்று அவன் தன்னை மறந்தான். அவனுடைய கண்களில் யுகங்களின் ஆண்மைத் தாகம் பற்றி எரிந்தது. பள்ளத்தாக்குகளின் வழியாக மலைமுகடுகள் நோக்கித் தாவிப்பற்றி மேலேறும் மலையேறியானான். யுத்த களத்தில் இறங்கும் போர்வீரன். ஆண்மை அதனுடைய உச்சநிலையை அடையும் கணத்தில் யுத்தகளத்துக் குதிரையைப்போல அவன் மூச்சிரைத்தான்.

பனை சீவும் கத்தியுடன் பழிவாங்க வந்த குமாரனை அடித்து வீழ்த்தினான். சமுத்திரத்தின் பக்கம் முதுகு திரும்பி நின்ற அச்சு

உரத்துக் கூவினான்.

"இந்த ஊர்லே இருக்கிற எல்லாப்பொண்ணுங்களையும் கற்பழிப்பேன். எவன்டா கேள்வி கேக்குறது? வா... "

யாரும் கேள்வி கேட்க வரவில்லை. சாராயக்கடையிலிருந்து வெளியே வந்த ஒரு கும்பல் போலீசார் கைதட்டிச் சிரித்தார்கள்.

"அவன்தான் ஆம்பிளை."

சத்திரத்து வராந்தாவில் உட்கார்ந்து பேன் பார்த்துக்கொண்டிருந்த கல்லு வெளிப்படையாகச் சொன்னாள்.

அச்சுவுக்கு வீடு கிடையாது. குடும்பமும் கிடையாது. சாணை தீட்டிய கத்தியுடன் திரிந்தான். பசிக்கும்போது எதிர்ப்படும் வீட்டுக்குள் சென்று கட்டளையிடுவான்.

"சோறு போடு."

போடாமலிருக்க யாருக்கு இருக்கிறது தைரியம்?

தூக்கம் வரும்போது முதலில் தெரியும் வீட்டிற்குள் நுழைவான். திண்ணையில் பெஞ்சோ சாய்வுநாற்காலியோ இருந்தால் அதன்மீது படுத்துக்கொள்வான். இல்லாவிட்டால் ஆணையிடுவான்.

"ஒரு பாயும் தலகாணியும் இங்கே கொண்டு வா. . . "

எந்த வீடென்றோ, யாருடைய வீடென்றோ பார்ப்பதில்லை. ரைட்டருடைய வீட்டில் எத்தனையோ தடவை அவன் சாப்பிட்டிருக்கிறான். எத்தனையோ இரவுகளில் கதவைத்தட்டிக் கூப்பிட்டிருக்கிறான். கூப்பிடுவதைக்கேட்டு யாரும் எதுவும் பேசுவதில்லை. கௌசுவம்மா ஒரு பாயும் தலையணையும் எடுத்துக் கொடுப்பாள்.

அவ்வாறு அச்சு மய்யழியில் நிரந்தரமாகத் தங்கிவிட்டான். படிப்படியாக அவனுக்கு அங்கே வேர் முளைத்தது. குறுகிய காலத்திற்குள் அச்சு மய்யழியின் விதியின் ஒரு பாகமாக மாற நேர்ந்தது.

காலம் மய்யழியில் அரங்கேற்றிய நாடகத்தில் ஒரு முக்கிய நடிகனாக இருந்தான் அச்சு.

# 14

மலையன் குறம்பன் இறந்துவிட்டான்.

இறக்கும்போது எழுபது வயது முடிந்திருந்தது. கோயில் திருவிழாவில் வேடம் புனைந்து சாமியாட்டம் ஆடுவதான திற கட்டுவதும், மந்திரித்துக் கொடுப்பதும் குறம்பனின் பன்னிரண்டாவது வயதிலேயே தொடங்கி விட்டது.

மேட்டுக்கோயிலான மீத்தலம்பலத்தின் முற்றத்தில் குலதெய்வங்கள் இனிமேல் யாருடைய கால்களைக்கொண்டு ஆடும்? எந்தச் சாமியாடிகள் இனி எப்படி இரத்தம் குடிப்பார்கள்.?

அமைதியான நள்ளிரவுகளிலும் உச்சிவெயில் மத்தியானங்களிலும் பிரபஞ்ச இரகசியங்களின் மறைவிலிருந்து குலதெய்வங்கள் வெளியே வந்து எவர் கண்ணுக்கும் புலப்படாமல் சுற்றித் திரியும். மய்யழி மக்கள் அத்தெய்வங்களைக் காண்பது வருடத்தில் ஒரு தடவை மட்டுமே — குறம்பன் வேடம் புனைந்து சாமியாட்டம் ஆடும்போது—அதாவது, திற கட்டி ஆடும்போது.

அந்தக் குலதெய்வங்கள் இனி யாரில் வந்திறங்கும்? யாருடைய கால்களால் ஆடும்?

"பாம்பு கடிச்சா இனிமே யாரு வெஷம் எறக்குவாங்க?"

குஞ்சக்கனின் பிரச்சனை அதுவாக இருந்தது. மய்யழியில் ஏராளமான பாம்புகள் உண்டு. குறிப்பாக மழைக்காலத்தில். குஞ்சக்கனை பாம்புகள் இரண்டு தடவை தீண்டியிருக்கின்றன. ஒரு தடவை வயலில் வைத்து. மற்றொரு தடவை விளக்குக் கம்பத்தில் வைத்து. இரண்டு தடவையும் அவனைக் காப்பாற்றியது மலையன் குறம்பன்தானே?

"பொணம் விழுந்தா இனிமே யாரு பொதைக்கிறது?"

குஞ்சக்கனோடு சேர்ந்து கள் குடித்துக்கொண்டிருந்த மகன் குஞ்ஞானன் கேட்டான். அவனுடைய பிரச்சனை பிணங்கள். குஞ்ஞானன் பிணங்களில் நம்பிக்கை கொண்டவன்.

"கொறம்பன் மவனிருக்கானில்ல. . . அந்த உத்தமன்? அப்பன் போயிட்டா மவன்! அதானே வழக்கம்?"

உண்ணிநாயர் மேசைமீது சாக்குக்கட்டியால் கணக்கெழுதிக் கொண்டிருப்பதற்கிடையே சொன்னார்.

"அவன் கம்யூனிஸ்ட்டாக்கும். கம்யூனிஸ்ட்டுக்காரன் எறக்கினா வெஷம் எறங்குமா? பொணங்க எரியுமா?"

குஞ்ஞானன் சந்தேகப்பட்டான்.

"இருந்தாலும் அவன் கெட்டிக்காரன் — அந்த உத்தமன்."

கனத்த கைகள். சுருட்டை முடி. பனைமரத்துக் கறுப்பு. உத்தமன் துடிப்பானவன்தான்.

குஞ்சக்கனும் குஞ்ஞானனும் உட்கார்ந்து கள் குடித்துக்கொண்டிருந்தபோது மலையன் குறம்பனின் சவத்துடன் ஆட்கள் அந்த வழியே வந்தார்கள். ஓரிரண்டு இடங்களில் மூங்கில் துருத்திக்கொண்டிருந்த பாடையைச் சுமந்து வந்தது கிழக்கிலிருந்து வந்த மலையன்மார்கள். அந்தக் கூட்டத்தில் குஞ்ஞனந்தன்மாஸ்டரும் வாசூட்டியும் பப்பனும் இருந்தார்கள். பாடையின் நிழலையொட்டித் தலைகுனிந்து உத்தமன் நடந்தான். வெயில்பட்டு அவனுடைய காதுகளிலிருந்த கடுக்கன்களும் கண்களிலிருந்த கண்ணீரும் மின்னிக்கொண்டிருந்தன.

பாடையைச் சுமந்து வருபவர்களைப் பார்த்த குறம்பியம்மா முற்றத்திலிருந்து இறங்கி நின்றாள். குறம்பன் ஆடிய சாமியாட்டக் காட்சிகள் அவளுடைய மனக்கண்களுக்கு முன்பாகக் கடந்து சென்றன. குருத்தோலை உடுத்திய, ஐந்து ஆள் உயரமுள்ள கிரீடம் சூடிய குளிகன் வேடம். கூடையும் கோலும் ஏந்தி மண்டபத்திற்கு முன்பாக நடனமாடும் பூக்குட்டிச்சாத்தன் வேடம்... வாளினால் நெற்றியில் குத்திக் கீறிக்கொண்டு கூவும் சாமியாடி...

குறம்பியம்மாவுக்கு நினைவு தெரிந்த நாள் முதல் இந்தச் சாமியாட்டமெல்லாம் ஆடிக்கொண்டிருந்தது குறம்பன்தான்.

பாடை குறம்பியம்மாவின் கண்ணுக்கெதிரே கடந்து சென்றது. காலடி முதல் தலைவரை வெள்ளைத் துணியினால் மூடப்பட்ட குறம்பன். முடி உதிர்ந்து, மங்கி வெளுத்த தலையின் ஒரு பக்கத்தை மட்டும் பார்த்தாள்.

"அவனும் போயிட்டான்."

தந்தையின் குளிர்ந்துபோன உடலை ஏந்தி நிற்கும் சிதைக்கு உத்தமன் தீ மூட்டினான். தீப்பற்றிப் படர்ந்தபோது குறம்பன் சிதையின் முன்பாக எழுந்து நின்றிருந்தான். பின்னர் திரும்பி நடக்கத் தொடங்கியபோது பின்னோக்கித் தடுமாறி விழுந்தான். தீயின் மேலேயே.

"வா."

சிதைக்கு எதிரில் நின்றுகொண்டு தேம்பி அழும் உத்தமனின் தோளில் மாஸ்டர் கை வைத்தார்.

"திருடங்களாகவும் கறுப்பு சந்தைக்காரங்களாகவும் நடிச்சிட்டு சாகிறவங்க உண்டு. உன்னோட அப்பா தெய்வமா நடிச்சிட்டு செத்தவரு. நாம அதிலே சந்தோஷப்படணும்."

ஆட்கள் திரும்பிப் போய்விட்டார்கள். மாஸ்டரும் பப்பனும் வாசூட்டியும் மட்டும் பாக்கி. சிதை எரிந்து முடியும்வரை அவர்கள் காத்திருக்கவில்லை. உத்தமனையும் அழைத்துக்கொண்டு அவர்கள் நடந்தார்கள்.

உத்தமனை அவனுடைய வீடுவரை கொண்டுபோய் விட்ட பிறகு அவர்கள் மாஸ்டருடைய வீட்டில் கூடினார்கள்.

"மலையன் குறம்பனோட சேர்ந்து தெய்வங்களும் செத்துப்போயிட்டா..."

பப்பன் யாருடன் என்றில்லாது பேசினான். போலீஸ்காரர்களும் அடியாட்களும் மட்டுமல்ல அவனுடைய சத்ருக்கள்—தெய்வங்களும்தான். தெய்வங்களை அவன் வெறுத்தான். தெய்வங்கள் இல்லாத ஓர் உலகம்தான் அவனுடைய கனவு உலகம்.

"என்னாலே முடியும்னா கோயில்கள் எல்லாத்தையும் நான் லைப்ரரிகளா மாத்திருவேன்."அவன் சொல்வதுண்டு.

"உத்தமன் தெற கட்டுவான்னு உங்களுக்குத் தோணுதா? அவன் அதைச் செய்ய மாட்டான்."

வாசூட்டி சந்தேகப்பட்டாள்.

"கட்டலேன்னா அவனோட குடும்பம் பட்டினி கிடக்கும்."

"ஆமா, ஒரு முற்போக்குவாதியான அவன் எப்படித் திற கட்டுவான்.?"

"வாழ்க்கையிலே வாசூட்டி, நாம என்ன மாதிரியான வேஷமெல்லாம் போடுறோம்? அதிலேருந்து வேறுபட்டதில்லே தெய்வத்தோட வேஷம் போடுறதும்."

"இருந்தாலும் சார், அதுக்கு தெய்வநம்பிக்கையாவது வேண்டாமா?"

"தெய்வநம்பிக்கை இல்லாமலேயே நினைச்சா உன்னாலே பூசாரி ஆக முடியும். பக்திக்கு நமக்குத் தெரியாத ஒரு பக்கம் உண்டு வாசூட்டி — தொழில். உத்தமனும் அதை ஒரு தொழிலா எடுத்துக்கிடட்டும்."

உத்தமனுடைய எதிர்காலத்தைப் பற்றியதாக இருந்தது அவர்களுடைய அன்றைய விவாதம்.

குறம்பனின் மரணத்தினால் வழக்கம்போல் உத்தமனின் தோளில் இறங்கியது குடும்ப பாரம். ஈமச்சடங்குகள் முடிந்த மறுநாள் அவனுடைய வயதான அம்மா சொன்னாள். "இனிமே படிக்கப் போக வேணாம்."

அதைக் கேட்டபோது உத்தமனுக்கு எரிச்சல் ஏற்பட்டது. ஆனால் அம்மாவின் ஈரக் கண்களைப் பார்த்தபோது அவன் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டான்.

"நீ படிக்கப் போயிட்டா இந்த வீட்லே அடுப்பு பொகையாது."

உத்தமனுக்கு அது தெரிந்துதானிருந்தது. இனி என்ன செய்வதென்று அவனுக்கு எந்த வழியும் புலப்படவில்லை. படித்துத் தேறி ஏதாவதொரு மரியாதையான வேலை பார்க்க வேண்டுமென்பதுதான் அவனுடைய ஆசை. திடீரென்று நேர்ந்த மரணம் அவனுடைய திட்டங்களை வழிமறித்தது.

"என்னப்பா எதுவும் பேசலே?"

அம்மாவின் முகத்தைப் பார்க்காமல், எதிரில் பரந்து கிடந்த வறண்ட வயலைப் பார்த்தபடி கடைசியில் உத்தமன் சொன்னான்.

"என்னாலே முடியாது-தெற கட்டுறதும் வெஷம் எறக்குறதும்."

முன்னோர்களின் பாதையிலிருந்து அவன் விலகி நடக்கப்பார்க்கிறான். மந்திரவாதிகளின் தலைமுறைகளுக்கு முடிவுகட்டத் தீர்மானித்து விட்டான் அவன்.

உத்தமனுடைய தீர்மானம் அவனுடைய வயதான அம்மாவை நடுங்கச் செய்தது.

"இந்த வீடு பட்டினி கிடக்கும். தெய்வங்களும் கோவிக்கும்."

"கோவிக்கிறதுக்கு தெய்வங்க எங்கேருக்கு?"

உத்தமனுடைய கேள்வி தாயைத் திகைக்கச் செய்தது. பூமியில் மனிதர்கள் இல்லையென்று சொன்னால் அவள் நம்புவாள். தெய்வங்கள் இல்லையென்று சொன்னால் அவளால் நம்ப முடியாது.

மீத்தலம்பலத்துத் தெய்வங்கள் உக்கிரமூர்த்திகள். நட்புடனிருந்தால் பதிலுக்கு நட்புடனிருக்கும் ஏறுக்கு மாறானால் குடும்பத்தை அழித்தொழிக்கும். குலதெய்வங்கள் அழித்த குடும்பங்கள் மய்யழியில் உண்டு. சௌபாக்கியங்கள் அள்ளிக் கொடுத்த குடும்பங்களும் உண்டு. முடவனான குஞ்சக்கன் வாழ்ந்துகொண்டிருக்கும் ஓர் உதாரணம்.

வீட்டில் அடுப்பு எரியவில்லை.

"எனக்குப் பசிக்குது. நானும் அப்பாகூட ப் போறேன்."

குமரிப்பெண்ணான உத்தமனின் சகோதரி தெச்சு பயமுறுத்தினாள்.

உத்தமன் பிடிவாதமாக இருந்தான். பட்டினி கிடக்க நேர்ந்தாலும் சரி, மந்திரவாதம் செய்வதோ திற கட்டுவதோ இல்லை. உத்தமனின் அம்மா கடைசியில் குஞ்ஞனந்தன் மாஸ்டரைச் சரணடைந்தாள்.

"சாரு சொன்னாத்தான் அவன் கேட்பான். . . ."

அவள் மாஸ்டரின் கால்களில் விழுந்து கும்பிட்டாள்.

"வீட்லே அடுப்பெரிஞ்சி மூணு நாளாச்சி. அடகு வைக்க இனிமே எதுவுமே இல்லே. சார் காப்பாத்தணும். நானும் எம் மகளும் பட்டினி கெடந்து செத்திருவோம்."

அவள் மாஸ்டருடைய கால்களில் விழுந்திருந்தபடியே அழுதாள்.

மாஸ்டர் உத்தமனைக் கூப்பிட்டனுப்பினார். பப்பன்தான் அவனைக் கூட்டிக் கொண்டு வந்தான்.

"மந்திரிக்கிறது செய்ய முடியேலன்னா வேறே ஏதாவது வேலையைச் செய். பெத்தவ பட்டினி கிடக்கிறது நல்லதில்லே உத்தமா."

"என்ன வேலையிலே நான் சேர்றது?"

"போய் பீடிசுத்து. இல்லாட்டி மம்மட்டி எடுத்து நிலத்தைக் கொத்து."

"அதொன்னும் எனக்குப் பிடிக்கலே."

"அப்பிடீன்னா பிடிச்சதைச் செய். ஆயுள்காலம் முழுக்க

தெய்வங்களோட வேஷம் கட்டின மலையன் குறம்பனோட குடும்பம் பட்டினி கிடக்கக் கூடாது."

உத்தமன் எதுவும் பதில்சொல்லாமல் தலை குனிந்தபடி வெளியே போனான்.

மறுநாள் விடிகாலை அவன் எழுந்திருந்து குளத்திற்குச் சென்று குளித்தான். வேட்டி மாற்றினான். சந்தனம் இட்டுக்கொண்டான். திண்ணையில் ரெட்டுநாற்காலியில் சென்றமர்ந்தான். மலையன் குறம்பன் எவ்வளவோ காலம் அமர்ந்து கயிறு மந்திரித்து ஊதிக் கொடுத்த நாற்காலி. வெயில் ஏறத் தொடங்கியபோது வயலினூடே குஞ்ஞானன் நடந்து வருவதைப் பார்த்தான்.

"என்ன?"

"மந்திரிக்கணும்.

குஞ்ஞானன் திண்ணைப்படி ஏறினான். முகம் காய்ச்சல் கண்டதுபோல் வெளிறியிருந்தது.

"மந்திரிக்கணுமா?"

"உன்னியாரோட கடை பூட்டினப்போ நான் வீட்டுக்குப் போய்க்கிட்டிருந்தேன். கண்ணில் குத்தினாக்கூடத் தெரியாத இருட்டு. கூடாரக் கொட்டகைகளைக் கடந்துப்போ கோயில்லே பன்னிரண்டு அடிச்சது. நடக்கறப்போ பின்னாலேருந்து ஒரு குரல் — எலே, குஞ்ஞானான்னு."

குஞ்ஞானனின் கண்கள் செருகின. "கேக்காதது மாதிரி நான் நடந்தேன். மறுபடியும் அந்தக் குரல். டேய், குஞ்ஞானா... திரும்பிப் பார்த்துப்போ..."

"திரும்பிப் பார்த்துப்போ?"

"கரடிதுரை."

நிற்கத் தெம்பில்லாத குஞ்ஞானன் தரையில் குந்தினான். அவனுடைய வெளிறிய உதடுகள் விறைத்தன. பிறகு எதுவும் முடியவில்லை.

எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு பீட்டர் உயிருடன் தீ வைத்துக் கொன்றுவிட்ட கரடிதுரை — உத்தமனுக்குச் சிரிப்பு வந்தது. ஆனால் சிரிக்கவில்லை. சிரித்தால் மலையன் குறம்பனின் குடும்பம் பட்டினி. உத்தமன் ஒரு முழம் கறுத்த சரடு எடுத்து மந்திரித்து ஊதி குஞ்ஞானனின் கையில் கட்டிவிட்டான்.

"இனிமே நீங்க போகலாம். கரடிதுரையோட உபத்திரவம் இருக்காது."

குஞ்ஞானன் தோளில் கிடந்த துண்டெடுத்து முகத்து வியர்வையைத் துடைத்துக் கொண்டான். முரட்டுத் துணியில் தைத்த சட்டைப்பையிலிருந்து ஓர் அணா எடுத்து தட்சிணை வைத்தான்.

வயலினூடே நடந்து சென்ற குஞ்ஞானனை உத்தமன் பார்த்தபடி நின்றான் — தான் ஏமாத்தற முதல் மனிதன்.

திண்டின்மேல் உட்கார்ந்து பேன் பார்த்துக்கொண்டிருந்த அக்காவை நோக்கி அந்த அணாவை விட்டெறிந்துவிட்டு உத்தமன் சொன்னான்.

"இனிமே ஒருத்தன் கூடவும் போக வேணாம் தெச்சுக்கா. திருப்திதானே உங்களுக்கெல்லாம்."

உத்தமன் படிப்பை நிறுத்தினான். அதற்குப் பிறகு தினமும் மலையன் குறம்பனின் வீட்டில் அடுப்பு புகைந்தது. அவ்வாறிருக்க மீத்தலம்பலத்தில்

திறயுற்சவம் அடுத்து வந்தது.

மய்யழியில் முக்கியமான இரண்டு திருவிழாக்கள் புனித கன்னிமேரியின் பெருநாளும், திறயும். பனையேறிகளான தீய்யர் இனத்தாருடையதுதான் கோயில் என்றாலும் மாப்பிளமார் இனத்தார் தவிர மற்றெல்லா ஜாதிக்காரர்களும் திற பார்க்க வருவார்கள். மாப்பிளமார்களுக்குக் கோயில் எல்லைக்குள் நுழையத் தடை விதித்திருந்தார்கள்.

"எங்களுக்கெல்லாம் விரோதம் ஒண்ணும் இல்லே."மீத்தலத்தின் காரணவர் சோயி மூப்பன் சொல்வார். "குட்டிச்சாத்தனுக்கு இஷ்டம் இல்லாததனாலேதான்."

மீத்தலத்தில் முக்கிய தெய்வங்களில் ஒன்றுதான் குட்டிச்சாத்தன்.

"சோயி மூப்பனோட தகப்பன் ராமன்மூப்பன் குடும்பப் பொறுப்பை ஏத்துக்கிட்ட காலம். . ."

குறம்பியம்மா தொடங்கினாள். கிரிஜா கேட்டுக்கொண்டிருந்தாள். குறம்பியம்மாவின் மெலிந்த விரல்கள் அவளுடைய கலைந்த தலைமுடியில் பேனைத் தேடின. கிரிஜா வளர்ந்து இளவட்டமாகிவிட்டாள். என்றாலும் இப்போதும் குறம்பியம்மா அவளுக்குப் பழங்கதைகளும் கட்டுக்கதைகளும் சொல்லிக் கொடுப்பாள். குறிப்பாக கிரிஜாவின் தலையில் பேன் பார்க்கும் நேரங்களில், குறம்பியம்மா சொல்லிக்கொண்டிருக்க அவளுடைய மனம் கனவு உலகங்களில் அலைந்து திரிந்துகொண்டிருக்கும். அவளுடைய கண்களுக்கு எதிரில் முரட்டு மார்பிலும் கைகால்களிலும் ரோமங்கள் வளர்ந்து கிடக்கும், பீடியினுடையதும் வியர்வையினுடையதுமான மணம் பரப்பும், அவளுடைய கற்பனைக் கணவன் மட்டும் தெரிவான்.

"கண்ணு, கேக்கிறியா?"

இடையிடையே குறம்பியம்மா கேட்பாள். கிரிஜா இயந்திர கதியில் உம் கொட்டுவாள்.

சோயிமூப்பனின் தகப்பன் குடும்பப் பொறுப்பை ஏற்றிருந்த காலம். மூப்பனுக்கு மாப்பிள இனத்தைச் சேர்ந்த கேயி என்ற ஒரு கூட்டாளி இருந்தான். வீட்டு நடையை ஒட்டித் தென்னந்தோப்புகளும் ஊரெல்லையில் வயலும் இருந்தன அந்த மாப்பிள்ளைக்கு. பணக்காரனாகவும் நல்ல மனம்கொண்டவனாகவும் கேயிமாப்பிள்ளை இருந்தான்.

"ஏம்ப்பா மூப்ப, எனக்கு இந்த வருசம் உன்னோட தெற ஒண்ணு பார்க்கணும்."

வீட்டின் முற்றத்தில் உட்கார்ந்து மூப்பனும் கேயியும் இளநீர் குடித்துக்கொண்டிருந்தார்கள்.

"தெய்வக் குத்தம் இல்லியா அது, கேயி?"

"நாயர்மார்களும் கிறிஸ்துவர்களும் உன் கோயில்லே கால் வைக்கலாம்னா, பறையனும் புலையனும் உன்னோட தெற பார்க்கலாம்னா, எனக்கும் அதைப் பார்த்தாகணும்."

கேயி சொன்னது நியாயம்தானே? மூப்பன் ஆலோசித்தான். மய்யழியில் தோட்டிகள்கூட ஆண்டுதோறும் வந்து திற பார்க்கிறார்களே?

"என்ன நீ பேசலே?"

"கேயியோட இஷ்டம்போல"

"நீ பேச்சு மாறமாட்டியே?"

"இல்லேப்பா."

அன்று நள்ளிரவில் கம்பளிக்குள் கோவணம் மட்டும் கட்டிக்கொண்டு மூப்பன்படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். மங்கிய நிலாவெளிச்சம், கோயில் மண்டபங்களில் நெய்விளக்குகள் எரிந்து முடிந்து அணைந்துபோயிருந்தன. திடீரென மூப்பன் விழித்தெழுந்தான். ஜன்னலின் வெளிப்புறத்திலிருந்து யாரோ அவனைக் கூப்பிட்டார்கள். தலையை நீட்டிப் பார்த்தபோது ஜன்னலுக்கு வெளியில், நிலா வெளிச்சத்தில், கூடையும் கோலும் ஏந்தி நிற்கும் குட்டிச்சாத்தன். மூப்பன் எழுந்திருந்து வேட்டி உடுத்தி ஜன்னலுக்கு அருகில் சென்று நின்றான்.

"அடியேன். . . "

மூப்பன் பக்திப்பரவசத்தால் விறைத்து நின்றான். தன்னுடைய வீட்டைத் தலைமுறைகளாகக் காத்துப் பராமரிக்கும் குலதெய்வத்தின் எதிரில். . . .

"ராமா. . . "

ஜன்னல் கம்பிகளுக்கிடையில் குட்டிச் சாத்தனின் கண்கள் தீப்பந்தங்களைப்போல் ஒளிர்ந்தன.

"குடும்பத்தைக் காவு வாங்கிருவேன் நான். தெரிஞ்சுக்கோ."

குட்டிச்சாத்தன் திரும்பி நின்றது. உடுத்தியிருந்த மஞ்சளாடை அசைந்தது. குலதெய்வம் ஒருமுறை கூவிவிட்டுப் பிறகு நடந்து சென்றது. அகன்று செல்லும் சிலம்பொலி. தெலைவில் அடைத்திருந்த மண்டபத்திற்குள் குலதெய்வம் நுழைந்து செல்வதை மூப்பன் பார்த்தபடி நின்றான்.

மூப்பன் வாக்கைக் காப்பாற்றவில்லை. கேயிமாப்பிள்ளை அதற்குப் பிறகு சாகும்வரை மூப்பனுடன் பேசவே இல்லை.

குறம்பியம்மா முடித்தாள்.

கிரிஜா தன்னுடைய கனவில் தன்னை மறந்திருந்தாள். வீட்டைவிட்டு விலகியிருக்கும் நாட்களில் கட்டிலில் ஓய்வாக மல்லாந்து படுத்திருக்கும்போது, குளிர்காலத்தில் மறைவாகக் கம்பளிக்குள் மயங்கும்போது அவள் நினைப்பது பீடியினுடையதும் வியர்வையினுடையதுமான வாசனை. . .

ஒவ்வொன்றாக முழங்கிய ஏழு வேட்டுகள் கிரிஜாவை எழுப்பின. மீத்தலத்துக்கொடி ஏற்றியாயிற்று. திருவிழா தொடங்கிவிட்டது. மலையன் குறம்பன் இறந்ததற்குப் பிறகான முதல் திற.

"இந்த வருசம் யாரு தெற கட்றது?"

"உத்தமன்தான்... வேறே யாரு?"

உன்னிநாயரின் கள்ளுக்கடையிலிருந்த குஞ்சக்கன், குஞ்ஞானன் முதலியோர் திறயைப் பற்றிப் பேசினார்கள். மலையன்குறம்பன் இறந்துவிட்டால் மகன் மலையன் உத்தமன் திற கட்டவேண்டும். தலைமுறைகளாக வந்துள்ள ஆசாரம் அது.

"ஆனா, அவன் கட்டுவானா?"

"கட்டலேன்னா அவன் இருக்கமாட்டான். குளிகனோட விளையாடுவானாக்கும்?"

உத்தமன் மந்திரித்தாலும் விஷமிறக்கினாலும் அவன் திற

கட்டுவானா? மய்யழி மக்கள் சந்தேகப்பட்டார்கள். திற கட்டாவிட்டால் குலதெய்வம் குளிகன் ஊரை அழித்துவிடுமே! ஆனால் ஒரு நாள் உத்தமன் தெரிவித்தான்.

"நான் திற கட்டப்போறேன். ஆனாக்க விரதம் இருக்க மாட்டேன்."

திற கட்டுபவர்கள் விரதம் இருப்பார்கள். மீனும் இறைச்சியும் கையால் தொடக்கூடாது. பெண்சேர்க்கை கூடாது. தான் அந்த இரண்டையும் செய்யப்போவதாக உத்தமன் தெரிவித்தான். அன்றே அவன் படித்துறைக்குச்சென்று ஓலைக்கூடையில் மீனுடன் வந்தான். உத்தமனின் தாயும் தமக்கையும் அதைப் பார்த்தபடி இடி தாக்கியது போல நின்றார்கள். கோயிலில் கொடி ஏற்றியிருந்த சமயம்.

"உத்தமா, நீ என்னைக் கொன்னு போட்டிருடா."

அம்மா விம்மி அழுதாள்.

"எனக்கு குளிகனுக்கும் குட்டிச்சாத்தனுக்கும் பயமில்லேம்மா. தெய்வங்களை உண்டாக்குறது நம்ம மலையன்மார்தான். நாம திற கட்டலேன்னா அதுக்கெல்லாம் இல்லே."

உத்தமனின் தாய் காதைப் பொத்திக்கொண்டாள்.

"இவ்வளவுக்கு மகாபாவம் நான் என்ன செஞ்சேன்! கடவுளே!"

உத்தமன் சொன்னதைக்கேட்டு அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

மீனை அடுக்களைக்குக் கொண்டு சென்று வைத்த உத்தமன் திண்ணைக்கு வந்து உட்கார்ந்தான். அவன் ஓரிரண்டு பீடிகளைப் புகைத்தான். மாலை நேரம் கழிந்த பின்னரும் மீன் குழம்பின் மணம் வரவில்லை. அவன் எழுந்திருந்து அடுக்களைக்குச் சென்று பார்த்தான். அடுப்பருகில் குந்தியிருந்த தெச்சு மூக்கு உறிஞ்சிக்கொண்டிருந்தாள். உத்தமன் அதற்குப் பிறகு காத்துக்கொண்டிருக்கவில்லை. அவன்தானே மீனைச் சமைத்து உண்டான்.

உத்தமன் அத்துடன் திருப்தி அடைந்து விடவில்லை. மறுநாள் அவன் சத்திரத்திற்குச் சென்றான். திரிசந்தி நேரம். பூஜை மணிகள் அடிப்பதும் நெய் விளக்குகள் ஏற்றுவதுமான சமயம்.

"கல்லு. . . . ."

"இது யாரு, உத்தமனா?"

கல்லுவுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. மலையனாக இருந்தாலும் இரத்தத் துடிப்புள்ள ஆண். அவளுடைய வாடிக்கையாளர்கள் குடித்து நிலை தடுமாறி வரும் போலீஸ்காரர்கள் தானே? மண்டலக்காலம் என்பதால் திற கட்டும் மலையன்மார்களில் தெய்வத்தின் சான்னித்தியம் உண்டாகும். கல்லுவின் அருகில் படுத்துக்கொள்ள வருவது தெய்வமல்லவா?

"ஏம்பா, நீ நல்லா யோசிச்சித்தான் இதெல்லாம் செய்யறியா?"

கல்லு பாயிலிருந்து உடுமுண்டெடுத்து இடுப்பில் சுற்றிக்கொண்டாள். உத்தமன்பதில் சொல்லாமல் சத்திரத்திலிருந்து வெளியேறி நடந்தான். கலைந்த கூந்தலை வாரி முடித்துக்கொண்டு கல்லு சொன்னாள்.

"இவன்தான் ஆம்பிளை."

மலையன் உத்தமன் மீன் சமைத்துச் சாப்பிட்டதும், கல்லுவிடம் சென்று வந்ததும் ஊர் முழுக்கப் பரவியது.

"இந்த ஊரு அழிஞ்சிரும். நெருப்பு மழை பெய்யும்."

மய்யழி மக்கள் பயத்தினால் அல்லாடினார்கள். ஊர் நாட்டாண்மைக்காரரான சந்துவச்சன் மீத்தலத்துக் காரணவரைச் சென்று பார்த்தார். மூப்பன் எல்லாவற்றையும் அறிந்திருந்தார்.

"உத்தமனை வச்சி திற கட்டக்கூடாது, தெரிஞ்சிக்கிட்டே ஆபத்தை வரவழைக்கக் கூடாது."

சந்துவச்சன் சொன்னதையெல்லாம் மூப்பன் அமைதியாயிருந்து கேட்டார்.

"உத்தமன் செய்றது தப்புன்னா தெய்வங்கள் அவனை தண்டிக்கட்டும்." மூப்பனுக்கு அவ்வளவுதான் சொல்ல முடிந்தது.

கொடி ஏற்றிய பின்னர் முதல் இரண்டு நாட்கள் திற நிகழ்ச்சிகள் இல்லை. பூஜையும் ஆராதனையும் மட்டும்தான். திற தொடங்க வேண்டியது மூன்றாம் நாள் இரவுதான். அன்று அந்தி வருவதற்கு முன்பாகவே கோயிலும் சுற்றுப்புறமும் மய்யழி மக்களால் நிரம்பியிருந்தன. சந்திரிகாவும் கிரிஜாவும் அங்கே சந்தித்துக்கொண்டார்கள்.

"உன் பாவாடை புதுசாக்கும்?"

சந்திரிகா உடுத்தியிருந்த நீலப் பட்டுப் பாவாடையை கிரிஜா தொட்டுப்பார்த்தாள்.

"புதுசு, அப்பா கொடுத்தனுப்பிச்சது."

அந்தச்சமயம் சிங்கப்பூரிலிருந்து வந்த ஒரு மாப்பிள்ளை இனத்து நண்பர் மூலமாக பரதன் ஏராளமான துணிவகைகளைக் கொடுத்தனுப்பியிருந்தார்.

சந்திரிகாவும் கிரிஜாவும் வளையல் கடைகளைப் பார்த்தபடி நடந்தார்கள். நாலாவித வண்ணங்களில் இருந்த கண்ணாடி வளையல்கள். கிரிஜா ஆசையாக வளையல்களைப் பார்த்தாள். வளையல் வாங்க நாண்கணா கேட்டபோது ரைட்டர் கூப்பாடு போட்டார்.

"இங்கே அரிசி வாங்க ஒரு முக்காத்துட்டு கிடையாது. எங்கிட்டு வளையல்!"

சந்திரிகா அரை டஜன் கறுத்த கண்ணாடி வளையல் வங்கினாள். வளையல் விற்கும் செட்டிதான் அவளுடைய கையில் ஆறு வளையல்களையும் போட்டுவிட்டான். இடது கையில் தங்கச் சங்கிலியிட்ட வாட்ச் அவளுக்கு உண்டு. அதனால் வலது கையிலேயே ஆறு வளையல்களையும் போட்டான்.

"தாசன்கிட்டேருந்து கடுதாசி வந்துக்கிட்டிருக்கா?"

வளையல் கடையிலிருந்து வெளியே வந்தபோது ஏதோ நினைத்துக்கொண்டு சந்திரிகா கேட்டாள். புதிய பாவாடையோ பிளவுசோ அணியும்போது, புதிய வளையல்கள் அணியும்போது, தன்னையறியாமலே அவள் தாசனை நினைத்துக் கொள்வாள்.

"ஒரு மாசமாச்சி வந்து."

சந்திரிகா எதுவும் பேசாமல்தலை குனிந்து கிரிஜாவுடன் நடந்தாள். குஞ்ஞனந்தன் மாஸ்டருக்கு தாசன் வழக்கம்போல் கடிதங்கள் எழுதிக்கொண்டிருந்தான். யாருக்கும் தெரியாமல் அவள் தாசனின் கடிதங்களை எடுத்துப்பார்ப்பாள். எல்லாம் பிரெஞ்சில் எழுதப்பட்டிருக்கும். ஆங்கிலப்பள்ளியில் படிக்கும் சந்திரிகாவுக்கு அந்த மொழி கொஞ்சங்கூடத் தெரியாதிருந்தது. ஆனாலும் தாசனின்

கடிதங்களில் ஒவ்வொரு சொல்லையும் அவள் பரிசோதிப்பாள். ஒரு சமயம் ஒரு கடிதத்தில் ஓரிடத்தில் அவள் தன்னுடைய பெயரைப் பார்த்தாள். அவளுடைய நெஞ்சு துடித்தது. எவ்வளவு முயன்றும் தாசன் தன்னைப் பற்றி எழுதியிருந்தது என்னவென்று அவளுக்குப் புரியவில்லை. மாஸ்டரிடம் கேட்பதற்கும் தைரியம் ஏற்படவில்லை. அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற படபடப்பில் மூன்று இரவுகள் அவளுக்குத் தூக்கம் வரவில்லை.

எங்கும் வெளிச்சம். ஆட்டம் தொடங்குவதற்கு முன்பதான கொட்டின் தாளலயம் இணைந்த ஓசை. வரிசையாக நிற்கும் செண்டைக் கொட்டுக்காரர்களும் கோலாட்டக்காரர்களும். அவர்களுக்குப் பின்னால் முகபடாம் இட்ட யானைகள். நெய்விளக்குகளின் வெளிச்சத்தில் மஞ்சள் பட்டுடுத்திய, முடி கலைந்த, வாளேந்திய சாமியாட்ட . .

அன்றைய நள்ளிரவில்தான் உத்தமன் குளிகனின் வேடம் புனைந்து திற கட்டுவது. கோயில் அன்னதான மண்டபத்தில் பெண்கள் கூட்டத்தில் குறம்பியம்மாவும் குஞ்ஞிச்சிருதையும் இருந்தார்கள். முற்றத்தில் வேய்ந்த பிரத்தியேகப் பந்தலில் மேயர் செக்குமுப்பர், தாவீதுதுரை, கொம்மிஸார் லப்போர்த்துரை, ஸெக்ரத்தேர் கருணன், ப்ருகாதியே வெங்கய்யா முதலியோர். தாவீதுதுரையின் கண்கள் இடையிடையே அன்னதான மண்டபத்தில் இருக்கும் தங்கச் சரிகை முண்டு உடுத்தியிருந்த குஞ்ஞிச்சிருதை மீது பதிந்திருந்தன

கூட்டத்தில் குஞ்ஞனந்தன் மாஸ்டரும் பப்பனும் வாசூட்டியும் நின்றிருந்தார்கள்.

ஓலைத்தடுக்கினால் வேயப்பட்டிருந்த ஒப்பனை அறையில் பாயில் படுத்திருந்தான் உத்தமன். வயதான வேறொரு மலையன் அவனுடைய முகத்தில் ஒப்பனைப் பூச்சு பூசிக்கொண்டிருந்தான். உத்தமன் பாயில் எழுந்து உட்கார்ந்தான். ஒரு மலையப்பெண் அவனுடைய கால்களில் சலங்கைகளைக் கட்டினாள். குப்பியெடுத்து கார்க்கைத் திறந்து ஒரு மடக்கு நாட்டுச் சாராயத்தை அண்ணாக்கக் குடித்துவிட்டு உத்தமன் உரக்கக் கூவினான். முதல் கூவல். அது அவனுடைய குரலாக மட்டுமில்லை. சிதையில் பற்றி எரிந்த மலையன் குறம்பனின் மலையன் குஞ்ஞுக்குட்டியின், தலைமுறைகளாகத் திற கட்டி ஆடிய அவனுடைய முன்னோர்கள் எத்தனையோ மலையன்மார்களின் குரல்.

மலையப்பெண் குத்துவிளக்குடன் ஒப்பனை அறையிலிருந்து வெளியே வந்தாள். தொடர்ந்து உத்தமனும். செண்டை கொட்டிக்கொண்டு ஒரு செண்டைக்காரனும் அவர்களுடன் வந்தான். மய்யழி எங்கும் இருட்டு பரவியிருந்தது. மூச்சு முட்டி நிற்கும் மௌனம்.

மண்டபங்களுக்கு எதிரில் செண்டைக்காரர்களும் குழலூதுபவர்களும் வரிசையாக நின்றார்கள். உத்தமன் மண்டபங்கள் மூன்றிலும் ஏறி நின்று வணங்கினான். ஏழு படிக்கட்டுகள் அமைந்த மேடையின்மேல் ஏறி நின்றான். இரண்டு பேர் வெள்ளைத் துணியினால் திரை பிடித்தார்கள். கிரீடம் சூடும்போது யாராலும் பார்க்க முடியாது. நான்கு பேர் தாங்கிப் பிடித்துத்தான் மூங்கிலும் குருத்தோலையும் கொண்டு செய்யப்பட்ட ஐந்து பேர் உயரமுள்ள அந்தக் கிரீடம் உத்தமனின் பின்கழுத்தில் செங்குத்தாகக் கட்டப்பட்டது.

வேட்டுகள் முழங்கின, செண்டைகள் உறுமின. முன்பாக மறைப்பாக வைத்திருந்த திரைச்சீலை அகன்றது. குலதெய்வத்தின் தரிசனம் கிடைத்த ஆசாரி ராமன் மேடையின் எதிரில் உணர்விழந்து மூர்ச்சித்து விழுந்தான்.

ஊன்றுகோல்களை மேடையில் ஊன்றி பாலன்ஸ் செய்துகொண்டு குளிகன் நிதானமாக மேடையின் படிக்கட்டுகள் ஒவ்வொன்றாக இறங்கினான். தலையின் கட்டுமுடி கலைந்தது. ஆட்கள் பக்திபூர்வமாக வழிவிட்டு நின்றார்கள். செண்டைக்காரர்கள், குத்துவிளக்குக்காரர்கள் புடைசூழ மண்டபங்களுக்கு முன்பாகச் சென்றடைந்த குளிகன் நிதானமாக அடியெடுத்து வைத்தான். கோயில் முற்றத்துப் பரப்பில் கிரீடத்தின் நிழல் விழுந்து ஆடிற்று.

காலடி வேகம் அதிகரித்தவுடன் ஊன்றுகோல்கள் களையப்பட்டன. நெய்விளக்கின் மஞ்சள் வெளிச்சத்தில் கிரீடத்துடன் குளிகன் ஆடத் தொடங்கினான். ஆட்டம் படிப்படியாகத் தாண்டவமாக மாறியது. ஆகாயத்தில் ஆடியசையும் கிரீடம் ஏந்தியுள்ள நடனம். தாண்டவ நடனத்தின் உச்சகட்டத்தில் உத்தமன் மண்டபத்திற்கு முன்பாகக் கவிழ்ந்தடித்து விழுந்தான்.

உறுமிக்கொண்டிருந்த செண்டைகள் சட்டென்று அடங்கின. பார்த்துக்கொண்டிருந்தவர்கள் ஸ்தம்பித்து நின்றார்கள்.

நெய்விளக்கின் வெளிச்சமும் நிழல்களும் இரண்டறக் கலந்து கிடந்த கோயில் முற்றத்தில் கழுத்து நொடிந்து விழுந்த உத்தமன் படுத்தபடி துடித்து நெளிந்தான்.

"அடியேனைப் பொறுத்துக்கணும்!. . . . "

குலதெய்வங்கள் கூடியிருக்கும் மண்டபத்திற்கு எதிரே போய் நின்று மூப்பன் அழுதார்.

உத்தமனுடைய மரணத்தைத் தொடர்ந்து அவனுடைய தாயும் தமக்கையும் மய்யழியைவிட்டு எங்கேயோ போனார்கள். அத்துடன் தலைமுறைகளாகத் திற கட்டி ஆடிய, எத்தனையோ மலையன்மார் பிறக்கவும் இறக்கவும் செய்த, அந்தக் குடும்பம் மறைந்தது.

உத்தமனின் துர்மரணத்தைப் பற்றிப் பலரும் பலவிதமாகப் பேசினார்கள். தெய்வங்கள் தண்டித்துவிட்டதாகத்தான் மய்யழி மக்கள் நம்பினார்கள். குஞ்ஞனந்தன்மாஸ்டருக்குச் சொல்வதற்கு இவ்வளவுதான் இருந்தது.

"அவன் முதல் முதலா திற கட்டியவன். ஆடிப் பழக்கமில்லாதவன். அதை அவன் நினைச்சிப் பார்க்கலே."

## 15

தாசன் பக்கலோறய என்ற உயர்நிலைப் பரீட்சை தேறிவிட்டான்.

அப்படியாகப் பாண்டிச்சேரியில் படிப்பு முடிவடைந்தது.

தாசன் திரும்பி வந்த அன்று வீட்டில் ஒருதிருவிழாவாக இருந்தது. முந்தின நாள் இரவு யாரும் ஒரு கணம் கூடக் கண்மூடவில்லை.

"என்னோட செல்லக்கண்ணு பெரிய்ய ஆளா வருவான். கோட்டும் தொப்பியும் போட்டுக்கிட்டு வருவான்!"

குறம்பியம்மா ஒரு நூறு தடவை சொல்லியிருப்பாள்.

ஊரெல்லாம் தாசன் ஒரு பேச்சுப்பொருளாகியிருந்தான்.

குஞ்ஞனந்தன்மாஸ்டரின் வீட்டிலிருந்தபடி வாசூட்டியும், பப்பனும் ஆக எல்லோரும் தாசனைப் பற்றிப் பேசினார்கள்.

"அவன் பெரிய ஆளா வருவான்."

பப்பன் குறம்பியம்மா சொன்னதையே திருப்பிச் சொன்னான். அதைக் கேட்டு வாசூட்டி நெற்றி சுளித்தான்.

"வெள்ளைக்காரங்க காலேஜிலே படிச்சா பெரிய ஆளாயிருவானாக்கும்?"

"வாசூட்டி, வெள்ளைக்காரங்களோட ஆட்சியோடதானே நமக்கு எதிர்ப்பு? அவங்க நாகரிகத்தோடவும் படிப்புமுறையோடவும் நாம எதுக்காக எதிர்ப்பைக் காண்பிக்கணும்?"

"வெள்ளைக்காரங்க நாகரிகத்தை ஏத்துக்கிட்டு அதே சமயத்தில் அவங்க ஆட்சியை எதிர்க்கிறது எப்படி முடியும்?"

"என்னைப் பொறுத்தவரைக்கும் முடியும். உன்னோட விஷயம் எனக்குத் தெரியாது."

"அப்படீன்னா நீ ஒரு கோழை. நீ திரிசங்கு சொர்க்கத்திலே இருக்கே."

வாசூட்டியின் முகத்தில வெறுப்பு தெரிந்தது. சென்ற இடத்திலெல்லாம் எல்லோரும் தாசனைப் புகழ்ந்தார்கள். வெள்ளைக்காரர்களுக்குக் கீழே படித்து உயர்ந்த பட்டம் பெற்று வரும் தாசன்! வாசூட்டிக்கு எரிச்சல்தான் ஏற்பட்டது.

"நான் வேணும்னா அவனைப் போலப் படிக்காதவனா இருக்கலாம். படிச்சி என்ன கிடைக்கப்போகுது? வெள்ளைக்காரனோட காலை நக்குறதுக்கு என்னாலே முடியாது."

வாசூட்டியின் கோபம் பப்பனுக்குப புரிந்தது. தாசன்மீது அவனுக்கு ஏன் விரோதம் ஏற்படவேண்டும்? எவர் மீதும் பொறாமைப்படும் இயல்பு கொண்டவனல்லவே அவன்.

மாஸ்டர் எதுவும் பேசாமல் சிந்தனையில் மூழ்கியிருந்தார். தாசனை பப்பனோ வாசூட்டியோ அறிந்திருந்ததைவிட அதிகமாக அவர் அறிந்திருந்தாரல்லவா?

"வாசூட்டி, நீ கோவிச்சிக்காதே தாசன் வரட்டும், அவனை நீங்களெல்லாம் புரிஞ்சிக்கத்தான் போறீங்க. பொறுமையா இருங்க."

"மாஸ்டர் என்னதான் சொல்றீங்க?"

"பொறு வாசூட்டி—உனக்கே புரியும்."

மாஸ்டர் கைகளைத் தலைக்குப் பின்னால் பிணைத்து வைத்து, மோட்டைப் பார்த்தபடி படுத்திருந்தார். தாசன் வந்த நாள் வாசூட்டியும் பப்பனும் ரயில்நிலையத்திற்குச் சென்றார்கள். ரைட்டர் சீக்கிரமாகவே அங்கே வந்திருந்தார். ஸெக்ரத்தாரியாவில் ஓர் உத்தியோகஸ்தனாகிய புருஷுவும் ஸ்டேஷனுக்குவந்திருந்தார். அவர் எதற்காக அங்கே வந்தார் என்று வாசூட்டியும் பப்பனும் ஒருவருக்கொருவர் கேட்டுக்கொண்டார்கள். புருஷு ஸெக்ரத்தோர்கருணனின் வலது கை.

பிளாட்பார்மில் நின்றுகொண்டு அச்சுவும் அந்த்ருப்போலீசும் ஏதோ பேசிக்கொண்டார்கள்.

போர்ட்டர் குஞ்சக்கனும் யானைக்காலன் அந்தோனியும் கூட ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தார்கள்.

வண்டி பிளாட்பார்மில் வந்து நின்றது.

மூன்றாம் வகுப்பு கம்பார்ட்மென்ட்டிலிருந்து கையில் ஒரு சாக்குப்பையுடன் தாசன் வெளியே வந்தான். வெள்ளை வேட்டியும் அரைக்கைச் சட்டையும் உடுத்தியிருந்தான். மிகவும் மெலிந்து போயிருந்தான். முகத்தில் முன்போலவே மிடுக்கும் நிதானமும்.

முதலில் அவனுடைய கண் பதிந்தது தந்தையின் முகத்தில்தான். வழுக்கை விழுந்த தலையில் மீதியிருந்த முடியும் நரைத்துப்போயிருந்தது. காவடி போல வளைந்த முதுகு.

"அப்பா இப்போ எப்படி இருக்கீங்க?"

தாசன் தந்தைக்குஅருகில் போய் நின்றான்.

"இருமலும் உடம்பு வலியும்தான். ராத்திரியிலே ஒரு பொட்டுகண்மூட முடியணும்ல?"

"டாக்டர் என்ன சொல்றாரு?"

"மருந்தினாலே இது சரியாகாதுப்பா! சரியாகிற வியாதியில்ல. . ."

"அப்படியெல்லாம் சொல்லாதீங்க?"

தாசன் கையைத் தந்தையின் தோளில் வைத்தான். ரைட்டர் தாசனின் கையிலிருந்த பைக்காகக் கையை நீட்டினார்.

"நானே கொண்டு வாரேன்ப்பா."

"இது மட்டும்தானா? பெட்டி எங்கே போச்சி?"

"அதோட பிடி விட்டுப்போச்சி. கொண்டு வரல்லே?"

தாசன் சிரித்தபடி பார்த்தான். தந்தையின் முகத்தில் திடீரென்று தோன்றிய உணர்வு வேறுபாட்டை அவன் கவனித்தான். ரைட்டர் தன் மகனை உச்சி முதல் உள்ளங்கால்வரை பார்த்தார்.

அவர்கள் பிளாட்பாரத்திலிருந்து வெளியே நடந்தார்கள். தொடர்ந்து வாசூட்டியும் பப்பனும் மற்றவர்களும்..

"எங்களை ஞாபகமிருக்கா?"

பப்பன் கேட்டான்.

நினைவிருக்கிறதா இல்லையாவா? மாஸ்டருக்கு எழுதும் கடிதங்களில் அவர்களைப் பற்றி விசாரிக்க மறப்பதே இல்லையே! பின் ஏன் இந்தக் கேள்வி?

"மாஸ்டர் எப்படி இருக்காங்க?"

"வழக்கம்போல எழுந்து நடமாட முடியும், அவ்வளவுதான். எவ்வளவு காலம் இப்படிக்கடத்தணும்னு யாருக்குத் தெரியும்!"

அவர்கள் புகைவண்டி நிலையத்திலிருந்து வெளியே நடந்தார்கள்.

"நாங்க இங்கே இருக்கோம். . ."

குஞ்சக்கன் நினைவுபடுத்தினான். யானைக்காலன் அவனுக்குப் பின்னால் மறைவில் நின்றுகொண்டு தலையைச் சொறிந்தான். தாசன் பையிலிருந்து எட்டணா எடுத்து குஞ்சக்கனின் கையில் கொடுத்தான்.

"ரெண்டு பேரும் எடுத்துக்குங்க".

அவர்கள் கும்பிட்டுவிட்டு நடந்தார்கள்—ஒருத்தன் நொண்டிக்கொண்டும், மற்றவன் யானைக்காலை இழுத்துக்கொண்டும்.

வெளியில் சர்க்கார் காரில் புருஷு இருந்தார். தாசன் வருவதைப்பார்த்ததும் அவர் காரிலிருந்து இறங்கினார். ஒட்டிய ஒரு கவரை தாசனுக்கு நேராக நீட்டியபடி அவர் தெரிவித்தார்.

"த் லா பார் த் மொஸியே. . ."

மூப்பன்துரையின் தகவல் கவரில் இருந்தது. கவரை தாசனிடம்

கொடுத்த பிறகு புருஷு காரில் ஏறி புழுதி பரப்பிக்கொண்டு போனார்.

தாசன் கவரைப் பிரித்தான். எல்லோருடைய கண்களும் தாசனின் முகத்தில் பதிந்தன. ரைட்டருடைய நெஞ்சு தாளம்தப்பித் துடித்தது. மூப்பன்துரையின் கையாள்அல்லவா தகவல் கொண்டு வந்தது? ஏதாவது முக்கியமான தகவலாக இல்லாமல் இருக்காது.

மூப்பன்துரை தானே கையால் எழுதிய கடிதம். தாசனுடைய இந்தப் புதிய வருகையால் அவர் மகிழ்ச்சியடைகிறார். தாசனை வாழ்த்துகிறார். பிரான்ஸில் மேற்படிப்புக்காக ஒருஸ்காலர்ஷிப். அல்லது ஸெக்ரத்தாரியாவில் ஓர் உத்தியோகம் இவற்றில் எதை வேண்டுமானாலும் ஏற்றுக்கொள்ளலாம். மறுநாள் காலையில் பங்களாவில் வந்துபார்க்கும்படியாக அழைப்பும் இருந்தது கடிதத்தில்.

கடிதத்தைப் படித்ததும் தாசனின் கண்களில் சிரிப்பு தவழ்ந்தது. அவனுடைய முகத்தில் மேலும் அதிக மிடுக்கு சேர்ந்தது. எதுவும் பேசாமல் கடிதத்தை மடித்துப் பையில் வைத்துக்கொண்டான்.

"என்னப்பா கடுதாசியிலே?"

தெரிந்துகொள்ள வேண்டுமென்ற படபடப்பில் ரைட்டருக்கு மூச்சு முட்டியது.

"என்னை பிரான்சுக்கு அனுப்பி வைக்கிறாங்களாம். இல்லாட்டி ஸெக்ரத்தாரியாவிலே வேலை தர்றாங்களாம்."

தாமுரைட்டர் மகிழ்ச்சியினால் நினைவிழந்தவரைப்போல் நின்றார். அவருக்குப்பிரக்ஞை திரும்பி வர சிறிது நேரம் தேவைப்பட்டது. அவருடைய கண்கள் தொலைவில் தென்பட்ட தேவாலய கோபுரத்தின் உச்சியில் சிலுவையை நோக்கி நிமிர்ந்தன. . .

புகைவண்டி நிலையத்திற்கு வெளியே நீண்டிருந்த சாலை வழியாக அவர்கள் நடந்தார்கள். வெயில் ஏறிக்கொண்டிருந்தது. இருபுறங்களிலும் அறுவடை முடிந்த வயல்கள். இடதுபுற வயல்வெளியின் அக்கரையில் மலையன் உத்தமனின் இடிந்து விழுந்த வீடு தென்பட்டது.

"உத்தமன் செத்த விவரம் உனக்குத் தெரியாதில்ல?"

"சார் எழுதியிருந்தாங்க. வருத்தப்பட்டேன்."

கறுத்த உயரக்குறைவான உடம்பு. காதுகளில் கறுத்த முகத்துக்கு ஒப்புதலாக ஒளிரும் கடுக்கன்கள். அந்த முகம் தாசனுக்கு எதிரில் ஒரு நிமிட நேரம் மறையாமல் நின்றது.

வழியில் தென்பட்டவர்கள் மரியாதை உணர்வுடன் தாசனைப் பார்த்தார்கள். கதவுகளுக்கும் ஜன்னல்களுக்கும் பின்புறம் இருந்து எத்தனையோ ஜோடிக் கண்கள் அவனுக்கு நேரே நீண்டு வந்தன. தாசன் அது எதையும் பார்க்கவில்லை. அவன் மூப்பன்துரையின் கடிதத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

இவ்வளவெல்லாம் எதிர்பார்க்கவில்லை. மற்றொரு சமயமாக இருந்திருந்தால் மகிழ்ச்சியடைந்திருப்பவன்தான் . . . .

இனிமேல் தாசன் மகிழ்ச்சியாக இருக்க முடியுமா? அவன் தன்னுடைய வழியைத் தேர்ந்தெடுத்திருக்கிறான். அதுமகிழ்ச்சியின் பாதையல்ல. . . .

அலைக்கழியும் மனத்துடன் தந்தையுடன் நடந்தான். பப்பனும் வாசூட்டியும் விடைபெற்றுப் போனார்கள். தாசனின் கையைப் பற்றியிருந்த ரைட்டரின் பிடி இறுகியது. அவருடைய கண்கள் ஈரமாகத்

தொடங்கின. ரைட்டருடைய குடும்பத்தின் தலையெழுத்து மாற்றி எழுதப்பட்டுவிட்டதல்லவா? தனக்கு இனிமேல் தஸ்தாவேஜு எழுதி முதுகொடிய வேண்டியதில்லை. தனக்குஇனிமேல்தரித்திரமில்லை. தான் புண்ணியம் செய்தவன். இல்லாவிட்டால் தாசன் எப்படி என்னுடைய மகனாகப் பிறந்திருப்பான்?

மாஸ்டருடைய வீட்டிற்குச் செல்லும் தெருமுனையை அடைந்தபோது தந்தையின் பிடியைச் சற்றே தளர்த்திக்கொண்டு தாசன் சொன்னான்.

"நான் சாரைக் கொஞ்சம் பார்த்திட்டு வந்திரட்டுமா?"

"பிறகுவந்து பார்த்துக்கக் கூடாதா? அங்கே ஒருத்தி கண்ணிலே எண்ணெ ஊத்திக்கிட்டுக் காத்துக்கிட்டிருக்கா"

"அம்மாகிட்டே சொல்லுங்க, நான் இப்பவே வந்திடுறேன்னு."

தாசன் மாஸ்டரின் வீட்டிற்குச் செல்வதான வழியில் நடந்தான். ரைட்டர் துண்டை எடுத்துத் தலையிலிட்டுக்கொண்டு வீட்டை நோக்கி நடந்தார். வேகமா நடக்கணும். கௌசுகிட்ட விவரம் சொல்லணும். நம்ம மகன் பிரான்ஸ் போறான். என்னோட உன்னோட மகன். கௌசு, இந்த சந்தோசத்தை நாம எப்படித் தாங்கிக்கிறது!

தாசன் படியேறிச் சென்றபோது மாஸ்டர் கட்டிலில் மல்லாந்து படுத்தபடி கிறக்கத்தில் இருந்தார். இரத்தமும் நீரும் வறண்டு போயிருந்த உடம்பு. முகத்தில் குத்துரோமங்களில் நரை படர்ந்திருந்தது. கட்டில் காலருகில் லீலாக்கா உட்கார்ந்திருந்தார்கள்.

"சந்திரிகாவோட அப்பா சொல்றாங்க வேலூருக்குப் போகலாம்னு, ஆபரேஷனுக்கு."

"பரதன் சார் எப்போ வர்றாங்க?"

"அஞ்சாறு மாசம் இன்னும் இருக்கு."

"அதுவரைக்கும் மாஸ்டர் பிழைச்சிருப்பாரா?"

லீலாக்கா நாற்காலி கொண்டு வந்து போட்டார்கள். தாசன் உட்காரவில்லை. மாஸ்டரைக் கூப்பிட்டு எழுப்ப வேண்டாமென்று தோன்றிற்று. சாயங்காலம் மறுபடியும் வரலாமல்லவா.

அம்மா காத்துக்கொண்டிருப்பாள். பையை எடுத்துக்கொண்டு வெளியேறி நடந்தான். புரொபசர் சுப்பராமன் கொடுத்தனுப்பிய கடிதங்கள் அதில் இருந்தன. சாயங்காலம் வரும்போது கொடுத்துக்கொள்ளலாம்.

வாசலைக் கடக்கும்போது கேட்டு மறந்த ஒரு குரல்.

"தாசன். . . ."

அவன் தன்னியல்பாய் நின்றுவிட்டான்.

சன்னமாக அடுத்துவந்த பாதசரங்களின் சங்கீதம் வாசற்படியில். தலை குனிந்து அவள் நின்றிருந்தாள்.

தாசன் தலை நிமிர்ந்து பார்த்தான். என்ன ஓர் அழகு! இடுப்பு வடிவும் மடிப்பும் பெற்றிருந்தது. முடிந்துவிட்டிருந்த கூந்தல் பாதி கலைந்து இடுப்புவரை தொங்கிக் கொண்டிருந்தது.

"தாசன் எப்போ வந்தீங்க?"

"வர்ற வழிதான்."

சிறிது நேரம் மௌனம். நிலைக்கதவில் நெற்றிசேர்த்து வைத்தபடி அவள் நின்றிருந்தாள்.

"நீ இப்போ எந்த கிளாஸ்?"

"பத்து"

அவள் கதவுக்கு நேராகத்திரும்பி நின்றுகொண்டு நகங்களால் கீறிக்கொண்டிருந்தாள்.

"தாசன். . . "

"உம்?"

கதவின்மீது தேய்த்துக்கொண்டிருந்த கைவிரல்கள் நிசப்தமாயின. தலை ஏறத்தாழ குனிந்திருந்தது. அவள் முணுமுணுத்தாள்.

"நான் வயசுக்கு வந்திட்டேன். . . ."

அவளுடைய கண்கள் சற்றே படபடத்தன.

தாசன் திகைத்துப்போனான். ஆனாலும் அதை வெளியே காட்டிக்கொள்ளாமல் அவன் சிரித்தான்.

"எட்டு மாசம் பதினாலு நாள் ஆயிரிச்சி."

மாதமும் நாளும் நீ கணக்கெடுத்து வைத்திருந்தாயாக்கும், நான் வரும்போது என்னைத் திகைக்க வைப்பதற்கு?

"தாசன் எனக்கு ஏதாச்சும் வாங்கிட்டு வந்திருக்கீங்களா?"

"சந்திரிக்கு என்ன வேணும்?"

குற்ற உணர்வுடன்தான் கேட்டான். சந்திரிகாவுக்கு மட்டுமல்ல, யாருக்கும் எதுவும் வாங்கி வரவில்லை. பையில் இருந்ததெல்லாம் உடுப்புகள் மட்டும்தான். குஞ்ஞனந்தன் மாஸ்டருக்கான தகவல் கடிதங்களும்.

"நான் போகட்டுமா சந்திரி?"

"உம்."

அவள் தலை நிமிர்ந்தாள். மை தீட்டிய கண்கள் படபடத்தன.

"சாயங்காலம் வர்றேன்."

அவள் தலையாட்டினாள்.

சஞ்சலப்படும் மனது. பலவகையான சிந்தனைகள் அலையலையாக மனதில் பந்தலிட்டன. அதனிடையில் சந்திரிகா. பலவற்றையும் யோசித்தபடி நடந்தான். வீட்டைச் சென்றடைந்தது கூடத்தெரியவில்லை. அம்மாவும் கிரிஜாவும் அப்பாவும் வராந்தாவில் காத்துக் கொண்டிருந்தார்கள்.

பார்த்ததும் அம்மா ஓடி வந்து கட்டிப்பிடித்தாள்.

"ஒரு கடுதாசி போட்டா என்னப்பா? அம்மா எவ்வளவு ஆத்திரப்பட்டேன் உனக்காக வேண்டி. . ."

தாசனின் முதுகில் தலை சாய்த்துக்கொண்டு அவள் துயரத்தை வெளியிட்டாள்.

ஐந்தாறு மாதங்களாக வீட்டுக்குக் கடிதம் எழுதவில்லை. மனப்பூர்வமாக அப்படி இருக்கவில்லை. படிப்பும் அரசியலுமாக இருந்த காலம். தூக்கம்கூட ஒரு நாளில் நான்கு மணி நேரம்தான் என்று சுருங்கிவிட்டிருந்த நாட்கள்.

குறும்பியம்மா தாசனை உற்றுப் பார்த்தபடியே இருந்தாள். வெள்ளை வேட்டியும் அரைக்கைச் சட்டையும் பார்த்த அவளுக்குப் பெருத்த சலிப்பு ஏற்பட்டது. இதற்காகத்தானா பாண்டிச்சேரிக்குப் போனது? வெள்ளைக்காரங்க காலேஜிலே படிச்சது?

"கோட்டும் தொப்பியும் எங்கேப்பா கண்ணு?"

குறம்பியம்மாவுக்குத் துயரத்தினால் கண்கள் நிறைந்தன. லெஸ்லீதுரையைப் போல பூட்சும் தொப்பியுமெல்லாம் போட்டுக்கொண்டு வருவான் என்றல்லவா இவ்வளவு காலமும் நினைத்திருந்தது? அதையெல்லாம் பார்க்க வேண்டுமென்றுதானே இவ்வளவு காலமும் காத்திருந்தது?

"ஒரு நாள் நான் கோட்டும் தொப்பியும் போட்டுக்கிட்டு துரை மாதிரி வருவேன், போதுமா?"

தாசன் பெற்றோரை சமாதானப்படுத்துவதுபோல் பார்த்தான்.

"தாசன் தொப்பியெல்லாம் போட்டுக்கிட்டு நடக்கத்தான் போறான், அம்மா."

கௌசுவம்மா அபிமானத்துடன் சொன்னாள்.

"தாசனை மூப்பன்துரை பிரான்சுக்கு அனுப்பிவைக்கப் போறாரு."

ரைட்டர் விவரத்தை மனைவியிடம் ஏற்கெனவே தெரிவித்திருந்தார். மகிழ்ச்சியினால் அவளுக்கும் இப்போது மூச்சு முட்டியது.

குறம்பியம்மா பொடிடப்பி திறந்து ஒரு நுள்ளல்பொடியெடுத்து உறிஞ்சினாள்.

தாசன் குளித்து முடித்து சாப்பாடு சாப்பிட உட்கார்ந்தான். கிரிஜா சாப்பாடு பரிமாறினாள். சந்திரிகாவைப்போலவே அவளும் வளர்ந்திருந்தாள்.

"நீ ரொம்ப வளர்ந்திட்டேல்ல! எனக்குப பார்த்ததும் அடையாளம் தெரியலே."

கிரிஜா வெட்கத்தினால் முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

"இனி ஒருத்தனைப் பார்க்கணும்."

பொடியின் கிறுகிறுப்பில் கண் மூடியிருந்த குறம்பியம்மா சொன்னாள். ரைட்டர் பதில் சொன்னார்.

"நான் ஒரு ஆளைப் பார்த்து வச்சிருக்கேன்."

"யாரு?"

"தாவீதுதுரை."

"அய்யோ. . அதுக்கு குஞ்ஞிச்சிருதை சம்மதிப்பாளா?"

அப்பாவின், அம்மாவின், பாட்டியின் ஒன்றிணைந்த சிரிப்பு. கிரிஜா சிவந்த முகத்துடன் கதவுக்குப் பின்னால் ஒளிந்துகொண்டாள்.

சாயங்காலம் வேட்டியும் சட்டையும் மாற்றிக்கொண்டு வெளியே கிளம்பியபோது ரைட்டர் நினைவுபடுத்தினார்.

"மிஸ்ஸியைப் பார்க்க மறந்திராதேப்பா."

மிஸ்ஸி தினமும் தாசனைப் பற்றி விசாரித்துக்கொண்டே இருப்பாள்.

தாசன் திரும்பி வரும் விவரம் அவளுக்குத் தெரியும். இன்றும் தாசனுக்குத் தன்னுடைய பிரசித்தமான கேக்கை அவள் தயாரித்து வைத்திருப்பாளல்லவா?

நீண்ட காலத்திற்குப் பிறகு ற்யூ த் லெக்லீஸ் வழியே நடந்தான்.

வணங்கும் உணர்வுடன் பார்க்கும் ஆட்கள். எந்தப்படாடோபமும் இல்லை. அவர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள். எந்தப் பகட்டும் இல்லை. பார்த்தால் தெரிகிறதா வெள்ளைக்காரர்களின் காலேஜில் படித்துவிட்டுத் திரும்பியதாக?

"அந்தப்பையன்தான். பெரிய பரீட்சைங்க பாசாயிட்டதனாலே நம்ம தோல் வெளுத்திருமா? நம்மளை துரையாக்கிருமா?"

சேகரனின் டீக்கடையிலிருந்து யாரோ சொன்னார்கள்.

தாசன் முதலில் போனது மிஸ்ஸியின் பங்களாவுக்குத்தான்.

மிஸ்ஸியைப் பார்த்தபோது அடையாளம் புரிந்துகொள்ள முடியவில்லை. பழைய மிஸ்ஸியின் பிரேதமாயிருந்தது அது. கணுக்காலை எட்டுவதான கறுப்பு உடை. எலிவால் போன்றிருந்த சிவந்த முடி ஒரு சரடுகொண்டு நெற்றியுடன் கட்டிவைக்கப்பட்டிருந்தது. வில்லைப்போல் வளைந்த சரீரம்.

ஒரு காலத்தில் லெஸ்லீதுரையின் கையைப் பிடித்துக்கொண்டு கடற்கரையில் காற்று வாங்கப் போய்க்கொண்டிருந்த நீலக் கண்களும் தங்கத் தலைமுடியும் கொண்டிருந்த அழகிதானா இது?

"எனக்குக் கண்ணு தெரியலேப்பா?"

அவள் தாசனைத் தலையிலும் கன்னத்திலும் தடவிப் பார்த்தாள். கண்ணுக்குப் பார்வை இல்லையென்றாலும் அவள் தாசனுக்குக் கேக் செய்து வைத்திருந்தாள். எப்போதும்போல் அழகான கேக். தாசனை கேக் சாப்பிட வைத்துக்கொண்டு அவள் அவனருகில் உட்கார்ந்தாள்.

"கஸ்தோன். . ."

தாசன் முடிக்கவில்லை. கஸ்தோன்துரையைப் பற்றி யார் என்ன விசாரிக்க முடியும்? பாவம், மிஸ்ஸியை எதற்காக வருந்தச் செய்ய வேண்டும்.

கஸ்தோன்துரை பங்களாவின் மாடியில் தன்னுடைய அடைபட்ட அறையில் இருந்தான். காலம் கடந்து கொண்டிருந்தது. துரை இப்போதும் தன்னுடைய அடைபட்ட அறையில்தான். வெளியே இறங்கிப்போய் நெடுங்காலமாகிவிட்டது. ஒருவேளை, அவன் இனி ஒரு போதும் வெளியே வராமலே இருக்க நேரலாம். தன்னுடைய அடைபட்ட அறையிலேயே துரை கடைசி மூச்சை விட நேரலாம்.

மிஸ்ஸியின் வீட்டில் வைத்துத்தான் பாலத்துப் பக்கம் இருக்கும் வாசூட்டியையும் பப்பனையும் தாசன் சந்தித்தது. ரிபப்ளிக் தூணின் அடியில் உட்கார்ந்து அவர்கள் பீடி குடித்தார்கள்.

"இனி உன்னோட திட்டமென்ன?"

வாசூட்டி ஒரு பீடியை நீட்டினான். அதை வாங்கிப் பற்றவைத்துப் புகைவிட்டுக் கொண்டு தாசன் அவர்களுக்கு அருகில் உட்கார்ந்தான்.

"பிரான்சுக்குப் போறதாக இருக்கும், அப்படித்தானே?"

"என்கிட்ட இப்ப ஒண்ணும் கேக்காதே, வாசூட்டி."

காலையில் மூப்பன்துரையின் கடிதத்தைப் பார்த்தது முதல் தலையில் தீ எரிந்தது. ஒருபுறம் நோயாலும் இடர்பாடுகளாலும் அகால முதுமை எய்திய தந்தை மறுபுறம் தன்னுடைய வாழ்க்கையின் அச்சாணிகளான கொள்கைகள்.

"அப்படீன்னா நீ பிரான்சுக்குப் போகலையா?"

வாசூட்டி வியப்பிலாழ்ந்தான்.

"அப்படீன்னா ஸெக்ரத்தாரியாவிலே உத்தியோகம்தான் உனக்குப்பிடிச்சது. . .இல்லையா? நல்லது. இன்னொரு ஸெக்ரத்தேர் கருணன் ஆகலாமில்ல நீ . ."

"வாசூட்டி, நீங்க என்னைப் புரிஞ்சிக்கிடல்லே."

வேறெதையும் பேச விரும்பவில்லை. அந்தி கழியும்வரை பாலத்தில் உட்கார்ந்திருந்தார்கள். இரவு மாஸ்டரின் வீட்டிலிருந்து திரும்பி

வந்தபோது வீட்டில் தன்னைப் பற்றிய பேச்சு நடந்துகொண்டிருப்பதைக் கேட்டான்.

அம்மா கேட்டாள்.

"பிரான்சுக்குப் போய் தாசன் என்ன படிப்பான்?"

"டாக்டருக்கு, இந்த ஊர்லே சீக்கு வந்தா பார்க்குறதுக்கு ஒரு ஆள் இருக்கா?"

கனவுகளுக்கு அதிக வர்ணங்களைத் தீட்டிக்கொண்டிருந்தார்கள் அவர்கள். தாசன் உள்ளே நுழைந்தான். தனக்கு நேராக மேலே நோக்கிய இரண்டு ஜோடிக் கண்களில் எவ்வளவு மகிழ்ச்சி. . .அப்பாவும் அம்மாவும் இவ்வளவு மகிழ்ச்சியுடனிருக்க என்றாவது பார்த்ததுண்டா?

ஆனால் இந்த மகிழ்ச்சிக்கு அதிக ஆயுள் இருக்கப் போவதில்லை. தான் அதை அழிக்கப் போகிறான். அவர்களுடைய விலை மதிப்பில்லா மகிழ்ச்சியை அவர்களிடமிருந்து தான் பறிக்கப் போகிறான். மாறாக அவர்களுக்குக் கண்ணீர் தரப்போகிறான்.

சிலர் அழிய வேண்டும். மெய்யழியின் விதி அது. அயலவரை அழவைப்பதினின்று மாறுபட்டு தனது பெற்றோரையே அழவைக்க வேண்டும். காரணம், அவர்களுடைய கண்ணீர் தன்னுடையதும்தான்.

"காலையிலே பத்து மணிக்குத்தானே மூப்பன்துரையைப் பார்க்கப் போகணும்?"

"அண்ணனோட சட்டையும் வேட்டியும் துவைச்சி நான் இஸ்திரி போட்டுவச்சிருக்கேன்."

எதுவும் பேசாமல் குனிந்தபடி சாப்பிட்டான். குறம்பியம்மா தாசனுக்கு அருகே சென்று நின்று அவனுடைய தலையைத் தடவிக்கொடுத்தாள்.

"கப்பல்லேதானே நீ போவே? ஏழு கடல் கடந்து. . . ."

இரவு முழுவதும் தூக்கமில்லை. புகைத்துமுடித்த பீடிகளுக்குக் கணக்கில்லை. காலையில் தூக்கச்சடவான கண்களுடன் அப்பாவுக்கு முன் சென்று நின்று அமைதியாகச் சொன்னான்.

"நான் பிரான்சுக்குப் போகலேபப்பா. . . ."

ரைட்டர் திகைத்து நின்றார்.

"ஸெக்ரத்தாரியாவிலே வேலையும் வேணாடாம்னு நினைக்கிறேன்."

அமைதியைக் கைவிடாமல் பேசினான். தந்தை ஒரு சிலையைப்போல் இருந்தபடி எல்லாவற்றையும் கேட்டார். ஆழ்ந்த நிசப்தம் அங்கே திரண்டு வந்தது. சிறிது நேரம்கழித்து உள்ளேயிருந்து அம்மா விம்மி அழுவது கேட்டது.

கண்ணீரின் முடிவறியாத பிரவாகம்தொடங்கியது. எனக்கு சக்தியை அருள்வாயாக. . .

# 16

தாசன் மூப்பன்துரையைச் சந்திக்க மறுத்தான் என்பதை அறிந்தபோது ஊரார் மூக்கின்மேல் விரல் வைத்தார்கள். யாரும் இதுவரை காட்டியிராத ஓர் இறுமாப்பு அல்லவா அது? மூப்பன்துரையை ஒரு பார்வை பார்ப்பதற்காக வேண்டி, அவருடைய வாயிலிருந்து உதிரும் ஒரு வார்த்தையைக் கேட்பதற்காக வேண்டி, ஆசையில் துடிப்பவர்களல்லவா

மய்யழி மக்கள்?

"அவனை ஒரு பெரிய நெலமையிலே பார்க்கணும்னு காத்திருந்தாரு அந்த ரைட்டர். அவராலே இதை எப்படிப் பொறுத்துக்க முடியும்?"

லீலாவுக்கும் தாளாத துயரம் ஏற்பட்டது. அவளுக்கு தாமுரைட்டரின் நிலைமை நன்றாகவே தெரியுமல்லவா?

"தாசனோட தீர்மானம் தாமுரைட்டரோட குடும்பத்துக்கு ஒரு பெரிய நஷ்டம்தான். ஆனால் இந்த ஊருக்கு அது ஒரு சொத்து."

குஞ்ஞனந்தன் மாஸ்டரின் மரண நிழல்படிந்த கண்களில் மகிழ்ச்சி தெளிவாகத்தெரிந்தது.

"குஞ்ஞனந்தா, உன்னைத்தான் ஊர்க்காரங்க குத்தம் சொல்றாங்க. நீதான் தாசனைவச்சி இதெல்லாம் செய்ததுன்னு பேசிக்கிறாங்க."

"அந்தக் குத்தத்தை ஏத்துக்கிடுறதிலே எனக்கு சந்தோஷம்தான்."

"குஞ்ஞனந்தா உண்மையைச் சொல்லு, நீ சொல்லியா தாசன் இப்படிச் செஞ்சது?"

"இல்லே, என்னைவிடப் படிப்பும் விவரமும் உள்ளவன்ல அவன்?"

லீலா எதுவும் பேசாமல் நின்றிருந்தாள்.

"தாசன் இன்னமும் வேடிக்கை காட்டுவான். லீலாக்கா, அவன் இந்த ஊரோட தலையெழுத்தை மாத்தி எழுதுவான், நீங்கள்ளாம் அதைப் பார்க்கப்போறீங்க..."

தன்னைப் பற்றி நினைக்கும்போது மாஸ்டரின் மனம் வேதனைப்படும். ஆனாலும் தாசனின் தீர்மானத்தில் மாஸ்டர் மகிழ்ச்சியடைந்தார். அவர் இனி நிம்மதியாகக் கண்ணை மூடலாம்தான். தொடங்கி வைத்ததை தாசன் தொடர்வான். தன்னுடைய கால்சுவடுகளை அவன் பின்தொடர்வான்.

தாசனுடைய தீர்மானத்தில் மிகவும் அதிக மகிழ்ச்சியடைந்த மற்றொரு நபர் வாசூட்டி. அவனுக்கு தாசனைப் பற்றிய எல்லா சந்தேகங்களும் தீர்ந்தன.

வாசூட்டியும் பப்பனும் தாசனைத் தேடி வீட்டிற்குச் சென்றார்கள். ரைட்டரின் வீட்டில் அரவம் எதுவும் இல்லை. யாரோ காலமாகிவிட்டது போல. ஓர் இழவு வீடுபோல. ரைட்டரின் சாய்வு நாற்காலி வெறுமையாய்க் கிடந்தது.

"இங்கே யாரும் இல்லியா?" வாசலில் நின்றபடி வாசூட்டி குரல் கொடுத்தான். சிறிது நேரம் யாரும் குரலைக் கேட்கவில்லை. கடைசியில் கிரிஜா கதவுக்குப்பின்னால் வந்து நின்று தகவல் தெரிவித்தாள்.

"அண்ணே இங்கே இல்லே."

"எங்கே போயிருக்கிறாப்பிலே?"

"தெரியலே."

கிரிஜாவின் கண்களிலும் கன்னங்களிலும் கண்ணீர் வழிந்த சுவடுகள். தாசன் காலையிலேயே வெளியே போனவன். சாப்பிட வரவில்லை. வந்த பிறகுதான் எல்லோரும் சாப்பிடுவதாயிருக்குமோ? அன்று வீட்டில் அடுப்பு புகையவில்லை.

வாசூட்டியும் பப்பனும் தாசனைப் பல இடங்களிலும் தேடினார்கள். தாசன் வழக்கமாகச்செல்வதான ரிபப்ளிக் நினைவுத்தூண், கடற்கரை, நூலகம். . . எங்குமே தென்படவில்லை.

"அவன் எங்கேயாவது போய் மனசிலே எரிகிற தீயை அணைக்க வழி தேடிக்கிட்டிருப்பான்" பப்பன் சொன்னான். "நாம அவனை சும்மா விட்டிறக்கூடாது."

அவர்கள் அதற்குப் பிறகு தாசனைத் தேடிப் போகவில்லை.

தாசன் இன்று மற்றொரு நபராலும் தேடப்பட்டுக் கொண்டிருந்தான்-சந்திரிகா. முதன் முதலாகத் தாவணி உடுத்தியிருந்த நாள் அது. வெள்ளைப் பாவாடைக்கு மேல் சிவப்புத் தாவணி. நெற்றியில் கறுத்த சாந்துப் பொட்டு. ரிப்பனால் இறுக்கிக் கட்டிய கூந்தல். கண்ணாடிக்கு முன்பாகச் சென்று நின்றபோது அவள் தாசனை நினைத்துக்கொண்டாள்.

மொட்டைக் குடையும் புத்தகங்களும் எடுத்துக்கொண்டு பள்ளிக்கூடத்திற்குப் புறப்பட்டாள். கோயில் வாசலைச் சென்றடைந்ததும் மௌனமாய்ப் பிரார்த்தித்துக்கொண்டாள்.

"வழியிலே தாசனைப்பார்க்கிறாப்பிலே சந்தர்ப்பம் உண்டாகணும் கடவுளே...!"

ர்யூ த் லாகாரிலிருந்து அவள் ர்யூ த் லெக்லீஸுக்குப் போனாள். அது மய்யழியின் பிரதான சாலை. தலைச்சேரியையும் வடகரையையும் இணைக்கும் சாலை. அங்கேதான் புனித கன்னிமேரியின் ஆலயமும் விஞ்ஞானபோஷினி நூலகமும்

நூலகத்தின் வாசலைச் சென்றடைந்தபோது தன்னியல்பாகக் கண்கள் அந்தத் திசையில் திரும்பின. இல்லை, தாசன் இல்லை.

தலை நிமிராமலே இருபுறமும் கவனித்துக்கொண்டு சந்திரிகா நடந்தாள். சாணைபிடித்த கத்தியுடன் வேட்டியை மடித்துக் கட்டிக்கொண்டு நடந்துவரும் அச்சு. தோளில் ஏணியும் கையில் மண்ணெண்ணெய் டின்னுமாய் நொண்டிக்கொண்டு வரும் குஞ்சக்கன். நல்ல காலைப்பொழுதிலே சாராயக்கடைக்குச் சென்றுவிட்டு நிலை தடுமாறி நடக்கும் போலீஸ்காரர்... அவ்வாறு பலரை அவள் பார்க்க நேர்ந்தது. தாசன் மட்டும் காணவில்லை.

ர்யூ த் லா ப்ரிஸோனில்தான் சந்திரிகாவின் பள்ளிக்கூடம். பள்ளிக்கூடத்தின் அருகே சென்றதும் அவள் நடையை நிதானப்படுத்தினாள்—பாலத்தில்எங்கேயாவது தாசன் இருக்கலாமோ?

வாடிய முகத்துடன்தான் அவள்வகுப்புக்குள் நுழைந்தாள்.

"தாசன் வந்திருந்தாரம்மா?"

நண்பகல் பள்ளிக்கூடத்திலிருந்து வந்தபோது அவள் விசாரித்தாள்.

"இல்லையே."

சந்திரிகா கிணற்றடிக்குச் சென்று முகம் அலம்பி வந்து ஒப்புக்குச் சாப்பிட்டு முடித்தாள். பசி எடுக்கவில்லை. இரண்டு மணிக்கு மறுபடியும் பள்ளிக்கூடம் போகவேண்டும். நல்லவெயில், ஆலயத்தின் உச்சியில் சிலுவை வாள்முனை போல மின்னிக் கொண்டிருந்தது.

நூலக வாசலைச் சென்றடைந்தபோது கண் தானாகவே சற்றே திரும்பிப் பார்த்தது. நூலகம் வெறிச்சோடிக் கிடந்தது. இந்த நட்ட நடு வெயிலில் அங்கே யார் வருவார்கள்?

சாயங்காலம் பள்ளிக்கூடம் விட்டதும் வழக்கத்திற்கு மாறாக அவள் வழிமாறி நடந்தாள். பாலத்தில் தாசனைப் பார்க்கலாம் என்ற எண்ணத்தில் போனாள். ர்யூ த் றஸிதாம்ஸில் நடக்கத் தொடங்கியபோது

மனது துடித்தது. ரிபப்ளிக் நினைவுத்தூணின் நிழலில் பப்பனும் வாசூட்டியும் உட்கார்ந்திருந்தார்கள். பார்க்க வந்த ஆள்மட்டும் இல்லை!

அதன் பிறகு அவள் நடந்தது-தாசனின் வீட்டை நோக்கி. கிரிஜாவைப் பார்க்க வந்ததாகச் சொல்லிக்கொள்ளலாம். தாசன் நிச்சயம் அங்கேதான் இருப்பான்—அவள் நம்பினாள். பாலத்திலும் நூலகத்திலும் காணவில்லை. பின்னே எங்கேதான் போயிருக்க முடியும்?

சந்திரிகாவின் குரல்கேட்டு கிரிஜா வெளியில் வந்தாள். கறுத்துப் போயிருந்த முகம். சிரிக்க முயன்றபடி அவள் கேட்டாள். "எப்போ தாவணி போட ஆரம்பிச்சே?"

"இன்னிக்குத்தான்"

ஓரக்கண்ணால் தாசனின் அறையை நோட்டம் விட்டாள். கட்டிலில் கவிழ்ந்து கிடக்கும் ஒரு தடிமனான புத்தகம். புத்தகம் வாசிக்கும் ஆள் மட்டும் காணோம்.

"உக்காரு."

கிரிஜா நாற்காலியைச் சுட்டிக் காட்டினாள். கௌசுவம்மாவையோ குறும்பியம்மாவையோ வெளியில் காணோம், ரைட்டரும்தான். அவர் கோர்ட்டுக்குப் போயிருக்கமாட்டார். நரைத்த குடை கதவின்மேல் தொங்கிக்கொண்டிருந்தது. ரைட்டரின் வீட்டில் துக்கத்தின் கிரகணம் பிடித்திருந்தது. சுவாசிக்கும் காற்றில் கண்ணீரின் உப்புக்கரிப்பும் சேர்ந்திருந்தது.

ஆனால் சந்திரிகாவுக்கு அதெல்லாம் தெரியாது. தாசன் வீட்டில் இல்லையென்று தெரிந்தபோது அழுகை வந்தது.

உட்காரவில்லை. வந்த காலுடனேயே திரும்பிவிட்டாள். கிரிஜா அதைப் பார்த்து ஆச்சரியப்பட்டாள்.

வாடிய முகத்துடனும் கலைந்த கூந்தலுடனும் வீட்டிற்குத் திரும்பினாள். அம்மா கேட்டாள்.

"எங்கே போயிருந்தே நீ? மணி அஞ்சிக்கு மேலாச்சே?"

"நான் கிரிஜா வீட்டுக்குப் போயிருந்தேன்."

"நீ இப்போ எதுக்கு அங்கே போனே?"

அவர்கள் ஆற்றாமைப்பட்டார்கள். கிரிஜாவின் வீடு ஓர் இழவு வீடல்லவா? அவர்களுடைய துக்கத்தில் பங்கேற்க யாரால் முடியும்?

"தாவணியை அவுத்திரு சந்திரி" அந்திப்பொழுதானபோது அம்மா சொன்னாள். "வீட்டிலே தாவணியெல்லாம் வேண்டாம், பாவாடை போதும், அவ்வளவுக்குப் பெரியவளாயிரல்லே நீ."

சந்திரிகா பள்ளிக்கூடத்திலிருந்து வந்த அதே உடையில் சாலையைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

உள்ளே கணாரனும் குஞ்ஞனந்தன் மாஸ்டரும் உட்கார்ந்து என்னவோ உரக்கப் பேசிக்கொண்டிருந்தார்கள். கொஞ்சம் கழித்து வாசூட்டியும் பப்பனும் சேர்ந்து வந்தார்கள்.

"எப்பம்மா தாவணி உடுத்த ஆரம்பிச்சே?"

ஆள் நடமாட்டமில்லாத சாலையைப் பார்த்துக்கொண்டிருந்த சந்திரிகாவுக்கு பப்பன் கேட்டது காதில் விழவில்லை.

"தாவணியை நீ இன்னும் அவுத்து வைக்கலையா?"

இரவு சாப்பிட உட்காரும்போதும் ஒருமுறை அம்மா நினைவுபடுத்தினாள். அப்போதும் அவள் எதுவும் பேசவில்லை. புகை

பிடித்த முனிசிபல் விளக்கின் வெளிச்சம் பரவிக் கிடந்தது. இருட்டில் கண்பதித்து நிசப்தம் குடிகொண்டிருந்தது.

மாஸ்டரின் வீட்டில் இரண்டு தளங்கள் உண்டு. சந்திரிகாவின் அறை மாடியில். சாப்பிட்ட பிறகு அவள் தன்னுடைய அறைக்குப் போய் உட்கார்ந்தாள். மடியில் திறந்து வைத்த புத்தகத்தில் கவனம் பதியவே இல்லை. கீழே யாருடைய குரலாவது கேட்டால்திடுக்கிட்டு எழுந்து பார்ப்பாள்.

வெளியில் முனிசிபல் விளக்குகள் அணைந்துவிட்டன. தொலைவில் எங்கேயோ சாமக்கோழிகள் கூவின. கடைசியில் தாவணியை அவிழ்த்து வைத்துவிட்டுப்படுத்தாள். இருட்டில் தலையணையில் கன்னம் புதைத்து அவள் அழுதாள்.

தாசனுக்காக அவளுடைய கண்களிலிருந்து வழிந்த முதல் கண்ணீர்.

# 17

ப்ருகாதியே வெங்கய்யா இடமாற்றலாகிப் போனபோது பதிலாக வந்தவர் ப்ருகாதியே செட்டியப்பா. பாண்டிச்சேரியிலிருந்து அரிசி ஏற்றிவந்த ஒரு சரக்குக் கப்பலில் அவர் மய்யழியில் வந்திறங்கினார். புதிய ப்ருகாதியேவை வரவேற்க அந்த்ருப்போலீசின் தலைமையில் சில போலீசாரும் அடியாட்களும் துறைமுகத்திற்கு வந்திருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் அச்சுவும் இருந்தான்.

ப்ருகாதியே செட்டியப்பா தடித்துக் கொழுத்தவர். காக்கி உடைக்குள்ளிருந்து வெளியில் துருத்திய தொப்பை. கருந்தேக்கின் அண்டங்கறுப்பு. ஒளிரும் பற்கள். அந்த்ருவின், அச்சுவின் துணையுடன் தினமும் சாயங்காலம் செட்டியப்பா நடப்பதற்காகச் செல்வார். தொப்பையைச் சுற்றி சரிகை முண்டு. இளம் மஞ்சள் நிறத்தில் சில்க் சட்டை, அத்துடன் கழுத்தில் தங்கச் செயினும் விரல்களில் மோதிரங்களும்... அவர் கட்டுக்கதைகளில் வந்த குபேரன்செட்டியாரை நினைவுபடுத்தினார்.

செட்டியப்பாவும் நண்பர்களும் நடந்து நடந்து ர்யூ த் லா ஸெமித்தியேரைச் சென்றடைந்தார்கள். அங்கேதான் பேண்டுக்காரன் கணாரியின் வீடு. வாசலில் தென்னை மரத்தின்மீது சாய்ந்தபடி கணாரியின் மனைவி நாணி புதிய ப்ருகாதியேவை மரியாதையுடன் பார்த்தபடி நின்றிருந்தாள். அருகிலேயே மகள் தேவியும். இரண்டு பேருக்கும் சுண்டினால் இரத்தம் தெறிக்கும் உடல்வாகு.

கணாரியின் வீட்டின் அருகில் சென்றபோது ப்ருகாதியேவின் நடையில் வேகம் குறைந்தது. பின்னால் வந்துகொண்டிருந்த அந்த்ருவை அவர் நேரடியாகக் கேட்டார்.

"யாருய்யா அந்தப் பொம்பளே?"

"மதாம் கணாரி."

அந்த்ரு மரியாதையுடன் தெரிவித்தார். கணாரி யாரென்று அச்சு விவரமாகச் சொன்னான். செட்டியப்பா மதாம் கணாரியை ஒட்டுமொத்தமாகப் பார்த்தார்.

துணைவர்களோடு நடந்து போகும்போது ஓரிரண்டு தடவை செட்டியப்பா திரும்பிப்பார்த்தார். அந்த ஊரில் இருந்த ஒரே ஒரு

பேண்டு வாத்தியக் குழுவில் குழல் ஊதுபவனாக இருந்தான் கணாரி. அவன் வெள்ளைக்காரனோ சட்டைக்காரனோ அல்ல. அரசாங்க வேலை பார்க்கும் பிரமுகனும் அல்ல. ஆனாலும் கால்சராயும் கோட்டும்தான் அணிவான். தொப்பியும்கூட. வேட்டி கட்டி அவனை யாரும் பார்த்ததில்லை. மெலிந்து நலிந்த கணாரி, துரையின் வேஷத்தில் ஒரு கண்காணிப்பாளனைப் போல இருந்தான். மய்யழியில் எங்கேயாவது எப்போதாவது மரணமோ கல்யாணமோ நிகழும்போது கணாரிக்கு வேலை இருக்கும். தினமும் காலையில் தன்னுடைய ஊதுகுழலை எடுத்துத் தோளில் மாட்டிக்கொண்டு கணாரி வெளியில் வருவான். நேராக உண்ணிநாயரின் கள்ளுக்கடைக்குத்தான் போவான். திரும்பி வருவது நள்ளிரவாகத்தான் இருக்கும். சிறிது நேரம் ஊதுகுழலில் ப்ராக்டீஸ் செய்வான். சாமக்கோழி கூவும்வரை தினமும் காதடைக்கும் குழல் சத்தத்தை மய்யழி மக்கள் கேட்பார்கள்.

ந்யூ த் ஸிமித்தியேரில் ஒரு மாடியை வாடகைக்கு எடுத்து செட்டியப்பா அதில் குடியிருக்கத் தொடங்கிய நாள். கணாரியின் கடூரமான குழல்சத்தம் காரணமாக இரவு செட்டியப்பாவுக்கு ஒரு பொட்டுகூடக் கண்மூட முடியவில்லை.

கோபக்காரச் செட்டியப்பா காலையில் அந்த்ருவிடம் கட்டளையிட்டார்.

அன்றிரவு எத்தனையோ வருடங்களுக்குப் பின்னர் முதன்முதலாக மய்யழிமக்கள் கணாரியின் குழல் சத்தத்தைக் கேட்கவில்லை.

விஷு கழிந்தது. வைகாசி வந்தது. காற்றும் தூறலும். யாரும் கல்யாணம் செய்யவில்லை. யாரும் சாகவில்லை. ஒரு சொட்டுக் கள்ளுக்குக்கூட வகையில்லாமல் கணாரி திண்டாடினான. எப்படியாவது ஒரு சட்டைக்காரனோ மீன்பரவனோ பரலோகம் போகவேண்டும். இல்லேயேல் கணாரிக்கு விடிவில்லை. நின்று பெய்யும் மழையில் கண்ணைப்பதித்து கணாரி திண்ணையில் உட்கார்ந்திருந்தான். உடனே சாக இருப்பவர்களின் கணக்கெடுப்பதில் முனைந்தான் அவன். உடனடியாக சாக இருக்கும் ஒரே நபர் தோமாதுரைதான். அவர் நீரிழிவு பாதித்து படுக்கையில் விழுந்து நெடுங்காலமாகிவிட்டது.

"தோமாதுரையைக் கொண்ணு சாகடிச்சிட்டியானா பன்னிரண்டு மெழுகுவத்தி."

தேவாலய உச்சியில் மழையில் குளித்துக்கொண்டிருந்த சிலுவையில் கண்பதித்து கணாரி நேர்ந்துகொண்டான்.

மழை கொட்டிப் பெய்தது. தன்னுடைய குழலைக் கட்டிச் சுருட்டி கணாரி முகப்பில் முடக்கிவைத்திருந்தான். உறக்கம் வரவில்லை. அரை புட்டிக் கள்ளாவது உள்ளே போனாலொழிய உறக்கம் வராது. அப்படி முடங்கிக் கிடந்தபோது கணாரிக்கு ஓர் அசரீரி கேட்டது. தோமாதுரை விடிவதற்கு முன்னால் சாவார். அப்படியானால் நாளை நாலு காசு கைக்குவரும்.

அசரீரி கேட்டு கணாரி திடுக்கிட்டெழுந்தான். அவன் தன்னுடைய தைத்துச் சீராக்கிய, பித்தளைப் பொத்தான்கள் பொருந்திய கோட் எடுத்து மாட்டிக்கொண்டான். தொப்பி வைத்துக்கொண்டான். குழலை எடுத்துத் தோளில் தொங்கவிட்டான்.

"நான், நான் போகணும்."

"எங்கே இந்தக்காலங்கார்த்தால? கள்ளுக்கடை தெறக்கிறது இந்தக் காலங்கார்த்தாலேயேவா?"

பாயில் படுத்து உறங்கிக்கொண்டிருந்த நாணி கேலி செய்தாள்.

"தோமாதுரை செத்துருவாரு."

"யாரு செத்தா என்ன... மத்தவங்களுக்கு என்ன லாபம்?"

தோமாதுரை செத்தால் கணாரிக்கு வேலை கிடைக்கும். ஆனால் கையில் கிடைக்கும் முழுவதையும் கடைக்கல்லவா கொண்டுபோய்க் கொடுத்து விடுவான்? லாபம் கடைக்காரருக்குத்தான். நாணி பாயில் திரும்பிப் படுத்தாள்.

"எங்கேப்பா கணாரி?"

ஈரமான சாலையில் கையில் மண்ணெண்ணெய் டின்னும் தோளில் ஏணியுமாய்க் குஞ்சக்கன் நொண்டிக்கொண்டு வந்தான்.

"நம்ம தோமாதுரை செத்தாச்சா?"

"நல்லதாப்போச்சி, கெடந்து நரக வேதனைப்பட்டாரில்ல? இப்போவாச்சும் மாதாவுக்கு தயவு தோணிச்சே—கூப்பிடுறதுக்கு."

குஞ்சக்கன் பெருமூச்சு விட்டான்.

கணாரி அதிகம் பேசிக்கொண்டிராமல் பேண்டுமாஸ்டர் பத்ரோஸின் வீட்டை நோக்கி சென்றான். உள்ளே சுவருடன் சாய்ந்திருந்த பெரிய பேண்டு இருந்தது. அதன் மேற்புறமாகச் சுவர்மீது சட்டமிட்ட கன்னிமேரியின் படமும் அணையா விளக்கும்.

"என்ன கணாரி, விசேஷம் ஏதாச்சும் இருக்கா?"

பத்ரோஸின் வீட்டிலும் அடுப்பு புகையாமல்தானிருந்தது. கணாரியைப் பார்த்து அவனுடைய கண்கள் மின்னின

"நம்ம தோமாதுரை செத்திட்டாரு."

பத்ரோஸ் அணையாவிளக்குக்கு நேராகத் திரும்பி நின்று நெஞ்சில் சிலுவையிட்டான். அவனும் அவசரமாகத் தன்னுடைய கோட்டும் கால்சராயும் எடுத்துப் போட்டுக்கொண்டான். பேண்டை எடுத்து முதுகில் தூக்கிக்கொண்டான்.

கணாரியும் பத்ரோசும் சேர்ந்து பேண்டு குழுவின் மற்றவர்களையும் கூட்டிக்கொண்டு வேகமாகத் தோமாதுரையின் வீட்டுக்குச் சென்றார்கள். மழை அப்போதும் தூறிக்கொண்டிருந்தது. பாலம் நிறைய வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. அதில் அழுகத் தொடங்கிய எண்ணற்ற சிவந்த கோய்யேத்திப் பூக்கள்.

வேகவேகமாக வரும் பேண்டுக்காரர்களைப் பார்த்து தோமாதுரையின் நாய் குரைத்துக்கொண்டு வந்தது. தோமாதுரையின் மகன் மோஸேப்துரை வெளியில் வந்தார்.

"என்ன?"

வாசலில் வரிசையாய் நின்றிருந்த பேண்டுக்காரர்களைப் பார்த்து மோஸேப்துரை திகைத்தார்.

"தோமாதுரை சாகலே?"

கணாரி திக்கித் திணறினான்.

மோஸோப்துரை கையை ஓங்கிக்கொண்டு வாசலுக்கு ஓடி வந்தார். கட்டவிழ்க்கப்பட்ட நாய் குரைத்து அலறியது —

அதற்குப்பிறகு என்ன நடந்ததென்று கணாரிக்கு நினைவில்லை.

விவரமறிந்த உன்னிநாயர் உரத்துச்சிரித்தார். அவருக்குக் கணாரி

மீது அனுதாபம் உண்டாயிற்று. ஒரு மூலையில் முழங்கை ஊன்றிக் குந்தியிருந்த கணாரிக்கு அன்று அவர் இலவசமாகக் கள் கொடுத்தார்.

சாயங்காலம் மழை இல்லை. ஈரமான சாலையில் கதகதப்பான வெயில் கதிர்கள் படர்ந்து கிடந்தன. அப்போது கணாரியின் வீட்டிற்கு முன்பாக ப்ருகாதியே செட்டியப்பா தோன்றினார். பட்டாடையும் இருநான்கு எட்டு விரல்களில் தங்க மோதிரங்களும் காலில் ஓசை எழுப்பும் செருப்பும்.

"மதாம் கணாரீ, மதாம் கணாரீ. . . . "

செட்டியப்பா ஈனக்குரலில் கூப்பிட்டார். நாணி மகளின் தலையின் பேன்பார்த்துக் கொண்டிருந்தாள். ஈர்வானின் மரப்பற்களுக்கிடையே நசுக்குறும் பேன் குஞ்சுகள்.

"மொஸ்யே கணாரி இருக்குதா?"

"ப்ருகாதியேவா?"

நாணி மரியாதையுடன் எழுந்து நின்றாள். தேவி அவளுக்குப் பின்னால் ஒளிந்தாள்.

"தேவியோட அப்பா இங்கே இல்லே."

காலையில் தோமாதுரையின் வீட்டுக்குப் போயிருந்த கணாரி இன்னும் திரும்பி வரவில்லை. கணாரி நாணியின் கணவன் தானென்றாலும் அவர்களுக்கிடையே எந்த உறவும் இல்லையென்று சொல்லலாம். அவர்கள் அரிதாகவே பேசிக்கொண்டார்கள். கணாரி வாசலில்தான் படுத்திருப்பான். அக்கம்பக்கம் சென்று ஓலை முடைந்து கொடுத்தும் துணி துவைத்துக் கொடுத்தும் எல்லாம் செய்துதான் நாணியும் மகளும் பிழைப்பு நடத்தினார்கள்.

செட்டியப்பா வாசலில் நுழைந்தார். அவர் நாணியுடன் ஊர் விவகாரங்களைப் பேசிக்கொண்டிருந்தார். செட்டியப்பாவுக்கு அவளிடம் மயக்கம் தொடங்கித் தொடர்ந்தது. போகும் நேரத்தில் அவர் தேவியை அருகில் அழைத்து தன்னுடைய பெரிய தோல் பர்ஸைத் திறந்து ஒரு ரூபாய் எடுத்துக் கொடுத்தார்.

"படிக்கிறியா?"

"இல்லே."

"படிக்க வேணாமா?"

"உம்."

தேவி பணம் வாங்கிக்கொண்டு அம்மாவின் பின்புறம் ஒட்டிக்கொண்டாள். ஒரு ரூபாயின் பச்சை நோட்டு! அவளால் நம்ப முடியவில்லை.

மறுநாள் செட்டியப்பா கணாரியைத் தன்வீட்டுக்குக் கூப்பிட்டனுப்பினார். அவன் பயந்தான். குழல் வாசிக்கக் கூடாது என்று கட்டளையிட்ட நாளிலிருந்து கணாரிக்குச் செட்டியப்பாவிடம் பயம். ப்ருகாதியேவின் அருகில் சென்றபோது கால்கள் விறைத்து ஒன்றுக்கொன்று முட்டிமோதிக்கொண்டன.

"ட்ரம்ப்பெட் வாசிக்கக் கூடாதுன்னு நான் உன்கிட்ட சொன்னேனில்ல? எனக்குரொம்ப வெக்கமா இருக்குது?"

பல் முழுக்கச் சிரிப்பாகச் செட்டியப்பா மாடிப்படி இறங்கி வந்தார்.

"ட்ரம்ப்பெட் வாசிச்சிக்கோ."

செட்டியப்பா . தடையுத்தரவைத் திரும்பப் பெற்றுக்கொண்டார். கணாரியின் பயம்போயிற்று. செட்டியப்பா மீண்டும் தன்னுடைய பெரிய தோல் பர்ஸைத் திறந்தார். கணாரி உற்சாகத்துடன் உன்னிநாயரின் கடைக்குப் போக முடிந்தது.

அன்றிரவு மய்யழியின் மக்கள் மீண்டும் கணாரியின் குழல் சத்தத்தைக் கேட்டார்கள்.

ஒரு நாள் குறம்பியம்மா ஒரு காட்சியைப் பார்த்தாள். எதிரில் பட்டு ஜிப்பா அணிந்து, ஓசை எழுப்பும் செருப்பணிந்து, தொப்பையைக் குலுக்கிக்கொண்டு, ப்ருகாதியே செட்டியப்பா. பின்னாலேயே, மஞ்சள் சேலையுடுத்தி செருப்பும் போட்டுக்கொண்டு, தலையில் பூச்சூடிய நாணி.

"நீ எங்கே போறே நாணி?"

"சினிமாக்கு."

நாணி பெருமையுடன் சொன்னாள். அந்தச் சமயத்தில்தான் நாரங்காபுரத்திற்கு சினிமா வந்திருந்தது

குறம்பியம்மா இதுவரை சினிமா பார்த்ததில்லை. மய்யழி மக்களில் எத்தனை பேருக்கு சினிமா பார்க்கக் கொடுத்து வைத்திருந்தது?

"நல்ல காரியத்தைச் செய்யி."

குறம்பியம்மா யானைத் தந்தத்து டப்பி திறந்து ஒரு நுள்ளல் பொடி எடுத்து உறிஞ்சினாள்.

# 18

தாசன் ஜன்னல் அருகே நின்று வெளியே பார்த்துக்கொண்டிருந்தான். கதகதப்பான அந்திவெயிலில் மய்யழி மூழ்கியிருந்தது. தேவாலயத்திலிருந்து அமைதியும் கம்பீரமுமான மணியோசை முழங்கியது.

மய்யழி ஆற்றின் அக்கரையின் கூடுகளை நோக்கிக் கிளிகள் பறந்து போயின.

உறங்கி உறங்கிக் கண்கள் வீங்கியிருந்தன. பாண்டிச்சேரியிலிருந்து வந்து ஆறு மாதங்கள் கழிந்துவிட்டன. வந்ததிலிருந்து முக்கிய வேலை இதுதான்—உறக்கம். இல்லாவிட்டால் ஜன்னல் அருகில் புகை பிடித்துக்கொண்டு இப்படி நின்றுகொண்டிருப்பது. பலவற்றை யோசித்துக்கொண்டு இப்படிநிற்கும்போது மணிக்கணக்காகக் காலம் கடந்துபோகும். பீடியைப் புகைத்துப் புகைத்து நெஞ்சு வலிக்கத் தொடங்கியிருக்கிறது.

"வந்தது வந்தாச்சி, வருத்தப்பட்டு என்ன பலன்!"

ஒரு நாள் அம்மா அருகில் வந்து நின்றாள். மகன் படும் வேதனையை அவள் பார்த்துக் கொண்டிருந்தாள். எதற்காகத் தாசன் பிரான்சுக்குப் போகாமல் இருந்துவிட்டான் என்று கௌசுவம்மாவுக்கு இப்போதும் புரியவில்லை. ஆனால் ஒன்று அவளுக்குத் தெரியும். தாசன் அப்படிச் செய்கிறான் என்றால் அதற்குப் பின்னால் ஏதாவது காரணம்இருக்கும். தன்னுடைய மகன் தவறு செய்ய மாட்டான். அதில்அவளுக்கு நம்பிக்கை இருந்தது. அதுதான் அவளுக்கு நிம்மதியைத் தந்தது.

"அண்ணே, ஏன் தாடி சவரம் பண்ணாம, குளிக்காம இருக்கே?

தண்ணி விளாவி வைக்கட்டா?"

அம்மாவுக்குப் பின்னாலேயே வந்த கிரிஜா கேட்டாள். தாசன் கொடுத்த அடியிலிருந்து முதலில் மீண்டெழுந்தவள் அவள்தான். அண்ணன் பிரான்சுக்குப் போய் பெரிய ஆளாக வருவதைக் காண அவளுக்கும் ஆசையாக இருந்தது. மனக்கோட்டைகள் கட்டியிருந்தாள். வீடு ஒரு சாவுக்கூடமாக ஆனபோது, கிரிஜாவின் கண்களும் நீரைப்பொழிந்தன. ஆனால் எல்லாவற்றையும் உடனுக்குடன் மறந்தாள். அவளுடைய கண்கள்தாம் முதலில் தேறின.

"போ, போயி குளிச்சிட்டு வா"

அம்மாவும்சொன்னாள்.

"சாப்பிடவோ குடிக்கவோ எதுவும் செய்யாம இருந்து உடம்பைக் கெடுத்துக்காதேப்பா!"

நினைத்தபோது வெளியே போவான். நினைத்தபோது திரும்பி வருவான். இப்படி நடந்து கொள்வதால் என்ன பலன்?

அவ்வாறாக நான்கைந்து நாட்களாக முகம் மழிக்காதிருந்தான். கிரிஜா அண்டாநிறையத் தண்ணீர் விளாவி வைத்தாள். மண்ணின் மணமும் சுற்றாழையின் குளுமையுமான தண்ணீர். தாசன் குளித்து முடித்து வரும்போது கிரிஜாவின் கடைக்கண்ணில் சிரிப்பைக் கண்டான்.

"அண்ணன் ஸ்டைலா இருக்கிறாப்பில."

பீடியின் மணமும் வியர்வையின் மணமும் பரப்பும் ஆணைப் பற்றிக் கனவு காணும் அவள், அண்ணனை ஆராதித்திருந்தாள். தாசனின் அடர்வான மீசையும் கண்களின் திடநோக்கும் அமைதியான பேச்சுமுறையும் அவளுக்குப் பிடித்துப்போயிருந்தன. அண்ணனுக்கு மனைவியாக வரப்போகிறவள் என்ன பாக்கியம் செய்திருக்க வேண்டும்.

அப்போது அவளுக்குச் சந்திரிகாவின் நினைவு வந்தது. கிரிஜா அவளுடைய மனதைத் தெரிந்து வைத்திருந்தாள்.

"என்னோட அண்ணனைக் காதலிக்கிறியோ?"

ஒரு நாள் கேட்டாள்.

கிரிஜா அண்ணனின் சட்டையையும் வேட்டியையும் இஸ்திரிப் போட்டுக் கொடுப்பாள். பீடி புகைக்க அடுப்படியிலிருந்து நெருப்புக்கங்கு கொண்டு வந்து தருவாள். தாசன் வீட்டில் இருக்க நேர்ந்தால் இடையிடையே வந்து டீ வேண்டுமா என்று கேட்பாள். கௌசுவம்மாவும் மகனுடைய விஷயத்தில் அதிக கவனம்செலுத்தினாள். அவ்வாறாகப் படிப்படியாகக் கண்ணீரின் ஈரம் அந்த வீட்டிலிருந்து மறையத் தொடங்கியது.

ஆனாலும் எல்லோரிடத்திலும் உள்ளுக்குள் உள்ளாக வேதனை வடுக்கொண்டிருந்தது. அந்த வேதனைக்கும் முடிவு கிடைக்குமா? வெளியில் அதைக் காட்டிக்கொள்ளாமல் தாமுரைட்டரின் குடும்பம் வாழ்ந்து கொண்டிருந்தது.

படிப்படியாக தாசனின் வீட்டில் சந்தடியும் சலனமும் ஏற்படலாயின.

தாமுரைட்டர் மட்டும் தாசனைப் பற்றிய சோகத்திலிருந்து மீளவில்லை. அதற்குப் பிறகு அவர் சிரித்து யாரும் பார்க்கவில்லை. சில நாட்கள் ஜலதோஷமும் காய்ச்சலுமாகப் படுக்கையில் விழுந்தார். இரவு முழுவதும் நெஞ்சு வலித்துக்கொண்டிருக்கும். சுவாசிப்பதற்குத்

திணறுவார். கொஞ்ச நாட்களாக அவர் ஒருபோதும் கண்மூடி இருக்க முடியவில்லை.

காய்ச்சல் குறைவதற்கு முன்பாகவே ரைட்டர் கோர்ட்டுக்குப் போகக் கிளம்பினார். அதைப்பார்த்த கௌசுவம்மா தடுத்தாள்.

"காய்ச்சல் இருக்கும் போதேவா வெளியே கிளம்புறீங்க? இது நல்ல கதை!"

கைத்தண்டில் குடையும் கக்கத்தில் தஸ்தாவேஜுமாகப் படியிறங்கும் போது ரைட்டர் சொன்னார்.

"எனக்கு ஓய்வெடுக்கத் தலையிலே எழுதலே."

"இன்னிக்கு மட்டும் படுத்திருங்க, நாளைக்குப் போனாப் போதாதா?"

ஜன்னலின் அருகில் தாசன் நின்றுகொண்டிருந்தான். அப்பா சொன்னதைக் கேட்டபோது மனது சீழ் நிரம்பிய ஒரு சிலந்திப் புண்ணைப் போல வலித்தது.

தஸ்தாவேஜைச் சுமந்தபடி கூனாகி நடக்கும்அப்பாவை வேதனையுடன் பார்த்திருந்தான். அதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்?

சில சமயங்களில் மனம் பதறும். ஆனாலும் தான் செய்தது தவறு என்பதாக தாசன் எண்ணியதில்லை. நன்றாகச் சிந்தித்துத்தான் அன்று அந்தத் தீர்மானம் எடுத்தது. அப்பாவின் வருத்தம் தன்னுடைய வருத்தமும்தான். மற்றவர்களுடைய வேதனையில் தானும் பங்கேற்கிறான். ஆனால், தாசனுடைய வேதனையோ?

மய்யழியின் வேதனை முடிவடையும் போதுதான் தாசனின் வேதனை முடிவடையும். தன்னுடைய ஊரின் சௌபாக்கியம்தான் தாசனின் சௌபாக்கியம். மய்யழியின் சுதந்திரம்—அது எங்கே இருக்கிறது? தொலைவில், ஆத்மாக்கள் சுற்றித் திரியும் வெள்ளியாங்கல்லைப் போலத் தொலைவில். . .

நாளைக்கு ஒரு மணி அரிசிகூட இல்லை. . .

எல்லாவற்றையும் தாசன் பார்த்துக்கொண்டும் கேட்டுக்கொண்டும்தான் இருந்தான். காலம் மாறுகிறது. தாமுரைட்டரின் வீட்டில் தரித்திரத்திற்கு மட்டும் மாற்றமில்லை.

மூப்பன்துரையின் ஆதரவை ஏற்றுக்கொள்ளாமல் அப்பாவுக்குத் தன்னால் உதவி செய்ய முடியாதா? அப்படித்தான் ஒஸ்ஸியேநாதனின் பிள்ளைகளான சந்திரனுக்கும் லதாவுக்கும் ட்யூஷன் சொல்லிக் கொடுக்கத் தொடங்கியது. அதைத் தொடர்ந்து மூன்று பிள்ளைகள் கூடுதலாக வந்து சேர்ந்தார்கள். பள்ளிக்கூடம் விட்டதும் ஐந்து பிள்ளைகளும் வருவார்கள். ஆறரை வரை சொல்லிக்கொடுப்பான். அதற்குப் பிறகு வேகமாகப் பப்பனின் வீட்டிற்குப் போவான். அங்கே தினமும் ஸ்டடி க்ளாஸ் இருக்கும்.

ஐந்து பிள்ளைகளும் சேர்ந்து இருபது ரூபாய் கொடுப்பார்கள். முதல் மாதம் பணம் கிடைத்ததும் அப்பாவிடம் கொண்டு போய்க்கொடுத்தான்—ஐந்தின், இரண்டின், ஒன்றின் அழுக்கடைந்த நோட்டுகள்.

"இதென்ன?"

"ட்யூஷன் எடுத்த பணம்."

"உங்கம்மாகிட்ட கொடு."

தாமுரைட்டர் தொலைவில் எங்கேயோ பார்த்துக்கொண்டிருந்தார். அவர் பணத்தை வாங்கிக்கொள்ளவில்லை.

அம்மாவிடம் கொடுத்தபோது அவள் பதினைந்து ரூபாய் மட்டுமே வாங்கிக்கொண்டாள். அடுக்களையிலிருந்து கிரிஜாவிடம் அவள்சொன்னதைக் கேட்டாள்.

"என்ன இருந்தாலும் சின்ன வயசுதானே? ஒரு டீ குடிக்கவோ ஒரு பீடி வாங்கவோ நாலு காசுக்கு வேறே வழி இருக்கா?"

"அவனவன் தேடிக்கிட்டதுதானே?"

பாட்டியின் அமைதியான குரல்.

எப்படியோ மீதி கைவசமிருந்த ஐந்து ரூபாய்க்கு ஒரு மாதத்திற்கான பீடி வாங்கிக்கொண்டான். அத்துடன் இடையிடையே பாட்டிக்குப் பொடியும்.

அடுத்த மாதப் பணம் தந்துவிட்டுத் திரும்பிப் போகும்போது சந்திரன் சொன்னான்.

"நான் நாளைக்கு வரமாட்டேன்."

"பரீட்சை வருது, ட்யூஷன் விட்டிராமப் பார்த்துடணும்."

"நான் இனிமே எப்பவும் வரமாட்டேன்"

"அது ஏன்?"

"அப்பா சொன்னாங்க வேண்டாம்னு. சார் கம்யூனிஸ்ட்டாம்."

அதைக் கேட்டபோது சிரிப்புத்தான் வந்தது. சந்திரன் விவரம் புரியாத குழந்தையாயிருந்தான். இல்லாவிட்டால் சொல்லியிருப்பான்—நான் கம்யூனிஸ்ட்டல்ல, மனிதன்.

மறுநாள் வழியில்வைத்து ஒஸ்ஸியைப் பார்த்தபோது அவர் வழிமாறி நடக்கலானார்.

ஐந்து நாட்கள் கடந்தபோது மற்ற பிள்ளைளும் வருவதை நிறுத்திவிட்டார்கள்.

"ஏழரை நாட்டுச் சனி. கொணத்தைக் காமிக்குது. சொல்லி என்ன செய்ய...!"

ட்யூஷன் முடிவடைந்து போனதில் அதிக வருத்தம் பாட்டிக்குத்தான்.

அதற்குப் பிறகு இதுதான் தொழில்—உறக்கம், புகைபிடித்துக்கொண்டு ஜன்னல் அருகில் இப்படி நிற்பது.

# 19

மாதவன் தன்னுடைய குதிரை வண்டியைப் புகைவண்டி நிலையத்தை நோக்கி ஓட்டினான். அவன் இறந்துபோன வண்டிக்காரன் கேளனின் மகன். வண்டியில் தாசனும் சந்திரிகாவும் உட்கார்ந்திருந்தார்கள்.

"எனக்கு ரொம்ப சந்தோஷம், தாசன்"

"எதுக்கு?"

"உங்ககூட இப்படித் தனியா குதிரைவண்டியிலே போறதிலே."

சந்திரிகா சொன்னதைக் கேட்டபோது பயம் தோன்றியது. இது எங்கே கொண்டுபோய் விடுமோ!

"நீங்க என்ன யோசிக்கிறீங்க?"

"ஒண்ணுமில்லே."

"பொய், என்கிட்ட சொல்லக்கூடாதாக்கும்?"

சந்திரிகா கன்னங்களில் விழுந்து கிடந்த முடிக்கற்றைகளை எடுத்துக் காதுக்குப் பின்புறம் செருகினாள். புன்சிரிப்புடன் வெறுமையாய் தாசனைப் பார்த்தாள்.

சந்திரிகா தனிமையில் தாசனுடன் புகைவண்டி நிலையத்திற்குப் போவதில் லீலாவுக்குச் சம்மதமில்லை.

"என்னிக்குமே குழந்தைன்னு உனக்கு நினைப்பு."

"தாசனோடதானே போறேன்? வேறே யாரோடே போறேன்?"

தாசன் அவளுக்கு அந்நியனல்ல. அவர்கள் ஒன்றாகவே வளர்ந்தார்கள். ஒரே குதிரைவண்டியில் உட்கார்ந்து எவ்வளவோ காலம் பள்ளிக்கூடம் போயிருக்கிறார்களே!

"எனக்கொண்ணுமில்லே, ஊர்க்காரங்களுக்கு ஏதாவது ஒண்ணு கிடைச்சாப் போதும்."

"நானும் தாசனும் மட்டுமா வண்டியிலே இருக்கப் போறோம், மாதவனும் இருப்பானில்ல.?"

அவள் தலைவாரி, கண்ணில் மையிட்டுக்கொண்டாள். வழக்கம்போல் நெற்றியில் பெரியதொரு பொட்டு, அம்மாவின் சம்மதம் பெற்ற பின்புதான் அவள் போவதற்கு ஆயத்தமானாள்.

"உன்னோட பிடிவாதத்தைக் குறைச்சிக்கணும்."

சந்திரிகா தாசனுடன் வெளியேறியபோது லீலா ஒரு சிரிப்புடன் சொன்னாள்.

குதிரைவண்டி முன்னே சென்றது.

உன்னிநாயரின் கள்ளுக்கடையின் முன்பாகப் போடப்பட்டிருந்த பெஞ்சிலிருந்த குஞ்சக்கன், கணாரி, அந்தோனி முதலிய மய்யழி மக்கள் குடித்துக்கொண்டிருந்தார்கள். குதிரைவண்டி கடையைக் கடந்து ந்யூ த் லாகாரின் வழியாகப் பாய்ந்து ஓடியது. இருபுறங்களிலும் தண்ணீர் நிரம்பிக் கிடக்கும் வயல்கள். வெயில் விழுந்து படர்ந்திருந்த தண்ணீரில் ஓடும் குதிரை வண்டியின் நிழல் தென்பட்டது.

புகைவண்டி ப்ளாக்காகியிருந்தது. பச்சைப் பரப்புகளிலிருந்து உற்பத்தியாகிப் பாய்ந்து வந்த ரயில் தண்டவாளங்கள் ப்ளாட்ஃபார்முக்கு விலகிப் பிரிந்து இரண்டு கரைகளாக மாறிப்போயின

அவர்கள் வண்டி வருவதற்காகக் காத்திருந்தார்கள்.

அன்று வண்டியிலிருந்து இறங்கியது பரதன் மட்டும்தான்.

"ரெண்டு பேரும் வந்திருக்கீங்களா?" தாசனையும் சந்திரிகாவையும் மாறிமாறிப் பார்த்தபடி பரதன் சிரித்தார். "அம்மா வரல்லியா?"

"இல்லே!"

தாசன்தான் பதில் சொன்னான்.

இருவருடைய தோளிலும் ஒவ்வொரு கை இட்டபடி பரதன்வெளியே நடந்தார்.

இந்தத் தடவை அதிகம் பெட்டிகள் இல்லை. கடந்த ஆண்டு ஊருக்கு வந்திருந்தார். இப்போது மறுபடியும் வருவது குஞ்ஞனந்தன்மாஸ்டரை வேலூருக்கு அழைத்துப் போவதற்காக மட்டும்தான். மாஸ்டரின் விஷயத்தை கவனிக்க பரதனைத் தவிர வேறு யாருமில்லை. அழியூரிலிருந்த குஞ்ஞூட்டி மாமா காலமாகிவிட்டார். வேலூருக்கு மாஸ்டரை அழைத்துச்செல்லவும், மற்றுமுள்ள உலகாயதங்களுக்கும் அந்தத் தாய்மாமன் இல்லை. கணாரனும்

வாசூட்டியும் அரசியல்விவகாரங்களில் மூழ்கியிருந்தார்கள்.

ஆனாலும் ஒரு சமயம் கணாரன் சொன்னார்.

"குஞ்ஞனந்தா, உன்னை நான் வேலூருக்குக் கூட்டிக்கிட்டுப் போறேன். தாசனும் கூட வரட்டும்."

"வேலூருக்கா! எதுக்கு?"

ஆபரேஷனைப் பற்றிக் கேட்டுக்கொள்ள மாஸ்டருக்கு விருப்பமில்லை.

மாஸ்டருக்கு சிகிச்சை செய்யும் டாக்டர் ஷீதிதான் ஆபரேஷனைப் பற்றி முதலில் பிரஸ்தாபித்தார்.

"அவனைப் பார்க்க எனக்கு ஆயாசமாயிருக்கு."

அவர் தாசனிடம் சொன்னார்.

"இன்னிக்கோ நேத்திக்கோ ஆரம்பிச்சதா இது?"

பத்துப் பதினைந்து ஆண்டுகளாகிவிட்டன இந்த சிகிச்சையைத்தொடங்கி. ஆபரேஷனைத் தவிர வேறு வழியில்லையென்றும் அவர் சொன்னார். வேலூருக்கு அழைத்துப் போனால் ஒருவேளை மாஸ்டர் பிழைக்கலாம். இழந்த வாழ்க்கையை மீண்டும் பெறலாம். ஒருவேளை...

மாதவன் குதிரைவண்டியின் கதவைத் திறந்து கொடுத்தான். பரதனும் அடுத்து சந்திரிகாவும் தாசனும் ஏறி உட்கார்ந்தார்கள். சந்திரிகா அப்பாவுக்கு அருகில் உட்காரவில்லை. பரதனைப் பார்த்தபடியாக தாசனுக்கு அருகில் உட்கார்ந்தாள்.

"தாசனோட நடவடிக்கையெல்லாம் எப்படி இருக்கு?"

தாசன் தரமான முறையில் பக்கலோறயா தேறியதும், மூப்பன்துரையின் உதவியை நிராகரித்ததும், ஆக எல்லாமே பரதனுக்குத் தெரிந்துதானிருந்தன.

"ஸ்டடி க்ளாசும் ரகசிய சந்திப்பும் நல்லாவே நடக்குது."

"அவ்வளவுக்கு ஆயிரிச்சா?"

பரதன் சிகரெட் டின்னைத் திறந்து நீட்டினார்.

"பல நடவடிக்கைகள் இருக்கு. மாஸ்டர் படுக்கையிலே விழுந்ததுதான் கஷ்டம். நீங்க அடுத்த தடவை ஊருக்கு வர்றப்போ இங்கே பல விஷயங்கள் நடந்திருக்கும்."

"நெருப்போட விளையாடுற மாதிரிதான். கவனமா இருக்கணும். அவ்வளவுதான் தாசன்கிட்ட என்னாலே சொல்ல முடியும்."

தாசனுக்கு அது தெரியும். அக்னிப்பரீட்சைகளின் நாட்களே எதிரிலிருந்தன. பலவற்றை இழக்க நேரிடும். பலவற்றை அனுபவிக்க நேரிடும்.

"நான் எல்லாத்துக்கும் ஆயத்தமாத்தான் இருக்கேன்."

"உனக்கு நல்லதே நடக்கட்டும், தம்பி."

குதிரைவண்டி வீட்டுக்கு முன்பாக வந்து நின்றது.

வெளியில் ஜட்காவண்டி வந்து நிற்பதையும் பரதனின் குரலையும் மாஸ்டர் கேட்டார். அவர் கட்டிலில் ஆணி அடித்ததுபோல் படுத்துக்கிடந்தார். படிப்புச் சொல்லித்தரும் வேலை என்றைக்கோ முடிந்துபோயிருந்தது. வெளியே காலடி எடுத்துவைத்து எத்தனையோ நாட்களாகிவிட்டன. குளியலும் சவரமும் என்றோ நின்று போயின. மஞ்சள் நிறமாகி விட்டிருந்த முகத்தில் வளர்ந்து கிடந்த ரோமங்கள்.

"குஞ்ஞனந்தா. . . ."

பரதனுடைய குரலைக் கேட்டபோது மாஸ்டருக்கு அயர்வாக இருந்தது. அவர் எதற்காக அவசரப்பட்டு வந்திருக்கிறார் என்பது மாஸ்டருக்குத் தெரியும். தன்னுடைய ஆபரேஷனை நடத்துவதற்கு. தன்னை கொல்லுவதற்கு.

"எப்படி இருக்கு இப்போ?"

பரதன் மாஸ்டரின் கட்டிலின் அருகில் வந்து நின்றார். கேட்டு முடித்ததும் அப்படிக் கேட்டிருக்க வேண்டாமோ என்று தோன்றியது. தன்னுடைய கேள்விக்கு என்ன அர்த்தம் இருக்கிறது? குஞ்ஞனந்தன் இருந்த கோலத்தைப்பார்த்து அவர் மிகவும் வேதனைப்பட்டார். மாஸ்டருடன் மிகவும் அதிகமாக நெருங்கிப் பழகி அனுதாபம் காட்டுபவர்களில் அவர் ஒருவர். நோய் தீர்ந்து அவரை ஒரு மனிதராகப் பார்க்க வேண்டுமென்பதுதான் பரதனின் மிகப்பெரிய ஆசை.

"டாக்டர் இன்னிக்கு வருவாரா?"

"அவர் வந்து ஒரு வாரமாச்சி."

மாஸ்டர்முகத்தில் ஒரு சிரிப்பை வரவழைத்துத் தன்னுடைய ஆற்றாமையை மறைக்க முயன்றார். தாசன் போய் அழைத்தபோது வீதி டாக்டர் வரவில்லை. தான் வருவதனால் ஆகப்போவது ஒன்றுமில்லை என்று அவர் சொல்லிவிட்டார்.

மாஸ்டரின் குரலில் பிசிரடித்தது. வாழ வேண்டுமென்று மற்றவர்களைவிட அதிக ஆசைகொள்ளும் மனிதர், உயிர்த்திருப்பதில் மகிழ்ச்சி கொள்ளும் நபர். அவருக்குத்தான் இப்படி விதி வந்திருக்கிறது.

சாயங்காலம் பரதன் போய் டாக்டரை அழைத்துக்கொண்டு வந்தார். ஆபரேஷன் அல்லாமல் வேறு வழியில்லை என்று அவர் மறுபடியும் கூறினார். டாக்டரும் தாசனும் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். ஆபரேஷன் செய்யவில்லையானால் இரண்டுவாரமோ ஒரு மாதமோதான் அவர் உயிரோடிருக்க முடியும். ஒருவேளை இன்றேகூட மாஸ்டர் கண்ணை மூடிவிடலாம். அவ்வளவு ஆபத்தான நிலைமை.

"நாளைக்கே வேலூருக்குக் கூட்டிப்போயிரலாம். கூட நானும்வர்றேன். அதுக்கு நீங்க தயாரா இல்லேன்னா என்னை இனிமே வந்து பார்க்க வேண்டாம்."

டாக்டர் தான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டார்.

"மாஸ்டர் சம்மதிக்கமாட்டாரு . ."

மற்றவர்களைக் காட்டிலும் நன்றாக மாஸ்டரை தாசன் அறிவான். ஆபரேஷனால் நெடுங்காலம் தான் வாழ்ந்துவிடப்போவதில்லை என்று மாஸ்டர் நம்புகிறார். அதனால்தான் அவர் வேலூர் செல்வதற்கு ஒத்துழைக்க மறுக்கிறார்.

டாக்டர் போன பிறகு பரதனும் தாசனும் மீண்டும் மாஸ்டரின் அறைக்குச் சென்று உட்கார்ந்தார்கள்.

"நாங்க பேசிக்கிட்டிருந்ததைக் கேட்டுக்கிட்டிருந்தீங்கல்ல!"

மாஸ்டர் ஆமாம் என்று கண்ணினால் ஜாடை காட்டினார். அவருடைய முகம் காகிதம்போல் வெளிறிப்போயிருந்தது. கண்களில் மரண பயம்.

"நாளைக் காலையிலே நாம வேலூருக்குப்போவோம். நான் காருக்கு

ஏற்பாடு செய்றேன். டாக்டரும் நம்ம கூட வருவார்."

மாஸ்டர் பதில் சொல்லாமல் கண் மூடிக் கிடந்தார்.

"என்ன குஞ்ஞனந்தா... நீ எதுவும் பேச மாட்டேங்கறே?"

"எனக்கு ஆபரேஷன் வேண்டாம்."

"நல்லா யோசிச்சிப் பாரு, குஞ்ஞனந்தா."

"யோசிச்சித்தான் நான் இதைச் சொல்றேன்."

"எவ்வளவு காலம் நீ இப்படிப் படுத்துக்கிடப்பே?"

"சாகும் வரைக்கும்."

"நீ தப்பாப் பேசக்கூடாது. உனக்கு நல்லது வந்து பார்க்கணும்னு ஆசைப்படுறவன் நான். உன்னோட சீக்கை சரிபண்றதுக்கு எதையும் செய்ய நான் தயாரா இருக்கேன். அதுக்காகத்தானே கடல் கடந்து நான் வந்திருக்கேன். . . ."

"எனக்கு அது தெரியும், அத்தான்."

"ஆபரேஷன் தவிர வேறே எந்த வழியும் இல்லே இந்த சீக்கை குணப்படுத்த"

"அதுவும் எனக்குத் தெரியும்."

"நீ இதுக்கு சம்மதிக்கணும். உனக்கு ஒண்ணும் ஆகாது. என் மனசுக்குள்ளேயிருந்து யாரோ சொல்றாங்க. . . "

மாஸ்டர் பதில் பேசவில்லை. சொல்ல வேண்டியதை எத்தனையோ தடவை சொல்லியாயிற்று. பரதன் எதுவும் பேசாமல் அறையில் சால் முறையாக இரண்டு தடவை நடந்தார்.

"நான் அதிகம் வற்புறுத்தலே. ஆபரேஷனுக்கு நீ தயாரா இல்லேன்னா அடுத்த வாரம் நான் கப்பல் ஏறிடுவேன் "

அதற்கு மேலும் குஞ்ஞனந்தனை வற்புறுத்தக்கூடாதென்று அவருக்கும் தோன்றிற்று. மாஸ்டர் குழந்தையல்ல. வாழ்க்கை என்னவென்று பார்த்தவர். படிப்பும் விவரமும் உள்ளவர்.

பரதன் அதற்குப் பிறகு நின்றிருக்கவில்லை. அவர் வராந்தாவுக்குச் சென்று அயர்ந்து உட்கார்ந்தார்.

அறையில் மாஸ்டரும் தாசனும் மட்டுமே இருந்தார்கள்.

"நீயும் என்னை வற்புறுத்திறியா, தாசா?"

"ஒருக்காலுமில்லே, சார். சாரோடே எண்ணம் எனக்குப் புரியுது."

"தாசா, வேலூருக்குப் போனால் நான் திரும்பமாட்டேன். ஆபரேஷன் செய்யலேன்னா கொஞ்ச நாள் நான் பிழைச்சிருக்க முடியும். ஒரு மாசமோ ரெண்டு மாசமோதான் இனிமே நான் பிழைச்சிருப்பேன். ஒருவேளை மிஞ்சிப்போனால் ஒருவருஷம்தான். ஒரு நாளானாலும் ஒரு நாள் கூடுதலாப் பிழைச்சிருக்க முடியும்னா அதைவிட சந்தோஷம் வேறெதுவும் எனக்கில்லே, தாசா. . ."

மாஸ்டர் தேம்பினார். அவருக்கு மூச்சு முட்டிற்று. கண்கள் பிதுங்கின.

"சார், இனிமே பேசக் கூடாது."

தாசன் கட்டிலில் உட்கார்ந்து அவருடைய மார்பைத் தடவிக் கொடுத்தான். சந்திரிகா பனித்த கண்களுடன் மாமனைப் பார்த்தபடி நின்றிருந்தாள். சந்திரிகாவும் தாசனும் மாஸ்டருடைய காலடியில் எதுவும் பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள்.

பரதன் அடுத்த வாரம் திரும்பிப் போனார்.

மழை பெய்துகொண்டிருந்த ஒரு நாள். தாசன் படுத்தபடி வாசித்துக்கொண்டிருந்தான். அப்போது வெளியில் சந்திரிகாவின் குரல் கேட்டது.

"தாசன் இருக்காரா இங்கே?"

தாசன் எழுந்து சென்றான். மழையில் நனைந்திருந்த சந்திரிகா வாசலில் நின்றிருந்தாள். மழைதெறித்து கறுத்த பொட்டு நெற்றியெங்கும் பரவிக் கிடந்தது. முடியிலிருந்து தண்ணீர் சொட்டிக்கொண்டிருந்தது.

"மாமா, கூப்பிடுறாங்க"

"எதுக்கு?"

"மாமாவுக்கு முடியலே ரொம்ப. . . . "

சந்திரிகாவின் கண்களில் கண்ணீரா மழைநீரா? தாசன் குழம்பினான். இன்று காலையில்தான் மாஸ்டரைப் பார்த்தது. இப்போது எதற்காக மீண்டும் கூப்பிட்டனுப்ப வேண்டும்.?

குடை எடுத்துக்கொண்டு வேகமாக வெளியேறினான். எப்படித்தான் மாஸ்டரின் வீட்டைச் சென்றடைந்தான் என்று தெரியவில்லை. ஓடியிருக்க வேண்டும்...

மாஸ்டர் வழக்கம்போல் கண்மூடிக் கிடந்தார். அவர் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார். மாஸ்டர் பாதி இறந்து விட்டதாக தாசனுக்குத் தோன்றியது.

"சார்..."

கட்டிலின் அருகே முழங்காலிட்டு மெதுவாகக் கூப்பிட்டான். லீலா அழுதபடி அருகே நின்றுகொண்டிருந்தாள்.

மாஸ்டருடைய தலை சற்றே அசைந்தது. அவர் நிதானமாகக் கண்ணைத் திறந்தார். அவருக்கு என்னவெல்லாமோ சொல்ல வேண்டுமென்று தோன்றிற்று. தாசன் செவிமடுத்தான்.

அந்தி வந்தது. வெளியில் இருட்டு கனத்துக்கொண்டு வந்தது. அப்போதும் மழை கொட்டிப் பெய்து கொண்டிருந்தது. மழையின் இரைச்சலினால் தேவாலயத்திலிருந்து முழங்கிய மணியோசையை யாரும் கேட்கவில்லை.

"நம்ம புரட்சிக்காக இன்னும் நிறையச் செய்யணும் போல இருக்கு எனக்கு. என்னாலே இனிமே ஒண்ணும் முடியாது. ஆனால் புரட்சியைப் பத்தி எனக்குசந்தேகமில்லே. நீ இருக்கே இல்லே."

மாஸ்டர் நிறுத்திப் பேசினார்.

"ஸர்த்திபிகா பாசான அன்னிக்குத்தான் உன்னைப் புரட்சிக்கூட்டத்திலே சேர்க்கணும்னு நினைச்சேன். உங்கப்பாவை நினைச்சித்தான் அன்னிக்கு அந்த ஆசையை அடக்கிக்கிட்டேன். நீ தானாகவே புரட்சியிலே இறங்கினப்போ நான் ஆனந்தப்பட்டேன். நான் தொடங்கிவச்சதைத் தொடர நீ இருக்கிறதை நினைக்கிறப்போ இப்பவும் நான் ஆனந்தப்படுறேன்."

"சார் அதிகமாப் பேசக்கூடாது."

மாஸ்டரின் நெஞ்சு சமுத்திரம் போலக்கலங்கி அலைக்கழிந்தது. சுவாசிக்க அவர் திணறினார்.

"ஒரு நாள்கூட கவலையில்லாமல் கைவீசி நடக்க என்னாலே முடியலே, வாழ்க்கையோட பெரும்பகுதியை இதோ இந்தக் கட்டிலில்தான் கழிச்சிருக்கேன். வயசு நாற்பதை எட்டினாலும் ஒரு

பொண்ணைக் கையினாலே நான் இதுவரைக்கும் தொட்டதில்லே, ஆனாலும்நான் திருப்தியோடதான் இருக்கேன். நீ கேட்டுக்கிட்டிருக்கியா, தாசா?"

"ஆமாம் சார். . ."

"உன்னை எதுக்காகக் கூப்பிட்டனுப்பிச்சேன்னு எனக்கே தெரியலே. எனக்கு உன்கிட்ட ஒண்ணு சொல்லணும்—இந்த நிலைமையிலும் நான் சந்தோஷமாத்தான் இருக்கேன். மரணத்துக்கு மட்டும்தான் என்னோட இந்த சந்தோஷத்தை அழிக்க முடியும். . . "

"இந்த உலகத்திலே துக்கமும் சந்தோஷமும் உண்டா சார்? வாழ்க்கை மட்டும்தான் உண்டு."

"அதுதான் வாழ்க்கை. . . "

மாஸ்டருடைய கண்கள் நிதானமாக மூடின. அவர் நினைவிழந்தார்.

நாட்கள் உதிர்ந்து போயின. தன்னுடைய படுக்கையில் படுத்துக்கொண்டு ஜன்னலின் வழியாக இளவேனிலும் வசந்தமும் கடந்து போவதை மாஸ்டர் கண்டார். முதலில் மழைத்துளிகள் சூடான மண்ணில் விழுந்தபோது தன்னுடைய உடம்பில் மழை பெய்தது போல அவர் புளகமுற்றார். இடைவிடாது தொடர்ந்து பெய்யும் மழையின் சங்கீதத்தில் அவர் தாளங்களும் ஸ்வரங்களும் கண்டுபிடித்தார். மழை பெய்து முடிந்த பிறகு தெளிவடைநத சூரியனின் வெப்பத்தில் தோய்ந்த தாவரங்களோடும் மண்ணோடும் சேர்ந்து மாஸ்டரும் துளிர்விட்டார். சூரிய ஒளியை நேரடியாக ஏற்காமலேயே அவர் சூரிய சைதன்யத்தில் மூழ்கித் திளைத்தார். அவ்வாறு பருவ காலங்கள் கடந்து போய்க்கொண்டிருந்தன.

மய்யழி ஆற்றுக்கு மேலே சூரியன் உதித்து மேலெழுந்த ஒரு காலைப்போதில் அவருடைய உயிர்வாழ்க்கை ஒரு முடிவுக்கு வந்தது, தான் வாழ்ந்துகொண்டிருக்கிறோம் என்ற நினைப்பில் அவர் துளிர்த்துக்கொண்டிருந்தார். உயிர்ப்பின் மகிழ்ச்சி கடல் அலைகளைப் போல அவர் மீது வந்து மோதின. மாஸ்டருக்கு மூச்சுத் திணறல் ஏற்பட்டதுடன் வாயிலிருந்து நுரையும் எச்சிலும் வெளிப்பட்டன. . . .

இறந்த பின்பும் மாஸ்டரின் கண்கள் மூடவில்லை. மரணத்தின் நித்திய விடைபெறுதல் போலக் கண்கள் திறந்தபடியே இருந்தன.

# 20

மழைக்காலம் கழிந்தது. ஆடி பிறந்தது.

ஆடி அமாவாசையின்போது திதி நடத்த தாமுரைட்டருக்கு முடியவில்லை. அவர் உடல்நலமில்லாமல் படுத்திருந்தார். ரைட்டருக்கு எப்போதும் உடல்கோளாறுதான். எப்போதும் இருந்த காசநோய் மட்டுமல்லாமல் வேறு ஏதாவதொரு கோளாறும் சேர்ந்தே இருக்கும். ஒரு சமயம் முதுகுவலி. இல்லாவிட்டால் தடுமன். அப்படி ஏதாவது.

"திதி நடத்த என்னாலே முடியும்னு தோணலே. மேலே போய்ச் சேர்ந்தவங்க மன்னிச்சிக்கிடட்டும்" அமாவாசைக்கு இரண்டு நாட்களுக்கு முன்பு ரைட்டர் சொன்னார்.

"நீ நடத்தலேன்னா தாசன் நடத்தட்டும்." குறம்பியம்மா அபிப்பிராயப்பட்டாள்.

ஆண் என்பதாக அந்த வீட்டில் வேறு யாரும் இல்லையல்லவா? தாசனோ இதுவரை திதி நடத்தியதில்லை.

எல்லோரும் சொன்னபோது அவன் ஒப்புக்கொண்டான்.

அமாவாசைக்கு முந்தின நாள் அடுக்களையில் அவசரம் தொடங்கியது. பித்ருக்களுக்காகப் பலவிதமான பாயசங்களும் பிறவும் தயாரிக்கப்பட்டன.

அதிகாலையிலேயே எழுந்து கிரிஜா குளித்தாள். ஈரத்தலையுடன் இலைக்கீற்றுகளில் பாயசமும் பால் கிண்டியில் தண்ணீருமாக அவள் தென்பக்கத்து அறைக்குச் சென்றாள். அதுதான் பித்ருக்களின் அறை. கேழுவச்சனை 'அகம் கூட்டி' வைத்திருந்தது அந்த அறையில்தான். சாணமிட்டு மெழுகிய தரையில்கேளுவச்சனின் அஸ்தி மண்பானையில் இடப்பட்டு அடக்கம் செய்யப்பட்டிருந்தது.

"தாத்தாவை மனசிலே நெனச்சிக்கோம்மா."

குறம்பியம்மா தெற்கறையின் அருகில் போய் நின்றாள். பாயசமும் தண்ணீரும் தரையில் வைக்கும்போது கிரிஜா தாத்தாவை மனதுக்குள் நினைத்துக்கொண்டாள்—அவளுக்கு நினைவு தெரிவதற்கு முன்பாகவே விஷம் தீண்டி இறந்துபோன கேளுவச்சனை. . . .

அறையிலிருந்து வெளியே வந்த கிரிஜா கதவுகளைச் சாத்தினாள்.

அதன்பிறகு வேறோர் இலையில் பாயசமும் எரியும் தீப்பந்துமாய் தெற்கு முற்றத்திற்குச் சென்றாள். பீரன், பேன, பண்டாரம் முதலியவர்களுக்கான நைவேத்தியத்தை வெளியில் வைத்தாள், தீப்பந்தும் இருக்க வேண்டும். அவர்களெல்லாம் துர்மரணம் எய்தியவர்கள். வெள்ளத்தில் மூழ்கி இறந்தவரை 'பீரன்' என்றும், தூக்கிட்டுக்கொண்டு இறந்தவரைப் 'பேன' என்றும் வைசூரி வந்து இறந்தவரை 'பண்டாரம்' என்றும் அழைப்பார்கள்.

குறம்பியம்மாவும் தாசனும் குளித்து ஈரத்துணி உடுத்து திதியிட வந்தார்கள். முற்றத்தில் அவர்கள் அடுப்பு வைத்து மஞ்சள்சோறு வைத்தார்கள். சோற்றை இலையில் பரிமாறினார்கள். அருகம்புல்லும் எள்ளும் பரப்பினார்கள். இலையின் அருகில் முழங்காலிட்டிருந்த அவர்கள் காக்கைகளைக் கைதட்டி அழைத்தார்கள்.

திதிநாளில் வெள்ளியாங்கல்லிலிருந்து பித்ருக்களின் ஆத்மாக்கள் சமுத்திரத்தைக் கடந்துவரும். திதிக் காக்கைகளாக வந்து அவர்கள் மஞ்சள்சோறும் எள்ளும் உண்பார்கள்.

"ஒரு காக்காவைக் கூடக் காணோமே பாட்டி!"

திதியிடுவதைப் பார்த்துக்கொண்டு திண்ணையில் நின்றிருந்த கிரிஜா சொன்னாள். தினமும் காலையில் முற்றத்திலும் கிணற்றடியிலும் வந்திருந்து கரைந்து ஆரவாரம் செய்யும் காக்கைகளெல்லாம் இன்று எங்கே போயின?

முட்டுக்கால் போட்டு மீண்டும் மீண்டும் குறம்பியம்மா கைதட்டிக் கூப்பிட்டாள்.

"காக்கா வரும்." தாசன் சொன்னான். "காக்காக்களுக்கு நெருக்கடியான நாளல்லவா?"

பெரும்பாலும் எல்லா இந்துக்களுடைய வீட்டிலும் திதியிடுவார்கள்.

தொலைவிலிருந்து ஒரு திதிக்காக்கை பறந்து வந்ததைப் பார்த்தார்கள். ஆனால் வழியிலேயே வேறு யாருடைய கைதட்டலையோ கேட்டு அது

அந்த வழியே போய்விட்டது.

"மணி எட்டாயிரிச்சே கடவுளே...?"

குறம்பியம்மாவுக்குக் குழப்பமாகிவிட்டது. எங்கே பித்ருக்கள்? அவர்கள்ஏன் வரவில்லை? தன்னுடைய மெலிந்த கைகளால் அவள் மீண்டும் மீண்டும் கைதட்டிக் கூப்பிட்டாள்.

தாசன் திதியிடுவதை நிறுத்திப் படிக்கட்டுக்குப் போய் நின்றிருந்தான். ஈர வேட்டி கட்டியிருந்ததால் குளிரெடுத்தது.

"வா, வா. . ."

வானத்தைப் பார்த்துக்கொண்டு, தளர்ந்த கைகளைத் தொடர்ந்து தட்டி குறம்பியம்மா கூப்பிட்டாள்.

"வா, வா, வா. . . "

குறம்பியம்மாவின் மனது சங்கடப்பட்டது. அவளுக்கு அழுகை வந்தது. மீண்டும், மீண்டும் அவள் கைதட்டிக் கூப்பிட்டாள். குறம்பியம்மாவின் குரல் அதிகரித்துக் கொண்டே போயிற்று.

வெயில் ஏறத் தொடங்கியபோது எங்கிருந்தோ ஒரு காக்கை பறந்து வந்தது. மஞ்சள்சோறும் எள்ளும் தின்று மப்புப் பிடித்த கண்களுடன் அது குறம்பியம்மாவை முறைத்துப் பார்த்தது. நோஞ்சானான, கழுத்தில் அங்கங்கே ரோமம் உதிர்ந்துபோன ஒரு சாதுவான காக்கை.

"வா, வா. . . "

மகிழ்ச்சியுடன் குறம்பியம்மா கூப்பிட்டாள். காக்கை சற்றே சாய்த்து நோக்கியது. ஒருபக்கத்து இறக்கையை உயர்த்தி அலகினால் அதனிடையில் சொறிந்து கொண்டது. கடைசியில் அது குறம்பியம்மாவின் எதிரில் இலைக்கு முன்பாக வந்தமர்ந்தது.

"வந்திட்டியா, இப்பவாச்சியும் வரணும்னு தோணிச்சே!"

குறம்பியம்மா தன் எதிரில் வந்தமர்ந்த காக்கையை உற்று நோக்கினாள். அது இலையின் ஒரு முனையிலிருந்த ஒரு பிடி அன்னத்தைக் கொத்தித் தின்றது. பிறகு கால்களினால் சோற்றையும் அருகம்புல்லையும் நாலா பக்கமும் வாரி இறைத்தது. மீண்டும் சில பருக்கைகளைக் கொத்தித் தின்றது.

காக்கையைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்த குறம்பியம்மாவின் கண்கள் நிறைந்தன.

"என்ன பாட்டி?"

குறம்பியம்மா விம்மி அழுதாள்.

"உன் தாத்தாதான் அது."

கழுத்தில் ரோமம் உதிர்ந்ததும் எலும்பு தெரிய மெலிந்ததுமான அந்தக் காக்கை கேளுவச்சனாக இருந்ததோ?

★★★

மீத்தலம்பலத்தில் திற போன்றதான பெரியதொரு திருவிழாதான் புனித கன்னிமேரியின் பெருநாள்.

புரட்டாசி மாதம்தான் பெருநாள். ஆவணி பிறந்ததும் தேவாலயத்தின் உயரமான கோபுரத்தின் உச்சியில் கயிறு கட்டித் தொங்க விடப்பட்டிருக்கும் மரப்பலகையில் நின்றுகொண்டு குஞ்ஞிக்குட்டியப்பன் வெள்ளையடிப்பது தெரிந்தது.

தேவாலயத்தில் வெள்ளையடிப்பதிலிருந்து பெருநாளுக்கான

ஏற்பாடுகள் தொடங்கும்.

மாமரத்துப் பலகையில் செய்த நாற்காலியில் அங்கி தரித்த பாதிரியார் மடியில் தொப்பி வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். அருகில் கப்பியார் கையில் காகிதத்துடன் நின்றிருந்தான். அவர்கள் தேவாலய வட்டாரத்திலுள்ள சந்தைகளுக்கும் கடைகளுக்கும் மற்றுமுள்ளவற்றிற்கும் ஏல முறையில் இடங்களை ஒதுக்கிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

"ஒரு கடை தந்திக்கம்பத்துக்கு அடுத்து. பத்தடி அகலம் எட்டடி நீளம்."

கப்பியார் காகிதத்தைப் பார்த்தபடி சொல்லத் தொடங்கினான். வடக்கிலிருந்து வந்த வளையல்செட்டிகள், கோழிக்கோட்டிலிருந்து வந்த அல்வாக்காரர்கள், கண்கட்டுவித்தைக்காரர்கள், கரகாட்டக்காரர்கள், யானையும் மயிலும் ஒட்டகமும் கொண்டு வேடிக்கை காட்டுபவர்கள். . . எல்லோரையும் உற்று நோக்கியபடி கப்பியார்.

"பத்து ரூபாய்."

"பத்தேகால்."

வளையல்செட்டி சொன்னார்.

"பத்தரை."

கண்கட்டு வித்தைக்காரன்.

"ஒரு கால் ரூபா கூட்டி"

யானை-மயில்-ஒட்டகக்காரன்... அப்படியே போகப்போகப் பதினான்கு ரூபாயை எட்டியது. அதை எட்டியது முதலில் கேட்ட வளையல் செட்டி.

"பதினாலு ரூபா ஒரு தரம். ரெண்டு தரம். மேலே யாரும் கேக்கலையா?"

வளையல்செட்டி பரிதாபமாக நாலா பக்கமும் பார்த்தார். கண்கட்டு வித்தைக்காரனின் முகத்திலும் யானை-மயில்-ஒட்டகக்காரனின் முகத்திலும் மௌனம். பாதிரியார் நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்திருந்தார்.

தந்திக்கம்பத்து இடம் வளையல்செட்டிக்கு.

அக்டோபர் ஐந்தாம் தேதி நண்பகல் ஒரு வேட்டு முழக்கத்துடன் பெருநாள் தொடங்கியது. இரண்டாவது நாள் இரண்டும், மூன்றாவது நாள் மூன்றும் என்பதாக வேட்டுகள் முழங்கும். கடைசி நாள், அதாவது பத்தாம் நாள், பத்து வேட்டுகள்.

வளையல் கடைகள், ஜமந்திப்பூக்கடைகள், சிலுவைகளும் மதகுருமார்களின் படங்களும் விற்கும் கண்ணாடிக் கடைக்காரரின் ஸ்டால்கள், மெழுகுவர்த்திக் கடைகள். . .

தீர்த்தாடனக்காரர்கள் மய்யழிக்குள் வெள்ளம்போல் திரண்டார்கள். புகைவண்டி நிலையத்தில் தொடங்கி பாலம் வரைக்கும் அவர்களுடைய இடைவிடாத வெள்ளப்பெருக்கு. தெற்கிலிருந்து வந்த உறவுக்காரர்கள், சட்டைக்காரர்கள், கொங்கணியர். . . எத்தனை வகையான மனிதர்கள்! எவ்வளவு மனிதர்கள்!

"இந்த ஆளுங்களெல்லம் வர்றது பக்தியினாலேதான்னு நீ நினைக்கிறியா?"

பப்பன் திரளான கூட்டத்தைப் பார்த்துக்கொண்டு விஞ்ஞானபோஷினி வாசகசாலையில் உட்கார்ந்திருந்தான். தேவாலயத்தின் நேர் எதிரில்தான் வாசகசாலை. அங்கே உட்கார்ந்துகொண்டால் புனித கன்னிமேரியின் பெருநாள் பண்டிகையை முதலிலிருந்து கடைசி வரைபார்க்கலாம்.

"இவங்களெல்லாம் பக்திங்கற பேரைச் சொல்லிக்கிட்டு கள் குடிக்க வர்றவங்கதான். மய்யழியிலே சாராயம்."

தெய்வங்களின், தேவதைகளின் சத்ருவான பப்பன் தொடர்ந்தான்.

"இங்கே சாராயம் கிடைக்காமப் போகட்டும்-இந்த பக்தங்க யாரையும் பார்க்க முடியாது."

"இந்த ஜனக்கூட்டம் முழுசும் சாராயம் குடிக்கத்தான் வர்றாங்கன்னு நீ சொல்றியா?" தாசன் சிரித்தான். "சாராயத்தைவிட போதை தர்றதும் தன்னை மறக்கச்செய்றதும் பக்தி."

வாசகசாலையில் நிறையப் பேர் இருந்தார்கள். வழக்கமாக வராதவர்களும்கூட பெருநாள் தொடங்கியதும் வருவார்கள் எதிரிலிருந்து வேடிக்கை பார்ப்பதற்காக.

மய்யழியில அன்னை என்றறியப்பட்ட புனித கன்னிமேரி, பள்ளர் பறையர்களின் தெய்வங்களான குளிகன், பூக்குட்டிச்சாத்தன் முதலியவர்களைப் போலவே பக்தர்களை அருள்பாலிப்பவள். சத்ருக்களை இம்சிப்பவளும்தான்.

தாசனின் குழந்தைப் பருவத்தில் குறம்பியம்மா அவனுக்குச் சொல்லிக் கொடுத்த பல பழங்கதைகளில் ஒன்று மய்யழி மாதாவின் பிறப்பைப் பற்றிய கதையாக இருந்தது. . . .

அரபிக்கடலின் எல்லையில்லாப் பரப்பில், வெள்ளியாங்கல்லின நிழலினூடே, ஒருகப்பல் சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

மய்யழிக்கு நேராக வந்தடைந்தபோது நங்கூரம் விழுந்தது போலக் கப்பல் திடீரென்று நின்றது. எங்கேயும் எந்தத் தடங்கலும் தென்படவில்லை. கேப்டன்மார்களும் மற்ற மாலுமிகளும் திகைத்தார்கள். மூன்று இரவுகளும் பகல்களும் கடந்து போயின. கப்பல் அசையவில்லை.

மாலுமிகள் வானத்தை நோக்கிய கண்களுடன் முழங்காலிட்டு விழுந்து வணங்கினார்கள்.

"என்னை மய்யழியில் நிலைநிறுத்துக!"

கேப்டன் ஓர் அசரீரி கேட்டார்.

கப்பலில் புனித கன்னிமேரியின் விக்ரகம் ஒன்று இருந்தது. விக்ரகத்திலிருந்துதான் குரல்.

கேப்டன் புனிதக் கட்டளையின்படி நடந்துகொண்டார். அவர் விக்ரகத்துடன் கரைக்கு வந்தார். ஆள் நடமாட்டம் இல்லாத ஓர் இடத்தில் விக்ரகத்தை நிறுவினார்.

கப்பல் நகர்ந்தது.

"கேப்டன் மாதாவோட சிலையை வச்ச இடம் தான் நம்மளோட இப்போதைய கோயில். . ."

குறம்பியம்மா யானைத் தந்தத்தில் செய்த டப்பியிலிருந்து ஒரு நுள்ளல் பொடி எடுத்து உறிஞ்சினாள்.

அந்திப்பொழுது அமைதியும் கம்பீரமும் கொண்ட சமுத்திரத்திற்கு மேலே அஸ்தமன சூரியன். அழகிய ஆகாயத்தின் பின்னணியில்

தேவாலய கோபுரத்தின் உச்சியில் சிலுவை கைவிரித்து நின்றிருந்தது.

ஆகாயத்தினுடையதும் சமுத்திரத்தினுடையதுமான காம்பீர்யத்துடன் மணியோசை மய்யழியின் மேற்பரப்பில் பரவியது.

"உருகன் புறப்பட்டாச்சு. . . ."

(மய்யழியின் மாதாவின் திவ்விய விக்ரகம் எழுந்தருளச் செய்யும் ஊர்வலம் புறப்பட்டு விட்டது.)

யாருடன் என்றில்லாது குறம்பியம்மா முணுமுணுத்தாள். திறந்துவைத்த பொடிடப்பியுடன், கண்களை மூடிக்கொண்டாள். கடந்து போன அனேக பெருநாள்களின் நினைவுகளுடன் அவள் வராந்தாவில் உட்கார்ந்திருந்தாள்.

ஊர்வலம் புறப்படும்போது தொடங்கும் மணியோசை, நகரைச் சுற்றி ஊர்வலம் வந்து திரும்பும்வரை இடைவிடாமல் முழங்கிக்கொண்டே இருக்கும்.

அங்கே மிக உயரத்தில் பிரம்மாண்டமான மணிகள் அசைந்தாடின. கயிற்றின் நுனியில் கப்பியார் தொங்கிக்கொண்டிருந்தான். மணிகளின் ஆவேசமான ஆட்டத்தை அனுசரித்து பூமிக்கும் ஆகாயத்துக்கும் இடையில் உயர்வதும் தாழ்வதுமாக எம்பிக்கொண்டிருந்தான்.

தேர்களும் கொடிகளும் விளக்குமாய் ஊர்வலம் ரியூ த் லெக்லீஸ் வழியாக முன்னேறிச் சென்றது. கொழுந்து விட்டெரியும் குந்தரிகத்தின் நறுமணம் மய்யழியில் நிரம்பியது. ஆயிரக்கணக்கான தீர்த்தாடனக்காரர்கள் ஊர்வலத்திற்கேற்ப நடந்தார்கள். அவர்களுடைய குரல்கள் பல மொழிகளில் மய்யழி மாதாவின் பெருமைகளைப் பாடின. . . .

அந்திப்பொழுது கழிந்து கடலின்மேற்பரப்பில் சூரியன் அஸ்தமிக்காமல் நின்றிருந்தான்.

ரியூ த் லா ப்ரிஸோன் வழியாக ஊர்வலம் முன்னேறிச் சென்றது.

நான்கு மணி நேரத்திற்குப் பிறகு ஊர்வலம் தேவாலயத்திற்குத் திரும்பி வந்தது. அப்போது இதுவரைக்கும் இடைவிடாமல் முழங்கிக்கொண்டிருந்த மணியோசை நின்றது. தன்னிலை மறந்த கப்பியார் கயிற்றிலிருந்து தரையில் குதித்தான். பல மணி நேரம் தொடர்ந்து மணியடித்த அவனுடைய இரண்டு கைகளிலிருந்தும் இரத்தம் கசிந்து ஒழுகிக் கொண்டிருந்தது.

இரண்டு நாட்களாக மய்யழியின் மக்களுக்கு உறக்கமில்லை. வீட்டுத் தாய்மார்கள் வந்த விருந்தாளிகளுக்கு படைத்து அலுத்துப்போனார்கள். ஆண்களோ சாராயம் குடித்துவிட்டு தேவாலயத்தைச் சுற்றி அலைந்து திரிந்தார்கள். பாதையோரங்களிலும் கடைத்திண்ணைகளிலும் எங்கும் சிதறிக் கிடந்த அறிமுகமில்லாத ஊர்களிலிருந்தெல்லாம் வந்த எண்ணற்ற பக்தகோடிகள். . .

ஒரு வீட்டில் மட்டும் வெளிச்சமோ சந்தடியோ இருக்கவில்லை—லெஸ்லீதுரையின் பங்களாவில். நினைவு தெரிந்த நாள்முதல் மிஸ்ஸி பெருநாள் பண்டிகைக்கு கேக் தயாரிப்பது வழக்கம். அந்த வழக்கமும் அற்றுப் போயிற்று. அப்படியே கேக் தயாரித்து வைத்தாலும் தின்று தீர்க்க யார் இருந்தார்கள்? கால்சராயும் தொப்பியும் அணிந்த ஆண்கள் குதிரைவண்டிகளில் வந்திறங்குவார்கள், இரவு முழுவதும் சாப்பாடும் குடியுமாய்க் கழிந்த ஒரு காலமும் இருந்தது.

இன்று அவர்கள் யாரைப் பார்க்க வருவார்கள்?

விருந்து தயாரிக்கவும் அனுபவிக்கவும் வேண்டிய நபர் தாடியும் முடியும் வளர்த்துக்கொண்டு அடைத்த கதவுகளுக்குப் பின்புறம் வருடக்கணக்கில் தவம் செய்து கொண்டிருக்கிறார்.

தேவாலயத்திலிருந்து முதல்வேட்டு முழங்கிய அன்றுதான் மிஸ்ஸியின் வலது கையும் காலும் முடங்கியது. கேக் தயாரித்துக் கொண்டிருந்த மிஸ்ஸி நிலைதடுமாறி விழுந்தாள். தலையில் அடிபட்டு விழுந்தாள்.

அதைக் கண்ட வேலைக்காரி மாம்பி கூக்குரலிட்டாள்.

"ஓடி வாங்க."

மாம்பியின் அலறல் மாடியில் அடைபட்ட கதவுகளைத் தாண்டி கஸ்தோன்துரையின் காதுகளில் விழுந்தது. துக்கப்பாடல் மீட்டும் கிடாரை நெஞ்சோடு அணைத்தபடி அவர் நள்ளிரவில்தான் படுக்க நேர்ந்ததால் கிறக்கத்தில் இருந்தார். கீழே இருந்து வந்த கூக்குரலைச் செவிமடுத்தார்.

அவர் குழப்பத்துடன் எழுந்து கதவைச் சற்றே திறந்து அந்த இடுக்கினூடே கீழே பார்த்தார்.

தரையில் குப்புற விழுந்துகிடக்கும் அம்மா. கஸ்தோன்துரையின் மனது ஆடிப்போயிற்று. அவர் கதவுகளைத் திறந்து மாடிப்படி இறங்க நினைத்தார். அப்போதுதான் மாம்பியின் அலறலைக் கேட்டு யாரெல்லாமோ ஓடி வந்தார்கள். முன்வைத்த காலை அவர் பின்னுக்கு இழுத்துக்கொண்டார்.

இந்த மாடிப்படியில் இறங்கி ஆண்டுகள் இருபத்தைந்தாகிவிட்டன. மய்யழியில் பிறந்து வளர்ந்த கஸ்தோன்துரைக்கு மய்யழியின் மக்கள்அனைவருமே இன்று அறிமுகமில்லாதவர்கள். ஜன்னலை மறைக்கக் கட்டிவைத்த திரைச்சீலைகளினூடே சில சமயங்களில் அவர் வெளியே பார்ப்பதுண்டு. ர்யூ த் ரஷிதாம்ஸ் வழியாகக் கடந்து போகும், பாலத்தில் காற்று வாங்கிக்கொண்டிருக்கும், மய்யழியின் மக்களை அவர் காண நேர்வதுண்டு. ஆனால் அவர்கள் யாரும் இவரைப் பார்க்க முடியாது.

துரைக்கு ஒரேயொரு கலக்கம் உண்டு — வேதனைப்படத் தேவை இல்லாதாகிப் போய்விட்டதான ஆண்மையைக் குறித்த வேதனை. ஒரு வாரம் முழுக்கக்கூட ஒன்றிணைந்து வாழ முடியாமல் போய்விட்ட தெரஸாவைக் குறித்த வேதனை. நள்ளிரவில் கிதாரின் கம்பிகளினூடே அந்த வேதனையை இசையலையாய் மய்யழியின் மேற்பரப்பில் பரப்பிக்கொண்டிருந்தார். உறங்கிக்கொண்டிருப்பவர்களின் உணர்வில் துன்பக் கனவுகளைப் படரச் செய்யும் இசையலையாய் அவர்களை வேட்டையாடுகிறார்.

மாம்பியின் கூக்குரலைக் கேட்டு வந்த பத்ரோசும் சாத்துப்போலீசும் மிஸ்ஸியைத் தூக்கிக் கட்டிலில் கிடத்தினார்கள். அவளுக்குப் பிரக்ஞை வரவில்லை. தலையிலிருந்து இரத்தம் கசிந்து ஒழுகிக்கொண்டிருந்தது.

யாரோ டாக்டரை அழைத்து வர ஓடினார்கள்.

மம்மிக்கு என்ன ஆயிற்று என்று தெரிந்துகொள்ளும் தாபத்தினால் கஸ்தோன்துரைக்கு மூச்சுமுட்டியது. ஆனாலும் அவர் கீழே இறங்கி வரவில்லை. ஆட்கள் பேசிக்கொண்டது அங்கிருந்தபடியே கேட்டது.

அவர் பயப்படும் ஆட்கள்.

கஸ்தோன்துரையின் மனதில் ஒரு போராட்டம் நடந்தது. சொந்த அம்மாதான் மரணப்படுக்கையில் கிடக்கிறார்கள். கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகத் தன் பொருட்டுக் கண்ணீர் வடிக்கும் மம்மி. ஆனாலும் கஸ்தோன்துரையின் கால்கள் முன்னோக்கி நகரவில்லை. கீழேயிருந்து கேட்ட நபர்களின் அரவம் அவரை பயமுறுத்தியது. மனிதர்களுக்கு மத்தியில் இறங்கிச் செல்வதா! கஸ்தோன்துரை நடுங்கினார். இல்லை, என்னால் முடியாது.

கஸ்தோன்துரை கதவுகளைத் தாளிட்டார். அடைத்த அறையில் அவர் உலாவத் தொடங்கினார்.

மறுநாள் காலையில் மிஸ்ஸிக்கு நினைவு திரும்பியது. தன் திறந்த மிஸ்ஸி நாலாபக்கமும் பார்த்தாள். குறம்பி, தாமு, தாசன், பத்ரோஸ், சாத்துப்போலீஸ்... அவர்களையெல்லாம் மிஸ்ஸி எதிரே பார்த்தாள்.

"கஸ்தோன்—"

மிஸ்ஸியின் உதடுகள் அசைந்தன. எல்லோருடைய பார்வையும் மாடிப்படியின் உச்சத்தில் பதிந்தது. அங்கே யாருமில்லை. கதவுகள் அடைத்தபடியே இருக்கின்றன.

மிஸ்ஸியின் கண்களிலிருந்து கண்ணீர் கன்னங்களில் வழிந்திறங்கியது. பாதி மூடிய கண்களுடன் அவள் சலனமற்றுக் கிடந்தாள். நீண்ட கறுத்த உடுப்புக்குள்ளிருந்து வெளிறிய இரண்டு மெலிந்த பாதங்கள் வெளியில் தெரிந்தன.

தாமுரைட்டருக்கு அதைப் பார்த்துக்கொண்டு நின்றிருக்க முடியவில்லை. அவரால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. மாடிப்படியின் உச்சியைப் பார்த்து அவர் கூப்பிட்டுச் சொன்னார். "கஸ்தோன், கீழே இறங்கி வா, உங்கம்மா செத்துக்கிட்டிருக்காங்க. . . ."

மிஸ்ஸியின் கண்கள் அசையவில்லை. அவளுடைய உடம்பு பாதம் முதல் தலை வரை சற்றே விறைத்தது. குறம்பியம்மாவின் அலறல் எழுந்தது.

"கஸ்தோன். . . ."

கம்பளம் விரித்த மாடிப்படியின் கீழ்த்தட்டில் நின்றுகொண்டு ரைட்டர் தொண்டை கிழியக்கூப்பிட்டார்.

"கொஞ்சம் இறங்கி வா கஸ்தோனே. . ."

கஸ்தோன்துரைக்கு அது கேட்கவில்லை.

கைப்பிடியைப் பிடித்துக்கொண்டு ரைட்டர் மெதுவாக மாடிப்படி ஏறத் தொடங்கினார். மிஸ்ஸியின் கட்டிலைச் சுற்றி நின்றிருந்தவர்களின் கண்கள் அவரைப் பின்தொடர்ந்தன.

ரைட்டர் அடைத்திருந்த கதவின் எதிரே சென்று நின்றபடி மீண்டும் கூப்பிட்டார். பதில் வரவில்லை. அவர் கதவைத் தடதடவென்றுதட்டினார். கஸ்தோனுக்கு அரவம் கேட்கவில்லை. உள்ளே வேகவேகமாகக் காலடி பதிக்கும் ஓசை மட்டுமே.

கதவைத்தட்டித் தளர்ந்த ரைட்டர் கைப்பிடியைப் பற்றிக்கொண்டு மெதுவாகக் கீழே இறங்கினார்.

சாயங்காலம் லெஸ்லீதுரையின் மிஸ்ஸி கடைசி மூச்சை விட்டாள். கடைசி நிமிடம் கஸ்தோன்துரையைத் தவிர மற்றெல்லோரும் அவளுடைய கட்டிலருகில் இருந்தார்கள்.

நிறம் மங்கிய பட்டுவிரித்த தேக்குக்கட்டிலில் உணர்விழந்துபோன கைகால்களுடன் பாதி மூடிய கண்களில் கண்ணீருடன் மிஸ்ஸி கிடந்தாள். தலையில் நரைத்த ஒரு பிடி முடியில் இரத்தக் கறைகள். ஒரு காலத்தில் வெள்ளைப பட்டின் ஆடையுடுத்து, பிரமுகரான லெஸ்லீதுரையின் கையைப் பிடித்துக்கொண்டு, கடற்கரையில் தினமும் காற்று வாங்கப் போகும் அழகி மிஸ்ஸி.

மிஸ்ஸியின் மரணத்துடன் மய்யழியில் சட்டைக்காரர்களின் பொற்கால கட்டத்திற்குத் திரைச்சீலை விழுந்துவிட்டது. தலைமுறைகளாகப் பெருமையும் மேன்மையும் பெருந்தன்மையும் கொண்ட வள்ளல்களும் செல்வந்தர்களுமான சட்டைக்காரர்களின் பரம்பரையில் கடைசிக் கன்னியாக இருந்தாள் மிஸ்ஸி. அவளுடைய மரணத்துடன் ஒரு காலகட்டம் முடிவடைகிறது. இனியும்மய்யழியில் சட்டைக்காரர்கள் தங்களுடைய வாழ்க்கை நாடகத்தை நடத்துவார்கள். ஆனால் அவர்கள் பெருந்தன்மையும் பெருமையும் கைவரப்பெற மாட்டார்கள். அவர்கள் தரித்திரமும் இன்னல்களும் ஏற்று அற்பத்தனமான வாழ்க்கை நடத்துவார்கள். அவர்களிடையே பிச்சைக்காரர்களும் வேசிகளும் பிறப்பார்கள். வேரோடு அழிவதான அவர்களுடைய துன்பியல் யாத்திரை தொடங்கிவிட்டது.

மிஸ்ஸியின் மரணச் செய்தியைக் கேட்டறிந்து ஏராளமான பேர் லெஸ்லீ துரையின் பங்களாவில் கூட்டம் கூடினார்கள். சவப்பெட்டியின அருகில் நின்று கொண்டு மிஸ்ஸியின் உற்ற தோழி குறும்பியம்மா நெஞ்சில் அடித்துக்கொண்டு அழுதாள். மிஸ்ஸியின் தனித்தன்மையான கேக்குகள் சாப்பிட்டு வளர்ந்த தாசனும் கிரிஜாவும் அழாமலிருப்பதற்காக உதடுகளைக் கடித்து விசும்பினார்கள்.

மாடியில் அடைத்திருந்த அறையில் அப்போதும் கஸ்தோன்துரை நடந்துகொண்டுதானிருந்தார்.

“பெத்தெடுத்த அம்மா செத்துக் கெடக்கிறா. கண்ணிலே ரத்தமில்லாதவன்!”

“கல்லாலேயா செஞ்சிருக்கு அவரோட மனசை?”

வந்தவர்களெல்லாம் திரும்பிப் போய்விட்டார்கள். பங்களா வெறுமையாயிற்று. நேரம் நள்ளிரவைக் கடந்தது. நட்சத்திரங்கள் பிரகாசிக்கும் தெளிவான ஆகாயத்தின் காலடியில் சமுத்திரம் அமைதியாய்ப் பரவிக் கிடந்தது.

அப்போது அடைப்பட்டிருந்த கதவு திறக்கப்பட்டது. மாடிப்படி முகப்பில் கஸ்தோன்துரையின் வெளிறிய முகம் தென்பட்டது. இருபுறத்துத் தோள்களிலும் சரிந்து தொங்கிய தங்கத் தலைமுடி. நீளமான தங்கத்தாடி. ஆகாயத்தைப்போல அமைதியான நீலக்கண்கள்.

கஸ்தோன்துரை கைப்பிடியைப் பிடித்துக்கொண்டு மெதுவாக மாடிப்படி இறங்கினார்.

சர ராந்தல்கள் பிரகாசித்துக் கொண்டிருக்கும் லெஸ்லீதுரையின் தனியறை சூனியமாயிருந்தது. கண்ணாடிப் படிக விளக்குகளின் அடியில்பட்டு விரித்த சவப்பெட்டியில் மாரில் பிணைத்து வைத்த கைகளுடன் கிடக்கும் மிஸ்ஸி.

கஸ்தோன்துரை மெதுவாக சவப்பெட்டியின் அருகே நடந்தார். அவர் மம்மியின் முகத்தை உற்றுப் பார்த்தபடி நின்றார்.

"மம்மீ. — ."

கஸ்தோன்துரை அமைதியாக சவப்பெட்டியின் அருகில் முழந்தாளிட்டார்.

"எனக்கு யாரு இருக்காங்க மம்மி இனிமே?—எனக்கு யாரு இருக்காங்க...!"

தலையை அம்மாவின் மார்பில் சாய்த்து அவர்தேம்பி அழுதார்.

மய்யழி ஆற்றின் பரப்பில் சூரியன் உதித்து உயரும் வரை அவர் அப்படியே கிடந்து அழுதுகொண்டிருந்தார்.

# 21

ஸ்டடி கிளாஸ் இல்லாத நாட்களில் சாயங்காலம் தாசன் கடற்கரைக்குச் சென்று உட்கார்ந்திருப்பான். ஆளில்லாத ஓர் ஒதுக்குப்புறத்தில், சமுத்திரத்தைப் பார்த்துக்கொண்டு, சும்மா உட்கார்ந்திருப்பான். கடல் அமைதியாக இருந்தால் மிகத் தொலைவில் ஒரு வெள்ளிக் கீற்றுப் போல வெள்ளியாங்கல் தெளிவாகத் தெரியும். ஒரு பிறப்புக்கும் மறுபிறப்புக்கும் இடையே ஓய்வு எடுத்துக்கொள்ளும் மனித ஆத்மாக்கள் அங்கே அலைந்துகொண்டிருக்கும். வெள்ளியாங்கல் தெளிவாகத் தெரியும் நாட்களில் தாசனின் சிந்தனைகளுக்கு ஆழம் அதிகரிக்கும்.

சில சமயங்களில் வாசூட்டியும் பப்பனும் உடனிருப்பார்கள். அப்போது புரட்சியும் அரசியலும் பேசுபொருட்களாகும். கணாரன் அவர்களுடன் தென்படுவதில்லை. அவர்களைவிட வயது அதிகமான அவர் பெரும்பாலும் புரட்சியுடன் சம்பந்தப்பட்ட ஏதாவது முக்கிய காரியங்களில் ஆழ்ந்து ஈடுபட்டிருப்பார்.

"நான் யாரையாவது கொல்லுவேன்" ஒரு முறை பப்பன தாசனிடம் சொன்னான். "ரத்தம் சிந்துறதைத் தவிர வேறேவழி எதுவும் எனக்குத் தெரியலே."

பப்பனின் கண்களில் இரத்தக் கனவுகள் மலர்ந்து நிலைபெற்றுவிட்டன.

"பப்பா, ரத்தம் சிந்த வைக்கிறது எனக்குப் பிடிக்கலே. உண்மையைச் சொன்னா நீ பேசறதைப் பார்க்கிறப்போ எனக்கு பயமா இருக்கு."

பப்பன் பேசாமல் இருந்தான்.

"மனிதனோட ஒரு துளி ரத்தத்துக்கு ஒரு கிரீடத்தைவிட விலை அதிகம்."

"நீ காந்தியாகணும்னு பார்க்கிறியா?"

"எனக்கு காந்தியும் மார்க்ஸும் ஆக வேண்டாம்—மனிதனானால் போதும்."

தாசன் சமுத்திரத்தைப் பார்த்தபடி இருந்தான். அங்கே சுழி உண்டாகியிருந்தது. உயர்ந்தெழும் அலைகளுக்கு அப்பால் வெள்ளியாங்கல் ஒளிந்திருக்கிறது.

"வெள்ளைக்காரன் போகிறதைப் பார்க்கிற யோகம் மாஸ்டருக்கு இல்லே. நமக்காவது இருக்குமா தாசா?"

வாசூட்டி ஒருமுறை பெருமூச்சு விட்டான்.

"நீயும் நானும் பார்க்கிறதுக்காக இல்லே வெள்ளைக்காரன் போறது. காலம் பார்க்கும். நாம செய்ய வேண்டியதைச் செய்வோம்.

வேலையில்லாம அலைந்தும், அப்பா அம்மாக்களை அழவைத்தும், நாம செயல்படுவோம். தேவைப்பட்டா செத்துப்போவோம். பலன் என்னவானாலும் ஆகட்டும்- - "

"புரட்சி தொடங்கி பத்திருபது வருஷமாச்சி. என்ன நாம சாதிச்சிருக்கோம்?"

பப்பன் வெகுண்டான்.

அவன் வாசூட்டியைவிட தாசனிடம் நெருக்கம். மனதில்படுவது எல்லாவற்றையும் அவன் தாசனிடம் சொல்வான்.

நாட்கள செல்லச்செல்ல பப்பனின் ஆவேசம் அதிகரித்துக் கொண்டிருந்தது. இரத்தம் சிந்துவதைப் பற்றி அவன் தினமும் பேசினான். தாசனை அது நிலைகுலையச் செய்தது.

"கம்யூனிசம் ஹ்யூமனிசம்தான்."

தாசன் நினைத்துக்கொள்வான். பப்பன் ஏதாவது வன்முறையில் ஈடுபடுவானோ என்று அவன் பயந்தான்.

ஒருநாள் திடீரென்று தாசன் பாண்டிச்சேரி போக நேர்ந்தது—நாட்டின் தலைவிதியை நிர்ணயிப்பதான ஒரு மீட்டிங்கில் பஙகேற்பதற்காக. தாசன்தான் போக வேண்டுமென்று கணாரன் அண்ணாச்சி வற்புறுத்தினார். வெள்ளைக்காரனின் மொழியை தாசன் வெள்ளைக்காரனைப் போலவே பேசுவான். தர்க்கம் புரிவதிலும் அவன் கெட்டிக்காரன்.

அதிகாலையிலேயே கணாரன் வந்து அழைத்துப் போனார். வாசகசாலையில் உட்கார்ந்து அவர்கள் நீண்ட சர்ச்சை செய்தார்கள். நண்பகலுக்குப் பிறகு வியாவையில் குளித்தபடி தாசன் வீட்டுக்குள் நுழைந்தான்.

"கஞ்சியாவே இருக்கட்டும்—அது குடிக்கக்கூட உனக்கு நேரம் கிடைக்கலே இல்லே.?"

வெயில்பட்டுக் கறுத்துவிட்ட மகனின் முகம் கண்டு அம்மா வருத்தப்பட்டாள். சாப்பாடும் தூக்கமும் இல்லாமல் மீட்டிங் என்றும் சம்மேளனம் என்றும் சொல்லி அலைகிறான். இதற்கு என்னதான் ஒரு முடிவு?

"குளிக்க நேரமில்லேம்மா, நான் போகணும்?"

தாசன் ஒரு பையில் சட்டையும் வேட்டியும் எடுத்து வைத்தான். அதைப் பார்த்து கௌசுவம்மா கேட்டாள்.

"நீ எங்கே போறே?"

"பாண்டிச்சேரிக்கு."

கௌசுவம்மா திகைத்து நின்றாள். பத்தாயத்தின்மேல் படுத்திருந்த குறும்பியம்மா காதுகளைக் கூர்மையாக்கினாள். பாண்டிச்சேரி ரொம்பத்தொலைவு. இரண்டு மூன்றுவண்டிகள் மாறி ஏற வேண்டும். இரண்டு நாள் பயணம்.

"குளிச்சி ரெண்டு பருக்கை பழையது சாப்பிட்டுப் போகக்கூடாதாப்பா?"

"நான் சீக்கிரமாத் திரும்பிருவேன்."

தாசன் அம்மாவை சமாதானப்படுத்திவிட்டுப் பையுடன் வராந்தாவுக்குப் போனான். குளிக்கவும் சாப்பிடவும் நேரம் இல்லை. மெயில் வந்துவிடும். ஸ்டேஷனுக்குப் போகும் வழியில் லீலாக்கா

வீட்டிற்குக் கொஞ்சம் போக வேண்டும். பாண்டிச்சேரியிலிருந்து எப்போது திரும்ப முடியும் என்று தெரியவில்லை. அரெஸ்ட் செய்யப்படலாம் என்ற பயத்தோடுதான் கணாரனும் தாசனும் ஆக எல்லோரும் இப்போதெல்லாம் நடமாடினார்கள்.

தாமுரைட்டர் வராந்தாவில் சாய்வு நாற்காலியில் படுத்திருந்தார். கோர்ட்டிலிருந்து சாப்பிடுவதற்காக வந்திருந்த நேரம்.

"நான் கொஞ்சம் பாண்டிச்சேரிக்குப் போகணும்."

தாசன் அப்பாவுக்கு அருகில் சென்று நின்றான். ரைட்டர் மடியில் கிடந்த பத்திரத்திலிருந்து தலை நிமிர்த்தினார்.

"பிரெஞ்சிந்தியன் காங்கிரஸின் ஒரு மீட்டிங் இருக்கு. நான் போயிட்டு வரட்டுமா?"

"உம்..."

ரைட்டர் தலையை நிமிர்த்தாமலேயே உம் கொட்டினார். இதற்குள் குறம்பியம்மா பத்தாயத்தின் மேலிருந்து கீழிறங்கி வந்து சொன்னாள்.

"பாட்டிக்கு ஒரு கம்பளி வாங்கிட்டு வர்றியா பாண்டிச்சேரியிலிருந்து?"

பாண்டிச்சேரியில் நல்ல கம்பளி கிடைக்குமென்று குஞ்ஞிச்சிருதைதான் அவளிடம் சொல்லியிருந்தாள். தாவீதுதுரை கோர்ட் விஷயமாகப் பாண்டிச்சேரிக்குப் போயிருந்தபோது அவளுக்காக ஒரு கம்பளி வாங்கி வந்திருந்தார்.

"வாங்கிட்டு வர்றேன். பாட்டி."

தாசன் வெளியேறி, லீலாக்கா வீட்டிற்குச் சென்றான்.

லீலாக்கா வீட்டில் இல்லை. தாய்மாமனுடன் காலையில் அவருடைய விட்டிற்குப் போயிருப்பதாக வேலைக்காரி சொன்னாள்.

"சந்திரியும் போயிருக்காளா?"

"சந்திரி குளிக்கிறா."

ஒரு நிமிடம் தயங்கி நின்றான். குளித்துவிட்டு வரும்வரை காத்திருக்க நேரமில்லை. சொல்லிக்கொள்ளாமல் போனால் அவளுக்கு வருத்தம் ஏற்படும். சந்திரிகாவுடன் ஒருபோதும் முரண்பட்டதில்லை. ஒருபோதும்...

வேலைக்காரி அடுக்களை நோக்கித் திரும்பிப் போனாள். தாசன் பையை வெளிமுற்றத்தில் வைத்துவிட்டுக் குளியலறைப் பகுதிக்கு நடந்தான். குளியலறையின் கதவு மூடிக்கிடந்தது.

"சந்திரீ!"

"தாசனா?"

உள்ளேயிருந்து வியப்புக் குரலில் வினவியது கேட்டது.

"நீ குளிக்க ஆரம்பிச்சிட்டியா?"

"என்ன தாசன்?"

"நான் பாண்டிச்சேரிக்குப் போறேன். . மெயில்லே. உன்கிட்ட சொல்லிட்டுப்போக வந்தேன். குளிக்க ஆரம்பிக்கலேன்னா கதவைத்திற."

"போய் உக்காருங்க, நான் இப்பவே வர்றேன்."

"உக்கார நேரமில்லே. மெயில் வர்ற நேரம். நான் போய் வரட்டுமா?"

"போயிடாதீங்க! ஒரு நிமிஷம்."

வண்டி வரும் நேரமாகிறது. அரை நாழிகையளவு நடந்தாக வேண்டும். தாசன் என்ன செய்வதென்று அறியாமல் அடைத்திருந்த

கதவின் முன்பாக நின்றான்.

"போயிறாதீங்க தாசன். . ."

சந்திரிகா மீண்டும் கெஞ்சினாள்.

ஒரு நிமிடம்கூட ஆகவில்லை. கதவுத்தாழ்ப்பாள் கரகரப்புடன் திறந்தது. காய்ச்சிய எண்ணெயின் மணமும் சோப்பின் மணமும் சேர்ந்து வெளியே வந்தன. சந்திரிகாவை தாசன் பார்த்தான். நடை திறந்து தரிசனம் தருவது போன்று அவள் எதிரில் நின்றாள். கறுத்த புள்ளிகளிட்ட ஒரு வாயல் புடைவையை வாரிச் சுற்றியிருந்தாள். தண்ணீர் கழுத்திலும் தோளிலும் வழிந்துகொண்டிருந்தது.

"சந்திரீ?"

"என்ன தாசன்?"

அவளுடைய ஈரமான உதடுகளும் கண்களும் ஒளிர்ந்தன. உடம்பில் தண்ணீரில் நனைந்த வாயல்புடைவை ஒட்டிக்கொண்டிருந்தது

"நீங்க எப்போ வருவீங்க?"

"மூணு நாலு நாளிலே."

"கடுதாசி போடுவீங்களா எனக்கு?"

"கடுதாசியா?" அவன் சிரித்தான். "நாலு நாள்லே நான இங்கே வந்திருவேனில்ல?"

"நாலு நாளிலே வந்திரணும்!"

அவள் வேண்டினாள். கின்றறைப்போல் தண்ணீர் தளம் கட்டிக்கிடந்த கண்களில் ஒளி மங்கியது. கறுத்த வளையணிந்த, நனைந்த கைகளால் கதவைப் பிடித்தபடி அவள் எதையோ எதிர்பார்த்து நின்றாள். சோப்பின் வாசனை. எதுவும் பேசாமல் கண்களைத் தாழ்த்தி அவள் நின்றிருந்தாள்.

"நான் போகட்டுமா?"

"உம்."

பீடிக்கறை படிந்த உதட்டில் ஒரு புன்சிரிப்புடன் அவன் திரும்பி நடந்தான். வெளிமுற்றத்திலிருந்த பையை எடுத்துக்கொண்டு, வேட்டியை மடித்துக் கட்டிக்கொண்டு புகைவண்டி நிலையத்தை நோக்கி வேகமாக நடந்தான்.

இந்தத் தடவை பயணம வழியனுப்பி வைக்க யாருமில்லை. குதிரைவண்டியும் பரிவாரங்களுமில்லை. படித்து உத்தியோகஸ்தானவதற் கல்ல, சொந்த நாட்டின் தலைவிதியை நிர்ணயிப்பதான ஒரு சம்மேளனத்திற்காக இந்தத் தடவை பயணம்..

வண்டி ஒன்றரை மணிநேரம் லேட். வியர்வையில் குளித்து வண்டிக்காகக் காத்துக்கொண்டு ப்ளாட்பாரமில் இருக்கும்போது சோப்பின் வாசனையை அனுபவித்தான். வண்டி லேட் என்று அந்த நேரத்திலேயே தெரிந்திருந்தால்...

★ ★ ★

முன்புறம் நடுவே கிழிந்த சட்டையுடன் பப்பன் சாலையிலிருந்து பரபரப்பாக எழுந்தான். வலதுகைப்பின்புறத்தில் எதிராளிகள் போட்ட சூட்டின் கொப்புளம். அவனுக்குத் தன் கால்களில் நிற்பதற்கு சக்தியில்லாதிருந்தது. எதிரில் சலனமற்றுக்கிடக்கும் கொம்பீலார். அவருடைய கையில் பப்பனின் தலையிலிருந்து பிய்த்தெடுத்த தலைமுடி.

படிக்கட்டுகள் வழியே ஆட்கள் தன்னை நோக்கி ஓடி வருவதைப் பப்பன் பார்த்தான். கூட்டத்தில் ஒருபோலீஸ்காரரின் சிவப்புத் தொப்பி. தொட்டடுத்து பிரெஞ்சிந்திய எல்லைக்கோடு. சீக்கிரமே தப்பித்து ஓடிவிடு. . .

இனி இங்கே நிற்கக்கூடாது. நான் போகிறேன். ஒருவேளை நிரந்தரமாக. . .

அவன் தனக்கு முன்பாகப்பரந்து கிடக்கும் மய்யழியைக் கடைசியாக ஒரு தடவை பார்த்துக்கொண்டான். தொலைவில் ஆகாயம் வரை உயர்ந்து நிற்கும் தேவாலய கோபுரம். அதன்மீது சிலுவை. . . .

"மய்யழி, விடைபெற்றுக் கொள்கிறேன். . . . ."

பப்பனின் இரத்தம் படிந்த உதடுகள் முணுமுணுத்தன.

பலவீனத்தால் தள்ளாடும் கால்களால் அவன் திரும்பி நடந்தான். ஆவேசமாகப் பாய்ந்து வரும் ஆள்கூட்டம் பக்கத்தில் வந்துவிடுவதற்கு முன்பு எல்லையைக் கடந்து தலைமறைவாகி விடவேண்டும்.

மய்யழி, மன்னித்துவிடு ! எல்லாம் உனக்காக. உன்னுடைய அடிமை வாழ்க்கை முடிவடைவதற்காக.

நீண்டிருந்த சாலைவழியே தள்ளாடியபடி பப்பன் நடந்து மறைந்தான்.

விவரம் அறிந்த மய்யழி மக்கள் பூகம்பம் ஏற்பட்டது போலத் திகைத்து நின்றார்கள். வாசூட்டி மய்யழியிலிருந்து ஓடித் தப்பிவிட்டான். கணாரன் தலைமறைவானார்.

குறம்பியம்மா வராந்தாவில் கால்நீட்டியபடி பொடி போட்டுக்கொண்டிருந்தாள். அப்போதுதான் ஒரு ஜீப் பாய்ந்து வந்து வீட்டின் முன்பாக நின்றது. சில சிவப்புத் தொப்பிக்காரர்கள் அதிலிருந்து இறங்கினார்கள்.

குறம்பியம்மா பரபரப்புடன் எழுந்தாள். பொடிடப்பி மடியிலிருந்து கீழே விழுந்தது.

"எங்கே தாசன் ?"

"அவன் பாண்டிச்சேரி போயிருக்கான். மெயில்லே"

சந்தடி கேட்டு கௌசு நிலைப்படியில் வந்து நின்றாள். போலீஸ்காரர்கள் அவளுக்கு நேராகத் திரும்பினார்கள்.

"உன் மகன் எங்கே ?"

"இல்லே."

விவரம் புரியாமல் பொறிகலங்கி நிற்கும் கௌசுவம்மாவைத் தள்ளி ஒதுக்கிவிட்டுப் போலீசார் உள்ளே நுழைந்தார்கள். கட்டிலடியிலும் கதவிடுக்குகளிலும் டார்ச் அடித்துத் தேடினார்கள்.

கடைசியில் நிராசையுடன் வெளியே வந்தார்கள்.

அப்போதுதான் கோர்ட் முடிந்து ரைட்டர் திரும்பி வந்தார். போலீசார் அவர் பக்கம் திரும்பினார்கள்.

"எங்கே உன் மகன் ?"

"தாசன். . . . ."

போலீசார் ரைட்டரை முடிக்க விடவில்லை.

கையிலிருந்த தஸ்தாவேஜுக்கட்டும் குடையும் நழுவி விழுந்தன. தொண்டையிலிருந்து பெரியதோர் அழுகை வெளிப்பட்டது.

ஜீப் ரைட்டரை ஏற்றிக்கொண்டு சீறிப் பாய்ந்தது. அந்த இரைச்சலில்

கௌசுவம்மாவின் அலறலை யாரும் கேட்கவில்லை.

கணாரன் அண்ணாச்சியும் வாசூட்டியும் தப்பித்துவிட்டாலும் அவர்களுடன் தொடர்பு கொண்ட மற்றவர்கள் பலர் போலீசார் வசம் சிக்கினார்கள். அந்தக் கூட்டத்தில் குற்றம் செய்யாதவர்களும் இருந்தார்கள். சிலரை மய்யழியில் சிறையில் அடைத்தார்கள். சிலரை பாண்டிச்சேரி சிறைச்சாலைக்குக் கொண்டு போனார்கள். அந்தக் கூட்டத்தில் தாமுரைட்டரும் ஒருவர்.

யுத்தகளம் விழித்தெழுந்தது. பாஞ்சஜன்யம் முழங்கிற்று.

★ ★ ★

மீட்டிங் முடிவதற்கு முன்பாகவே தாசன் பாண்டிச்சேரியிலிருந்து தலைமறைவானான். மய்யழியில் அவனைக் கண்டுபிடிக்க முடியாமல் அரெஸ்ட் வாரண்ட் அங்கே அனுப்பப்பட்டிருந்தது.

பஸ்ஸிலும் ரயிலுமாக எப்படியோ ஊர் வந்து சேர்ந்தான்.

மய்யழி ரயில்வே ஸ்டேஷன் ஊரெல்லையை அடுத்திருந்தது. அங்கே தாசனுடைய பயணம் முடிவுற்றது. அதைத் தாண்டி அவன் நுழைய அனுமதியில்லை.

தொலைவில் ஆகாயத்தில் உயர்ந்துநிற்கும் தேவாலய கோபுரத்தை அவன் பார்த்தான். மூப்பனின் குன்றின் மீதிருந்த லைட்ஹவுசையும் பார்த்தான்.

ஊரும் வீடும் இழந்த தாசன் ஸ்டேஷனுக்கு வெளியே வெறுமையாய் நின்றிருந்தான். பப்பனின் வன்முறையும் அப்பாவின் அரெஸ்ட்டும் அவனைத் தளர்வுறச் செய்திருந்தன. உறக்கச் சடவாலும் மனக்கவலைகளாலும் தாசன் நிலைகுலைந்தான்.

வருவோரும் போவோரும் அவனைப் பார்த்துத் தங்களுக்குள் இரகசியம் பேசிக்கொண்டார்கள்.

அப்படி அதிக நேரம் நின்றிருக்க நேரவில்லை. கணாரன் அண்ணாச்சியும் வாசூட்டியும் எதிரே நடந்து வருவதைப் பார்த்தான்.

"உனக்கு எல்லாம் தெரியுமில்ல, தாசா?"

"தெரியும் அண்ணாச்சி."

"உனக்கு ஆபத்து வருமோன்னு எனக்கு பயம்... "

"எனக்கு இனிமே என்ன வரணும்? எங்கப்பா. . ."

முடிக்கக்கூட இல்லை. உச்சிவெயிலில் தலை சுற்றியது.

"வரவேண்டியது வந்திருக்கு. இனி பேசி என்ன பண்ண...?"

கணாரன் அண்ணாச்சி தாசனின் தோளைப் பிடித்துக்கொண்டு நடந்தார்; பின்னால் வாசூட்டி. அவர் அவனைச் சமாதானப்படுத்த முயன்றார்.

புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே கணாரன் அண்ணாச்சிக்குச் சொந்தமான ஒருசிறிய வீடு இருந்தது. போர்ட்டர் குஞ்ஞாமன் அதில் குடியிருந்தான். மய்யழியிலிருந்து தலைமறைவானதிலிருந்து தங்கியிருக்க இடம் எதுவும் கிடைக்கவில்லை. குஞ்ஞாமனிடம் வீட்டைக் காலி செய்யச் சொல்ல கணாரன் அண்ணாச்சிக்கு சங்கடமாயிருந்தது. எனவே குஞ்ஞாமனுடனேயே கணாரன் அண்ணாச்சியும் வாசூட்டியும் தங்கினார்கள்.

குளியலும் சாப்பாடும் முடிந்ததும் தாசனுக்கு நிம்மதி பிறந்தது. உணர்ச்சிக்கு பதிலாக அறிவு வேலை செய்யத் தொடங்கியது.

மூப்பன்துரை தந்த உத்தியோகத்தையும் பிரான்சுக்குச் செல்வதான ஸ்காலர்ஷிப்பையும் நிராகரித்த அந்த நிலையில் ஒரு மந்திரவாதியின் கண்ணாடியில் பார்ப்பதைப்போல் அவன் தன்னுடைய எதிர்காலத்தைப் பார்த்திருந்தான். இன்னும் எத்தனையோ அக்னிப்பரீட்சைகள் எஞ்சியிருக்கின்றன. எதையும் பொறுத்துக்கொள்ளும் வலிமையை வளர்த்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. —பாறையின் வலிமை...

இரண்டு நாட்கள் போக வேண்டியிருந்தது பப்பனை நேரில் சந்திப்பதற்கு. கணாரன் அண்ணாச்சியோ வாசூட்டியோ அவனைப் பார்க்க முடியவில்லை. அவன் எங்கே இருக்கிறான் என்று யாருக்கும் தெரியவில்லை.

சாயங்காலம் ஆற்றங்கரைக்குச் சென்றபோது ஒருகுறுக்குப் பாதையில் நின்றிருந்த பப்பன் திடீரென்று மேலேறிவந்தான். தாசனைப் பார்த்ததும் அவன் நின்றான்.

"பப்பா. . . . . ."

அவன் சட்டென்று திரும்பி நடந்தான். ஒரு காட்டெருமையின் முரட்டுத்தனத்துடன்.

"நில்லு பப்பா..."

அவன் நின்றான். பார்க்க அடையாளம் தெரியாதபடி மாறிப்போயிருந்தான். முகத்தில் சிதறிக் கிடந்த இளம் ரோமங்கள்.

"நீ இப்படி செய்வேன்னு நான் நினைக்கவே இல்லே, பப்பா."

"நீயும் என்னைக் குற்றவாளியாத்தான் பார்க்கிறயாக்கும்?"

அவனுடைய கண்களில் தீ பற்றி எரிந்தது. ஒரு புலியைப் போல அவன் உறுமினான்.

"அந்த காந்தி கணாரன் அண்ணாச்சி குத்தம் சொன்னா நான் புரிஞ்சுக்குவேன். நீயும் அதுக்கு ஒத்துப்போனா அதை என்னாலே புரிஞ்சுக்க முடியலே."

"நான் உன்னைக் குத்தம் சொல்லலே. உன்னை நான் புரிஞ்சிக்கிட்டேன், பப்பா."

தாசன் யாரோடு என்றில்லாமல் தொடர்ந்தான்.

"துன்புறுத்தாம உன்னாலே கொம்மீஸாரைக் குத்த முடிஞ்சிருந்தா... ரத்தம் சிந்தாம காயப்படுத்த முடிஞ்சிருந்தா... "

துன்புறுத்துவதும் இரத்தம் சிந்துவதும் மட்டும் அவனால் பொறுத்துக் கொள்ள முடியாது. ஆனால், தாசனுக்குத் தெரியும்—துன்புறுத்த வேண்டியிருந்தால் துன்புறுத்தத்தான் வேண்டும். இரத்தம் சிந்த வேண்டியிருந்தால் சிந்தத்தான் வேண்டும். அதனால்தான் பப்பனைப் புரிந்துகொள்வதில் அவனுக்கு இடர்பாடு உண்டாகவில்லை.

"பப்பா, நீ இல்லேன்னா இன்னொருத்தன் அந்தக் கொடூரத்தைச் செய்தேயாகணும். வேறே ஒருத்தன் செய்ய வேண்டியதை நீயே செய்திட்டே. அப்படியாக இன்னொருத்தனை நீ அவப்பேரிலிருந்து காப்பாத்திட்டே. உன்னோட பெருமையை அதுதான். . . ."

"உன்னோட பிலாசபி எதுவும் எனக்குக் கேட்கத் தேவையில்லே."

பப்பன் முரண்டினான்.

அவனுக்கு இரவில் தலை சாய்க்க ஓர் இடமோ, பசியை அடக்க ஒரு பிடி சோறோ கிடையாது. இரண்டு மூன்று நாட்களாகப் பட்டினிதான். கடைத் திண்ணையில்தான் படுக்கை.

மய்யழியில் அவனுக்குப் பெரியதொரு வீடுண்டு. பப்பனின் அப்பா கொழும்பில். அம்மாவை அவன் பார்த்ததாக நினைவே இல்லை. அவனுக்கு விவரம் தெரிவதற்கு முன்பாகவே அவள் மண்ணுக்குள் ஓய்வெடுக்கத் தொடங்கிவிட்டாள். பப்பனுக்குச் சகோதரர்களோ சகோதரிகளோ இல்லை.

பப்பன் பாக்கியசாலி. அவன் இந்த உலகத்தில் சுதந்திரமானவன். இந்த சுதந்திரம் எனக்கு இருந்திருக்குமானால்...!

தாசன் தவித்துப்போனான். சிறையில் இருக்கும் அப்பா, அனாதையாகிவிட்ட அம்மா, கிரிஜா, பாட்டி ஆகியோரின் நினைவு மனதில் இரணம்போல வருத்தியது. தவித்தான்—நான் இந்த உலகத்தில் தனியாய் இருந்திருந்தால்...!

"பப்பா, வா."

"எங்கே?"

"கணாரன் அண்ணாச்சியும் வாசூட்டியும் நானும் இருக்கிற இடத்திலே நீ அந்நியனல்ல. எங்களில் ஒருத்தன்."

"அந்த நினைப்பு மத்தவங்களுக்கு இல்லையே."

காந்தி பக்தரான கணாரன் அண்ணாச்சியின் மனதில் இணைய முடியாத ஒருபிள்ளை பப்பன் உருவாக்கியிருந்தான். அவரால் ஒருபோதும் அவனை மன்னிக்க முடியாது.

"நானில்ல கூப்பிடுறேன்—வா."

பிடிவாதம் பிடித்தாலும் பப்பன் வழிக்கு வந்தான்.

அன்று முதல் பப்பனும் போர்ட்டர் குஞ்ஞாமனின் வீட்டில் தங்கினான்.

குஞ்ஞாமனின் மனைவி கஞ்சியும் வெஞ்சனமும் வைத்துத் தருவாள். அப்படிப் பசியாறுவாள். ஒரு நாளின் பெரும்பகுதி சர்ச்சைகளும் தர்க்கங்களும் பிறவுமாகக் கழியும். தினமும் சாயங்காலம் மய்யழி ஆற்றின் கரைக்குச்சென்று உட்கார்ந்திருப்பார்கள். கைவசமுள்ள பீடிகள் முழுவதையும் குடித்துத் தீர்ப்பார்கள்.

தனிமையின், வேதனைகளின் நாட்கள். நெஞ்சின் அலைகள் அடங்குவது என்றாக இருக்கும்.? இந்த வாழ்க்கையில் அமைதியும் மகிழ்ச்சியும் என்றாவது வந்து சேருமா?

வர நேரலாம்—வெள்ளியாங்கல்லின் உச்சியில் ஒரு தும்பியாய்ப் பறக்கும் போது, அன்றைக்குத்தான்!

# 22

எதிரில் நாற்று நட்டுக்கிடக்கும்வயல். வயலுக்கு அடுத்து எட்டாத் தொலைவிலிருந்து உற்பத்தியாகி வரும் மய்யழி ஆறு. இரண்டு பாலங்களினூடாக ஓடி மூப்பன்துரையின் பங்களாவின் நிழல் படிந்திருக்கும் கடலில் முடிவைத் தேடிக்கொள்கிறது. நதியும் சமுத்திரமும் கலந்து இணையும் அந்தக் காட்சிக்கு நான் எத்தனையோ தடவை சாட்சியாக இருந்திருக்கிறேன் —சிவந்த கோய்யேத்திப்பூக்கள் தளவிரிப்பு விரித்த பாலம். அங்கு கழித்த பிள்ளைப் பிராயத்து நாட்களின் நினைவுகள் வெயில் கீற்றுகளைப் போல அவ்விடத்தில் புதைந்து கிடந்தன.

சந்திரிகா எதிரில் வந்து நின்றதைப் பார்க்கவில்லை.

"தாசன். . . . "

கேட்டு மறந்திருந்த குரல். வாசலைத் தாண்டும்போது பாதசரங்கள் கிலுங்குவதுண்டு.

"சந்திரிகாவா?"

அவளை எதிரில் பார்த்ததும் அவன் ஒரேயடியாய்த் திகைத்துவிட்டான். அவள் எப்படி இங்கே வந்து சேர்ந்தாள்.?

"நீங்க குஞ்ஞாமன் வீட்டிலேயா இருக்கீங்க?"

"உனக்கெப்படி அது தெரியும்?"

"அம்மா சொன்னாங்க. அம்மா உங்களைக் கூட்டிவரச் சொன்னாங்க. அங்கே இருக்கலாமாம்."

லீலாக்கா அப்படிச் சொல்வார்கள் என்பது தெரிந்ததுதான்.

சந்திரிகா காலேஜில் சேர்ந்ததும் அவளுடைய இருப்பிடம் அழியூரில் தாய்மாமன் வீடு என்பதாக மாறியிருந்தது.

"நான் சாயங்காலம் வர்றேன்னு அம்மாகிட்டச் சொல்லு."

"இப்போ வந்தா என்னவாம்?"

"இப்போ வேறே வேலையிருக்கு?"

"சாயங்காலம் நிச்சயமா வருவீங்களா?"

"வர்றேன்."

சந்திரிகா புடவை கட்டத் தொடங்கியிருந்தாள். வழக்கம்போல் தலைமுடி பாதி கலைந்து கிடந்தது. புடவை கட்டத் தொடங்கியிருந்தும் பாதசரங்களை விட்டுவிடவில்லை. இப்போதும் அவளுடைய காலடிகள் பதியும் இடமெல்லாம் இசை பொழிந்தது.

சிறிது நேரம் கடந்ததும் கணாரன் அண்ணாச்சியும் வாசூட்டியும் வந்தார்கள்.

"நீங்க ரயிலடி வரை என்கூட வரமுடியுமா?"

கிளம்பும் நேரத்தில் அவள் கேட்டாள். அவன் ஒப்புக்கொண்டான். அவளுடைய அருகாமை அவனுக்கு எப்போதும் விருப்பமானதல்லவா. சட்டையிட்டுக்கொண்டு வயலினூடாக தாசன் அவளுடன் நடந்தான்.

"இந்த ரயில்தண்டவாளம் எங்கே முடியுது, தாசன்?"

"தொடங்கின இடத்திலே."

"அப்படீன்னா தொடங்குற இடம்?"

"முடிகிற இடத்திலே."

அவள் உரக்கச் சிரித்தாள். தன்னையறியாமல் தாசனும் அவளுடைய சிரிப்பில் பங்கேற்றான். அவன் நினைத்தான்—நான் இப்படி நல்லா சிரிச்சி ரொம்ப நாளாச்சி.

அப்பாவைப் பற்றிய விவரம் எதுவும் தெரியவில்லை. வீட்டில் அம்மாவும் தங்கச்சியும் எப்படிக் காலம் தள்ளுகிறார்கள் என்று தெரியவில்லை. அங்கே அடுப்பெரிகிறதா? பாட்டிக்கு உறிஞ்சிக்கொள்ள ஒரு நுள்ளல் பொடியாவது கிடைக்கிறதா?

தாசனால் எப்படிச் சிரிக்க முடியும்?

"சாயங்காலம் வந்திரணும். . ."

விடைபெற்றுப் போகும்போது சந்திரிகா மீண்டும் கேட்டுக்கொண்டாள். இரயில் தண்டவாளத்திற்குச் சமதையாக நீண்டு போய்க்கொண்டிருந்த ஒற்றையடிப்பாதை வழியே அவள் நடந்து போவதை அவன் பார்த்தபடி நின்றிருந்தான்.

சாயங்காலம் லீலாக்கா வீட்டிற்குச் சென்றான்.

புகைவண்டி நிலையத்திற்கு அடுத்திருந்ததுதான் அவனுடைய தாய்மாமன் வீடு. நிறைய மரவேலைப்பாடுகளும் உயரக் குறைவான மச்சும் உள்ள ஒரு மாடிவீடு. சுற்று வளைப்பில் தொழுவமும் வைக்கோல்களும். பகலில்கூட அறையில் இருட்டுத்தான். குஞ்ஞனந்தன் மாஸ்டருடன் பல முறை தாசன் அங்கே போனதுண்டு.

"நீ இங்கே இருந்துக்கோ." தாய்மாமன் சொன்னார். "இது உன்னோட வீடுன்னு நெனச்சிக்கோ"

"எப்பவும் வந்துபோய்க்கிட்டிருக்கேன். அது போதாதா மாமா?"

"போதாது. நீ இங்கேயே தங்கணும்."

தாய்மாமன் வற்புறுத்தினார்.

"நீ இவ்வளவு சீக்கிரம் எங்களை மறந்திட்டியா? இங்கே இந்த வீடு இருக்கிறப்போ நீ எதுக்காக அந்தக் குஞ்ஞானனோட வீட்டிலே இருக்கணும்?"

லீலாக்கா குறைபட்டுக் கொண்டாள்.

"குஞ்ஞனந்தன் போயிட்டதனாலே நீ இங்கே யாரோன்னு ஆயிடமாட்டே."

மாஸ்டர் இருந்தபோது லீலாக்கா வீட்டில் ஓர் உறுப்பினராக இருந்தான் தாசன். நினைத்தபோது வருவதும் போவதுமாக இருந்தான். அங்கே இரவில் தங்கி உறங்கிய நாட்கள்கூட உண்டு.

"சந்திரி, ரெண்டு க்ளாஸ்."

தாய்மாமன் உள்ளே குரல் கொடுத்துக் கூப்பிட்டுச்சொன்னார். சந்திரிகா க்ளாஸ்களுடன் வந்தாள்.

"தாசன் குடிக்கிறதில்லே, மாமா."

அவர் பத்தாயத்திலிருந்து அரக்கு சீசாவை வெளியிலெடுத்துக் கொண்டிருந்தார்.

"நிசம்மாவா தம்பி?"

"இதுவரைக்கும் குடிச்சதில்லே."

"பழக்கமில்லேன்னா அதெல்லாம் வேண்டாம். குஞ்ஞம்பு பன்னிரண்டு வயசானப்போ தொட்டங்கி அவனும் நானும் ஒன்னா உக்காந்து குடிக்கிற பழக்கம். மரியாதை மனசிலே இருந்தாப் போதும்."

குஞ்ஞம்பு மூத்த மகன். கேளுவச்சனைப் போல பாம்பு கடித்துத்தான் அவன் இறந்தான்.

தாய்மாமன் இரண்டு க்ளாஸ்களிலும் குறைவாகவே அரக்குச் சாராயத்தை ஊற்றினார்.

"வேண்டாம் மாமா."

"சும்மா குடி."

குடிக்க ஆசை இல்லாமலில்லை. சில சமயங்களில் நினைபபு வரும்—நேராக உன்னிநாயரின் கடைக்குப் போய் மூக்குமுட்டக் குடிக்க வேண்டும். குடிப்பதான நோக்கம் கொண்டல்ல-நினைவு மறக்க வேண்டுமென்ற நோக்கத்தினால். நினைவு ஒரு சாபக்கேடாக இருக்கிறது இன்று. எல்லா வேதனைகளின் உறைவிடமும் அதுதானே?

ஆனால் எப்படிக் குடிப்பது? தேசியப் புரட்சியையும் சுதந்திரப் போராட்டத்தையும் குறித்துப் பிரசங்கம் செய்யும் தான், தொலைவில் எங்கோ அப்பா சிறையில் இருக்கும்போது, அம்மாவும் தங்கையும்

பட்டினி கிடக்கும்போது, குடிக்கலாமா? குடித்துக் களிக்கலாமா? அதற்கான சுதந்திரம் தனக்கில்லை.

"தாசனை வற்புறுத்தாதீங்க." லீலாக்கா உதவிக்கு வந்தாள். "அவனோட நிலைமை உங்களுக்குத் தெரியாதா?"

அதற்குப் பிறகு தாய்மாமன் வற்புறுத்தவில்லை. இரண்டு க்ளாஸ்களின் அரக்கை ஒன்றாக்கிக் குடித்தார். அதிக நேரம் ஆகவில்லை. பிரும்ம ராட்சசனைப் பற்றிய பிரசங்கத்தைத் தொடங்கினார். அரக்கு உள்ளே போகும் போதெல்லாம் தாய்மாமனுக்கு பிரும்மராட்சசர்களைப் பற்றிப் பேசியாக வேண்டும்.

"பிரும்மராட்சசன்னு சொன்னா என்ன?"

"தெரியலே?"

"பின்னே என்னத்தே பாண்டிச்சேரியிலே வெள்ளைக்காரன் உனக்குச் சொல்லிக்கொடுத்தான்? பரசுராமன் மழுவை எடுத்துக் கடலிலே எறிஞ்சப்போ கரை பொங்கி வந்தது. அதை வெள்ளைக்காரன் உனக்குச் சொல்லிக் கொடுத்திருக்கானா? அப்படிப் பொங்கி வந்த கரையைப் பாதுகாக்க ஆள்பேர் வேண்டாமா? பரசுராமன் சில பிராமணர்களை வடக்கேருந்து கொண்டுவந்து அங்கே தங்கச் செய்தார். சகல வித்தைகளும் தந்திரங்களும் படிச்ச ஆட்களாயிருந்தாங்க அவங்க. அவங்களோட சடலங்களைத்தான் இந்த 'பிரும்மராட்சசன், பிரும்மராட்சசன்னு சொல்றது."

ஆதிபிராமணர்களின் சடலங்களான பிரும்மராட்சசர்களுக்கு மரணம் கிடையாது. சரீரங்களிலிருந்து சரீரங்களுக்கு தலைமுறைகள் வழியாக, யுகங்களின் வழியாக, அவர்கள் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள்.

அவர் சொன்ன கதைகளை அவன் சிறிது நேரம் கேட்டுக்கொண்டிருந்தான். இருட்டியதும் தாசன் எழுந்தான்.

"நீ எங்கே போறே?"

லீலாக்கா வியப்புடன் கேட்டாள்.

"நான் கிளம்பறேன்."

"இது உன்னோட வீடுதானே, தம்பி..."

"அது எனக்குத் தெரியும்லீலாக்கா. நான்இங்கே தங்கினா என்னோட அப்பாவுக்கு நேர்ந்த கதிதான் உங்களுக்கும் வந்து சேரும்."

"தாசா, உன்கிட்ட நானாக்கும் சொல்றேன், உன்னோட லீலாக்கா, நீ போகக்கூடாது."

முற்றத்தில் கால்வைத்த தாசன் பின்வாங்கவில்லை. திரும்பி நின்று அமைதியாகச் சொன்னான்.

"லீலாக்கா என்னை மன்னிச்சிருங்க. தானாகப் பற்றி எரிந்து மற்றவர்களையும் பற்றிக்கொள்ளும் நெருப்புத்தான் நான். என்னை நேசிக்கிறவங்க நினைச்சிப்பார்க்கணும்."

வெளியில் இறங்கி இருட்டினூடே தாசன் நடந்தான் — போர்ட்டர் குஞ்ஞாமனின் வீட்டை நோக்கி. அங்கே ஒரு கிண்ணம் கஞ்சி அவனுக்காகக் காத்திருக்கும், ஒரு தாழம்பாயும்.

அது போதும், நான் திருப்தி கொள்பவன்.

★★★

திண்ணையில் வெளிச்சம் இருந்தது — அட்டக்கட்டையில்

தொங்கிக்கொண்டிருந்த ராந்தலின் வெளிச்சம். கணாரனும் வாசூட்டியும் வராந்தாவில் இருந்தார்கள்.

"தாசா, ஒரு சமாச்சாரம் இருக்கு."

ராந்தலின் வெளிச்சத்தில் கணாரன் அண்ணாச்சியின் பற்கள் ஒளிர்ந்தன—அவனைப் பார்த்ததும்.

"ரெபரண்டத்துக்கு கவர்னர் சம்மதிச்சிட்டாரு."

கணாரன் அண்ணாச்சி கதர்ச்சட்டைப் பையிலிருந்து ஒரு தந்திச் செய்தியை வெளியிலெடுத்தார். பாண்டிச்சேரியிலிருந்து அது வந்திருந்தது.

"நாம தப்பிச்சிட்டோம்... தப்பிச்சாச்சி."

வாசூட்டி மகிழ்ந்தான். தாசனைப் பொறுத்தவரை அது ஒரு பெரிய செய்தியல்ல. ரெபரண்டத்திற்கு சர்க்கார் சம்மதிக்குமென்று அவன் ஏற்கெனவே ஊகித்திருந்தான். ஆனால் இந்த வாக்கெடுப்பின் பலன்? அவன் நல்லது நடக்குமென்று நம்பிக்கை கொள்ளவில்லை.

வாசித்த பின்னர் தாசன் தந்தியை மேசை மீது வைத்தான்.

"உனக்கென்னாச்சி, சுதாரிப்பா இல்லையே?"

"ரெபரண்டம் முடியட்டும் வாசூட்டி."

தாமதமின்றி நிர்வாகக் கவுன்சில் தலைவருக்கான பெயர் முன்மொழியப்பட்டது—அக்டோபரில் நடக்கவிருக்கும் முனிசிபல் தேர்தலுக்குப் பொதுமக்கள் கருத்துக் கணிப்புக்கான முன்னோடியாக இருக்கும்.

"இதொரு பம்மாத்து. முனிசிபல் தேர்தல்லே நாம ஜெயிக்க மாட்டோம்னு அவருக்குத் தெரியும்."

"ஊர்க்காரங்க நம்ம பக்கம்தான். உனக்கு இன்னமும் அது புரியலையா?"

வாசூட்டி ஆவேசம் கொண்டான்.

"சிலபேர் நம்ம பக்கத்திலே இருப்பாங்க. ஆனால் அவங்களுக்கு அதைச் சொல்ல தைரியம் இருக்குமா?"

விடுதலைப் புரட்சியை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்ட பெரியதொரு கூட்டம் உருவாகியிருந்தது. குறிப்பாகக் கூர்கோம்பலமாந்தேரிலும் மற்றும் ஆசிரியர்களும் மாணவர்களும். தாமுரைட்டரின் மற்றும் பிறரின் அரெஸ்ட் மய்யழியின் மக்களை பயமுறுத்தியது. அடுத்திருப்பவர் கேட்கும்படியாகப் புரட்சியைப்பற்றி ஏதேனும் பேசக்கூட யாருக்கும் தைரியமில்லை.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு அதிகமாகவே ராமன் வக்கீல்தான் மய்யழியின் மேயர். எல்லாத் தடவைகளிலும் எதிர்ப்பில்லாமல் அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். சர்க்கார் அனுதாபியான ராமன்வக்கீலை எதிர்க்க யாருக்கும் தைரியம் உண்டாகவில்லை.

ஆனால் இந்தத் தடவை காற்று திசைமாறிவீசியது. ராமன்வக்கீலை எதிர்க்க க்ரெஃபியே சுகுமாரன் முன்வந்தான். அவன் சர்க்கார் உத்தியோகம் பார்க்கும் ஓர் இளவட்டமாக இருந்தான். இதுவரையும் மறைமுகமாகப் புரட்சிக்கான செயல்களில் ஈடுபட்டிருந்தான்.

வாக்கெடுப்பு நெருங்கியதால் கணாரன்அண்ணாச்சியும் தாசனும் பிறரும் தூங்கவில்லை. மய்யழியின் எல்லைக்கு வெளியே இருந்துகொண்டு அவர்கள் செயலாற்றினார்கள். ஒவ்வொரு மய்யழிவாழ் நபருக்கும் நேரடியாகக் கடிதமெழுதி ஆதரவைக் கேட்டார்கள். கணாரன்

அண்ணாச்சியும் மற்றவர்களும் இல்லாத நேரங்களில் பப்பூட்டி, பாஸ்கரன் ஆகிய இரண்டு இளைஞர்களும் புரட்சிக்குத் தலைமை தாங்கினார்கள்.

அதிகம் தாமதிக்காமல் சர்க்கார் ஆணை வந்தது — பப்பூட்டியும் பாஸ்கரனும் வாக்கெடுப்பு முடியும்வரை மய்யழிக்கு வெளியே போகக்கூடாது. அப்படியும் ஒரு நாளிரவு பப்பூட்டி ஆற்றை நீந்திக் கடந்து வந்தான்.

"உன்னையும் பாஸ்கரனையும் அரெஸ்ட் பண்ணப்போறாங்கன்னு கேள்விப்பட்டேன், நீங்களும் போயிட்டா அப்புறம் யாரு இருக்காங்கப்பா கொண்டுசெலுத்த?"

"தெய்வம் இருக்குது அண்ணாச்சி நம்மகூட."

பப்பூட்டி சட்டையிலிருந்தும் வேட்டியிலிருந்தும் ஆற்றுநீரைப் பிழிந்து உலர்த்தினான். அவன் முழுக்க முழுக்க நனைந்துபோயிருந்தான்.

பப்பூட்டிக்கு நல்ல வாலிபம். கூர்கோம்பலமாந்தேரில் படித்துக்கொண்டிருந்த காலத்தில்தான் அவன் அரசியலில் இறங்கினான். முன்வரிசையில் அவனுக்கு ஒரு பல் இல்லை... அச்சுகொடுத்த மரியாதை.

"நீயும் இங்கேயே வந்திரு தம்பி."

"வேறே யாரு செயல்படுறது?"

"ஜெயிலுக்குப் போறதிலே சந்தேகமில்லே."

"ஜெயிலுக்குப்போக வேண்டியிருந்தா போகலாம். அதுவரைக்கும் என்னால் ஆனதை நான் செய்றேன்."

வாசூட்டி தயாரித்துக்கொண்டுவந்த கடுந்தேநீரை பப்பூட்டி ஊதி ஊதிக் குடித்தான். மய்யழி ஆற்றிலிருந்து வீசிய நள்ளிரவுக் காற்றில் அவன் குளிர்ந்து விறைத்து விட்டான்.

"அவங்க நம்ம ஆளுங்களுக்குக் கார்த்தைத் தரமாட்டாங்கன்னு தோணுது."

பப்பூட்டி தெரிவித்தான். வாக்குரிமை உள்ளவர்களுக்கு சர்க்கார் ஒரு கார்டு கொடுக்கும். அந்தக் 'கார்டு' இல்லாமல் எவரும் வோட்டுப் போட முடியாது.

"அவங்களோட ஆளுங்களுக்கு மட்டும்தான் கார்த் கொடுப்பாங்கன்னு வந்திச்சின்னா நாம என்ன செய்றது?"

பப்பூட்டியின் கேள்விக்கு யாராலும் பதில் சொல்ல முடியவில்லை.

"நான் நினைச்சதுதான். வாக்கெடுப்பிலே அக்கறை இல்லாம என்னை இருக்கச் செஞ்சதும் அதுதான்."

"அப்பமன்னா எதுக்கு இந்த வாக்கெடுப்பு, தாசா?"

"ஒரு பம்மாத்து."

கோபமாக அவன் முற்றத்தில் அங்குமிங்குமாக இரண்டு தடவை நடந்தான். ஆற்றிலிருந்து அப்போதும் காற்று வீசிக்கொண்டிருந்தது. வயல்களின் மேற்பரப்பில் வெளிறிய நிலாவெளிச்சம் பரவிக்கிடந்தது. எங்கிருந்தோ ஒருசாமக்கோழி கூவிற்று.

"நீதி நியாயம் சொன்னா அவங்களுக்குப் புரியாது. குத்திக் குடலெடுக்கணும்."

பப்பனின் கண்களிலிருந்து நெருப்பு பறந்தது. அவன் இதுவரை எதுவும் பேசாமலிருந்தான்.

"கார்த்து தரலேன்னா கேட்டு வாங்கணும். அதுதான் செய்ய வேண்டியது."

"கேட்கிற அளவுக்கு தைரியம் யாருக்கு உண்டு, தாசா?"

"அதுக்கான தைரியத்தை நாமதான் உண்டாக்கித் தரணும்."

கணாரன் அண்ணாச்சி கைகளில் முகத்தைத் தாங்கியிருந்தார். அன்றைக்கும் அவர்களில் எவரும் உறங்கவில்லை. விடியும்வரை தொடர்ந்த சர்ச்சைகள். கடைசியில் காலையின் விடியல் குறுக்கிடவே பப்பூட்டி திரும்பி ஆற்றின் மார்பினூடே மய்யழி நோக்கி நீந்திப் போனான்

வாக்கெடுப்பு நெருங்கியதால் எங்கும் போட்டிப்பொச்சரிப்பு வளர்ந்தது. என்னவோ நடக்கப்போகிறது. மய்யழி மக்களின் கண்களில் பயம் தொடர்ந்து நிலைத்தது.

# 23

*1948 அக்டோபர் 21*

பப்பூட்டியும் பாஸ்கரனும் கார்டு கேட்டு வாங்குவதற்காக மெறி அலுவலகம் நோக்கி நடந்தார்கள். புரட்சியுடன் தொடர்புகொண்ட சுமார் பதினைந்து பேர் அவர்களைப் பின்தொடர்ந்தார்கள். அத்தனை பேர் துணையிருக்கிறார்களென்று தெரிந்தபோது பப்பூட்டி உணர்வு பெற்றான்.

அவர்கள் ஓர் ஊர்வலம் போல முன்னோக்கி நடந்தார்கள். பாதையிலும் கடை முகப்பிலும் ஆட்கள் மூச்சை அடக்கியவாறு அதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். எதனுடையதோ தொடக்கம் அது...

பலே த் ப்யூஸ்தீலையும் கடந்து ஆட்கள் மெறியின் வாசலை அடைந்தார்கள்.

"கார்த்..."

"எங்களுக்கு கார்த் தருக... "

மெறியின் வாசலிலிருந்து குரல் முழங்கியது. தன்னுடைய ஆபிசிலிருந்து மேயர் ராமன் வக்கீல் வெளியே வந்தார். கால்சராயும் தொப்பியும் பிறவும் அணிந்த கிழவர்.

மேயரின்முகம் சிவந்தது. என்ன ஒரு தெம்மாடித்தனம் இது... தீப்பறக்கும் கண்களுடன் அவர் குமாரன் போலீஸைப் பார்த்தார். அவர் முகத்தைத் திருப்பிக்கொண்டார்.

"வோட்டுரிமை பெற்ற எல்லோருக்கும் கார்டு தருக! கார்டு தருக...!"

ஆள்கூட்டம் வராந்தாவில் ஏறத் தொடங்கியது. மேயர் யாரையெல்லாமோ உரத்த குரலில் கூப்பிட்டார். எவரும் அதை செவிமடுக்கவில்லை.

ராமன் வக்கீலை தள்ளி ஒதுக்கிவிட்டு அவர்கள் ஆபீசுக்குள் நுழைந்தார்கள். அவர்கள் அலமாரியை பலவந்தமாகத் திறந்து அதில் அடுக்கி வைத்திருந்த கார்டுகளைக் கீழே வாரியிறைத்தார்கள். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேலாகப் பூழ்க்கத்திலிருந்த கடுதாசிகள் தரையில் சிதறி விழுந்தன. நாற்காலிகளும் மேசைகளும் தடுமாறி

விழுந்தன.

புரட்சியாளர்கள் கடுதாசிகளை சாலையில் குவித்துத் தீ வைத்தார்கள்.

பாஸ்கரன் கட்டிடத்தின் மாடிக்கு பலவந்தமாக ஏறினான். அங்கே காலங்காலமாகப் பறந்துகொண்டிருந்த கொடியைப் பற்றியிழுத்துக் கீழே எறிந்தான். எங்கிருந்ததென்று தெரியவில்லை, அவனுடைய கையில் ஒரு மூவர்ணக் கொடி வந்து விழுந்தது.

மெறியின் உச்சியில் மூவர்ணக்கொடி பறந்தது.

மெறியை வசப்படுத்திய புரட்சியாளர்கள் சாலையில் இறங்கினார்கள். இதற்குள்ளாக அவர்களுடைய எண்ணிக்கை நூற்றுக்குமேல் என்றாயிற்று.

"வாங்க. . . "

பொறுமையிழந்து மய்யழியை உற்று நோக்கும் கண்களுடன் நின்றுகொண்டிருந்த தாசன் கூவியழைத்தான்.

அவனுக்குப் பின்னால் பப்பனும் வாசூட்டியும் மற்றும் ஏழெட்டு இளைஞர்களும் இருந்தார்கள்.

எதிரில் எல்லைச் சாவடி காவல்காக்கும், ஆயுதம் தாங்கிய இரண்டு போலீசார்.

"நில்லு தாசா..."

வாசூட்டி உரக்கச் சொன்னான். தாசன் எல்லைச்சாவடிக்கு நேராக நடக்கத் தொடங்கியிருந்தான். அதைப் பார்த்து வாசூட்டி திகைத்தான்.

தாசனால் இனிமேலும் காத்திருக்க முடியாது. மய்யழி மக்கள் விழித்தெழுந்து விட்டார்கள். அவர்கள் கர்மபூமியில் இறங்கிவிட்டார்கள்.

அவன் முன்னோக்கி நடந்தான்.

"தாசா, நீ ஆபத்தை எதிர்கொண்டழைக்கக் கூடாது."

தாசன் நிற்கவில்லை. கர்மபூமி அவனை அழைக்கிறது. காதுகளில் முழங்கும் அந்த அறைகூவலைக் கேட்காதிருக்க முடியாது! தடுப்பதற்காக முன்னே வந்த வாசனைத் தள்ளிவிட்டு பப்பன் தாசனைப் பின்தொடர்ந்தான். அதைத் தொடர்ந்து மற்ற இளைஞர்கள்...

அவர்கள் எல்லை வரம்பைத் தாண்டிக் குதித்தார்கள்.

எல்லை வரம்புக்கு அப்பால் மய்யழியில் வெற்றி முரசு முழங்கியது. படபடத்துப்பறக்கும் மூவர்ணக் கொடிகளுடன் ஆட்கள் ஓடுகிறார்கள்...

அடக்கி ஒடுக்க முன்னோக்கிப் பாய்ந்த போலீசார் திகைத்து நின்றார்கள்.

அவர்களைப் பொருட்படுத்தாமல் தாசன் மய்யழி நோக்கி நடந்தான்.

யாரும் அவனைத் தடுக்கவில்லை. தடுத்து நிறுத்த வேண்டியவர்கள் திகைத்து நின்றார்கள்.

உயிர்தெழுந்த மய்யழியினூடே புரட்சியாளர்களுக்குத் தலைமை ஏற்று தாசன் முன்னோக்கி நடந்தான். அவர்கள் ரியூ த் லெக்லீஸ் வழியாக தேவாலய கோபுரத்தின் நிழலினூடே முன்னோக்கித் தாவினார்கள். கோபுர உச்சியில் சிலுவை மிக உயரத்தில் கை விரித்து நின்று அதற்கு சாட்சியாக அமைந்தது.

லபூர்தனெ கல்லூரியிலிருந்த ஆசிரியர்களும் மாணவர்களும் வெளியிலிருந்து வந்த புரட்சியாளர்களுடன் சேர்ந்து கொண்டார்கள்.

மய்யழியின் மார்பில்இரத்தத் துளிகளைச் சிந்திக்கொண்டுஅவர்கள் ரியூ தியு கூவர்ணமான் வழியாக முன்னோக்கி மார்ச் செய்தார்கள்...

மய்யழி மக்கள் சர்க்கார் நிறுவனங்கள் ஒவ்வொன்றாக வசப்படுத்தினார்கள். கடைசியில் அவர்கள் மூப்பன்துரையின் பங்களாவுக்குக் கூச்சலிட்டுக்கொண்டு சென்றார்கள். அவர்களுடைய உடைகள் இரத்தத்தில் தோய்ந்திருந்தன. அவர்களுடைய தொண்டையிலிருந்து சுதந்திர உணர்வுப் பாடல்கள் உயர்ந்தெழுந்தன...

தாசன் பங்களாவின் கேட்டைக் கடந்தான். அவனுடைய வலது கண்ணிலிருந்து இரத்தத் துளிகள் சிதறி விழுந்தன. சட்டையும் வேட்டியும் கிழிந்திருந்தன. .. . .

தன்னுடைய பங்களாவின் மாடியில் கையில் தொலைநோக்கிக் கருவியுடன் நின்றிருந்த மூப்பன்துரை எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்தார்.

"சுட வேண்டாம்..."

அவர் ஆணையிட்டார். மய்யழி மக்கள் உள்ளே நுழைந்தார்கள். சுடுவதற்கு ஆணை பெறாத போலீசார் பொம்மைகளைப்போல நின்றிருந்தார்கள்...

மய்யழிக்கு மேலே, வெகுதொலைவில் வெள்ளியாங்கல்லிலிருந்து வந்த இளங்காற்றில், ஏராளமான மூவர்ணக் கொடிகள் பறந்து மகிழ்ந்தன.

எல்லாம் முடிந்து தாசன் வீட்டை நோக்கி நடந்தான்.

"அம்மா! தாசன்..."

முக்கு திரும்பி நடந்து வரும் தாசனைப் பார்த்து மகிழ்ச்சியுடன் கிரிஜா உரக்கச் சொன்னாள். அவள் வாசலை நோக்கி ஓடிச் சென்றாள். அண்ணனை அவள் நேரில் பார்த்து மாதங்கள் எத்தனையோ கடந்துவிட்டிருந்தன!

போராட்டம் தொடங்கியதும் கதவை அடைத்துக்கொண்டு எல்லோரும் உள்ளேயே இருந்தார்கள். வெளியில் என்ன நடந்துகொண்டிருக்கிறதென்று குறம்பியம்மாவுக்கோ கிரிஜாவுக்கோ தெரியாதிருந்தது. சாலை வழியே கோஷங்கள் முழங்குவதைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். ஆட்கள் கூட்டமாகக் கடந்து செல்லும் சந்தடியும். எதிர்ப்புக் குரல்கள். . . .

"என் தாசனா?"

கிரிஜா சொன்னதைக் கேட்டுக் குறம்பியம்மா பத்தாயத்தின் மேலேயிருந்து கீழே இறங்கினாள். கூவிக்கொண்டு அவள் வராந்தாவுக்குச் சென்றாள். தாசன் அப்போது வாசலை எட்டியிருந்தான்.

தாசனின் வலது கண் வீங்கியிருந்தது. கன்னத்தில் வழிந்த இரத்தக் கறைகள். நடப்பதற்கான தெம்பு இல்லாதிருந்தது.

எல்லாம் ஒரு கனவு போலத் தோன்றியது. நேற்றல்ல, எவ்வளவோ காலத்திற்கு முன்னதாகவே மய்யழியின் விமோசனத்திற்கான நடவடிக்கைகள் நடந்ததாகத் தோன்றிற்று. தளரும் காலுடன், வேதனையுற்ற கண்களுடன் வீட்டை நோக்கி நடக்கும்போது சுற்றிலும் மூவர்ணக் கொடிகள் பறப்பது போலிருந்தது. தாசனுக்கு அதெல்லாம் ஒரு கனவுபோலத் தோன்றியது.

"அண்ணே, கண்ணிலே என்ன?"

தாசனின் கோலம் கண்டு கிரிஜாவின் மனம் அதிர்ந்தது. வேட்டி

சட்டை எல்லாமே கிழிந்திருந்தன. பல இடங்களில் இரத்தக் கறைகள்.

"அண்ணனுக்கு ஒரு கிளாஸ் டீ போட்டுக் குடும்மா."

அவன் வெளிமுற்றத்தில் பெஞ்சில் உட்கார்ந்தான். குறம்பியம்மா பதைத்து நின்றிருந்தாள்.

கிரிஜா டீ தயாரிக்கப் போகவில்லை. அவளுடைய கண்கள் சட்டென்று நிரம்பித் தளும்பின.

"தண்ணி போதும்."

அவன் நிலைமையைப் புரிந்துகொண்டான். வீட்டில்பட்டினியாக இருக்கும்.

கஞ்சிகூட இல்லை, அப்படியிருக்க டீ. . . .

"என் கண்ணு வந்திட்டியா?"

உள்ளே எங்கிருந்தோ வந்த அம்மாவின் தீனக்குரலை தாசன் கேட்டான்.

"அம்மாவுக்கு சுகமில்லையா?"

"அப்பா போன பிறகு படுக்கைதான்."

கிரிஜா உதட்டைக் கடித்து வலித்து அழாதிருக்க முயன்றாள். அவள் கொண்டுவந்த தண்ணீரைக் குடித்துவிட்டு தாசன் உள்ளே போனான்.

"அண்ணே, இந்த நிலைமையோட அம்மாவைப்பார்க்க வேணாம்."

கிரிஜா தடுத்தாள்.

"அம்மாவாலே இதைத் தாங்க முடியாது. . . . "

தாசன் முன்னே வைத்த காலைப் பின்னுக்கிழுத்தான். அம்மாவைப் பார்க்க அவன் துடித்தான். சிறைக்குள் இருக்கும் கணவனும் கடத்தப்பட்ட மகனும் — எவ்வளவு அதிர்ஷ்டம் கெட்டவள் என் அம்மா!

தாசன் திரும்பி வந்து பெஞ்சில் உட்கார்ந்தான்.

"பாட்டி, பாட்டி, ஏன் எதுவுமே பேசலே?"

அவள் அப்போதும் தாசனை உற்றுப் பார்த்தபடி நின்றுகொண்டுதானிருந்தாள்.

தாசன் என்னதான் செய்கிறானென்று தொடக்கத்தில் அவளுக்குப்புரியவில்லை. மூப்பன்துரை கொடுத்த உத்தியோகத்தை தாசன் வேண்டாமென்று உதறியபோது அதற்குப் பின்னால் ஏதோ காரணம் இருக்க வேண்டுமென்று அவள் எண்ணினாள். தாசன் தவறான வழியில் போக மாட்டான். பாண்டிச்சேரிக்குப் போய்ப்படித்து வந்தவனல்லவா? புத்தியும் விவரமும் உள்ளவன். தாசன் தவறு செய்ய மாட்டான். . . .

தாமுரைட்டரின் அரெஸ்ட்டினால் குறம்பியம்மாவுக்கு எல்லாமே புரியத் தொடங்கியது. தாசன் வெள்ளைக்காரர்களை மய்யழியிலிருந்து போகச் சொல்கிறான் - குறம்பியம்மாவின் நெஞ்சு வெடித்தது. தாசனில்லாமல் வேறு யாராவது அதைச் செய்திருந்தால் குறம்பியம்மா அவர்களுடைய நெற்றியில் கை வைத்து சபித்திருப்பாள். தாசனை அவள் எப்படி சபிப்பாள்?

அவளுடைய நரைத்த கண்களில் அற்குப் பின்னர் கண்ணீர் வற்றவே இல்லை.

"பாட்டிக்கு என்மேலே கோபமா?"

அவள் அப்போதும் சிலை போல நின்றிருந்தாள்.

பாட்டியின் மாற்றம் தாசனுக்குப்புரிந்தது. நாளைக்கு வெள்ளைக்காரர்கள் நிரந்தரமாகக் கப்பல் ஏறும்போது, மய்யழியில் எங்கும் மகிழ்ச்சியால் வாணவெடிகள் பூச்சொரியும்போது, பாட்டியின் மனதில் மட்டும் துக்கம் நிழல் விரிக்கும். யாருக்கும் தெரியாமல் அவள் கண்ணீர் சொரிவாள். தாசனுக்கு அது தெரியும்.

"பாட்டி, மூப்பன்துரை மேலே எனக்கு வெறுப்பில்லே. பாட்டி, என்னை நம்பணும்."

குறும்பியம்மா மெதுவாகத் தாசனுக்கு அருகில் வந்து உட்கார்ந்தாள். மெலிந்த கைகளால் அவனுடைய கையைப் பற்றினாள். எதுவும் பேசாமல் அவள் அப்படியே உட்கார்ந்திருந்தாள்.

எவரையும் தாசன் வெறுக்கவில்லை. தாசனுக்கு இந்த உலகில் விரோதிகளில்லை. எல்லோரிடமும் தாசன் நட்பு பாராட்டினான். ஆனால், அதை யார் நம்புவார்கள்?

காலடி ஓசை கேட்டு தாசன் தலை நிமிர்ந்து பார்த்தான். நிலைப்படியில் அம்மா நின்றுகொண்டிருந்தாள்.

கௌசுவம்மாவின் கண்களிலும் கண்ணீர். அம்மாவிடம் ஏற்பட்டிருந்த மாற்றம் தாசனைத் திகைக்கச் செய்தது, வேதனைப்படுத்தியது. அவள் ஒரு குழந்தையைப்போலச் சிறுத்துப்போயிருந்தாள். தலைமுடி பாதிக்கும் மேலாகவே கொட்டிப்போயிருந்தது.

"அம்மா அழக்கூடாது. . . . . "

சொல்வதற்கு அருகதை இல்லை என்பதை அறிவான். ஆனாலும் சொன்னான். அம்மாவை அழ வைப்பது வேறு யாருமில்லை. . . .

"அம்மா வந்து படுத்துக்கோ."

கிரிஜா அவளைத் தாங்கலாகப்பிடித்து உள்ளே அழைத்துப் போனாள். ரைட்டரை அரெஸ்ட் செய்துகொண்டு போன அன்று தொடங்கியதுதான் அவளுடைய படுக்கை.

தாசன் கட்டிலில் அம்மாவின் அருகில் உட்கார்ந்தான். அவளைத் தேற்ற முயன்றான். தொண்டையில் வார்த்தைகள் தடுமாறிக்கொண்டே இருந்தன. அவனும்கூட கண்ணீருகுத்தான். – என்ன பேசுவதென்று தெரியாமல். என்ன சொல்லி அம்மாவைத் தேற்றுவது என்று தெரியாமல்.

"உங்கப்பா. . . "

"அம்மா அழாதேம்மா."

தாமுரைட்டரைப் பற்றி எந்த விவரமும் தெரியவில்லை. இந்த வயசுக் காலத்தில் கண்காணாத ஒரு நாட்டில் சிறையில் இருக்கிறார். போதாதற்கு காசமும். ஒரு நாள் பனியோ மழையோ பெய்தால்கூட படுக்கையில் விழுந்துவிடும் உடல்வாகு. எப்படித்தான் அந்த மனிதர் உயிரோடு இருக்க முடிகிறதோ?

அல்லது உயிரோடு இருக்கிறாரோ இல்லையோ?

கௌசுவம்மாவின் நெஞ்சிலிருந்து ஒரு தேம்பல் வெளிப்பட்டது.

"அடுத்தவங்களைக் கண்ணீர் விட வைக்கத்தானப்பா நீ என் வயித்திலே பொறந்தே?"

"நாம இனிமே அழவேண்டி வராதும்மா. நம்ம கஷ்டங்கள் தீர்ந்திடும்."

கடலிலிருந்து வீசும் இளங்காற்றில் மய்யழிக்கு மேலே பறந்து

எக்களிக்கும் மூவர்ணக் கொடிகள். என் அம்மா பார்க்கவில்லையா?

"அப்பா வந்திருவாங்களாப்பா?"

"சீக்கிரமே வந்திருவாங்க. அண்ணன் போய்க் கூட்டி வந்திருவாங்க."

அழுதழுது அம்மா அயர்ந்துபோனாள்.

"அம்மா உறங்கட்டும். அண்ணே வா."

கிரிஜா தண்ணீர் விளாவி வைத்திருந்தாள். அவள் தாசனைக் கட்டிலில் படுக்கச் செய்து உடம்பு முழுவதும் ஒத்தடம் கொடுத்தாள். வெந்நீரில் முக்கியெடுத்த துணி உடம்பில் பட்டபோது கண்கள் மூடிக்கொண்டன.

காயங்களும் ஊமைக்காயங்களும் நிறைந்திருந்த தாசனின் உடம்பிலிருந்து ஆவி வெளிப்பட்டது. அவனும் அயர்ந்து போனான். தாசனின் இன்று வரையிலான வாழ்க்கையில் மிகவும் ஆனந்தகரமான உறக்கம் — சுதந்திரத்தின் பரிசுத்தமான காற்றை சுவாசித்துக்கொண்டு உறங்கினான்.

உறங்கிக்கொண்டிருக்கும் அண்ணனை கிரிஜா பார்த்துக் கொண்டிருந்தாள். அவளை அறியாமலே அவளுடைய கண்கள் நனைந்தன.

அண்ணனைக் குறித்து அவளுக்கும் கனவுகள் இருந்தன. குறம்பியம்மாவைப் போல, தாசன் கோட்டும் கால்சராயும் அணிந்து நடமாடுவதாக அவள் கனவு காணவில்லை. ஆனால், அவளுக்கும் கனவுகள் இருந்தன. அண்ணன் உத்தியோகஸ்தனாவது, முதல் சம்பளம் கிடைக்கும்போது அண்ணன் தனக்குப் புடவை வாங்கிக்கொண்டு வருவது...

ஆனால், கட்டிலில் கவிழ்ந்து படுத்து உறங்கும் தாசனைப் பார்த்துக்கொண்டிருந்தபோது அந்த ஆசைகள் ஏதும் எழவில்லை. அவளுக்கு ஒரே ஓர் ஆசை மட்டும்தான். அண்ணனுக்கு நல்ல காலம் வரவேண்டும்...! அதுவரைக்கும்...

தாசன் அதிக நேரம் அப்படிப் படுத்துறங்க முடியவில்லை. அவன் எழுந்துகொண்டான். மய்யழி தாசனை அழைக்கிறது. நிமிடங்கள் ஒவ்வொன்றும் விலைமதிப்பற்றவை. மய்யழி இப்போது மக்களின் கையில். ஆனால், அது இன்னும் முற்றுமாக அப்படி நடந்துவிடவில்லை. மூப்பன்துரையும் பரிவாரங்களும் பங்களாவில் தங்கியிருக்கிறார்கள். அவர்கள் போக வேண்டும். அப்போதுதான் தன்னுடைய வாழ்க்கையின் இலட்சியம் பூர்த்தியாகும். அதுவரை தனக்கு உறக்கமில்லை.

"அண்ணே, எங்கே போறே?"

தாசன் சட்டை எடுத்து அணிவதைப் பார்த்த கிரிஜா எதிரில் வந்து நின்றாள். குளித்து, அலசி உலர்த்திய புடவையும் பிளவுசும் அணிந்து, அலங்காரத்துடன் அவள் எதிரில் நின்றிருந்தாள்—எப்போதும்போல, இன்றைக்கும் அவள் அந்தப் பழக்கத்தை விட்டுவிடவில்லை.

"நான் போகணும்."

"இன்னிக்கு எங்கேயும் போக வேண்டாம். நாளைக்குப் போனால் போதும்"

அவள் பாசமிணைத்துக் கேட்டுக் கொண்டாள்.

"இன்னிக்கு முழுக்க நீ படுத்துத்தூங்கிக்கோ. நாளைக்குக் கண்ணும் சரியாயிரும்"

"ஓய்வெடுக்கற நேரம் இன்னமும் வரல்லேம்மா, தங்கச்சி. அண்ணன் போய்ட்டுவர்றேன். அம்மாகிட்டச் சொல்லிடு."

உச்சி வெயிலில் கௌசுவம்மா தூக்கத்தில் ஆழ்ந்திருந்தாள். தாசனைத் திரும்பப் பெற்றதிலான மகிழ்ச்சியை அவளிடம் காண முடிந்தது. ஆனாலும் அவளுடைய கண்களில் அப்போதும் ஈரம்படர்ந்திருந்தது. ஊர்பேர் தெரியாத இடத்தில் சிறையில் இருக்கும் தாசனின் அப்பாவை வேண்டி நிற்கும் கண்ணீர்.

தாசன் வெளியேறினான்.

"ராத்திரி வருவியா?"

"நிச்சயமா கிரிஜா."

அவன் வேகமாக நடந்தான். எங்கும் மூவர்ணக் கொடிகள் பறக்கின்றன. சாலையில் கூட்டமாக ஆட்கள் நடந்து போகிறார்கள். பலருடைய கண்களில் திகைப்போ பயமோ இருந்தது. மய்யழியின் மக்களுக்கு இன்னமும் எதுவும் தெளிவாகவில்லை. ஏதோ என்னவோ நடந்திருக்கிறது என்று மட்டும் அவர்களுக்குத் தெரியும்.

உச்சி வேளையானதும் உன்னிநாயரின் கள்ளுக்கடை மீண்டும் திறக்கப்பட்டது. முந்தின நாள் போராட்டம் தொடங்கியதனால் கடை பூட்டியிருந்தது. குஞ்ஞானனும் பேண்டுக்காரன் கணாரியும் பிறரும் தவிப்பு உணர்வுடன் உட்கார்ந்து குடித்தார்கள். முந்தின நாள் கடை மூடிக்கிடந்ததல்லவா.

"எனக்கொண்ணும் புரியலே." மேசைக்குப் பின்னால் இருந்த உன்னிநாயரின் முகத்தில் திகைப்பிருந்தது. "உனக்குப் புரியுதா குஞ்ஞானா?"

"இல்லே."

வாய்க்குக் கொண்டுபோன கிளாசுடன் குஞ்ஞானன் தலையாட்டினான். அவன் இன்று தன்னுடைய கடையைத் திறக்கப் போகவில்லை. மய்யழியில் கடைகள் எல்லாமே அடைத்திருந்தன. "என்னமோ ஆபத்து வரப்போகிறது."

குஞ்ஞானன் யாரோடென்றில்லாமல் சொன்னான்.

"எந்த ஆபத்தும் வராது. நமக்கு சுதந்திரம் வந்திரிச்சி. இனிமே ஆட்சி நடத்தறது நாம தான்."

கடைக்குள் நுழைந்துகொண்டிருந்த பெறியில் வேலை பார்க்கும் பாலன் சொன்னான்.

எல்லோருடைய கண்களும் அவனை நோக்கி ஊடுருவின.

"வெள்ளைக்காரங்க போகவேண்டியதுதான்."

"அவங்க எங்கே போவாங்க, பாலா?" உன்னிநாயருக்குப புரியவில்லை. "அவங்க ஊரு இதுதானே?"

"இல்லே. வெள்ளைக்காரங்க ஊரு கடலுக்கு அந்தப் பக்கம்."

பாலன் புன்னகைத்தான். உன்னிநாயரிடமிருந்து ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது. பாலன் சொன்னதை அவரால் நம்ப முடியவில்லை. உன்னிநாயருக்கு நினைவு தெரிந்த நாள் முதல் மய்யழியில் வெள்ளைக்காரர்கள் இருந்தார்கள். அவர்களுடைய ஊர் இதுதான். அவர்கள் எங்கேயும் போகத் தேவையில்லை. எங்கேயும் போக மாட்டார்கள்.

"எனக்கொரு ஆசையிருக்கு. என் கண்ணு மூடுறதுக்கு முன்னாலே

வெள்ளைக்காரங்க இந்த ஊரை விட்டுப் போகக்கூடாது."

"உன்னிநாயரோட ஆசை நிறைவேறாது. அவங்க போயிருவாங்க. ஒரு வேளை, இன்னிக்கே கூட . . . "

"நீ சொல்றது உண்மையா, பாலா?"

"உண்மை"

உன்னிநாயர் தளர்ந்துபோனார். குஞ்ஞானனுக்குக் கள் இறங்கவில்லை. எதிரில் நிரம்பிய குப்பியுடன் அவன் யோசனையில் ஆழ்ந்தான்.

கள்ளுக்கடை முன்பாக வாசூட்டி நடந்து வருவதை அவர்கள் எல்லோரும் பார்த்தார்கள்.

"வாசூட்டி, தெய்வம் உன்னைச் சும்மா விடாது. . . ."

உன்னிநாயர் மனம் நொந்து சபித்தார். பாலனின் முகத்தில் ஒருமுறை சிரிப்பு மலர்ந்தது.

"அப்போ உன்னிநாயரே, தாசனும் வாசூட்டியும் எல்லாரும் நரகத்துக்குப் போவாங்க, அப்படித்தானே?"

உன்னிநாயர் பதில் சொல்லவில்லை.

"நீங்களும் நானும் போனாலும் அவங்க போகமாட்டாங்க. ஊருக்காகவும் ஊர்க்காரங்களுக்காகவும் வாழ்க்கையைத் தியாகம் செய்தவங்க அவங்க."

அதற்கும் யாரும் பதில் சொல்லவில்லை.

உன்னிநாயரில் வெறுப்பும் வேதனையும் மட்டுமல்ல பொங்கி வந்தது. உள்ளுக்குள் அவருக்கு பயமும் உண்டு. இரண்டு நாட்களுக்கு முன்பு வரை சுதந்திரப் போராட்டத்துடன் தொடர்பு கொண்டவர்களை அவர்களுக்கு என்ன தெரியும் என்று கேட்டவர்தான். உற்சாக மூட்ட போலீசும் அடியாட்களும் துணையிருந்தார்கள். போராட்டம் தொடங்கியதும் நிலைமை மாறிவிட்டது. போலீஸ்காரர்கள் எல்லாருமே மூப்பன்துரையின் பங்களாவில் அடைக்கலம் புகுந்தார்கள். அடியாட்கள் எங்கே போய் மறைந்தார்கள் என்று யாருக்கும் தெரியாது. இரண்டு நாட்களாக அச்சுவை யாரும் பார்க்கவில்லை.

போராட்டக்காரர்கள் அவனைத் தேடினார்கள். காலையில் பப்பனும் வேறு இரண்டு இளைஞர்களுமாகச் சேர்ந்து உன்னிநாயரின் கடைக்கு வந்து நெருக்கிப் பிடித்து விசாரித்துப் பேசினார்கள்.

"டேய் அச்சு, எங்கே போய் ஒளிஞ்சாலும் நீ தப்பிக்க முடியாதுடா. உன் கண்ணை நான் நோண்டி நுங்கெடுத்திடுறேன். அப்பமுன்னாத்தான் எனக்கும் தூக்கம் வரும்."

திரும்பிப் போகும்போது உன்னிநாயரின் காதுபட பப்பன் சொன்னான்.

பப்பன் அதைச் செய்வான். உன்னிநாயருக்குத் தெரியும்.

எதற்கும் தயங்காதவன். கொம்பீசாரைக் குத்தியவனல்லவா?

குஞ்ஞானனும் குஞ்சக்கனும் குடித்து முடித்திருந்தார்கள். அவர்கள் ஒன்றாகச் சேர்ந்து வெளியேறினார்கள். ஏணியை எடுத்துத் தோளில் சார்த்தி எண்ணெய் டின்னுடன் குஞ்சக்கன் நொண்டி நடந்தான்.

குஞ்ஞானன் ர்யூ த் லாகாரின் வழியாக சும்மா நடந்தான். சாலையில் ஆள் நடமாட்டம் தொடங்கியிருந்தது. வீடுகளில் அடைத்திருந்த கதவுகள் எல்லாமே திறந்திருந்தன. திகைப்பு, பயம்,

சோகம் - அப்படிக் கண்களில் பல வெளிப்பாடுகளுடன் மய்யழி மக்கள் வெளியில் இறங்கினார்கள்.

வாசூட்டியின் மனது கனத்திருந்தது. மய்யழியின் விடுதலை அவனையும் இயல்பாகவே மகிழச் செய்தது. அந்த மகிழ்ச்சியுடன்தான் வாசூட்டி தன்னுடைய வீட்டை நோக்கி நடந்தான். ஆனால், அங்கே போய்ச் சேர்ந்தபோது அவன் முற்றிலுமாக வெலவெலத்துப்போனான்.

திண்ணையில் யாருமில்லை. சுண்ணாம்புத் தடங்கள் உலர்ந்து கிடக்கும் கதவு அடைத்துக் கிடந்தது. வாசூட்டி கதவைத் தள்ளித் திறந்தான்.

உள்ளே பாயில் உட்கார்ந்து எதையோ சொல்லிச் சிரிக்கும் சௌமினியும் கொம்மி புருஷுவும் திகைத்தார்கள். கல்லுவம்மா அடுக்களையில் இருந்தாள்.

வாசூட்டியைக் கண்டதும் மூவரும் நிலைகுலைந்தார்கள்.

"உனக்கென்னடா இங்கே வேலை?"

அடக்க முடியாமல் குரல் உயர்ந்தது.

அவனுக்கு எல்லாம் தெரியும். மய்யழிக்கு வெளியில் இருந்தபோது அவன் கேட்ட கதைகள் கண்ணெதிரில். . . .

"நீ வந்திட்டியாப்பா மகனே?"

கல்லுவம்மா பதறியடித்து எழுந்தாள். அவள் புதுக்கருக்குக் குலையாத மாராப்புத் துணி இட்டிருந்தாள். எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு குஞ்ஞிமூஸா ஹாஜியிடம் அடகுக்கு வைத்திருந்த பாம்படங்கள் காதுகளில்

சௌமினியின் ஆடையணியும் மோசமல்ல. அண்மையில் எங்கேயோ வாங்கிய சீட்டிப் புடவையை உடுத்தியிருந்தாள்.

"நான் வந்தது உங்க யாருக்கும் இஷ்டமில்லே, அப்படித்தானே?"

தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முயன்றான். சுவருடன் ஒட்டியிருந்த பெஞ்சில் உட்கார்ந்தான். மரமேறி பொக்கனச்சன் படுத்திருந்து மரித்துப்போன பெஞ்ச்.

"நான் போறேன்"

புருஷு எழுந்து கையும் களவுமாகப் பிடிபட்ட ஒரு திருடனைப் போல வெளியேறினான்.

அவனை என்ன சொல்ல? குறை சொன்னால் புருஷுவை மட்டும் சொல்லிப் பயனில்லை. அவனைப் போலவே இந்தப் பாயில் வந்திருந்தவர்கள் வேறு எவரும் உண்டா?

"சௌமினி, நீ இப்படிச் செய்வேன்னு நான் நினைக்கலே. . . ."

அவள் தலை குனிந்திருந்தாள். கன்னங்கள் வியர்த்திருந்தன.

"நாட்டுக்காக வேண்டித் தியாகம் செஞ்ச ஒருத்தனோட தங்கச்சியா நீ? அதுவாவது உன் நினைப்பிலே இருந்திருக்கணும்."

"குத்தம் சொல்றயாகும், சொல்லிக்கோ. குமரிப்பெண்ணை வச்சிக்கிட்டு அல்லாடிப்போய்ட்டேன். வெக்கத்தை மறைக்கத் துணியில்லாம இருந்தது. சீக்கு வந்தப்போ ஒரு சொட்டுக் கஷாயம் போட்டுக் குடிக்க வழியில்லாம இருந்தது. அப்போதெல்லாம் நீ எங்கே இருந்தே? இப்போ வந்திட்டே குத்தம் சொல்ல. . . ."

வாசூட்டி மௌனமாகக் கேட்டபடி நின்றிருந்தான். தவறு யாருடையது? சௌமினி இப்படி ஆனதில் தனக்கும்தானே பொறுப்பு?

அம்மாவுக்கும் உடன்பிறந்தவர்களுக்கும் பசிக்கும்போது சாப்பிட வகை செய்ய வேண்டியது தான்தான். வெட்கத்தை மறைக்கத் துணி வாங்கித் கொடுக்க வேண்டியவன் தானேதான். தான் அதைச் செய்யவில்லை. . . .

அவன் வெளிமுற்றத்தில் உலாத்தினான். உள்ளே சௌமினி உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தது கேட்டது. வாசுட்டிக்கு வெறுப்பேற்பட்டது. தன்னோடும் தன் குடும்பத்தோடும் மட்டுமல்ல. நீல வானத்துப் பரப்பில் பறந்து களிக்கும் மூவர்ணக் கொடிகளின் மீதும்.

அவன் குளித்தான். சாப்பிட சோறு தயாராகியிருந்தது. இந்த வீட்டில் உட்கார்ந்து சாப்பிட்ட காலம் மறந்துபோயிருந்தது. சர்க்கார் ஆபீசில் குமாஸ்தா வேலையை ராஜினாமா செய்ததற்குப் பிறகு இப்போதுதான் முதன்முதலாக அவன் தன்னுடைய வீட்டில் ஒரு பிடி சோறு சாப்பிடுகிறான்.

சாப்பிட்டு முடித்த பிறகு அவனுக்குத் தோன்றிற்று. தான் இந்தச் சோற்றைத் தின்பதற்குத் தகுதியானவனா?

"சௌமினி, நடந்தது நடந்திரிச்சி. இனியே நீ தப்பு செய்யாம இருந்தாப் போதும்."

அவள் தாழ்த்திய தலையுடன் கேட்டு நின்றாள்.

"கஞ்சி குடிக்க நீ ஏதாச்சும் சம்பாதிச்சிக் கொண்டு வா. அவ ஒரு தப்பும் செய்யமாட்டா."

"உங்களை நான் இனியே கஷ்டப்படுத்த மாட்டேம்மா."

நாட்டுக்காகத் தான் செய்தது வீண்போகவில்லை. இரண்டு மூன்று நாட்கள் ஆயின. வெள்ளைக்காரர்கள் வெளியேறத் தொடங்கினார்கள். அரசியலுடனான தனது கடமை முடிந்துவிட்டது. இனி தன்னுடைய குடும்பத்திற்கான கடமையைத் தான் நிறைவேற்றியாக வேண்டும். . .

நிம்மதியாக வாசுட்டி படுத்துறங்கினான்.

★★★

மூப்பன்துரையின் பங்களா பிரளய காலத்து நோவாவின் பெட்டகம் போல ஆகியிருந்தது. வெள்ளைக்காரர்களும் போலீஸ்காரர்களும் அடியாட்களும் அவர்களுடன் தொடர்புள்ள மய்யழி மக்கள் சிலரும் அங்கே அடைக்கலம் தேடிப் போயிருந்தார்கள்.

பங்களாவுக்கு எதிரில் பாலத்தில் ஆட்கள் கூட்டமாகக் குழுமியிருந்தார்கள்... போராட்டக்காரர்களும் அவர்களுடைய அனுதாபிகளும்.

பங்களாவுக்குள், ஜன்னலுக்கருகில், கையில் தூரதரிசினியுடன் கடலில் கண்வைத்து நின்றிருந்தார் மூப்பன்துரை.

"பங்களாவை வளைக்கணும்."

பப்பன் தாட்டிகமாகச் சொன்னான்.

"பங்களாவுக்குள்ளே போறப்போ கவனமா இருக்கணும்." வாசுட்டி எச்சரிக்கைக் குரல் கொடுத்தான். "போலீஸ்காரங்க இதுவரைக்கும் கட்டில்லேங்கறது உண்மைதான். ஆனாலும் அவங்க கையிலே துப்பாக்கி இருக்கு, அதை நினைக்கணும்."

"துப்பாக்கியாலே சுடற காலம் முடிஞ்சிபோச்சுப்பா."

"இல்லே, வேணும்னு நினைச்சால் இப்போ சுடலாம்."

"அப்படீன்னா நாம என்ன செய்யலாம்னுதான் நீ சொல்றே?"

"அதுதான் நாம யோசிச்சி முடிவெடுக்க வேண்டியது."

சர்ச்சைகளும் கூட்டு ஆலோசனைகளும் தொடர்ந்தன. ஆட்சிச் சக்கரம் ஸ்தம்பித்துப்போயிருந்தது. பள்ளிக்கூடங்களும் ஆபீசுகளும் ஆக எல்லாமே அடைத்துக் கிடந்தன. மூப்பன்துரையும் பரிவாரங்களும் இப்போதும் பங்களாவில்தான். இப்போதும் மய்யழிக்கு மேலே மூவர்ணக் கொடிகள் தடையின்றிப் பறக்கின்றன.

"உங்களை அவங்க சுட்டுக் கொல்வாங்க, பாருங்க."

கணாரன் அண்ணாச்சியும் தாசனும் பேச்சுவார்த்தைக்காக பங்களாவுக்குப் புறப்பட்டபோது வாசூட்டி பயந்தான். அவர்கள் பங்களாவிலிருந்து ஒருபோதும் திரும்பமாட்டார்களென்று அவன் அஞ்சினான்.

தாசனும் கணாரன் அண்ணாச்சியும் வாசல் வழியாக உள்ளே போனார்கள். அங்கே காவலாளிகள் இல்லை. கேட்டிலிருந்து பங்களா வரையிலான நடைபாதை தடங்கல் ஏதுமின்றி நீண்டு கிடந்தது. போலீஸ்காரர்களின் பூட்சுகள் பதித்த சுவடுகள் கடற்காற்றில் அழிந்து போயிருந்தன. அவர்கள் முன்னோக்கி நடந்தார்கள்.

சமையல்காரன் வந்து அவர்களை உள்ளே அழைத்துப் போனான்.

இதோ முன்பொரு சமயம் மூப்பன்துரையின் தனியறையில், தாசன்...

கடற்காற்று நினைவூட்டுகிறது.

லெத்தாஸ் றெழ்யூயித் தோம் ஸ்யுக்ஸே.

உன்னுடைய வெற்றியில் அரசாங்கம் மகிழ்ச்சியடைகிறது.

லெத்தா தெஸோர்மே லொக்யூப் துவா.

இன்று முதல் அரசாங்கம் உன்னுடைய விஷயத்தில் அக்கறை காட்டும்.

தாசனுடைய முகத்தில் அவனையறியாமலே ஒரு சிரிப்பு வந்தது. காலம் கடந்து போயிருக்கிறது. அந்தப் பழைய தாசனல்ல இது. ஒரு நாட்டின் விதியை பாரம் சுமக்கும் வண்டிக் காளை இது. கண்ணிலிருந்து நீர் இன்னும் வழிந்து முடிந்துவிடவில்லை. உடம்பில் காயங்கள் இன்னும் ஆறவில்லை. தந்தையைப் பற்றியதான சிந்தனையில் இரத்தம் பாய்ந்தோடும் இதயம். . . .

காலடி ஓசை கேட்டு அவன் உணர்வுற்றான். மேயர் ராமன் வக்கீல் வழக்கம்போல் மடிப்புக் கலையாத கால்சராயும் கோட்டும் அணிந்திருந்தார். கழுத்தில் போ கட்டியிருந்தார். மேயருக்குப் பின்னால் ஸெக்ரத்தேர் கருணனும். அவரும் அதே ஆடை அலங்காரத்தில்.

"வெனே மெஸ்யே!"

வாருங்கள், மரியாதைக்குரியவர்களே!.

தளவிரிப்பு விரித்திருந்த படிக்கட்டுகள் வழியே அவர்கள் மாடிப்படி ஏறினார்கள். கணாரன் அண்ணாச்சியின் நெஞ்சு படபடத்தது. அவர்கள் நினைத்தால் தங்களை என்ன வேண்டுமானாலும் செய்யலாம். பிடித்துச் சிறையிடலாம். கொண்டுபோய்க் கீழே இரைச்சலிடும் சமுத்திரத்தில் தூக்கி எறியலாம். .

நினைப்பது வெளியில் தெரியாதவாறு தளவிரிப்புக்கு மேலாக அவர்கள் நடந்தார்கள். பின்னால் மேயர் ராமன்வக்கீலும் ஸெக்ரத்தேர்

கருணனும். திரைச்சீலைகள் பக்கவாட்டில் ஒதுக்கப்பட்டுக் கொண்டிருந்தன.

கடைசியில் அவர்கள் மூப்பன்துரையின் அருகடைந்தார்கள். அவர் முதுகைக் காட்டியபடி வெளியே வெயிலைப் பார்த்துக்கொண்டு நின்றிருந்தார். கண்ணாடி ஜன்னலுக்குக் கீழே இரைச்சலிடும் சமுத்திரம். வெகுதொலைவில் தெளிவான தொடுவானம். மூப்பன்துரையின் கையில் தூரதரிசினி இருந்தது.

தாசனும் கணாரனும் வந்து நின்ற பின்னும் மூப்பன்துரை முகம் திரும்பவில்லை.

ஜன்னலருகில் முதுகு திரும்பி நின்றவாறே மூப்பன்துரை கேட்டார்.

"உங்களுக்கு என்னதான் வேண்டும்.?"

"சுதந்திரம்."

தாசன் சொன்னான். அப்போதும் மூப்பன்துரை முகம் திரும்பவில்லை. கண்ணாடி ஜன்னலுக்கு அப்பால் கடலலைகள் புரண்டடித்துக் கொண்டிருந்தன.

"சுதந்திரமா?"

"ஆமாம்."

மூப்பன்துரை ஜன்னலின் மூடுதிரைகளை விலக்கினார். முகத்தைக் காட்டாமல் வெளியில் சமுத்திரத்திற்கு நேராக கை சொடுக்கிக்கொண்டு மூப்பன்துரை சொன்னார்.

"பாரு, கூட்டாளிங்களை"

அவர்கள் பார்த்தார்கள். அடிவானத்தில் தவழ்ந்து வரும் போர்க்கப்பல்கள். கப்பல்கள் மய்யழித் துறைமுகத்தை இலக்காகக்கொண்டு வந்துகொண்டிருந்தன.

கணாரன் அண்ணாச்சியும் தாசனும் ஆணி அடித்ததுபோல் நின்றார்கள். அவர்களுடைய கால்விரல்களினூடே சில்லிப்பு உச்சிக்கு ஏறியது. அவர்கள் பார்வை மங்க செவி கேளாத நிலையை எய்தினார்கள். எவ்வளவு நேரம் அப்படி நின்றிருந்தார்கள் என்று தெரியவில்லை. மேயர் ராமன்வக்கீலின், ஸெக்ரத்தேர் கருணனின் உரத்த சிரிப்புத்தான் அவர்களை சுயநினைவுக்குக் கொண்டுவந்தது.

ஒரு கனவு என்பது போல அவர்கள் திரும்பி நடந்தார்கள். திரைச்சீலைகள் ஒதுக்கப்பட்டன. நீண்ட நடைபாதையின் வழியே கேட்கடந்து வெளியில் வந்தார்கள்.

"போர்க்கப்பல். . . ."

"போர்க்கப்பல் வருது. . . ."

வெளியில் கூடியிருந்தவர்கள் உச்சத்தில் இரைந்து கத்தினார்கள். திக்பிரமையடைந்த அவர்கள் நாலாபக்கமும் ஓடினார்கள்.

ஒரு நிமிடத்திற்குப் பிறகு பாலத்துப் பகுதி சூனியமாயிற்று. தலைவர்கள் மட்டும் எஞ்சியிருந்தார்கள். கடலிலிருந்து போர்க்கப்பல்களின் ஊதல் ஒலி உயர்ந்து முழங்கிற்று. இதுவரைக்கும் மய்யழிக்கு மேலே தளராமல் பறந்துகொண்டிருந்த மூவர்ணக் கொடிகள் நடுங்கின.

உயிர்த்தெழுந்த மய்யழியின் மக்களை அடித்தமர்த்துவதற்காக, அவர்களுடைய கால்களில் மீண்டும் அடிமைச் சங்கிலிகளை இடுவதற்காக, போர்க்கப்பல்கள் இதோ வருகின்றன.

"மூப்பன்துரையோட கையிலே வயர்லெஸ் இருந்திருக்கு. நாம எதிர்பார்க்கலையே, அண்ணாச்சி."

தன்னை சுயாதீனப்படுத்திக் கொள்வதற்கான முயற்சியாக தாசன் ஒரு பிடி பற்ற வைத்துக்கொண்டான். அவன் வேட்டியை மடித்துக் கட்டிக்கொண்டான்.

கணாரன் அண்ணாச்சி மலைக்காய்ச்சல் பிடித்தது போன்று நின்ற நிலையிலேயே நடுங்கினார். அவருடைய காதுகளில் பதினாயிரம் போர்க்கப்பல்களின் ஊதல் குரல். அவர் சாலையோரம் நிலைகுத்தி நின்றார்.

"போயிருவோம் அண்ணாச்சி"

"எங்கே தம்பி?"

கணாரன் அண்ணாச்சியின் குரல் கெஞ்சுவது போலிருந்தது.

"மய்யழியைத் தாண்டி. போர்க்கப்பல்களைத் தோற்கடிக்கும் புதியதொரு மக்கள் புரட்சிக்கு ஆயத்தப்படுத்துவதற்காக."

"நான் வரல்லே. நான் இங்கேயே கிடந்து செத்துடுறேன்."

மய்யழியை ஆலிங்கனம் செய்துகொண்டு கணாரன் மண்ணில் கவிழ்ந்து படுத்தார். உலர்ந்த கறுத்த கைகளைப் பரத்திவைத்துப் படுத்துக்கொண்டு அவர் அழுதார். அவர் மய்யழியை விடவில்லை. போர்க்கப்பல்களால் மய்யழியை அவருடைய கையிலிருந்து தட்டிப் பறிக்க முடியாது. ஒன்றல்ல, ஆயிரம் போர்க்கப்பல்கள் வந்தாலும்.

"எந்திரிங்க அண்ணாச்சி."

"நான் வரமாட்டேன்."

கணாரனின் மெலிந்த கைகள் மய்யழியை வலுவாகப் பற்றின. தனது தாய் என்பது போல அவர் தன்னுடைய பிறந்த மண்ணை மாரோடு சேர்த்தணைத்துக் கொண்டார். அவர் தேம்பினார். இரத்தத்தின் சூடுள்ள கண்ணீரிலிருந்து வழிந்தோடிற்று.

கணாரனை அங்கிருந்து எழுந்திருக்கச் செய்ய தாசனுக்குப் பெரும்பாடாகிவிட்டது. கடைசியில் அவர் எழுந்து நீர் மல்கும் கண்களுடன் தாசனோடு நடந்தார். ஆறு நாட்கள் மய்யழிக்கு மேலே ஒளிர்ந்து சுடர்விட்டுக்கொண்டிருந்த சுதந்திரச் சூரியன் திரி பொசுங்கிக் கருகியது. இனி இங்கே மீண்டும் போலீஸ்காரர்களும் அடியாட்களும் அடாவடித்தனமாக நடப்பார்கள். இனி மீண்டும் இங்கே சாராயமும் இரத்தமும் கலந்து ஓடும்.

அவர்கள் ந்யூ த் லெக்லீஸ் நோக்கி நடந்தார்கள். இருவரும் மௌனமானார்கள். கணாரனின் கண்கள் அப்போதும் நிறைந்திருந்தன. தாசன் பதறாமலிக்க முயன்றான். அவன் வேட்டியை மடித்துக்கட்டி அழுத்தமாகக் காலூன்றி நடந்தான்.

போர்க்கப்பல்கள் அடுத்தடுத்து வருகின்றன. சைரன்ஒலிகளுக்கு மூச்சு அதிகரித்துக்கொண்டிருக்கிறது.

திடீரென்று கோபுரத்திலிருந்து கூட்டமணிகள் முழங்கின. ஆபத்தைத் தெரிவிக்கும் கூட்டமணி. மணியின் ஒலி ஓர் அழுகையைப் போன்று மய்யழிக்கு மேலே பரவியது.

"போர்க்கப்பல் வருகிறது. ஊராரே, ஓடி ஒளிந்துகொள்ளுங்கள்."

ந்யூ த் லெக்லீஸின் வழியாக ஆட்கள் கிழக்கு நோக்கி, மய்யழியின் எல்லையை நோக்கி, பாய்ந்தோடினார்கள். கடைகள் அடைபட்டன.

எங்கும் குழப்பம்.

இனி இங்கே நிற்கக் கூடாது. போலீசும் அடியாட்களும் இப்போதும் சாலையில் இறங்கிவிடுவார்கள். வெள்ளைப் பட்டாளம் இப்போது துறைமுகத்தில் இறங்கியிருக்கும். இதுவரைக்கும் அவர்கள் சுட்டதில்லை. மூப்பன்துரையின் பங்களாவுக்குள் சென்றுவிட்டால் பிடிபடாமலிருக்கலாம். அவர்கள் அதைச் செய்யவில்லை. ஆனாலும் இனியும் மய்யழியில் நிற்பது ஆபத்தானது. . . தாசனுக்குத் தோன்றிற்று. இங்கிருந்து தப்பித்துக்கொள்ள வேண்டும். மறுபடியும் ஒரு தலைமறைவு.

கோயில்வாசலைச் சென்றடைந்தபோதுதான் தாசன் பார்த்தான் — கூட்டமணிகள் முழங்குவதைப் பார்த்தபடி பப்பன் நின்றிருந்தான். முன்னும் பின்னுமாக ஆடும் பிரும்மாண்டமான விரிசலுற்ற மணிகள். அவை ஒலியை கடும்புயலாகப் பரப்பிக் கொண்டிருந்தன.

"பப்பா. . . ."

"நான் உங்களுக்காகத்தான் காத்துக்கிட்டிருக்கேன்."

"வாசூட்டி எங்கே?"

"அவன் தப்பிச்சிட்டான்."

சட்டென்று தாசன் நினைத்துப் பார்த்தான் — சுகமில்லாமல் படுத்திருக்கும் அம்மா, கிரிஜா, பாட்டி பட்டாளம் கப்பலிலிருந்து இறங்கிக்கொண்டிருக்கும் இந்த நேரத்தில், ஆட்கள் கூட்டமாய்த் தலைமறைவாகும் இந்த நிமிடம், அவர்களை யாரிடம் ஒப்படைத்துவிட்டுத் தான் போவது? தாசனுக்குத் தலை வெடித்துவிடும் போலிருந்தது.

"பப்பா, நீ கணாரன் அண்ணாச்சியையும் கூட்டிக்கிட்டுப் போ, சீக்கிரம்."

"நீ?"

"நான் கொஞ்சம் வீட்டுக்குப் போயிட்டு வர்றேன். அம்மாவுக்கு சுகமில்லே. உனக்கு அது தெரியுமில்ல?"

பப்பன் போகாமல் சந்தேகப்பட்டு நின்றான்.

"போயிரு."

ந்யூ த் றௌஸிதாம்ஸ் வழியாக ஒரு போலீஸ்காரர்கள் கூட்டம் வருவதைப் பார்த்தார்கள். அவர்கள் வெளியில் நடமாடத் தொடங்கிவிட்டார்கள். அவர்களுக்குப் பின்னாலேயே அடியாட்கள் இறங்கி நடமாடுவார்கள்.

"உன்னை விட்டிட்டு நாங்க எப்படிப் போக முடியும்?"

"நான் குழந்தையில்லே. . . . "

விவாதித்துக்கொண்டு நிற்பதற்கான நேரமல்ல. பப்பன் கணாரன் அண்ணாச்சியை அழைத்துக்கொண்டு வேகமாக நடந்தான். . . மய்யழியை விட்டு வெளியே நோக்கி.

"ஊர்க்காரர்களே! வெள்ளைப் பட்டாளம் வருகிறது..ஊர்க்காரர்களே! மய்யழியிலிருந்து வெளியேறுங்கள். ஊர்க்காரர்களே. . ."

யாருடைய குரலோ தாசனின் காதுகளில் விழுந்தது, ஓடிச் செல்பவர்களின் காலடி ஓசைகளும்.

சமுத்திரங்களைத் தாண்டிவரும் வெள்ளைப்பட்டாளம் எதையும் செய்யும். தங்களுக்கெதிரே கிளர்ந்து எழுந்துவிட்ட மய்யழி மக்களைச்

சுட்டுச் சாம்பலாக்கலாம். மய்யழியில் இரத்தம் பெருக்கோட நேரலாம்.

"அவங்க குண்டு போடுவாங்க, கொறம்பீ."

முதுகில் மூட்டைமுடிச்சுகளுடன் வெளியேறிச் செல்லும் உன்னிநாயர் உரத்துச் சொன்னார். பின்னால் குஞ்ஞானனும் குஞ்சக்கனும் குடும்பமும். கையில் கிடைத்ததை மட்டும் வாரியெடுத்து மூட்டை கட்டிக்கொண்டு உயிர்பிழைக்க அவர்கள் ஓடுகிறார்கள்.

குறம்பியம்மா வெளிமுற்றத்தில் திகைத்து நின்றுகொண்டிருந்தாள். கூட்ட மணி அப்போதும் இடைவிடாமல் முழங்கிக்கொண்டிருந்தது.

படிப்படியாகக் குழுவாய் அமைந்த பயணம் தொடங்கியது. குளித்துக்கொண்டிருந்தவர்கள் துவட்டிக் கொள்ளாமலே உடுப்புக்களை வாரிச் சுற்றிக்கொண்டு ஓடினார்கள். ஆஸ்பத்திரியிலிருந்து நோயாளிகள் வெளியிலிறங்கி ஓடினார்கள். மய்யழியின் ஊடாகப் பாலத்தின் வழியே நீண்ட பிரவாகமாக மய்யழியின் மக்கள் வெளியேறிப் பிரவகித்தார்கள். அலறி அழும் குழந்தைகள், தள்ளாடி நடக்கும் முதியோர்கள், தோளிலேறிப் போகும் நோயாளிகள்... உயிருக்கு மன்றாடும் பயணத்தில் அவர்கள் சொத்தையும் பணத்தையும் உதறிவிட்டுச் சென்றார்கள்...

போர்க்கப்பல்கள் வெளியேற்றிய புகை ஓர் அணுகுண்டு வெடிப்புப்போன்று மய்யழிக்கு மேலே பரவியது.

தாசன் முற்றத்தில் நுழைந்தான். ஒரு தீர்மானமும் எடுத்திருந்தான். அம்மாவையும் மற்றவர்களையும் உடன் அழைத்துப் போக வேண்டும். எங்கே போவதென்று அவனுக்குத் தெரியாது. மய்யழியை விட்டு வெளியே. . . அது மட்டும் அவனுக்குத் தெரியும்.

"போகலாம்மா. . . ."

அவன் அம்மாவைக் கட்டிலிலிருந்து தாங்கலாகப் பிடித்து எழுந்திருக்கச் செய்தான். என்ன செய்ய வேண்டும் என்று தெரியாமல் கிரிஜா கண்ணில் நீருடன் நின்றிருந்தாள்.

"வெள்ளைப் பட்டாளம் குண்டு போடுமா?"

"தெரியலே, பேசிக்கிட்டிருக்க நேரமில்லே. கிரிஜா, வா, நாம போகலாம்."

"எங்கண்ணே?"

"அவங்க போற இடத்துக்கு."

தாசன் சாலையைச் சுட்டிக் காட்டினான். சாலையில் அப்போதும் மய்யழியின் மக்கள் தலைமறைவுப் பயணம் செய்துகொண்டிருந்தார்கள். முதியோர், குழந்தைகள், பெண்கள், நோயாளிகள். . . .

"இல்லே. அவங்க குண்டு போட மாட்டாங்க." குறம்பியம்மா தன் ஆத்மாவோடு பேசுவது போல முணுமுணுத்தாள். "வெள்ளைக்காரங்க நல்லவங்க."

போர்க்கப்பல்கள் மய்யழியை எட்டிய இந்த நேரத்திலும் அவளுக்கு வெள்ளைக்காரர்கள் மீதான ஆராதனை உணர்வு தீரவில்லை.

சாமான்கள் எதையும் எடுத்துக்கொள்ளவில்லை. உயிர்தான் முக்கியம். அம்மாவைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு தாசன் வாசலில் இறங்கினான். பின்னால் கிரிஜாவும் குறம்பியம்மாவும். அக்கம்பக்கம் இருந்தவர்கள் எல்லோரும் இதற்குள்ளாகப் போய்விட்டிருந்தார்கள்.

சட்டென்று தாசன் பார்த்தான். . . .சாலையில், எட்டிப் பிடிக்கும் அருகாமையில், அச்சு நின்றிருந்தான். மற்றோர் அக்னிப்பரீட்சையா?

"கப்பல் நங்கூரம் போட்டாச்சி." அச்சு சொன்னான். "வெள்ளைப் பட்டாளம் கரையில் இறங்கியாச்சி."

"தள்ளி நில்லு. என்னைத் தொட்டா உன்னை நான் கொன்னுப்பிடுவேன்."

அச்சு சிரித்தான்.

"தாசா, இனி நீ இங்கே நிக்கக் கூடாது. உயிர் வேணும்னா ஓடிப் போயிரு. கொஞ்சம் தாமதிச்சா உன்னை என்னாலும் காப்பாத்த முடியாமப் போகும்."

தாசன் அவனுடைய முகத்தை உற்றுப் பார்த்தான். அவனுக்கு எதுவும் புரியவில்லை.

"உனக்கு நம்பிக்கை வரல்லேல்ல?"

அச்சுவின் கையில் வழக்கமாக இருக்கும் கத்தி இல்லை. அவன் மறுபடியும் சொன்னான்.

"உயிர் வேணும்னா போயிரு. உன்னோட அம்மாவையும் தங்கச்சியையும் நான் பார்த்துக்கிடுறேன்."

"உங்களை நான் எப்படி நம்புறது?"

"ஏய், வேணும்னா என்னாலே உன்னைப் பிடிச்சி பட்டாளத்துக்காரங்க கையிலே ஒப்படைக்க முடியும். உன்னைக் கொல்லவும் கொல்லலாம், யாரும் என்னைக் கேக்கப் போறதில்லே."

அச்சு மீண்டும் சிரித்தான்.

தாசனுக்கு ஒன்றும் புரியவில்லை. கனவா இதெல்லாம்? போர்க்கப்பல்கள், பயணம், நிராயுதனாக எதிரில் நிற்கும் அச்சு — இதெல்லாம் உண்மைதானா? அல்லது, எனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா? அப்படித்தான், தனக்குப் பைத்தியம்தான், அம்மா, எனக்கு, பைத்தியம் பிடிக்கிறது. . . .

என்னைக் காப்பாற்று.

கூட்டமணி ஓய்ந்திருந்தது.

ர்யூ த் லெக்லீஸ் வழியே வெள்ளைப் பட்டாளம் மார்ச் செய்து வந்தது. அடர் நீல யுனிஃபார்ம் அணிந்து, செவ்வரளிப் பூப் போன்று சிவந்த வெள்ளைக்காரர்கள். ஒளிர்ந்த வெயிலில் அவர்களுடைய கைகளிலிருந்த துப்பாக்கிகள் மின்னின.

"அச்சு, உங்களை நான் நம்புறேன். ஏமாத்தினா தெய்வம் மன்னிக்காது."

அச்சு தாசனைப் பிடித்துத் தள்ளினான். திக் பிரமை பிடித்தவனைப் போல, தாசன் நடந்தான். அம்மாவின், கிரிஜாவின் கேவல் சத்தம்.

மய்யழியின் மண்ணில் காலூன்றிய வெள்ளைப்பட்டாளம் போராட்டக்காரர்களைப் பார்க்கவில்லை. மயானம் போல சூனியமும் ஊமையுமான மய்யழிதான் அவர்களை வரவேற்றது. ஆயுதம் தாங்கிய பட்டாளத்தார் ஆளில்லாத சாலைகளின் வழியே மார்ச் செய்தார்கள். மெறியின் மேலும் பலே த் ழ்யுஸ்தீஸின் மேலும் பறந்து மகிழ்ந்த மூவர்ணக் கொடிகளை அவர்கள் அகற்றினார்கள்.

மறுநாள் ஆயுதம் தாங்காமலே பட்டாளத்தார் சாலைகளில் நடந்தார்கள். தோகை விரித்தாடும் தென்னைகள். சிறகடித்துப் பறக்கும் சிவந்த செம்போத்துகள். மணிகுலுக்கி மேய்ந்து நடக்கும் ஆடுகள். உன்னிநாயர் விட்டுச் சென்றிருந்த கடைக்குச் சென்று அவர்கள்

பழங்கள்ளைக் குடித்தார்கள். தென்னங்கள்ளின் மயக்கத்தில் கண்களில் அற்புதமாக அவர்கள் மய்யழியின் இயற்கை அழகை மாந்திக்கொண்டு நடந்தார்கள். அவர்கள் பசுங்கன்றுகளுடன் செல்லம் கொஞ்சினார்கள்.

அவற்றிற்குப் பின்னால் ஓடி விளையாடினார்கள். மய்யழி ஆற்றில் நீந்திக் களித்தார்கள்.

மூப்பன்துரை ஓர் அறிக்கை வெளியிட்டார். வெள்ளைப் பட்டாளம் வந்தது தனது பிரஜைகளைத் தொந்திரவு செய்வதற்காக அல்ல. அவர்களைப் புரட்சிக்காரர்களிடமிருந்து காப்பாற்றத்தான். புரட்சியாளர்களைத் தவிர மற்றவர் எவரையும் தண்டிப்பதற்காக அல்ல.

மூப்பன்துரை தன்னுடைய பிரஜைகளை மய்யழிக்குத் திரும்பி வருமாறு வேண்டிக் கொண்டார்.

ஆனால், யாரும் வரவில்லை. போர்க்கப்பல்கள் இப்போதும் துறைமுகத்தில் நங்கூரமிட்டுத் தங்கியிருக்கின்றன. வெள்ளைப் பட்டாளம் இப்போதும் சாலையில் பீடுநடை போட்டுக்கொண்டிருக்கிறது. அவர்கள் எப்படித் திரும்பி வருவார்கள்?

சில நாட்கள் கழிந்தன. சாலைகள் வெறிச்சோடிக் கிடந்தன. வீடுகள் அடைத்துக் கிடந்தன. அனாதைகளான கன்றுகாலிகள் பட்டினியாய் அலைந்தன. அவை தீனிக்காகச் சாலைகளில் ஏங்கி நடந்தன. கோழிகள் பசியினால் இறந்தன. உயிரோடு இருந்தவற்றை நரிகள் விழுங்கின. ஆள் நடமாட்டமில்லாத வீடுகளில் நரிகள் விருப்பம்போல் உலவின.

மய்யழி ஆற்றுக்கு மேலாக சூரியன் விழித்தெழுந்தான். தெளிவான ஒரு விடிகாலை. வெள்ளைப் பட்டாளத்தார் கள்ளின் மயக்கத்தில் வெயில் காய்ந்து கொண்டிருந்தார்கள். அப்போது பாலத்தின் அடுத்த முனையில் யானைக்கால் அந்தோனி தென்பட்டான். மத்துப்போல் வீங்கிய தனது கால்களை இழுத்து வலித்து அந்தோனி வந்தான். மூப்பன்துரையின் அழைப்பைச் செவிமடுத்து முன்னோர் பூமிக்குத் திரும்பி வரும் முதல் பிரஜை.

அதைப் பார்த்து பட்டாளத்தார் மகிழ்ச்சியில் மூழ்கி ஆரவாரம் செய்தார்கள். பாலத்தைக் கடந்து வந்து மய்யழியின் மண்ணில் கால் பதித்த யானைக்காலன்னை அவர்கள் ஆரத் தழுவினார்கள். . . .

அந்தோனிக்குப் பிறகு மற்றவர்களும் வரலானார்கள். தோளில் சாமான்களுடன் நொண்டி நொண்டி குஞ்சக்கன் வந்தான். ஆசாரி ராமன் வந்தான். கோல் ஊன்றித் தள்ளாடிக்கொண்டு முதியோர். பெற்றோர்களின் கைவிரல்களைப் பற்றிக்கொண்டு குழந்தைகள். அவ்வாறு தனியாகவும் கூட்டமாகவும் மய்யழியின் மக்கள் திரும்பி வந்தார்கள்.

அவர்கள் வெள்ளைப் பட்டாளத்தார்களுக்கு இளநீர் கொடுத்தார்கள். பாயசம் தயாரித்துக் கொடுத்தார்கள். மய்யழியின் மக்கள் வெள்ளைப் பட்டாளத்தை வரவேற்று உபசரித்தார்கள்.

ர்யூ த் ரெஸிதாம்ஸும் ர்யூ த் லெக்லீஸுமெல்லாம் மீண்டும் உயிர் பெற்றன. சாராயக் கடைகளில் மீண்டும் சாராயம் ஓடிற்று.

அப்போது வெள்ளைப் பட்டாளத்திற்குத் திரும்பிப் போக வேண்டிய வேளை வந்தது. அவர்களுக்கு விடை கொடுத்தனுப்புவதற்காக

மய்யழியின் மக்கள் துறைமுகத்தில் பெருங்கூட்டமாகக் கூடினார்கள். நங்கூரங்கள் உயர்ந்தன. போர்க்கப்பல்கள் அடிவானத்தை இலக்காகக் கொண்டு புறப்பட்டன. கப்பல்கள் அகன்றகன்று நடுக்கடலில் மறைந்தன.

# 24

பேண்டுக்காரன் கணாரியின் பதினொறு முடிவடையாத மகள் தேவிக்கு கர்ப்பம்!

"அதெப்படி? அவளுக்குக் கல்யாணம் ஆகலேல்ல?"

குறம்பியம்மா அச்சுவிடம் கேட்டாள். யானைத் தந்தத்தில் செய்த பொடிடப்பியிலிருந்த ஒரு நுள்ளல் பொடியெடுத்து உறிஞ்சினாள்.

"கலிகாலமில்லே?"

அசு குறம்பியம்மாவின் அருகில் கோரம்பாயில் உட்கார்ந்திருந்தான். அண்டலூர் திருவிழாவின்போது அவன் வாங்கிக்கொண்டு வந்தது.

"ஒரு நுள்ளல் எனக்கும் தா."

குறம்பியம்மா டப்பியை அச்சுவிடம் கொடுத்தாள். அவன் இதற்கிடையில் பொடி போடத் தொடங்கியிருந்தான். குறம்பியம்மாதான் போடுவதற்குச் சொல்லிக் கொடுத்தது. அதன் மூலம் அவர்களுக்கிடையே புதியதோர் உறவு உருவாகத் தொடங்கியிருந்தது — பொடி போடும் இரண்டு மனிதர்களுக்கிடையேயான உறவு.

"யாரை நீ சந்தேகப்படுறே?"

"ப்ருகாதி, இல்லேன்னா வேறே யாரு?"

"அவனுக்கு அம்மா போறாதாக்கும்? மகளும் வேணுமாக்கும்?"

அவர்கள் உரக்கச் சிரித்தார்கள். காதுகளில் கிடந்த குறம்பியம்மாவின் பாம்படங்கள் ஆடின, அச்சுவின் முகம் செம்பருத்திப் பூவைப்போல் சிவந்தது. அவனுக்கு அப்படித்தான். கொஞ்சம் சிரித்தாலும் முகம் இரத்தம் போலாகிவிடும்.

"அச்சு, நான் ஒரு விஷயம் கேட்டா நீ சொல்லுவியா?"

"குறம்பியம்மாகிட்டச் சொல்லாம வேறே யாருகிட்டச் சொல்லுவேன்?"

"அந்த ப்ருகாதிக்கு கட்டினவளும் குழந்தைகளும் உண்டா பாண்டிச்சேரியிலே?"

"உண்டு." அச்சு சொன்னான். "பொண்டாட்டி அலமேலு. நாலு குழந்தைங்க. காச்சி, சின்னம்மா, அரிகேசவன், மதனகோபாலன்.

குறம்பியம்மா மூக்கின்மேல் விரல் வைத்தாள்."

"அந்த நாணிக்கும் மகளுக்கும் என்ன ஒரு பாக்கியம்?"

நாணியும் தேவியும் செட்டியப்பனுடன்தான் இப்போதும் இருப்பது. பழைய வீட்டில் கணாரி தனியேதான். அவன் முன்னைவிட இப்போது அதிக மகிழ்ச்சியாகத்தான் இருக்கிறான். தினமும் காலையில் செட்டியப்பன் அன்றைக்குரிய கள்ளுக்கான வகைசெய்து கொடுப்பார். அதைவிட அதிகமாகக் கணாரிக்கு என்ன வேண்டும்? அவன் வேலைக்குப் போவதை முற்றாக நிறுத்திவிட்டான். பகல் முழுவதையும் உள்ளிநாயரின் கடையில் செலவழிப்பான். இரவு வீட்டுக்குத் திரும்பி வந்ததும் குழலெடுத்து ஊதி பிராக்டீஸ் செய்வான்... வேலைக்குப்

போகாவிட்டாலும்கூட. அவ்வாறு நள்ளிரவில் ட்ரம்ப்பெட் ஓசையை மய்யழியின் மக்கள் இன்றும் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

தாவீதுதுரை செட்டியப்பனைப் போல அல்ல. அவர் குஞ்ஞிச்சிருதைக்கு வீடு கட்டிக்கொடுத்திருந்த போதிலும், அவளில் ஒரு மகனைப் பிறப்பித்த போதிலும், அவளோடு சேர்த்து ஒருபோதும் யாரும் துரையைப் பார்த்ததில்லை. தான் அவளுக்குக் கட்டிக்கொடுத்த வீட்டில் ஒரு நாள்கூட அவர் கால் வைத்ததில்லை. குஞ்ஞிச்சிருதைக்கும் தாவீதுதுரைக்கும் இடையேயான உறவு இரவு நேர உறவு மட்டுமே. இன்றும் அந்தி மயங்கும்போது குஞ்ஞிச்சிருதை குளித்து, பளபளக்கும் முண்டும் மேல்முண்டும் உடுத்தி, கண்ணுக்கு மையிட்டு, தலைமுடி கோதி முடித்து, பூச்சூடி தாவீதுதுரையின் பங்களா நோக்கிப் புறப்படுவாள். யௌவனப் பருவம் கடந்துவிட்ட போதிலும் அவளுக்கு இன்னும் புடம் போட்ட பொன்னின் நிறம்தான். முடி ஓர் இழைகூட நரைக்கவில்லை.

"குஞ்ஞிச்சிருதைக்கு என்னைக்கும் வயசு பதினாறுதான்."

அப்படித்தான் குறம்பியம்மா சொல்வாள்.

குறம்பியம்மாவும் அச்சுவும் அப்படி ஊர் விவகாரங்களைப் பேசிக்கொண்டிருந்தார்கள். வெயில் தணிந்தது. அப்போது கிரிஜா வாசற்படியில் வந்து நின்றாள். தலைகுனிந்தவாறு, கைநகங்கள் நிலைக்கதவை உராய்ந்தபடித் தெரிவித்தாள்.

"உலை வைக்க அரிசி இல்லே."

"வேறே ஏதாச்சும் வேணுமா?"

"அம்மாவுக்குக் கொஞ்சம் டர்ப்பென்ட்டைனும்."

அச்சு கோரபபாயிலிருந்து எழுந்தான். ஜன்னல்படியில் பூட்டி வைத்திருந்த பிச்சுவாக்கத்தியை எடுத்துக்கொண்டு வெளியில் இறங்கினான்... அரிசியும் டர்ப்பென்ட்டைனும் வாங்குவதற்காக.

தாமுரைட்டரின் வீட்டுச் செலவு முழுவதையும் இன்று அவன்தான் பார்த்துக்கொள்கிறான். அவன் இல்லாவிட்டால் ரைட்டரின் குடும்பம் பிச்சையெடுக்க நேர்ந்திருக்குமல்லவா? பட்டினி கிடந்து சாக நேர்ந்திருக்குமல்லவா?

★ ★ ★

கடும் வெயிலான ஓர் உச்சிப்பொழுதில்தான் ரைட்டர் வண்டி இறங்கி வந்தது. அவரிடம் குறிப்பிடத் தக்க மாற்றம் ஏற்பட்டிருந்தது. இரண்டு ஆண்டுகள் சிறைவாசம் அனுபவித்ததால் பார்த்தால் அடையாளம் தெரியாதபடி ரைட்டர் மெலிந்திருந்தார். மண்ணுளிப் பாம்பின் நிறத்துடன், சோகை பிடித்த முகம். இரு கைத்தண்டைகளிலும் வடுக்கள் தென்பட்டன. தலைமுடி ஒட்ட வெட்டப்பட்டிருந்தது.

வழியில் ரைட்டரிடம் குசலம் விசாரித்தார்கள். ஆனால் அவர் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. வெயில் கொளுத்தாமலிருப்பதற்காகத் தோளிலிருந்த துண்டை எடுத்துத் தலையிலிட்டுக்கொண்டு வேகமாக வீட்டை நோக்கி நடந்தார்.

சிறைக்குப் போன பிறகு ஊரிலும் வீட்டிலும் என்ன நடந்ததென்று ரைட்டருக்குத் தெரியாது. ஆச்சரியம் என்றுதான் சொல்ல வேண்டும், தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் அவருக்கு ஏற்படவில்லை.

மனம் நிறையக் கோபமும் வெறுப்பும்தான். வெறுப்பு பிறரிடம் மட்டுமல்ல. ரைட்டர் தன்னையே வெறுத்துக்கொண்டார்.

"ரைட்டர்தானே?"

உன்னிநாயர் கடையிலிருந்து வெளியே வந்தார். அவர் குதூகலத்துடன் ரைட்டரைப் பார்த்தபடி நின்றார்.

"எப்போ வந்தீங்க?"

"வந்துக்கிட்டே இருக்கேன்."

"ஒரு கிளாஸ் எறக்கிக்கிட்டுப் போங்க."

உன்னிநாயர் அழைத்தார். பாண்டிச்சேரியிலிருந்து வருபவராயிற்றே? விசேஷங்கள் எல்லாவற்றையும் கேட்டறியலாமல்லவா?

ரைட்டர் கொஞ்சம் தயங்கினார். இருந்தாலும் உள்ளே நுழைந்தார்.

உன்னிநாயர் ஒரு கோப்பை கள்ளை எதிரில் கொண்டுவந்து வைத்தார். தொட்டுக் கொள்ள இலைநறுக்கில் கொஞ்சம் தொடுகறி.

"உங்களைப் பார்த்து ரொம்பக் காலமாச்சி."

ரைட்டர் சற்றே உம் கொட்டினார். தலைகுனிந்தபடி கோப்பையை எடுத்துக் குடித்தார். குடித்துக்கொண்டிருந்த குஞ்ஞானனும் கண்ணன்போலீசும் மற்றவர்களும் அவருக்கு அருகில் நெருங்கி உட்கார்ந்தார்கள். அவர்களுக்கு ரைட்டரிடமிருந்து பலவற்றைக் கேட்க வேண்டியிருந்தது. ரைட்டரிடம் பேசவும் வேண்டியிருந்தது.

"உமக்குத் தெரிஞ்சிருக்கும் — உம்ம மகனை தண்டிச்சதை பன்னிரண்டு வருசமாம்."

உன்னிநாயர் அருகில் வந்து நின்றார். ரைட்டர் விவரம் தெரியாமல் திடுக்கிட்டார். ஆனாலும் அதை வெளியில் காட்டிக்கொள்ளவில்லை. அமைதியாக உம் கொட்டினார்.

"என்ன நீங்க ஒண்ணும் பேசமாட்டேங்கறீங்க?"

"அவன் ஜெயில்லேயா இருக்கான்?"

"அதென்னமோ? கப்பல் வந்தப்போ அவன் தலைமறைவாயிட்டானில்ல?"

என்ன கப்பல்? யாருடைய கப்பல் வந்தது? ரைட்டர் கோப்பையை எடுத்து மறுபடியும் குடித்தார். தொடுகறியை அவர் கையால் தொடவில்லை.

"அந்தப் போர்ட்டர் குஞ்ஞாமனில்லே, அவனோட வீட்லேதான் மகன் இப்போ இருக்கிறது."

உன்னிநாயர் எல்லாவற்றையும் விவரமாக விளக்கிச் சொன்னார். ஒரு வார்த்தை பேசாமல் ரைட்டர் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தார்.

"உம்மோட மகன் புத்திசாலிதான். ஆனாலும் அவனோட ஆட்டம் வெள்ளைக்காரன்கிட்ட நடக்குமா? பன்னிரண்டு வருசம் கிடைச்சிருச்சி ஒண்ணு ரெண்டு இல்லே-பன்னிரண்டு வருசம். மூப்பன் துரைகிட்டேயும் வெள்ளைக்காரன்கிட்டேயும் விளையாடினா அப்படித்தான்."

உன்னிநாயருக்குத் தன்னுடைய இழந்துபோன வீரியம் திரும்பக் கிடைத்திருக்கிறது.

"அவங்க பராக்கிரமசாலிங்களாத்தான் இருந்தாங்க. மெறியையும் போலீஸ் ஸ்டேஷனையும் கைவசப்படுத்திட்டாங்களில்ல? ஆனா கப்பல் வந்தப்போ விழுந்தடிச்சிப் பறந்து மாயாமாயிட்டாங்களே?

பயந்தாங்கொள்ளிங்க. . . .”

ரைட்டர் கோப்பையைக் கீழே வைத்தார். அவருக்குப் போதுமாயிருந்தது.

“நீங்க ஒண்ணும் கவலைப்பட வேண்டாம். உம்ம மகனை வச்சி மட்டும் நான் சொல்லலே, எல்லாரையும் வச்சித்தான்.”

உன்னிநாயர் குரலைத் தாழ்த்தினார். ரைட்டர் அதற்குப் பிறகு அங்கே உட்கார்ந்திருக்கவில்லை. அவர் எழுந்து வெளியேறினார். பின்னாலேயே உன்னிநாயரும்.

“வந்தது வந்தாச்சி.” உன்னிநாயர் சொன்னார். “இன்னியாச்சும் நீங்க உங்க மகனுக்கு நல்ல புத்தி சொல்லணும். வெள்ளைக்காரன்கிட்ட மன்னிப்புக் கேட்டுக்கச் சொல்லுங்க. கஷ்டப்படுறவங்க மேலே கருணை காட்டுறவங்க வெள்ளைக்காரங்க. அவங்க உங்க மகனை மன்னிச்சிருவாங்க.”

“உன்னிநாயரே...” ரைட்டர் சட்டென்று திரும்பி நின்றார். “தாசனைப் பத்தி நீங்க என்கிட்ட ஒரு வார்த்தை பேசக் கூடாது.”

ஒரு கர்ப்பிணியினுடையதைப் போல உப்பியிருந்த ரைட்டரின் முகம் இருண்டது. அவருடைய கண்கள் இடுங்கின.

“அதென்ன ரைட்டரே?”

“அவன் என் மகனில்லே.”

ரைட்டர் சாலையில் இறங்கி நெடுக நடந்தார். உச்சிவெயிலின் வியர்வையால் அவருடைய நரைத்த தலைமுடி மண்டையோட்டில் ஒட்டிக்கொண்டிருந்தது.

“அவனோட ஒரு விதி. ஜெயிலுக்குப் போற மாதிரி அவன் என்ன குத்தம் பண்ணினான்? அந்த முரட்டு துரையைக் குத்தினது வேறொருத்தன். ஜெயிலுக்குப் போனது ரைட்டர். இந்த நாட்டிலே நீதி நியாயம் இல்லேன்னுதான் தோணுது.”

குஞ்ஞானன் யாரோடென்றில்லாது பேசினான். சிறைக்குச் சென்றது ரைட்டர் மட்டுமல்ல. சுதந்திரப் போராட்டத்துடன் தொடர்புகொண்ட பலரும் இருந்தார்கள். அந்த துரையின் இரத்தத்திற்கான விலை. அவர்களில் சிலர் திரும்பி வந்துவிட்டார்கள். சிலர் இன்னும் வரவில்லை.

வெயிலுக்குக் குனிந்துகொண்டு ரைட்டர் நடந்தார். ஒன்றும் முடியவில்லை. எங்கேயாவது போய்க் கொஞ்சம் தலைசாய்த்தால் போதும். எப்படியாவது வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தால். . . .

முற்றத்தில் நுழைந்ததும் தான் படுத்துக் கிடக்கும் சாய்வுநாற்காலியில் கால் நீட்டியபடி புகைபிடித்துக்கொண்டிருந்த அச்சுவைப் பார்த்தார். ரைட்டருடைய நெஞ்சுகனன்றது. நாற்காலிக்கருகில்தரையில் உட்கார்ந்து சுவரில் சாய்ந்தபடி குறும்பியம்மா பொடி போட்டுக்கொண்டிருந்தாள்.

ரைட்டரைப் பார்த்த அச்சு துள்ளி எழுந்தான். அவன் புகைத்து முடித்திராத சிகரெட்டை வாசலை நோக்கி விட்டெறிந்தான். ரைட்டரைக் கைப்பிடித்து வராந்தாவில் ஏறச் செய்தான்.

அச்சு அங்கிருந்தது ரைட்டருடைய மனத்தை நிலைகுலையச் செய்தது. அவர் நின்றபடிப் பதைத்தார். அவர் பயந்தார்.

மகன் இருந்த கோலத்தைக் கண்டு குறும்பியம்மா நொந்துபோனாள். பார்த்தவுடனேயே அதிக வயதானதுபோல் தெரிந்தது. அவள் அசையாமல் மகனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"கிரிஜா, அப்பாவுக்குக் கொஞ்சம் டீ போட்டுக் கொடு"

அச்சு ரைட்டரைப் பிடித்து சாய்வுநாற்காலியில் படுக்கச் செய்தான். கிரிஜா கண்களைத் துடைத்துக்கொண்டு அடுக்களைக்குச் சென்றாள். அவளுக்கு நிம்மதி தோன்றியது... அப்பா வந்தாயிற்று. அப்பாவும் அண்ணனும் இல்லாத வீடு அவளை பயமுறுத்திக் கொண்டிருந்தது. எத்தனையோ இரவுகள் பயத்தினால் அவளுக்குத் தூக்கம் வந்ததில்லை. அச்சு கொண்டு வரும் அரிசியைப் பொங்கித் தின்று நொந்துபோயிருக்கிறாள்.

தேநீர் தயாரித்துக்கொண்டிருந்த போது நிம்மதி வேண்டி அவள் தேம்பி அழுதாள். நனைந்த, கதுப்பான கன்னத் துடங்களில் நாளங்களின் கைம்மாறுகள். தீயும் கண்ணீருமாய்க் கழிந்துகொண்டிருக்கும் நாட்கள். என்றைக்கு இதற்கெல்லாம் ஒரு முடிவு? அவள் தன்னைத் தானே கேட்டுக்கொள்வதுண்டு.

எல்லாவற்றுக்குமான தொடக்கம் தாசனிலிருந்துதான். எல்லாவற்றையும் முடித்து வைக்க வேண்டியதும் அவன்தான். இந்த வீட்டிலிருந்து கண்ணீர் வற்ற வேண்டுமானால் தாசன் விடுதலையாக வேண்டும். மய்யழி விடுதலை பெற்றால்தான் தாசன் விடுதலையாவான். மய்யழியின் விடுதலை தாமுரைட்டரின் அழுதுகொண்டிருக்கும் குடும்பத்தின் விடுதலையாகவும் இருக்கும்.

விடுதலை நாள் வருமா? வரும் என்றால் என்றைக்கு? கிரிஜாவுக்குத் தெரியவில்லை. அவளுக்கு அரசியல் தெரியாது. அண்ணனிடம் கேட்டுப் புரிந்துகொள்ள அவளுக்கு ஆர்வம் ஏற்பட்டதுண்டு. ஆனால், தாசன் ஒரு போதும் அவளருகில் இருக்க முடியாது போய்விட்டதே!

கிரிஜா தேநீர் தயாரித்து இரண்டு கிளாஸ்களில் ஊற்றிக்கொண்டு வராந்தாவுக்குச் சென்றாள்.

அச்சு வெளிமுற்றத்தில் உலாத்திக்கொண்டிருந்தான். ரைட்டர் நாற்காலியில் படுத்துக் கிடந்தார். அருகில் நின்றபடி கௌசுவம்மா மௌனமாக அழுதுகொண்டிருந்தாள்.

"அவங்க அடிச்சாங்களா உங்களை?"

"உம்."

"ஜெயில்லே சீக்கு வந்திச்சா?"

"வர்றதெல்லாம் வரும். தாங்கிக்காம முடியுமா கௌசு?"

கௌசுவம்மாவுக்குக் கணவனுடைய முகத்தைக் கண்ணெடுத்துப் பார்க்க முடியவில்லை. ஒட்டிய, குறுமுடிகள் படர்ந்துகிடக்கும் முகம்... அவளுடைய கண்கள் மீண்டும் நீரைச் சொரிந்தன.

"அழாதே கௌசு. விதின்னு நினைச்சிக்கோ."

கிரிஜா அச்சுவுக்கும் ரைட்டருக்கும் ஒவ்வொரு கிளாஸ் டீ கொடுத்தாள். டீ உள்ளே போனபோது ரைட்டருக்குத் தெம்பாக இருந்தது. உடனேயே அவர் நினைத்துப் பார்த்தார். பாலும் சர்க்கரையும் கலந்த தேநீர். வீட்டிற்கு வரும்போது குடிக்கத் தண்ணீர்கூட அவர் எதிர்பார்க்கவில்லை அல்லவா!

"எப்படி கௌசு நீங்க இங்கே காலம் கடத்துறீங்க?"

யாரும் அதற்கு பதில் சொல்லவில்லை. அச்சு உலவிக் கொண்டே இருந்தான். அங்கே நிசப்தம்.

ரைட்டர் போன பிறகு ஊரில் பலவும் நடந்துவிட்டன. எத்தனையோ

மனிதர்களின் தலைவிதி மாற்றி எழுதப்பட்டது. வெள்ளைப்பட்டாளம் மய்யழியினூடே அலைந்து திரிந்தது. ஆனாலும் முற்றத்து அந்திமந்தாரைப் பூக்களிலோ தென்முற்றத்து அசோக மரத்திலோ மாற்றமில்லை. முன்னைப் போலவே அடர்ந்து கிடக்கும் அந்திமந்தாரைப் பூக்கள். அசோக மரம் பூத்திருந்தது.

"புகைவண்டி ஆபீசிலே அப்பா அண்ணனைப் பார்த்தீங்களா?"

கிரிஜா ரைட்டரின் அருகில் சென்று நின்றாள். தாசனின் பழக்கவழக்கமெல்லாம் இப்போது புகைவண்டி நிலையமும் அதன் சுற்றுப்புறமும் தானே! வண்டி இறங்கி வருபவர்கள் சில சமயம் அவனைப் பற்றிய விவரம் கொண்டுவருவார்கள் கௌசுவம்மாவுக்கு.

ரைட்டர் மகளைப் பார்த்தார். நிறைந்த மார்பும் புட்டமும். இரண்டு பெற்ற ஒருத்தியின் வளர்ச்சி தெரிந்தது அவளிடம்.

"அப்பா அண்ணனைப் பார்க்கலையா?"

"அவனைப் பத்தி நான் கேட்கத் தயாரில்லே."

ரைட்டர் சினந்தார். கிரிஜா விவரமறியாமல் திடுக்கிட்டாள். அவள் அம்மாவின் முகத்தைப் பார்த்தாள்.

"இதென்ன விவகாரம்...?"

"கௌசு, உன்கிட்டதான் நான் சொல்றேன்...அவனைப் பத்தி ஒரு வார்த்தை இங்கே யாரும் பேசக்கூடாது."

எல்லோருக்கும் அதைக் கேட்க வியப்பாயிருந்தது. சிறைக்குச சென்ற ரைட்டரிடம பல மாறறங்கள் ஏற்பட்டிருந்தன. ஆனால் எல்லாவற்றையும் விடப் பெரிய வியப்பாக இருந்தது அது.

"ஆனாலும் ரைட்டரே, அவன் உங்க மகனாயிருக்கானில்ல?"

அச்சு சொன்னான். மாறியது ரைட்டர் மட்டுமல்ல. அச்சுவிடமும் மாற்றங்கள் ஏற்பட்டிருந்தன. ரைட்டா அதை கவனிக்க நேர்ந்தது. அவனுடைய கையில் கத்தியைக் காணோம். பழைய முன்கோபமும் தெம்மாடித்தனமும் இல்லை. என்றைக்கு அவன் மரியாதைக்குரியவனானான்?

"அச்சு இங்கேதான் இருக்கிறது. . . .எப்பவும்."

குறம்பியம்மா தெரிவித்தாள். ரைட்டரின் நெற்றி சுளித்தது. சுளிப்பதனால் பலனில்லை என்று தெரிந்தது. அச்சுவுக்கு இந்த வீட்டில் என்றல்ல, எந்த வீட்டில்தான் தங்கியிருக்க முடியாது? அவன் இந்த ஊரின் முடிசூடா மன்னன் அல்லவா?

ரைட்டர் அப்போது ஏதும் பேசவில்லை. இரண்டு மூன்று நாட்கள் கழிந்தன. அச்சு மரியாதையாகத்தான் ரைட்டரிடம் நடந்துகொண்டான். ஒரு நாள் சாயங்காலம் அவன் ரைட்டரை வெளியே கூட்டிக்கொண்டு போனான். . . உன்னிநாயரின் கடைக்கு.

"அச்சு, நீ இங்கே தங்கியிருக்கிறதிலே எனக்கு மறுப்பில்லே. ஆனா வயசுக்கு வந்த பொண்ணிருக்கு இந்த வீட்டிலே."

"அது எனக்குத் தெரியும் ரைட்டரே."

"ஏய் தாமு, உனக்கு என்ன தெரியும். . . . இந்த ஊரிலே புரட்சி வந்திரிச்சி. பட்டாளம் வந்து. இந்த வீட்டிலே ஆம்பிளேன்னு ஒருத்தன் இருந்தானா? அச்சு ஒருத்தன்தான் உன் மகனோட மானம் காத்தது."

ரைட்டர் சொன்னது குறம்பியம்மாவுக்குச் சற்றும் பிடிக்கவில்லை. வெள்ளைப்பட்டாளம் வந்த சமயத்தில் அவர்கள்

அனாதையாயிருந்தார்கள். கிரிஜாவை யாரும் எது வேண்டுமானாலும் செய்யலாம் என்றிருந்தது. அச்சுவுக்கும்தான் என்ன செய்யக்கூடாதென்றிருந்தது? ஆனால், அவன் அவளைப் பாதுகாத்துக் காப்பாற்றினான். அச்சு இருந்ததனால் இத்தனை நாளும் இந்த வீட்டில் அடுப்பு புகைந்தது.

"ஆம்பளைன்னு நீ ஒருத்தனுண்டு. படிச்சிப் பாசான இன்னொருத்தனும்தான். இருந்தும் என்ன பிரயோசனம்... நேரத்துக்கு ஒரு முக்காத்துட்டுக்குப் பொடி வாங்கித் தர இந்த அச்சு ஒருத்தன்தான் இன்னிக்கு இருக்கான்."

டப்பி தீரத் தொடங்குவதற்கு முன்பே அவள் படபடப்பாகிவிடுவாள். இரவு படுக்கும்போது நிரம்பிய டப்பி தலையணை அடியில் இருக்க வேண்டும். நள்ளிரவு வரை இப்போதும் மூக்கு சிந்தியும் பொடி உறிஞ்சியும் நேரம் போக்குவாள். காலம் கடந்து போகிறது. இன்றும் முனிசிபல் விளக்குகள் அணையும்போது, மய்யழி அரவம் ஒடுங்கும்போது, அவளுக்குக் கேட்கும்.

"கொறம்பி, கொறம்பி, கொஞ்சம் பொடி தருவியா?"

லெஸ்லீதுரைக்காகக் கண்ணீர் சிந்தாமல் இன்றும் ஒருநாள்கூட குறம்பியம்மா தூங்குவதில்லை.

"நான் இங்கே தங்கியிருக்கிறதிலே ரைட்டருக்குக் கோபமா?"

இரவு ரைட்டருடன் சேர்ந்து உட்கார்ந்து அச்சு சோறு சாப்பிடலானான். அவனுடைய கேள்வி ரைட்டரை நிலைகுலையச் செய்தது. எப்படி வெளியே போகச் சொல்வது? இந்தத் தின்னும் சோறுகூட அச்சுவினுடையதல்லவா?

"ரைட்டர் என்ன பேசலே? கோபம்னா சொல்லிருங்க. நான் வெளியே போயிர்றேன்."

"எனக்கென்னப்பா கோபம் அச்சு?"

ரைட்டர் சாப்பாட்டுத் தட்டிலிருந்து தலையை நிமிர்த்தவில்லை. அச்சுவின் வெற்றியாக இருந்தது அது. அவன் உள்ளுக்குள் மகிழ்ந்தான்.

அச்சு அதிகாலையிலேயே விழித்துக்கொள்வான். தைலம் தேய்த்துக் குளிப்பான். தேங்காய்த் துருவலிட்ட கஞ்சி குடித்த பிறகு ஜன்னல்படியிலிருந்து பிச்சுவாக்கத்தியை எடுத்துக்கொண்டு வெளியே போவான். மதியம் அச்சுவும் ரைட்டரும் சேர்ந்துதான் சாப்பிடுவார்கள். சாயங்காலம் அவர்கள் சேர்ந்துதான் உன்னிநாயரின் கடைக்குப் போவார்கள்.

அவ்வாறாக ரைட்டர் மகிழ்ச்சியாகவே காலம் கடத்தினார். தாமுவும் அச்சுவும் சேர்ந்து உட்கார்ந்திருப்பதைக் காணும்போது குறம்பியம்மாவுக்கும் மகிழ்ச்சி. கௌசுவம்மாவின் கண்கள் மட்டும் வற்றவில்லை. ரைட்டர் தாசனை மறந்துவிட்டதாகத் தோன்றியது. கௌசுவம்மாவுக்கு அதெப்படி முடியும்?

எல்லா செவ்வாய்க்கிழமைகளிலும் குஞ்ஞானன் வடகரைச் சந்தைக்கு வாழைக்குலை எடுக்கப் போவான். திரும்பி வருவது இரண்டரை லோக்கலில்தான். அவனது வருக்கைக்காக கௌசுவம்மா வெளிமுற்றத்தில் காத்துக்கொண்டு உட்கார்ந்திருப்பாள்.

"எம் மகனைப் பார்த்தியா நீ, குஞ்ஞானா?"

"பார்த்தேன்."

"துடிச்சிருக்கானா எம் மகன்?"

அதற்கு குஞ்ஞானன் பதில் சொல்லவில்லை.

ஒரு செவ்வாய்க்கிழமை சந்தையிலிருந்து திரும்பி வந்த குஞ்ஞானன் ரைட்டரைக் கூப்பிட்டான். அவர் வெளியே வந்தபோது தெரிவித்தான்.

"நான் உங்க மகனைப் பார்த்தேன்."

ரைட்டர் அதைக் கேட்காததுபோல வெளிமுற்றத்தில் நாற்காலியில் போய் உட்கார்ந்தார். குஞ்ஞானனின் முகத்தைப் பார்க்கக்கூட இல்லை.

"நீங்க கொஞ்சம் புகைவண்டி ஆபீசுக்குப் போங்க. அவன் உங்ககிட்ட என்னமோ பேசணும்னான்."

"உம்."

குஞ்ஞானன் போய்விட்டான். ரைட்டருடைய அசட்டைப் போக்கு அவனுக்குப் பிடிக்கவில்லை.

ரைட்டர் தாசனைப் பார்க்கப் போகவில்லை. அவன் வந்து சென்ற மறுநாளிலிருந்து கௌசுவம்மா சொல்லலானாள். . . . தாசனைப் போய்க் கொஞ்சம் பார்த்துவிட்டு வரும்படியாக. ரைட்டர் பொருட்படுத்தவில்லை. ஒரு சமயம் அவள் தானே சென்று பார்த்து வரத் தயாரானாள். ஆனால், ரைட்டர் தாக்கீது கொடுத்தார்.

"போ, போறப்போ என்ன எடுத்துக்கிடணும்னு நினைக்கிறியோ அதையெல்லாம் எடுத்துக்கோ. பிறகு இங்கே திரும்பி வர வேண்டாம்."

அச்சு நல்லதனமாகச் சொன்னான்.

"தலை திமிறிப் போனாலும் அவன் உங்க மகனில்லே? பெத்த வயித்தோட வேதனை உங்களுக்குத் தெரியலே ரைட்டரே."

"உறைக்கிறாப்பிலே சொல்லு." குறம்பியம்மா தட்டுத்தடுமாறிக்கொண்டு அங்கே வந்து சேர்ந்தாள். "அப்படிச் சொல்லு."

"அச்சு, இந்த வீட்டு விவகாரத்திலே நீ தலையிடக்கூடாது. இது என்னோட வீடு. இங்கே இருக்கிற காரியங்களை நான் பார்த்துக்கிடுவேன்."

"நான் இங்கே அன்னியமா?" அச்சு வேட்டிக்குக் கீழே இட்டிருந்த ட்ரௌசரின் பையிலிருந்து குறம்பியம்மாவுக்கான பொடியை வெளியிலெடுத்தான். "சொல்லுங்க ரைட்டரே, நான் இங்கே யாரோவா?"

ரைட்டர் பதில் சொல்லவில்லை.

எப்படியானாலும் கௌசுவம்மாவுக்கு மகனைப் பார்க்க முடியவில்லை. எல்லா செவ்வாய்க்கிழமைகளிலும் குஞ்ஞானன் தாசனைப்பற்றிய விவரம் கொண்டு வருவான். கல்லூரி மூடியிருக்கும்போது சந்திரிகா வழக்கமாக வந்து போவாள். அவளிடமிருந்து கௌசுவம்மா தாசனைப் பற்றிய விவரம் தெரிந்துகொண்டாள்.

★★★

மய்யழிக்கு சினிமா வந்தது.

அது முதன்முதலாக மூப்பன்துரையின் கார் துறைமுகத்திற்கு வந்ததைப் போன்ற ஒரு நிகழ்ச்சியாக இருந்தது. தெற்குப்பக்கத்து ஏதோ ஒரு பணக்காரருடையது சினிமாக் கொட்டகை. பணம் சம்பாதிப்பதற்காக அல்ல அவர் சினிமா கொண்டு வந்தது. மய்யழியில் சுலபமாய்க் கிடைக்கும்வெளிநாட்டு மதுவகைகள் குடிப்பதற்காகத்தான்.

மைதானத்தில் பெரியதொரு கூடாரம் எழுந்தது. அதில்தான் சினிமா. அதன் சுற்றுவட்டாரமெல்லாம் தோரணங்கள். எங்கே பார்த்தாலும் என். எஸ். கிருஷ்ணன். டி.ஏ.மதுரம் ஆகியோரின் சுவரொட்டிகள். ஒதேனன் தெருத்தெருவாக செண்டை கொட்டிக்கொண்டு நடந்தான். கூடவே தடிக்கம்புகளில் இணைத்த விளம்பரப் பலகைகளுடன் கம்பெனி ஆட்கள். அவர்கள் அடர் சிவப்பு நிறத்தில் நோட்டீஸ்களைப் பரப்பினார்கள்.

"என்னை சினிமாவுக்குக் கூட்டிப் போறியா தாமு?"

குறம்பியம்மா இதுவரை ஒரு சினிமாகூடப் பார்த்ததேயில்லை. அவ்வப்போது ப்ருகாதியே செட்டியப்பாவுடன் நாணி நாரங்காபுரத்துக்கு சினிமா பார்ப்பதற்காகப் போவதை அவள் பார்த்ததுண்டு.

அப்போதெல்லாம் குறம்பியம்மாவுக்கு ஆசை ஏற்பட்டதுண்டு-ஒரு சினிமா பார்க்க.

"குழியிலே தூக்கிப்போட . . . அப்படி என்ன அந்த சினிமா?"

தாமுவின் பதில் குறம்பியம்மாவை நிராசைப்படுத்திற்று. அவள் அச்சுவின் பக்கம் திரும்பினாள்.

"அச்சு, நீ கூட்டிக்கிட்டுப் போறியா?"

அதைக் கேட்டு அவன் புன்னகைத்தான். ட்ரௌசர்ப் பையிலிருந்து சிவப்பு டிக்கட்டுகளை வெளியிலெடுத்துக் காட்டினான்.

சினிமா தொடங்கும். நாள். காலை முதற்கொண்டே குறம்பியம்மா பொறுமையின்மையை வெளிப்படுத்தினாள். இடையிடையே அவள் கேட்பாள்.

"மணி என்னாச்சி கிரிஜா?"

"ரெண்டு கூட ஆகலையா இன்னும்?"

"இன்னும் நாலு மணி நேரம் இருக்கே, கடவுளே. . . . "

பாத்திரத்தில் கங்கு வைத்து அதைக்கொண்டு கிரிஜா தன்னுடைய புடவைக்கும் பிளவுசுக்கும் இஸ்திரியிட்டாள். குளித்து பொட்டு வைத்துத் தலையில் பூச்சூடினாள்.

அன்று மய்யழியில் ஒரு திருவிழாவாக இருந்தது. சாயங்காலமானதும் மய்யழியின் மக்கள் கூட்டமாய் மைதானம் நோக்கிப் புறப்பட்டார்கள். ப்ருகாதியே செட்டியப்பாவும் நாணியும் தேவியும் முதலாவதாகப் போய்ச் சேர்ந்த கூட்டத்தில் இருந்தார்கள். வழக்கம் போல செட்டியப்பா சரிகை வேட்டி கட்டியிருந்தார். நாணியும் தேவியும் புதிய சேலைகளுடன், தாவீதுதுரையின் குழந்தையைக் கையிலெடுத்து, கழுத்தும் காதும் கையும் நிறைய நகைகள் அணிந்து சகோதரன் உத்தமனின் பாதுகாப்புத் துணையுடன் குஞ்ஞிச்சிருதையும் வந்திருந்தாள். குஞ்ஞானனும் உன்னிநாயரும் சேர்ந்து வந்திருந்தார்கள் சினிமாவுக்கு. அதற்காகவே உன்னிநாயர் அன்று தன்னுடைய கடையைச் சீக்கிரமாகவே மூடிவிட்டார்.

ஐந்தரை மணி ஆனதும் ஜெனரேட்டர் இயங்கத் தொடங்கியது. காதடைக்கும் அந்தச் சத்தம் கேட்டு மய்யழியின் மக்கள் பதைத்து நின்றார்கள். குறம்பியம்மா திகைத்து நின்றாள். அச்சு விவரித்து விளக்கினான்.

"அது கரண்ட்டு உண்டாக்குற எந்திரம், குறம்பியம்மா."

"எலக்ட்ரி விளக்கு உண்டா இங்கே, அச்சு?"

"உண்டு குறம்பியம்மா."

"எங்கே அச்சு?"

"இப்போ எரியும் குறம்பியம்மா."

ஆள் கூட்டத்தினூடே கிரிஜாவுக்கு மாராப்பு விலக, குறம்பியம்மாவின் கையைப் பிடித்துக்கொண்டு அச்சு உள்ளே போனான்.

அவ்வாறாக, கிரிஜாவும் குறம்பியம்மாவும் முதன்முதலாக சினிமா பார்த்தார்கள்.

இரவு சாப்பிட்டதற்குப் பின்பு ரைட்டரும் அச்சுவும் வெளிமுற்றத்தில் போய் உட்கார்ந்தார்கள். ரைட்டர் ஊர் விவகாரங்களைச் சொல்லிக் கொண்டிருந்தார். அச்சு கவனக் குறைவுடன் காணப்பட்டான். அவன் சேக்கிக் திண்டின் மீது மட்டிச்சு மேல் முண்டு ஏற்றிக் கட்டியபடி ஒரு பீடியைப் புகைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். எதுவும் பேசவேயில்லை. முனிசிபல் விளக்குகள் சுடரிட்டு எரிந்துகொண்டிருந்தன.

"ரைட்டரே....." அச்சு பீடித்துண்டை வாசலுக்கு விட்டெறிந்துவிட்டு திரும்பி உட்கார்ந்தான. "ரைட்டர்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்னு கொஞ்ச நாளாவே நெனச்சிக்கிட்டிருக்கேன்."

"என்ன விஷயம்?"

சாய்வுநாற்காலியில் படுத்திருந்த ரைட்டர் அயரத் தொடங்கியிருந்தார்.

"ஊர்காரங்க என்னென்னவோ சொல்றாங்க."

"என்ன அவங்க சொல்றாங்த?"

"கிரிஜாவையும் என்னையும் பத்தி. . . . ."

"உம்."ரைட்டா உம்கொட்டினாா. "அவங்க வாய்க்கு அவல் கிடைச்சா யாராலே தடுக்க முடியும்? பேசிட்டுப் போகட்டும்."

"ஊர்க்காரங்க பேசுற மாதிரி. . . . ."

"பேசுற மாதிரி...?"

ரைட்டர் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"நாம அதை நடத்திட்டா என்ன?"

ரைட்டர் மறுபடியும் சாய்வுநாற்காலியில் சாய்ந்து படுத்தார். அவர் ஊகித்ததுதான். ஒரு நாள் அச்சு இதைச் சொல்வான் என்று அவருக்குத் தெரிந்துதானிருந்தது. அப்போது என்ன பதில் சொல்ல வேண்டுமென்று சிந்தித்தார். இன்னும் அவருக்கொரு பதில் கிடைக்கவில்லை.

"ரைட்டர் என்ன ஒண்ணும் சொல்லலே?"

அச்சு மிடறு விழுங்கினான். குப்பி விளக்கிலிருந்து வரும் வெளிச்சத்தில் அவன் விம்மியதை ரைட்டர் பார்த்தார்.

"அச்சு, நான் சொல்றதை நீ புரிஞ்சிக்கலையா? பொண்ணுன்னு கிரிஜா ஒருத்திதான் எனக்கு இருக்கிறா. நல்லவன் ஒருத்தன்கிட்ட மானத்தோட அவளை ஒப்படைக்கணும்கிறதுதான் என்னோட ஆசை. உனக்கு என்ன இருக்கு? நாடுண்டா? வீடுண்டா? அடிச்சும் பிடிச்சும் பறிச்சும்தானே நீ பிழைப்பு நடத்தறே?"

அச்சு நிசப்தமானான். அவன் வெளிமுற்றத்தில் இரண்டு தடவை அங்குமிங்குமாக நடந்தான். பின்னர் ரைட்டருக்கு எதிரில் வந்தான்.

"எனக்கொரு வேலை இருந்தா, மானம் மரியாதையோட நான்

நடந்துக்கிட்டா, மகளை எனக்குத் தருவீங்களா?"

"உம்."

ஏதோ யோசித்துக்கொண்டு, எங்கோ பார்த்துக்கொண்டு ரைட்டர் உம் கொட்டினார். இதற்குள்ளாக எரிந்துகொண்டிருந்த முனிசிபல் விளக்குகள் அணைந்திருந்தன. மய்யழிக்கு மேலே கறுத்த அமாவாசை இருட்டு அமுங்கிக்கிடந்தது.

# 25

குற்றியாடி மலைகளின் மேலிருந்து உற்பத்தியாகி, பெயர் மாற்றம் பெற்று, கனகமலையின் நிழல் வழியாக, தாசனின் காலடியில் மய்யழி ஆறு மய்யழி நோக்கிப் பாய்ந்துகொண்டிருந்தது. அவன் நினைத்தான்.

மய்யழியின் மண்ணில் நான நடந்து எவவளவு காலம் ஆகிவிட்டது... சிவந்த கோய்யேத்திப் பூக்கள் உதிர்ந்து விழுந்து கிடக்கின்ற பாலம். சிலுவையின் நிழல் விழும் ரியூ த் லெக்லீஸ்... எத்தனையோ தடவை சமுத்திரத்தின், நதியின் சங்கமத்தில் நான் போய் நின்று சாட்சியம் வகித்த ஆற்றின் மேலாகப் பாலம்... எல்லாம் இன்றைக்கு விலகிப் போய்விட்டன. மய்யழி இந்த பூமியில் இல்லை. தொலைவில் எங்கோ ஒரு நட்சத்திரத்தில் என்பதாகத் தோன்றுகிறது.

ஆத்மாக்கள் அலைந்து திரியும் வெள்ளியாங்கல்லைப் பார்த்து எவ்வளவோ காலம் ஆகிவிட்டது. கடற்கரைக்குப் போய் உட்கார்ந்து கிழக்குத்திக்கைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது தன் மனம் எல்லா லௌகிகப் பிரச்சினைகளிலிருந்தும் விமோசனம் தேடிக்கொண்டதுண்டு. மய்யழியின் சுதந்திரத்தைக் குறித்தோ, அப்பாவைக் குறித்தோ, சந்திரிகாவைக் குறித்தோ எண்ணங்கள் அப்போது மனதை அலைக்கழித்ததில்லை. வாழ்க்கையின் பாரம் அப்போது தெரிந்திருக்கவில்லை. வெகுதொலைவில் குறிப்பிட்டதோர் உருவமைப்பில்லாத ஒரு வெள்ளித் தீவாகத் தென்பட்ட வெள்ளியாங்கல் இருந்தது நிம்மதியைப் பெற உதவியது.

அந்த வெள்ளியாங்கல்லும் விலகிப் போய்விட்டது.

"தாசனுக்கென்ன இவ்வளவு யோசனை?"

சந்திரிகா ஆற்றை நோக்கிச் கற்களை எடுத்து விட்டெறிந்தாள். அவர்களுடைய கால்களின் அருகில்தான் ஆற்று வெள்ளம் பெருகிக் கிடந்தது. கடலில் அலையிறக்கமாயிருக்கும்.

"நீ அதிர்ஷ்டசாலி. உனக்கு யோசிக்க ஒண்ணுமில்லே

"நீங்க இல்லையாக்கும்?"

வெள்ளை மணலில் அவள் கால்களை நீட்டியிருந்தாள். நனைந்த கணுக்கால்களில் சுற்றிக்கிடக்கும் பாதசரங்கள்.

"நீ என்னைப் பத்தி நினைக்கிறப்போ எனக்கு பயமா இருக்கு."

"நான் உங்களைப் பத்தி மட்டும்தான் நினைக்கிறேன்."

அவள் பின்புறம் இருந்த முடியை எடுத்து மாரிலிட்டு அதைப் பிடித்துக்கொண்டிருந்தாள்.

அது அவனுக்குத் தெரியும். அவள் தன்னைப் பற்றிச் சிந்திக்கிறாள்.

வேறு எவரிடமும் சொல்லாத விஷயங்களை அவள் தன்னிடம் கூறுகிறாள். அவள் வாழ்ந்துகொண்டிருப்பதே தனக்காகத்தான் என்று அவனுக்குத் தோன்றுவதுண்டு. அதுதான் அவனுடைய பயமும்.

அருகில் இல்லாதபோது அருகில் இருக்க வேண்டுமென்று ஆசைப்படுவான். அருகில் இருக்கும்போது திரும்பிக்கொள்வான். வேலை எதுவும் இல்லாமல் அலைந்து கொண்டிருப்பவன். சொந்தத் தகப்பனால் வெறுக்கப்படுபவன். பன்னிரண்டு ஆண்டுகள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டவன் இதெல்லாம்தான் தான்.

"நான் யாருன்னு உனக்குத் தெரியுமில்ல?"

"தாசன்."

அதற்குப் பிறகு அவனுக்கு எதுவும் பேசத் தோன்றவில்லை. அவனுக்குத் தெரியும்... அவள் தன்னுடைய அஸ்திவாரத்தின் ஒரு பகுதி. தன்னுடைய வேர்கள் அவளில் ஆழத்தில் இறங்கியிருக்கின்றன. அவளிடமிருந்து விடுதலை பெற என்றைக்காவது விரும்பினால் அது நடக்கக் கூடியதல்ல.

மூன்று மணி ஆகியிருந்தது படுக்கும்போது. ஆனாலும் தூக்கம் வரவில்லை. இப்போதெல்லாம் அறவே தூக்கமில்லை. பாயில் மல்லாந்து படுத்து பீடிகள் ஒவ்வொன்றாகப் புகைத்தான். தொடும் நெருக்கத்தில் பப்பன் படுத்துறங்கிக் கொண்டிருந்தான். அவனுக்குப் பாயைப்பார்த்தால் போதும் உறக்கம் வருவதற்கு.

கணாரன் அண்ணாச்சியும் வாசூட்டியும் போர்ட்டர் குஞ்ஞாமனின் வீட்டிலிருந்து இடம் மாறினார்கள். கூடக் குறைய வசதியான ஒரு வீடு கணாரன் அண்ணாச்சி பார்த்து வைத்திருந்தார்... புகைவண்டி நிலையத்துக்கு அருகிலேயே.

ஆறு மணிக்கு முன்பு எழுந்தான். அது ஒரு வழக்கமாகிவிட்டிருந்தது. ஏழுக்கான லோக்கல் தெற்கேயிருந்து வரும்போது ஆற்றங்கரைக்குச் சென்று உட்கார்ந்திருப்பான். தன்னை அறியாமலேயே அந்த வண்டியின் வரவுக்காகக் காத்திருப்பான்.

கட்டியிருந்த முண்டுத்துணியைச் சரிப்படுத்திக்கொண்டு எழுந்தான். கால் முட்டுகளில் முகம் அமர்த்தி வைத்துச் சிறிது நேரம் அப்படியே உட்கார்ந்திருந்தான்.

"நீங்க அதுக்குள்ளே எந்திரிச்சிட்டீங்களா?"

குஞ்ஞாமன் காக்கிச் சட்டையிட்டு எதிரே நின்றிருந்தான். அவன் ஸ்டேஷனுக்குப் போகிறான். காலை லோக்கலுக்குப் பெட்டியுடன் யார் வரப்போகிறார்கள்? ஆனாலும் வழக்கமாக அவன் போய்விடுவான்.

"பீடி இருக்கா கொஞ்சம் இழுத்துக்க?"

குஞ்ஞாமன் காது மடலின் பின்னிருந்து ஒன்றை எடுத்துக் கொடுத்தான்.

"வண்டி பிளாக்கான மாதிரித் தெரியுது. நான் கிளம்பறேன்."

அவன் போய்விட்டான்.

வெளியே போக ஆயத்தமான போதுதான் துணிக்கீற்றில் ஒரு புதிய ஷர்ட் தொங்கிக்கொண்டிருந்ததை தாசன் பார்த்தான். ஃபுல் கை உள்ள நீல ஷர்ட் எடுத்துப் புரட்டிப் பார்த்தான். அப்போது வாசலில் சாணம்

தெளிக்கும் சீரு சொன்னாள்.

"பப்பன் தைச்சது." கொஞ்சம் நிறுத்திவிட்டு அவள் தொடர்ந்தாள். "நீயும் இதுமாதிரி ஒண்ணு தைச்சிக்க வேணாமா?" போட்டுக்கொள்ள ஷர்ட் இல்லாத விஷயம் சீருவுக்குத் தெரியும்.

பப்பனுடைய ஷர்ட்டைப் போட்டுக்கொண்டு வெளியே கிளம்பினான். நினைவு வந்த பிறகு முதன்முதலாக ஃபுல் கை ஷர்ட் போடுகிறான். அதற்கெல்லாம் வாழ்க்கையில் எங்கே இருந்தது நேரம்!

பப்பன் இப்போதைக்கு எழுந்திருக்க மாட்டான். எழுந்திருந்தால்தான் என்ன? அவனிடம் கணக்கில்லாத ஷர்ட்டுகளும் முண்டுகளும் உண்டு. அவ்வப்போது புதிய உடைகளைத் தைத்துக்கொண்டு வருவதைப் பார்க்கும்போது வாசூட்டி திட்டுவான்.

"நீ புதுசா தைச்சிப் போட்டுக்கிட்டா, மத்தவங்க தம்மையிலே பத்திக்கிட்டு எரியுது."

கணாரன் அண்ணாச்சி சொல்வார்.

"ஷர்ட்டும் முண்டும் போட்டுக்கிட்டா மட்டும் போதாது, குளிக்கவும் பல் தேய்க்கவும்தான் வேணும்!"

தலைமுடி சடைபோட்டிருந்தது. பற்கள் புளியம்பழம் போல இருக்கும்.

கிழங்குக் கொடிகள் வளர்ந்து கிடக்கும் பரப்பினூடே நடந்தான். பாப்பூட்டியின் கடையிலிருந்து ஒரு கட்டு சாது பீடி வாங்கினான். பாப்பூட்டி சுவரில் கணக்கு குறித்துக்கொண்டான். எத்தனையோ நாட்களாக அவனுடைய கையிலிருந்து பீடி வாங்கிக் கொண்டிருக்கிறான். இன்று வரை காசு கொடுக்கவில்லை. சுவரில் மிகவும் நீளமான கணக்கு தாசனுடையதுதான். பெரியதொரு தொகை வரும்.

ஒரு நாள் நான் கடன் அடைப்பேன், பாப்பூட்டி. உன்னுடையதை மட்டுமல்ல எல்லாருடையதையும்.

சிக்னல் கீழே இறங்கியிருக்கிறது. அறியாமலே கால்களுக்கு வேகம் அதிகரித்தது. வண்டியில் சந்திரிகா இருப்பாள். காலேஜுக்குப் போகும் வழி. அவனைப் பார்க்கும்போது அவள் மெல்லியதாகச் சிரிப்பாள். மய்யழி ஆற்றிலிருந்து வீசும் காற்றில் தலைமுடி இருபுறக் கன்னங்களிலும் பறந்துபரவசப்படுத்தும். வண்டி போய்விட்ட பிறகும் சில சமயம் அந்த முகம் மனதிலேயே இருக்கும்.

மாட்டுவண்டி போலக் குலுங்கிக்கொண்டு, புகை பரப்பிக்கொண்டு லோக்கல் கடந்து போயிற்று. வழக்கம் போல சந்திரிகாவைக் காணோம்.

காலேஜுக்குப் போகாமல் இருக்கலாம். விடுமுறையாக இருக்குமோ? நாட்களைப் பற்றிய ஒரு தெளிவில்லை. இன்றைக்கு என்ன கிழமை என்றுகூடத் தெரியாது.

வண்டியில் காலேஜுக்குப் போகும் மற்ற பெண்கள் தென்பட்டார்கள். அப்படியானால் விடுமுறை இல்லை என்பது நிச்சயம்.

திரும்பி நடக்கலானான். அப்போதுதான் தண்டவாளத்திற்கு அருகாக அவள் நடந்து வருவதைக் காண நேர்ந்தது. மார்போடு சேர்த்தணைத்த புத்தகங்கள்.

"வண்டி தவறிடிச்சி தாசா.'

பறந்து அலையும் தலைமுடியை அவள் ஒதுக்கினாள். ஆற்றிலிருந்து காற்று வீசிக்கொண்டிருந்தது. . . . வயல்களின் வழியே நறுமணம் கலந்த காற்று.

"ஷர்ட் புதுசா?"

வியப்புடன் அவள் அவனைப் பார்த்தபடி நின்றாள். ஃபுல் கையுள்ள அந்த நீல ஷர்ட் அவனுக்கு மிகவும் பொருத்தமாக இருந்தது. முடி வெட்டி முகச் சவரமும் செய்திருந்தானானால்...

"என்னோடதில்லே. பப்பனோட ஷர்ட்டாக்கும்."

சந்திரிகாவின் கண்களில் ஒளி மங்கிற்று.

வண்டி தவறிவிட்டது. இனி ஒரு வழிதான் உண்டு. ஒன்றோ ஒன்றரையோ நாழிகை நடந்து மய்யழிக்குச் சென்று லைன்பஸ் கிடைக்குமா என்று பார்க்கவேண்டும். ஒருவேளை கிடைக்கலாம்.

"நான் இன்னிக்கு காலேஜுக்குப் போகலே."

பாதசரத்தின் ஒலி. புறப்படச் சொல்லி அவள் அவனுடன் கூடவே நடந்தாள். ஆற்றில் அலையேற்றம் இல்லை. கரை தெளிவாகத் தென்பட்டது. நண்டுகள் சிவந்த கால்களுடன இரை தேடி அலைந்துகொண்டிருந்தன. வெகுதொலைவில் கனகமலை. அதனுடைய திருப்பங்களில் வெயில் தடம் பதித்துப் படர்ந்திருந்தது.

வெளுத்த மணலில் கால்களை நீட்டி அவர்கள் உட்கார்ந்திருந்தார்கள்... ஒரே தென்னங்கன்றில் சாய்ந்தபடி. அவர்களுக்குக் கீழே நீர் வற்றிய மய்யழி ஆறு ஓடிக்கொண்டிருந்தது. மேலே சூரியன் சூடேறிக்கொண்டிருந்தது. வெயிலில் அவர்கள் வியர்த்தார்கள். அவளுடைய வியர்வையில் உப்புசசத்து கூடுதலென்று அவனுக்குத் தெரியும். சவரம் செய்யாதிருந்த அவனுடைய முகம் அவளுடைய இளம் முதுகில் கீறல்களை உருவாக்கிற்று. அவளுடைய வியர்த்த தலையில் மய்யழி ஆற்றின் ராகம்.

"உன்னோட பாதசரத்தை நான போட்டுப்பார்க்கவா?"

ஓலைப்பாம்பைப் போலத் தன்னுடைய காலகளில் வளைந்து பற்றியிருந்த பாதசரங்களை அவள் கழற்றி அவனுடைய ரோமம் படர்ந்த கால்களில் அணிவித்தாள். சில சமயங்களில் அவர்கள் அப்படி செய்வதுண்டு.

"நீங்க தூங்கணுமா?"

நனைந்த பிளவுஸ் பற்றிப் பிடித்திருந்த அவளுடைய தோளில் தலை வைத்து அவன் படுத்து மயங்கினான். எவ்வளவு நேரமென்று நினைக்கவில்லை.

வியர்த்த முகத்துடன் திரும்பி நடந்தபோது அவன் தெரிவித்தாள்.

"வண்டி தவறலே, தவற விட்டேன். . . . ."

பிறகு தினமும் அது தொடர்ந்தது.

நான் செய்வது தவறல்லவா? இந்தத் தவறை எப்படித் தன்னால் நியாயப்படுத்த முடியும்? அவன் பயந்தான்.

அவன் அவளுடைய வியர்வையில் நனைந்து திளைத்தான். அறக்குச் சாராயத்தைவிடக் காட்டமானது அவளுடைய வியர்வை.

# 26

அச்சுவில் நிகழும் மாற்றங்கள் மய்யழி மக்களைத் திகைக்கச் செய்தன. பன்னிரண்டு வருடங்களுக்கு மேலாகிவிட்டது அச்சு அந்த ஊருக்கு வந்து. இதுவரையில் வெள்ளைக்காரர்களுக்கும் சட்டைக்காரர்களுக்கும் சேவை செய்தும் அடாவடித்தனங்கள் செய்தும் அவன் காலம் கழித்துக் கொண்டிருந்தான். உயிர் பிழைத்திருக்க அவனுக்கு ஏதேனும் வேலை செய்தாக வேண்டுமென்றிருந்ததில்லை. கத்தியைக் காட்டி அவன் தனக்குத் தேவையானதையெல்லாம் தனதாக்கிக் கொண்டான்.

இப்போதெல்லாம் அவனைக் கள்ளுக்கடையில் யாரும் அதிகம் பார்க்க முடியவில்லை.

"அவனைப் பார்த்து ரெண்டு நாளாச்சே!"

உன்னிநாயர் சொல்வார். ஒரு நாளில் மூன்று நான்கு தடவை கடையில் ஏறி இறங்குபவனாயிற்றே?

"அவன் இப்போ ரைட்டர் வீட்லேயில்ல இருக்கான்? இனி கள்ளெதுவும் வேண்டியிருக்காது."

ரைட்டருடைய வீட்டில் தங்க நேர்ந்த பிறகுதான் அச்சுவில் மாற்றம் நிகழ்ந்தது. உன்னிநாயரும் குஞ்ஞானனும் மற்றவர்களும் அதைப் புரிந்துகொண்டார்கள். பட்டாளம் வந்த சமயத்தில் அச்சு ரைட்டருடைய குடும்பத்தைப் பாதுகாத்துக் காப்பாற்றினான். சாயங்காலம் அச்சுவும் ரைட்டரும் சேர்ந்து நடக்கச் செல்வார்கள். ரைட்டருடைய வீட்டுக்கு அச்சு அரிசியும் மீனும் வாங்கிக்கொண்டு போவான். சினிமா வந்த அன்று குறம்பியம்மாவையும் கிரிஜாவையும் கூட்டிக்கொண்டு அவன் மைதானத்திற்குப் போவதை அவர் பார்த்தார்.

"மந்திரமாயம்."

குஞ்சக்கன் யாருடனெறில்லாது சொன்னான்.

"ஒரு மந்திரமாயமும் இல்லே."குஞ்ஞானன் அபிப்பிராயப்பட்டான். "எனக்குப் புரியுது."

"என்னடா உனக்குப் புரியுது?"

"உங்களுக்கும் அது புரிஞ்சதுதான், அச்சுவோட மனசிலே என்ன இருக்குங்கிற விஷயம்."

குஞ்ஞானனைப் போலவே உன்னிநாயரும் சிலவற்றை ஊகிப்பதுண்டு. மய்யழியின் மக்களுக்குச் சில விவரங்கள் புரிந்தன. அவர்கள் அச்சுவின் இன்மையை விரும்பினார்கள்.

அச்சுவின் மாற்றத்தால் கள்ளுக்கடைகள் அமைதியாயின. மய்யழியின் மக்களுக்கு அவனைப் பார்க்கும்போது மடித்துக் கட்டிய முண்டுவேட்டியைக் கீழே இறக்கிவிடாமலே நடக்கலாம் என்ற நிலை ஏற்பட்டது.

ஒரு நாள் அச்சு மிக சீக்கிரத்திலேயே விழித்தெழுந்தான். அவன் குளித்தான். சலவை செய்த முண்டும் சட்டையும் உடுத்தினான். வாழ்க்கையில் முதல் முறையாக தலை சீவினான்.

"கத்தி. . . . "

படியிறங்கும்போது குறம்பியம்மா நினைவுபடுத்தினாள். அச்சுவின் முகம் சட்டென்று இறுக்கம் பூண்டது. அவன் ஜன்னல்படியில் கிடந்த தனது கத்தியை ஒரு முறை பார்த்தான். பின்னர் அதை எடுத்துக்கொள்ளாமலேயே கோம் த்ரிப்யூஸ்யோ நோக்கி நடந்தான்.

அச்சுவில் புதிய சக்திகள் செயலாற்றத் தொடங்கின. அவன் மனிதனாகப் பரிணாமம் கொள்ளும் ஒரு மிருகமாக இருந்தான்.

கையில் கத்தியில்லாமல் முதன்முதலாக அன்று அவன் மய்யழி நெடுக நடந்தான். ஆனாலும் அவன் நிராயுதபாணியல்ல. கிரிஜா என்ற ஆயுதத்தை வைத்திருந்தான் அவன். கத்தியைவிடக் கூர்மையான ஆயுதம். கத்தியைவிட அவனுக்குத் தன்னம்பிக்கையைத் தரும் ஆயுதம்.

'கோம் திரிப்யுஸ்யோ'வில் ஒரு சின்ன மேசை. தடித்த சில லெட்ஜர்கள். அவன் உரிய நேரத்தில் சென்றடைந்தான். நன்றாகவே வேலை செய்தான். அப்படி அவன் ஒரு புதிய வாழ்க்கையைத் தொடங்கினான். அச்சு என்ற குமாஸ்தா பிறந்தான், வளர்ந்தான்.

அன்று அவன் உன்னிநாயரின் கடைக்குள் நுழைந்தான். வழக்கம் போல உன்னிநாயரும் குடித்துக்கொண்டிருந்தவர்களும் எழுந்து நின்றார்கள். அச்சு அதையெல்லாம் கவனிக்கவில்லை. அவன் ஒரு மூலையில் சென்றமர்ந்தான்.

"ஒரு குப்பி சின்னது. திங்கிறதுக்கு எதுவும் வேணாம்."

உன்னிநாயர் குப்பியும் கிளாசும் எதிரில் கொண்டுபோய் வைத்தார். நடுவே வகுடெடுத்துச் சீவிய தலையுடன், வெளுத்த வேட்டியும் சட்டையும் உடுத்தி, அமைதியாய் உட்கார்ந்து கள் குடிக்கும் அச்சுவை எல்லோரும் பார்த்துக்கொண்டு நின்றிருந்தார்கள். அவர்களுக்கு அது ஒரு புதிய காட்சி அல்லவா?

"உன்னைப் பார்த்து ரொம்ப நாளாச்சி. . ."

"உம்."

அவன் உம்கொட்டுவது மட்டுமே செய்தான்.

"என்னப்பா அச்சு, உனக்குக் கள்ளுகூட வேண்டாம்னு ஆயிரிச்சா?"

அச்சு அதற்கு பதில் சொல்லவில்லை. அவன் வேகமாகக் குப்பியைக்காலி செய்வதில் நோக்கமாயிருந்தான். உன்னிநாயர் விடவில்லை.

"நீ இருக்கிறதைப் பார்த்தா கல்யாணம் ஆயிட்டா உனக்கு சோறும் கஞ்சியும்கூட வேண்டியிருக்காதோ?"

அச்சுவின் உதட்டில் கௌரவம் கலந்த ஒரு புன்சிரிப்பு வெளிப்பட்டது. கடையிலிருந்த யாரோ சிரித்தார்கள். முன்னைப் போலிருந்தால் உன்னிநாயர் இப்படியெல்லாம் பேச தைரியம் கொள்வாரா? மய்யழியின் மக்கள் அச்சுவின் எதிரே நின்று இப்படிச் சிரிக்க முடியுமா?

வெளியேறும் நேரத்தில் அச்சு பையிலிருந்து இரண்டு கால் ரூபாய்கள் எடுத்து மேசைமீது வைத்தான். அவர் அச்சுவின் முகத்தையும் காசையும் மாறி மாறிப் பார்த்தார். உன்னிநாயர் ஏதோ பேசுவதற்காக வாய் திறந்தபோது அச்சு படியிறங்கி நடந்துவிட்டான். அதுவும் ஒரு புதிய அனுபவம். . . .

அச்சுவின் மனது கனத்திருந்தது. தனக்கு உத்தியோகமாகிவிட்டது. ரைட்டர் வாக்கைக் காப்பாற்றுவாரா? கிரிஜா சம்மதிப்பாளா? இவைதான் அவனுடைய கேள்விகள். இரவுபகலாய் தலையில் இந்த ஒரே சிந்தனைதான்.

கிரிஜாவுக்குத் தன் மனதிலுள்ளது தெரியுமா? ஒருபோதும் தன் மனதைத் திறந்து காட்டியதில்லை. அதற்கான வாய்ப்புக்கள் எவ்வளவோ கிடைத்தும்கூட. தொடக்கத்தில் அவள் அவனுக்கு எதிரில் வரக்கூட மாட்டாள். இன்று காலம் மாறியிருக்கிறது. இப்போது அவனெதிரில் கூச்சப்படாமல் வந்து நின்று அவள் பேசுகிறாள்.

“அச்சு, சமைக்க அரிசியில்லே.”

அரிசி மட்டுமல்ல அவன் வாங்கிக்கொண்டு வருவது. அவளுக்கு சாந்தும் கண்மையும் வாங்கி வருவான். ஜகன்னாதர் கோயில் திருவிழாவின்போது அவன் அவளுக்கு இருகைகள் நிறைய வளையல்கள் வாங்கிக் கொடுக்கவில்லையா?

தனிமைப்படும்போது அவனுக்கு எதுவும் பேசத் தோன்றாது. எதனால் என்று தெரியவில்லை. அவனுடைய பங்கில் பாரம் வந்து நிறையும். அவன் மௌனியாவான். குறம்பியம்மா அருகில் இருந்தால் அவன் அவளைக் களிப்பூட்டுவான். கேலி பேசுவான்.

தன் மனதிலுள்ளதை ஒருபோதும் அவனுக்கு அவளிடம் சொல்ல முடியவில்லை.

சொன்னாலோ? அவனுக்கு பயம். இன்றுமுதல் தான் கோம் த்ரிப்புஸ்யோத்தில் குமாஸ்தாவாக்கும். மாதம் பத்துநூறு ரூபாய் வருமானமுண்டு. ஆனால், தான் நேற்று யாராக இருந்தான்? கடந்த காலம் இப்போதுதான் அவனுக்கு பாரமாகத் தொங்கத் தொடங்கியிருக்கிறது. அச்சுவுக்குச் சில சமயம் தோன்றும்... ரைட்டர் சம்மதித்தாலும் அவள் சம்மதிக்கமாட்டாள். அப்படி நடந்துவிட்டால் அச்சு என்னசெய்வான்? அவனுக்குத் தெரியாது. ஒருவேளை, அவன் தன்னுடைய கடந்தகாலத்திற்குத் திரும்பிப் போக நேரலாம். அப்படி நேர்ந்தால் கிரிஜாவை சொந்தமாக்கிக்கொள்ள அவன் எவருடைய சம்மதத்தையும் எதிர்பார்க்கத் தேவை ஏற்படாது. கிரிஜாவுடைய சம்மதம்கூட......

சிந்தனை பாரத்தால் தளர்ந்துபோய்த்தான் அச்சு வீட்டை அடைந்தான். கிரிஜா முற்றத்தில் துளசிமாடத்தில் திரி போட்டுக்கொண்டிருந்தாள். குளித்து ஈரமாயிருந்த தலைமுடியை அள்ளி முடித்துக் கட்டியிருந்தாள்.

“அச்சு சிக்கிரமே போகணுமா?”

அவனைப் பார்த்து அவள் புன்னகைத்தாள். விரலில் அப்பியிருந்த விளக்கெண்ணெயை அவள் தலைமுடியில் துடைத்துக்கொண்டாள்.

அச்சுவுக்குப் பேச முடியவில்லை. தொண்டையில் பாரம். அவன் மிடறு விழுங்கினான். அவன் திண்ணையில் ஏறி உட்கார்ந்தான். நாலா திசைகளிலிருந்தும் குழந்தைகளின் சந்தியாநாமம் கேட்டுக்கொண்டிருந்தது.

கிரிஜாவை எனக்குத் தா! மௌனமாகப் பிரார்த்தித்தான். இல்லாவிட்டால் ரைட்டருடைய எலும்பை நான் முறித்து ஒடிக்க வேண்டியிருக்கும். அவருடைய வீட்டுக்கு நான் தீ வைப்பேன். அதெல்லாம் நடந்துவிடக் கூடாது.....!

கிரிஜா கிடைக்கவில்லையானால் ஜன்னல்படியிலிருந்து கத்தியைத் திரும்ப எடுக்க வேண்டும். மய்யழி மக்களின் இடுப்பெலும்பை ஒடிக்க வேண்டும். அவர்களுடைய அக்கா தங்கைகளையும் பொண்டாட்டிகளையும்...

அச்சுவின் முகம் இரத்தம்போல் சிவந்தது. அவனுடைய கண்கள் பிதுங்கிக்கொண்டு வந்தன.

குஞ்சக்கன் ஏற்றிவைத்த முனிசிபல் விளக்குகள் சுடர்விட்டு எரிந்தன. ரைட்டர் சாய்வுநாற்காலியில் சாய்ந்து சுருட்டு புகைத்துக்கொண்டிருந்தார். அவருடைய ஆரோக்கியம் மோசமாயிருந்தது. காசத்தின் தொந்திரவு நின்றுவிட்டாலும் ரைட்டர் மகிழ்ச்சியாக இல்லை. தாசனுடைய தகப்பன்

மகிழ்ச்சியாக இருக்க முடியுமா?

"எனக்கு வேலை கிடைச்சாச்சி. . . . . "

அச்சு, நடப்பதை நிறுத்தி ரைட்டருக்கு அருகில் சென்று நின்றான். ரைட்டர் மெலிதாக உம் கொட்ட மட்டுமே செய்தார்.

"வேலை கிடைச்சா..."

"அச்சு, நீ அதையெல்லாம் எனக்கிப்போ ஞாபகப்படுத்த வேண்டாம். ஒரு வாக்குக் கொடுத்தா அதைக் காப்பாத்தறவன் நான்."

நெஞ்சிலிருந்து ஒரு பெரிய பாரம் நீங்கியது போன்றிருந்தது அச்சுவுக்கு. சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு அவன் தொடர்ந்தான்.

"கிரிஜா சம்மதிப்பாளா?"

"அதைப் பத்தி நீ யோசிக்க வேண்டியதில்லே. அவ என் மகளாக்கும். அவளை சம்மதிக்க வைக்கிறது என் பொறுப்பு."

கி அன்று நிம்மதியாக அச்சு தூங்கினான். அன்று தூக்கம் வராதிருந்தது ரைட்டருக்குத்தான். அவர் கௌசுவம்மாவின் அருகில் உருண்டு புரண்டு படுத்திருந்தார். இதுவரையிலும் தாசனுடைய அம்மாவிடம் சொல்லாமலிருப்பதைச் சொல்வதற்கு அவர் துணிந்தார். இவ்வளவு காலமும் மறைத்து வைத்திருந்த சங்கதி.

மனப்பூர்வமாக அல்ல இதுவரை சொல்லாமலிருந்தது. மனைவியின் இயல்பு அவருக்குத் தெரியுமல்லவா?

கௌசுவம்மாவுக்குத் தலையில் இடிவிழுந்தது போலாயிற்று.

அவள் தலைகுனிந்தாள். பேசுவதற்கான சக்தி திரும்பக் கிடைத்தபோது அவள் தேம்பியவாறே சொன்னாள்.

"கொன்னாலும் நான் சம்மதிக்க மாட்டேன்."

"உன் சம்மதத்தை யாரும் கேக்கலே."

"என்னோட மகளுமதான் அவ. என்னோட சம்மதத்தையும் பார்க்கணும்."

"தேவையில்லே." ரைட்டரின் குரல் உயர்ந்தது. "உன்னோட சம்மதமெல்லாம் பார்த்துக்கிட்டா நான் இப்படி ஆனது? வயசான காலத்திலே ஜெயிலுக்குப் போனது? இனிமே யாருடைய உபதேசமும் சம்மதமும் வேண்டாம். எனக்குத் தோணினதை நான் செய்வேன்."

"உங்களை அடிச்சானா அந்த அச்சு? எத்தனை பேரை அழவைச்சான் அவன்? இந்த ஊர்க்காரங்க சாபம் எல்லாம் அவன் தலையிலே இருக்கு. அதையெல்லாம் நீங்க மறந்திறக் கூடாது."

கௌசுவம்மாவின் தொண்டை விறைத்தது. சிறிது நேரம் இருவரும் எதுவும் பேசவில்லை. பெருமூச்சு அடங்கியபோது அவர்கள் தொடர்ந்தார்கள்.

"என்னோட மக சம்மதிப்பான்னு நெனக்கிறீங்களா நீங்க?"

"அவளோட சம்மதத்தை யாரும் கேக்கலே. சம்மதிக்க வேண்டியது நானாக்கும்."

"ஈவு இரக்கம் இல்லாமப் போயிரிச்சில்ல!"

கட்டிலில் எழுந்து உட்கார்ந்த கௌசுவம்மா தேம்பி அழுதாள். அழுவதற்காக மட்டுமே விதிக்கப்பட்டவள். . . . .

அவளுடைய கண்ணீரைப் பார்த்தபடி மய்யழி ஆற்றுக்கு மேலே சூரியன் மீண்டும் உதிக்கலானான். காக்கைகள் மய்யழிக்கு மேலாக கடற்கரை நோக்கிப் பறக்கலாயின.

கிரிஜா தன்னுடைய அறைக்குள் சென்று கதவடைத்துக்கொண்டாள். அவள் சாப்பிடவில்லை. தூங்கவில்லை. மறுநாள் கௌசல்யாம்மா நெடுநேரம் கதவைத் தட்டிக் கூப்பிட்டபோது அவள் கதவைத் திறந்தாள். ஒரே ஒரு நாளிலேயே அவள் மெலிந்துபோயிருந்தாள். தாழ்த்திய கண்களில் வழிந்திறங்கும் கண்ணீர்.

"கண்ணு, அம்மாவைக் கலங்க வைக்கக் கூடாது."

"அப்பாகிட்டச் சொல்லு, என்னைக் கொண்ணு போடச் சொல்லு. . ."

அவள் அம்மாவின் மார்பில் முகம் புதைத்து அழுதாள். கௌசல்யம்மாவுக்கும அழுவதற்கு மட்டுமே முடிந்தது.

தாசனின் வீட்டில் கண்ணீர் வற்றவேயில்லை. மய்யழி முழுவதும் கிரிஜாவுக்காகக் கண்ணீர் வடித்தது. தயாநிதியான மய்யழி மாதா அவளைக் காப்பாற்றுவாளா? மீத்தலம்பலத்தின் குலதெய்வங்கள் அவளுக்காகக் கண் திறக்குமா?

# 27

கூண்டில் அடைபட்ட பூனையைப் போல தாசன அறையில் சுற்றிச் சுற்றி நடக்கத் தொடங்கினான். ரோஷத்தினால் அவனுடைய கனத்த மீசையின் நுனி விறைத்தது. நடையின் வேகம் அதிகரித்தது.

கடைசியில் துக்கமும் ஆற்றாமையும் கொண்டு தளர்ந்து பாயில் கால் முட்டுகளில் முகம் அமர்த்தி உட்கார்ந்தான்.

"நான் சம்மதிக்கமாட்டேன்."

அவன் புலம்பினான். கணாரன் அண்ணாச்சி அருகில் நின்றுகொண்டிருந்தார். அவரால் என்ன செய்ய முடியும்? தாசனை சமாதானப்படுத்தக்கூட அவரால் முடியவில்லை.

"நான் சம்மதிக்க மாட்டேன். . . ."

"உன்னாலே என்ன செய்ய முடியும் தம்பி? மய்யழியிலே காலெடுத்து வைக்க முடியாத உன்னாலே. . . "

"உயிரோட இருக்கிற வரைக்கும் நான் சம்மதிக்க மாட்டேன் அண்ணாச்சி."

அவனுடைய கண்களில் நீர் சுரந்தது. ஒருபோதும் கலங்காத தாசன் கலங்கினான். எல்லாப் புயற்காற்றுகளுக்கும் எதிராக நெஞ்சு நிமிர்த்தி நின்ற அவனுடைய கால்கள் பதறின.

மிகவும் அதிகமாக அவனைத் தளரச் செய்தது அவனுடைய ஆற்றாமை அல்லவா? மய்யழியில் நுழைய முடிவதாக இருந்திருந்தால் ஓடிச் சென்றிருப்பவன்தான். அப்பாவுக்கு முன்பாகச் சென்று காலைப் பிடித்துக் கெஞ்சியிருப்பான்.

"என் தங்கச்சியை அந்த அடியாளுக்குக் கொடுக்காதீங்க. . . "

அச்சுவைப் பற்றிப் பல கதைகளை அவன் கேட்டிருந்தான். அவன் தங்களுடைய வீட்டில்தான் தங்கியிருக்கிறான் என்று அறிந்திருந்தான். அப்போது ஒன்றைத்தான் நினைத்தான்... அவன் சொந்த விருப்பத்தினால் வீடு புகுந்து தங்க நேர்ந்திருக்கலாம். அப்பாவால் என்ன செய்ய முடியும்? ஊரில் முடிசூடா மன்னனாக நடக்கும் அச்சுவின்எதிரில் பரிதாபத்திற்குரிய தன்னுடைய அப்பா ஆதரவற்றவரல்லவா?

இப்போது எல்லாம் புரிகிறது. . . படைக்கப்பல்கள் துறைமுகத்தில்

நங்கூரமிட்ட நேரம் அச்சு புதியதோர் அச்சுவாகி எதிரில் வந்து நின்றது. தன்னுடைய குடும்பத்தின் மானம் காத்தது அன்று அவனுக்கு இப்படியொரு நோக்கம் இருப்பதாகத் தெரிந்திருந்தால். . .

தெரிந்திருந்தால் தனது அம்மாவையும் தங்கையையும் கொன்றுவிட்டிருப்பான். வெள்ளைப் பட்டாளத்திற்கு அடிபணியாமலிருந்தான். இல்லாவிட்டால் தற்கொலை செய்து கொண்டிருப்பான். ஆனால், அன்றைக்கு அதெல்லாம் தெரியவில்லை. அச்சுவை சந்தேகப்படவில்லை. மூளை வேலை செய்யாத ஒரு நேரமாக அல்லவா இருந்தது அது? வாழ்க்கையில் மிகப் பெரிய பரீட்சைக்கான நேரம். அதில் தோற்றிருக்கிறான். அதைப் புரிந்துகொள்ள ஆண்டுகள் இரண்டுக்கு மேலாகச் செல்ல வேண்டியிருந்தது என்று மட்டும். . .

இளவட்டக்காரியான ஒரு செட்டிச்சி தினமும் மோர் விற்பதற்காக மய்யழிக்குப் போவாள். கிழக்கே எங்கேயோ உள்ள ஒரு நெசவுக்காரச் செட்டியாரின் மனைவி. அவளிடமிருந்துதான் ஊரிலும் வீட்டிலும் நடக்கும் விவரங்களை அறிந்துகொள்வது. கிரிஜாவுக்கும் அச்சுவுக்குமான திருமணம் குறித்துத் தெரிந்துகொண்ட விவரமும் அப்படித்தான்.

“எங்கம்மாவைப் பார்த்தியா இன்னிக்கு செட்டிச்சி?”

“பார்த்தேன். அவங்களுக்கு உங்களை நெனச்சி அழத்தானே நேரமிருக்கு?”

வெயிலில் அலைந்த செட்டிச்சியின் முகம் காவிமண் போலச் சிவந்திருந்தது.

“அம்மா ஏதாச்சும் சொன்னாங்களா?”

“சாப்பிடாமக் கொள்ளாம அலைய வேணடாம்னு சொன்னாங்க. மெலியாமப் பார்த்துக்கணும்னு சொன்னாங்க.”

அம்மா எப்போதும் சொல்வதுதான். புகைவண்டி நிலையத்தில் குஞ்ஞானனைப் பார்க்கும்போது அவனும் இதைத்தானே சொன்னான்? பாவம் அம்மா!

சில சமயங்களில் அம்மாவைப் பார்க்க வேண்டுமென்று அடக்க முடியாத தவிப்புத் தோன்றும். வசதி இல்லாவிட்டாலும் பார்த்துக்கொள்வதாகவும், அலைந்து திரியவில்லையென்றும் சொல்லித் தேற்றத் தோன்றும். ஆனால், அம்மாவை எப்படி நேரில் பார்ப்பது? தாசன் நாடு கடத்தப்பட்டவன். சொந்த நாட்டிலிருந்து மட்டுமல்ல, சொந்த வீட்டிலிருந்தும்தான்.

அப்பாவிடம் அவனுக்கு வெறுப்பில்லை. அப்பாவின் எல்லாக் கனவுகளையும் எரித்துச் சாம்பலாக்கியவன் அவன். ஒரு வாழ்க்கையை வஞ்சித்தவன். போதாததற்கு வயசுக்காலத்தில் ஜெயிலில் இருக்கவும் வழிசெய்தான். ஒருபோதும் அவன் அப்பாவைக் குற்றம் சொல்ல முடியாது. அப்பாவின் எல்லாச் செய்கைகளையும் நியாயப்படுத்தத்தான் அவனுக்கு முடியும்.

யாரையாவது ஒருவரைக் குற்றப்படுத்த நேருமானால்.....தன்னுடைய இந்தத் தீராத வேதனைக்காக பொறுப்பை எவர் மீதாவது இறக்கிவைக்க முடியுமென்றால்... அப்படி முடிந்தால் சிறிதளவாவது நிம்மதியாக இருக்கலாம். ஆனால், அதற்கு தாசனால் முடியவில்லை. அவனுடைய வேதனையின் உறைவிடம் அவனேதான். தாசனுடைய வேதனையை தாசனே அனுபவித்துத் தீர்க்க வேண்டியிருக்கிறது.

"நீங்க கொஞ்சம் மோர் குடிக்கிறீங்களா?"

செட்டிச்சி உபசரித்தாள். நடந்து நடந்து அவர்கள் ஆற்றங்கரையை எட்டியிருந்தார்கள். நிறைவான ஆற்றில் தெற்கேயிருந்து வரும் கட்டுமரப் படகுகள் மய்யழி நோக்கிப் போய்க்கொண்டிருந்தன.

"என்கிட்ட காசில்லையே."

"காசு நீங்க நல்லா ஆன பிறகு கொடுத்தாப் போதும்."

செட்டிச்சி பானையை இறக்கி அதில் எஞ்சியிருந்த மோரை தாசனின் கையில் ஊற்றிக் கொடுத்தாள். இளம் புளிப்பும் குளிர்ச்சியுமான மோரினால் அவனுடைய வறண்ட தொண்டை நனைந்தது.

"நீங்க ஏன் முடி வெட்டிக்காம இருக்கீங்க?"

"காசு இல்லாததால்."

"முகச்சவரம் பண்ணிக்காதது? அதுவும் காசு இல்லாமத்தானா?"

செட்டிச்சியின் தாம்பூலச் சிரிப்புகளில் நுரைத்த கிண்டல். உண்மைதான். தலைமுடி மட்டுமல்ல, மீசையும் நன்றாகவே வளர்ந்திருந்தது.

படகுத்துறையில் ஒரு முக்கால் துட்டுக்கு பீடி வாங்கினான். மூன்று கிடைக்கும். ஒன்றைப் பற்றவைத்து வாயில் வைத்தபடி திரும்பி நடந்தான். கணாரன் அண்ணாச்சியும் வாசூட்டியும் தாசனுக்காகக் காத்திருந்தார்கள். சர்ச்சைகள், வாதப்பிரதிவாதங்கள், வாதப்பிரதிவாதங்கள், சர்ச்சைகள். . . என்றைக்குத்தான் இதற்கெல்லாம் முடிவு கிடைக்குமோ!

மறுநாள் செட்டிச்சி வாடிய முகத்துடன் வந்தாள்.

"உன்கிட்ட யாரு சொன்னது?"

தாசன் நம்பாமலிருக்கத்தான் முயன்றான். அது அவனால் முடியவில்லை. நம்பவும் அவனால் முடியவில்லை.

"ஊர்க்காரங்க எல்லாரும் சொல்றாங்க."

அவனுக்கு அதற்குப் பிறகு அங்கே நிற்க முடியவில்லை.

கிழங்குச் செடிகள் வளர்ந்து கிடக்கும் பரப்பில் இறங்கி வேகமாக நடந்தான்.

உள்ளே நுழைந்தபோது லீலாக்கா வெளிமுற்றத்தில் உட்கார்ந்திருந்தாள். . . மடியில் அன்றையச் செய்திப்பத்திரிகையுடன். விவரம் சொன்னபோது அவள் லேசாகச் சிரித்தாள்.

"ஊர்க்காரங்க என்னதான் சொல்லலே? அச்சு உன் வீட்டிலேதானே இருக்கிறான்? ஒவ்வொருத்தர் ஒவ்வொண்ணு சொல்லிப் பேசறதா இருக்கும்."

அவனுக்கு சமாதானமாகவில்லை. உண்மை நிலையை அறிந்தாக வேண்டும். அறிந்த பிறகுதான் அவனுக்கு இனி இருப்புக் கொள்ளும். கணாரன் அண்ணாச்சியும் வாசூட்டியும் வீட்டில் இருந்தார்கள். அது புரட்சியின் அலுவலகமாகவும் இருந்தது. எப்போதும் கூட்டம். புரட்சியுடன் சம்பந்தப்பட்டவர்கள் வருவதும் போவதுமாக இருக்கும் இடம்.

கணாரன் அண்ணாச்சியிடமும் வாசூட்டியிடமும் செட்டிச்சியின் முகத்தில் தென்பட்ட அதே முகபாவம்.

"உனக்குத் தெரியுமா?"

வாசூட்டியின் கேள்வி. கால்களினூடே ஒரு சில்லிப்பு மேல்நோக்கிச் சென்றது, கேட்டபோது.

"உண்மைதானா அண்ணாச்சி நான் இப்போ கேள்விப்படுகிறது?"

இல்லை என்று அவர் சொல்லுவாரானால். . .

"ஆமாம் தம்பி."

சிறிது நேரத்திற்கு அவனால் அசைய முடியவில்லை. மூளையில் பக்கவாதம் பிடித்துவிடும் போலிருந்தது.

"ஏய், இது உன்னை மட்டும் பாதிக்கிற விஷயமில்லே."

வாருட்டியின் குரல் தொலைவிலிருந்து போலக் கேட்டது.

"எங்களையும் பாதிக்கிற விஷயம்தான். வெள்ளைக்காரனோட அடியாள் தாசனோட தங்கச்சி கழுத்திலே தாலி கட்றது புரட்சிக்கே ஒரு அவமானம்."

எரிகிற தீயில் அவன் எண்ணெய் வார்த்தான்.

"இந்தக் கல்யாணம் நடக்கக் கூடாது. நடந்தால் புரட்சியின் தோல்வியாயிருக்கும் அது."

"ஆனாலும் அந்த ரைட்டர் இப்படிச் செஞ்சிட்டாரே!"

கணாரன் அண்ணாச்சி தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டிருந்தார்.

சிறையிலிருந்து வந்ததற்குப் பிறகு அப்பா வேறோர் ஆளாக மாறிவிட்டிருந்தார். தாசனுக்கு அது தெரியும். தன்னை ஒரு தடவை வந்து பார்த்துவிட்டுப் போகும்படிப் பல தடவை குறிப்புச்சீட்டுகள் கொடுத்தனுப்பியிருந்தான். அப்பா வரவில்லை. அப்போதைக்கு அதை நியாயப்படுத்திக் கொள்ள முயன்றான்... பெற்ற மகன் செய்த குற்றத்தினால் தான் சிறை செல்ல நேர்ந்தது. ராஜதுரோகக் குற்றத்திற்காக தண்டிக்கப்பட்ட மகன். அவனைப் போய்ப்பார்ப்பது ஆபத்தை வரவழைப்பதாகும் என்று அப்பா நினைத்திருக்கலாம். மீண்டும் சிறைக்குச் செல்ல நேரும் என்று பயந்திருக்கலாம்.

தன்னை வந்து பார்க்கவில்லையென்றாலும அப்பாவின் மனதில் தன்மீதான பாசமும் பற்றும் இருக்கும் என்று தாசன் நம்பியிருந்தான். இனிமேலும் அவனுக்கு அப்படி நம்பிக்கொண்டிருக்க முடியுமா?

தாசன் அப்பாவுக்கு ஒரு குறிப்புச்சீட்டு கொடுத்தனுப்பினான். தன்னிடம் கொஞ்சமாவது அன்பிருக்குமானால் அவசர காரியமாக கொஞ்சம் வரச் சொல்லி. குறிப்புச் சீட்டைக் கொண்டு சென்ற நாணூட்டி வெளிறிய முகத்தோடுதான் திரும்பி வர நேர்ந்தது.

"அவரு வாங்கிக்கலே."

"நீ கொடுக்கலையா?"

நாணூட்டி குறிப்புச்சீட்டைத் திருப்பிக் கொண்டு வந்ததைப் பார்த்தபோது தாசன் அதிர்ந்துபோனான்.

"அவர் வாங்கிக்கிடலேன்னா அதுக்கு நான் என்ன செய்றது?"

நாணூட்டி செய்வதறியாதிருந்தான். ரைட்டர் குறிப்புச்சீட்டை வாங்க ஒப்புக்கொள்ளாதிருந்தபோது அதை அங்கேயே வைத்துவிட்டு வந்துவிட எண்ணினான். ஆனால், ரைட்டர் கோபத்தில் இரைந்தார்.

"கண்டவங்ககிட்டேருந்தெல்லாம் கடுதாசி கொண்டுகிட்டு இனி நீ இங்கே வந்தே, அடிச்சிப் பல்லெல்லாம் உதிர்த்திருவேன்."

பெற்றெடுத்த மகன் கண்டவன் ஆகிவிட்டிருந்தான்....

தன் அப்பாவுக்கு என்ன நேர்ந்துவிட்டது? அப்பாவின் அந்தப் பெரிய மனசு எங்கே பறிபோயிற்று?

மீண்டும் ஒரு கடிதம் போயிற்று. இந்தத் தடவை கணாரன் அண்ணாச்சி எழுதியிருந்தார். தாசனுடன் கலந்துகொள்ளாமல் கிரிஜாவின் கல்யாணத்தை நிச்சயிக்க வேண்டாமென்று அவர் வேண்டியிருந்தார்.

"ரைட்டர் என்ன சொன்னார்."

நாணூட்டி திரும்பி வரும்வரை காத்திருந்த் எல்லோரும் எல்லைச்சாவடிக்கு இப்புறம் நின்றுகொண்டிருந்தார்கள்.

"என்னோட வீட்டு விஷயத்தை நானே பார்த்துக்கிடுவேன். மத்தவங்க அதிலே தலையிடத் தேவையில்லே."

கணாரன் அண்ணாச்சியும் மற்றவர்களும் அதற்குப் பிறகு எதுவும் பேச முடியவில்லை. அவர்கள் மௌனமாகிவிட்டார்கள். ரைட்டர் அவர்களுக்கு வியப்புக்குரியவராயிருந்தார். புரிந்துகொள்ள முடியாத ஒரு மனப்போக்குடன் இருந்தார்.

தாசன் அன்று கணாரன் அண்ணாச்சி வீட்டில் படுத்தான். அவன் ஒரு கணம்கூடக் கண் மூடவில்லை. கட்டிலில் கண் திறந்த நிலையில் மல்லாந்து படுத்துக்கிடந்தான். உலகத்தைக் குலுக்கிக்கொண்டு நள்ளிரவு வண்டி கடந்து போவதை அவன் உணர்ந்தான். தொலைவில் மய்யழிமாதாவின் தேவாலயத்திலிருந்து விடிகாலை மணி முழங்குவதைக் கேட்டான். அப்படியே நேரம் வெளுத்துவிட்டது.

கடைசியில் அவன் ஒரு தீர்மானத்திற்கு வந்தான். இரவில் மய்யழிக்குள் கள்ளத்தனமாகப்போக வேண்டும். அப்பாவைப் பார்க்க வேண்டும். அம்மாவிடம் எல்லாவற்றையும் சொல்லிப் புரிய வைக்க வேண்டும். புரிந்துகொள்ளவில்லையென்றால் காலைப் பிடித்துக் கெஞ்ச வேண்டும். விதி அப்பாவைத் தனக்கெதிராகத் திருப்பி நிறுத்தியிருக்கிறது. ஆனாலும் தன் அப்பா சொந்த அப்பாதானே? அவருக்குள்ளே, இல்லாவிட்டால் உள்ளுக்கும் உள்ளே, இந்த தாசனிடம் கொஞ்சமாவது பாசமும் பற்றும் இல்லாதிருக்குமோ?

"நான் இன்னிக்கு வீட்டுக்குப் போய்ட்டு வர்றேன்."

கணாரன் விழித்தெழுந்தபோது தெரிவித்தான். அவருக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை. புரிந்தபோது மலைத்தார்.

"முரட்டுத்தனத்தைக் காமிக்காதே தம்பி நீ. . . . . "

அவர் கட்டிலில் தட்டுத்தடுமாறி எழுந்து உட்கார்ந்தார். போலீசும் பட்டாளமும் ரோந்து சுற்றும் மய்யழிக்குப் போகிறான்... அதை நினைத்தபோதே அவருக்கு வியர்த்தது. அவருக்கு அதை நம்பக்கூட முடியவில்லை. என்ன ஒரு சாகசம்... !

"நீ சொன்னா உங்கப்பா கேப்பாரா?" வாசூட்டி கேட்டான். "நீ வெட்டியாத்தான் போறே. உன்னாலே ஒரு சுக்கும் செய்ய முடியாது."

ரைட்டரை யாராலும் கட்டுப்படுத்த முடியாது. அவர் திமிர் பிடித்த மிருகம்.

"நீ போய்ட்டு வா." பப்பன் சொன்னான். "போய்க் காரியம் முடியலேன்னா, அந்த அச்சுவைக் குத்திக் குடலெடுத்திரு."

பப்பனின் கண்ணில் தீ இருந்தது. வாசூட்டி எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. போலீசின் கையில் அகப்படாமல் எச்சரிக்கையாகப் போக வேண்டுமென்று மட்டும் சொன்னான். கணாரன் அண்ணாச்சி தலை குனிந்தார். தாசன் மய்யழிக்குப் போவதை அவரால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. கணாரனுக்குத் தலை சுற்றுவது போலிருந்தது.

"விவே தாம்பூறேஸ்மாம்."

ஆபத்துக்களுக்கிடையே வாழ்க. ஆந்த்ரே ழீதின் வாக்கியம். பப்பனின் வேத வாக்கியமாயிருந்தது அது. அவன் உற்சாகப்படுத்திக்கொண்டிருந்தான்.

"தாசா, நீ போகக்கூடாது. நான் உன் காலைப் பிடிக்கிறேம்பா..."
கணாரன் அண்ணாச்சி கெஞ்சினார். வாகூட்டி அதைக் கண்டு வருந்தினான்.

"அண்ணாச்சி, நீங்க இப்படிக் குழந்தைங்க மாதிரி பேசக்கூடாது. புரட்சிக்குத் தலைவராக்கும் நீங்க, அதை நினைக்கணும்."

கணாரன் அண்ணாச்சி மௌனியானார். உலகத்தில் போராட்டமும் சங்கடங்களும் இல்லாதிருக்குமானால்... துக்கமும் வேதனையும் இல்லாதிருக்குமானால்...

அன்றைய இரவு வீட்டிற்குப் போவதாக தாசன் உறுதி செய்தான்... எதிர்ப்பை அவன் பொருட்படுத்தவில்லை.

கிழக்கே எல்லைச்சாவடியில் கண்ணன்போலீஸ் ட்யூட்டியில் இருந்த இரவு. அது கணாரன் அண்ணாச்சிக்கு ஆறுதலாக இருந்தது. புரட்சியை ஏற்றுக்கொண்ட கண்ணன்போலீஸ் மறைமுகமாக ஆதரித்தார். பிரச்சினை எதுவும் இல்லையென்றால் தாசனுக்கு அவர் எந்த உபத்திரவமும் தரமாட்டார் என்று கணாரன் அண்ணாச்சி நம்பினார்.

புகைவண்டி நிலையத்தின் சுற்றுப்புறத்தில் மய்யழியில் கள் தேடி வந்த நாடோடிகள் கூடாரம் போட்டிருந்தார்கள். நள்ளிரவாகியும் அங்கே விளக்கும் கொம்மாளமும் இருந்தன. கிளிகளின் கொஞ்சலும் நாய்களின் குரைப்பும். புரியாத மொழியில் நாடோடிகள் சளாபுளா என்று பேசிக்கொண்டிருந்தார்கள்.

அஸ்ஸுவின் கடையைத் தாண்டிக் கடந்தால் நீண்டு தொடரும் சாலைதான். ஒரு புறம் வயலும் மறுபுறம் தென்னந்தோப்பும். அங்கே நிசப்தமாயிருந்தது. சொந்தக் காலடி ஓசை மட்டுமே கேட்கும். மங்கிய நிலா வெளிச்சம் இருந்தது.

இனி அதற்கு மேல் போகக்கூடாது. வாகூட்டியும் பப்பனும் நின்றுகொண்டார்கள். தொலைவில் எல்லைச்சாவடியில் சாலைக்குக் குறுக்குத்தடை போட்ட முளைக்கம்பின் அருகில் போலீசார் இருப்பார்கள்.

"இனிமே நாங்க வரல்லே."

தாசன் நின்றான். அவர்கள் மூவரும் ஒரு நிமிடம் பேசாமல் நின்றார்கள். தத்தமது இருதயத் துடிப்புகள் அவர்களுக்குக் கேட்டன. வயலுக்கு மேலே அமர்ந்திருக்கும் நிசப்தம். ராக்கிளிகூடக் கீச்சிடவில்லை. நாடோடிகளின் விளக்கும் ஆரவாரமும் பின்னால் தொலைவில்.

"இதைக் கையிலே வச்சிக்கோ."

பப்பன் சட்டைப் சபையிலிருந்து ஒரு கத்தியை எடுத்து நீட்டினான். தாசனுக்குப் புரிந்தது... சோரக்கண்ணன்துரையைக் குத்திய அதே கத்தி.

"பப்பா, எனக்கு யாரையும் குத்தணும்கிற எண்ணமில்லே."

கொஞ்சம் நிறுத்திவிட்டு அவன் தொடர்ந்தான். "ஆனாலும் கொடு. தேவைப்பட்டா என்னையே நான் குத்திக்கிடலாமில்ல."

தாசன் கத்தியை வாங்கிக்கொண்டான். இருட்டில் கத்திமுனை மின்னியது, மரணத்தின் பற்களைப் போன்று.

"போய் வா."

வாகூட்டி தாசனின் தோளிலிருந்து கையை எடுத்தான். பப்பன் சொன்னான்.

"நீ வர்ற வரைக்கும் நான் காத்துக்கிட்டிருப்பேன்... தூங்காம."

உடுத்தியிருந்த லுங்கியை மடித்துக் கட்டிக்கொண்டு தாசன்

தென்னந்தோப்பில் இறங்கினான். தென்னைகளின் நீண்ட நிழல்களினூடே தடம் தெரிந்து அவன் நடந்தான். கொஞ்ச தூரம் நடந்தபோது தெளிந்த வானத்தின் விளிம்பில் மய்யழிமாதா தேவாலயத்தின் உச்சியில், கைவிரித்து நிற்கும் சிலுவையைப் பார்த்தான். சிலுவையைப் பார்த்தபடி அவன் தன்னைக் கேட்டுக்கொண்டான்.

நான் திரும்பி வருவேனா?

தாசன் நடந்து போவதை வாசூட்டியும் பப்பனும் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவன் கண்ணிலிருந்து மறைந்ததும் அவர்கள் ஓசைப்படாமல் திரும்பி நடந்தார்கள். பின்னணியில் நரைத்த, நிசப்தமான இரவு மட்டுமே.

# 28

மீண்டும் மய்யழியின் மண்ணில். பிறந்து வளர்ந்த ஊரில்!

தாசனை அது மகிழ்வித்தது. பதுங்கி ஒளிந்திருக்கும் ஆபத்தை அவன் மறந்தான். பிடிபட்டால் பன்னிரண்டு ஆண்டுகள் சிறையில் இருக்க நேரும். ஒருவேளை சிறையிலிருந்து வெளியே வராமலே இருக்கவும் நேரலாம்; அவன் அதையெல்லாம் நினைக்கவில்லை. எல்லா ஆபத்துக்களையும் மறந்து நிலா வெளிச்சத்தில் மகிழ்ச்சி நிறைந்தவனாக முன்னோக்கி நடந்தான்.

தென்னந்தோப்பு முடிந்தது. சந்தில் நுழைந்தான். அங்கே வெளிச்சமில்லை. ஆனாலும் ஆபத்திற்கான சாத்தியக்கூறுகள் அதிகம். ஒளிந்தும் பதுங்கியும் நடக்க முடியாதல்லவா? ரோந்து சுற்றும் போலீஸ்காரர்களின் டார்ச் வெளிச்சம் முகத்தில் விழும்போது மட்டுமே அறிந்துகொள்ளலாம்.

தொலைவில் ந்யூ த் லாகார். ஒரு செத்த பாம்பைப் போல வயல்களுக்கு நடுவில் அது அசைவற்றுக் கிடக்கிறது.

தீந்தலப்பலமும் சுற்றுப்புறமும் தென்பட்டன. குட்டித் தேவதைகள் வெளியில் புறப்பட்டு நடக்கும் நேரம். குழந்தையாய் இருந்த காலத்தில் பாட்டி சொல்லிக் கொடுத்த கட்டுக்கதைகளை அவன் நினைத்துக்கொண்டான். வாழைக்குலை எடுத்த குஞ்சக்கனின் கொள்ளுத் தாத்தாவைக் குட்டிதேவதை முடமாக மாற்றிய கதை.

கோயில் முற்றத்தில் ஏறும் வெள்ளையடித்த படிக்கட்டுகள் நிலா வெளிச்சத்தில் மயங்கிக் கிடந்தன. அங்கே குருத்தோலை உடுத்திய குளிகன் இருக்குமோ? காலில் கட்டிய சலங்கைகளின் ஓசை கேட்கிறதா?

அப்போது அவனுக்கு சந்திரிகாவின் கால்களில் பாதசரங்களின் நினைவு வந்தது.

மய்யழிக்குப் போகும் விவரத்தை அவளிடம் சொல்லியிருந்தான். விவரத்தை யாருக்கும் தெரிவிக்கக் கூடாது என்று கணாரன் அண்ணாச்சி சொல்லி வைத்திருந்தார். எதிரிகள் கவனிப்பார்கள். யாராவது துப்புக் கொடுத்தால் போலீஸ்காரர்களின் கெடுபிடியாகிவிடும். மய்யழிக்கு நல்லபடியாப் போய்த் திரும்ப வேண்டுமே!

இருந்தபோதிலும் அவளிடம் சொன்னான்.

"தாசன் போக வேண்டாம்."

அவள் அழத் தொடங்கினாள். சொல்லியிருக்க வேண்டாமோ

என்று தோன்றிறது. அது ஒரு தவறல்லவா? பிடிக்கப்பட்டால் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு பார்க்க முடியாது. ஒருவேளை எப்பொழுதுமே.

"அழாதே."அவன் தேற்றினான். "நான் திரும்பிருவேன்."

"போலீஸ்காரங்க. . ."

"அவங்க கண்ணிலே படாம நான் போய்ட்டு வந்திருவேன். பாஸ்கரன்கூட தினமும் போய்வந்துக்கிட்டிருக்கானில்ல?"

ஆனாலும சந்திரிகாவுக்கு சமாதானமாகவில்லை. கண்களில் நீர்பொங்க அவள் மீண்டும் கூறினாள். "நீங்க போகக்கூடாது."

"குழந்தைங்க மாதிரி அழக்கூடாது. நான் போகலேன்னா அப்பா கிரிஜாவைப் பிடிச்சி அச்சுகிட்ட கொடுத்திடுவாரு. கிரிஜாவோட வாழ்க்கை அழியும். உனக்குப் புரியலையா?"

அவள் தலைகுனிந்து தென்னைமீது சாய்ந்து நின்றாள். கால்களில் ஆற்றங்கரையின் வெள்ளை மணல் ஒட்டியிருந்தது.

"ராத்திரியிலேயே திரும்பிரணும்."

"வந்திருவேன் சந்த்ரி."

அவள் சம்மதித்தாள். அவள் புடவைத்தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"நாளை நான் காலேஜுக்குப் போகலே. இங்கே வருவேன். நீங்களும் வரணும்."

அதற்கு அவன் சம்மதித்தான். அவர்கள் அவ்வப்போது ஒருவரையொருவர் சந்தித்துக்கொள்ளும் இடமாயிருந்தது அது. ஆள் நடமாட்டமற்ற ஆற்றங்கரை, வெண்மணலும் குட்டைத் தென்னைமரங்களும் உள்ள ஆற்றங்கரை.

அவள் இன்னும் உறங்கியதாகத் தெரியவில்லை. அவன் நினைத்துப் பார்த்தான். தன்னைக் குறித்துச் சிந்தனையில் ஆழ்ந்து படுத்துக் கிடக்கலாம். நாளை இருவரும் சந்தித்துக் கொள்ளும் வரை அவளுக்கு நிம்மதி இருக்காது.

உன்னிநாயரின் கள்ளுக்கடைக்குப் பின்புறமாக வயலினூடே ஒளிந்து அவன் நடந்தான். இதுவரைக்கும் யாரையும் சந்திக்க நேரவில்லை. எங்கும் அமைதி. மய்யழியின் மக்கள் உறங்கிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் உறங்கட்டும். உறங்குவதற்கு விதிக்கப்பட்டிராத தாசன் வீட்டை இலக்காகக்கொண்டு பயணம் தொடர்ந்தான்.

வயலும் தென்னந்தோப்புகளும் முடிவடைந்தன. இனி நீண்டு கிடக்கும் ர்யூ த லாகார் சாலைதான். தொலைவில் ர்யூ த் லெக்லீஸ் தென்படுகிறது. ஆபத்து நிறைந்த சாலைவழியே வேகமாக நடந்தபோது வானத்தில் கை விரித்து நிற்கும் சிலுவையைப் பார்த்தான். ர்யூ த் லெக்லீஸில் சலனமுறும் நிழல்கள். போலீஸ்காரர்களோ?

குஞ்சக்கன் ஏற்றிவைத்த சிம்னி விளக்குகள் சுடரிட்டு எரிந்து கருகியிருந்தன. மங்கிய நிலாவெளிச்சம் மூடுபனி போன்று மரங்களுக்கிடையேயும் கட்டிடங்களின் மாடிகளிலும் பரவிக் கிடந்தது.

தொலைவில் அவன் தன்னுடைய வீட்டைப் பார்த்தான். நெஞ்சுத் துடிப்பின் வேகம் அதிகரித்தது. சிந்தனைப்போக்கு மாறியது. நிமிட நேரத்தில் அப்பாவின் முகத்தெதிரேபோய் நிற்பான். என்னபேச? என்னவாக இருக்கும் அப்பாவின் போக்கு?

அம்மா, அப்பா, கிரிஜா, பாட்டி. . . அவர்களையெல்லாம்

பார்ப்பதற்காகப் போகிறான்... நீண்ட இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு. அவனுக்கு அதில் உள்ளூர மகிழ்ச்சி. அரையணா புகையிலைப் பொடி வாங்கிக்கொண்டு வந்திருக்க வேண்டும்.

அவன் வருத்தப்பட்டான். அப்படிச் செய்திருந்தால் பாட்டிக்கு எவ்வளவு மகிழ்ச்சியாயிருந்திருக்கும்...

மேற்குப் பக்கத்து அறையில் மட்டும் வெளிச்சம் இருந்தது. வராந்தா இருண்டிருந்தது. வாசற்புறத்து மரங்களின் சலனமற்றுக் கிடக்கும் நிழல்களையும், மங்கிய பொலிவுடன் பூத்துக்கிடக்கும் அசோக மரத்தையும் அவன் பார்த்தான். . . . முற்றத்தில் கிரிஜா நட்டு வளர்த்த முல்லையும் பனிநீர்ப்பூவும்.

அவன் வாசற்படி ஏறினான். யாரைக் கூப்பிடுவது? கதவைத் தட்டி அழைப்பதா? ஒரு நிமிடம் தயங்கி நின்றான். எல்லோரும் உறங்கிக்கொண்டிருப்பார்கள். ஒருவேளை, கிரிஜாவைத் தவிர. அவளால் எப்படி உறங்க முடியும்?

சேந்தியின் ஒரு வெள்ளைப் பூனை சுருண்டு படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தது. யாருடையது இந்தப் பூனை? முன்பு இந்த வீட்டில் பூனையோ நாயோ எதுவும் இருந்ததில்லையே!

கிரிஜா படுத்திருக்கும் அறை அவனுக்குத் தெரியும். முதலில் அவளைப் பார்க்க வேண்டும், எல்லா விவரங்களையும் கேட்டறிய வேண்டும். அதற்குப் பிறகுதான் அப்பாவை எழுப்ப வேண்டும். அவன் தீர்மானித்துக்கொண்டான்.

பூனையை எழுப்பிவிடாமல் அவன் சேந்தியின்மீது ஏறி நின்றான். அங்கே நிலா வெளிச்சம் இருந்தது. ற்யூ த் ஸிமித்தியேரின் வழியே ஒரு போலீஸ்காரன் நடந்து போவதை அவன் காணத் தவறவில்லை. . . .

"தங்கச்சி. . . ."

ஜன்னலருகில் சென்று மெதுவாகக் கூப்பிட்டான். ஜன்னல் கதவுகள் திறந்து கிடந்தன.

கட்டிலில் அசைவு.

"நான்தான், அண்ணன்."

சட்டென்று அவள் கட்டிலில் எழுந்து உட்கார்ந்தாள். தலைமுடியும் புடவையும் தாறுமாறாக இருந்தன. திகைப்புடன் அவள் கேட்டாள்.

"அண்ணா"

"கதவைத் திற."

அவள் ஓசைப்படுத்தியபோது அவன் பயந்தான். ற்யூ த் ஸிமித்தியேரில் விளக்குத் தூணின் அருகில் போலீஸ்காரன் தொப்பி இப்போதும் தென்பட்டது.

திடீரென்று அவனுக்கு அசதி தோன்றியது. இரண்டு நாழிகை நேரம் ஒதுங்கியும் பதுங்கியும் நடந்தது .தெரியவில்லை. ஓடையைத் தாண்டிக் கடந்து வந்திருக்கிறான். வேலியின் கட்டவிழ்த்துக் கடந்து வந்திருக்கிறான். மேலெல்லாம் எரிச்சல், நாயுருவியோ காட்டு முள்ளோ எதனோடா உராய்ந்ததால் எரிச்சல்.

"கதவைத் திற."

அவன் மீண்டும் சொன்னான். கிரிஜா பேச முடியாமல் நின்றிருந்தாள், இப்போதும். அவன் மீண்டும் கூப்பிட்டபோது அவள் செனன்று கதவைத் திறந்தாள். தலைமுடியை வாரிக்கட்டி, புடவையைச் சரிப்படுத்திக்

கொண்டாள்.

"விளக்கை ஏத்தட்டுமா?"

"வேண்டாம்."

தொலைவில் விளக்குக் கம்பத்தின் அருகில் போலீஸ்காரன் அசைவற்று நின்றுகொண்டிருந்தான். தாசன் கதவை அடைத்துத் தாளிட்டான். அவன் முகப்பில் நிற்கவில்லை. அங்கே காரிருட்டாக இருந்தது. கிரிஜாவின் அறையில் அவளுடைய கட்டிலில் உட்கார்ந்தான். கிரிஜா அருகில் வந்து நின்றாள். திறந்திருந்த ஜன்னல வழியே வந்து வெளிப்புற வெளிச்சத்தில் அவனுக்கு அவளுடைய முகம் தெரிந்தது. அவள் அழத் தொடங்கியிருந்தாள்.

"நீ சம்மதம் சொல்லிட்டியா?"

மங்கிய வெளிச்சத்தில் அவளுடைய கன்னங்களில் வழிந்து ஒழுகும் கணணீர் அவனுக்குப் புலப்பட்டது. அவளிடம் என்ன பேசுவது? எப்படி அவளைத் தேற்றுவது? அவனுக்குத் தெரியவில்லை.

"இங்கே உக்காரு. . . .என் பக்கத்திலே."

அவள் அப்படியே செய்தாள். அவளுடைய தேம்பல் தன்னுடைய நெஞ்சிலிருந்துதான் என்பது போல அவனுக்கு இப்போது கேட்டது.

"அண்ணன் வந்திருக்கிறப்போ நீ அழலாமா?"

அவள் பதில் சொல்லாமல் அழுகையைத தொடர்ந்தாள். சில நிமிடங்கள் கழிந்தன. மங்கிய இருட்டு கண்களுக்குப் பழகிவிட்ட பிறகு அவன் தங்கையின் முகத்தைத் தெளிவாகப் பார்த்தான். . . .

அவளுடைய கண்களில் எத்தனையோ இரவுகளின் உறக்கச் சடவும் கண்ணீரும் தளம் கட்டியிருந்தன.

"சொல்லு, நீ சம்மதம் சொல்லீட்டியா?"

"இல்லே." முகம் நிமிர்த்தாமலே அவள் தலையாட்டினாள்.

"கொண்ணாலும் நான் சம்மதிக்க மாட்டேண்ணா."

அவளுடைய பதில் அவனுக்கு நிம்மதியைத் தந்தது. அப்பாவிடம் வாதிக்க நேர்ந்தால் அவளுடைய பக்கபலம் அவனுக்குத் தேவையல்லவா?

"நீ சம்மதிக்க மாட்டேன்னு எனக்குத் தெரியும்."

அதனால்தானே அவனுக்கு அதிக துக்கம்! அவள் தன்னுடைய தங்கையாக்கும்... தனக்கில்லாமல் வேறு யாருக்கு அவளைப் புரிந்துகொள்ள முடியும்?

"என்ன வந்தாலும் நீ சம்மதிச்சிராதே?"

"அப்பா என்னைக் கொண்ணிடுவாரு."

அவன் மௌனமானான். அப்பாவைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் அவனில் மௌனம் வந்து பற்றிக்கொள்கிறது. தன்னுடைய கடிதங்களுக்கு பதில் எழுதாத, இதுவரையும் தன்னை வந்து ஒரு பார்வை பார்த்துப் போக முனையாத, அப்பா... "அப்பாவுக்கு என்மேலே கோபமோ?"

அதைக் கேட்டதும் அவள் அதிகமாகத் தேம்பலானாள். அண்ணனின் முகத்தைப் பார்க்க முடியாமல் அவள் தலைகுனிந்திருந்தாள். "சொல்லும்மா... அப்பா என்னைப் பார்க்கக்கூட மாட்டாரா?"

"ஜெயிலிலேருந்து வந்த பிறகு..."

"வந்து பிறகு?"

"அப்பா மாறிப்போயிட்டாரு அண்ணே, எப்பவும் கோபம்தான். உன் பேரை இங்கே யாரும் சொல்லக்கூடாது. சொன்னால் அப்பாவுக்குக் கோபம் வந்திரும்."

அதெல்லாம் தாசனுக்குத் தெரியும். அதெல்லாம் அவன் ஊகித்ததுதான். ஆனாலும் கிரிஜாவிடமிருந்து நேரடியாக அதைக் கேட்டபோது அவனுடைய மனது துடித்தது. இந்த வீட்டில் எவரும் தாசனின் பெயரை உச்சரிக்க முடியாது. ஒரு காலத்தில் இங்கே தாசனின் பெயர் மட்டுமே இரவும் பகலும் கேட்டது. எல்லோருக்கும் தாசனைப் பற்றி மட்டுமே பேசும் நிலை இருந்தது. . . . .

காலம் மாறியிருக்கிறது. இன்று இங்கே எவரும் அவனுடைய பெயரை உச்சரிக்கக் கூடாது. . . . .

சிறிது நேரம் அங்கே நிசப்தம் கனத்துக் கிடந்தது. தாசன் மடியிலிருந்து ஒரு பீடி எடுத்து வாயில் வைத்தான். தீப்பெட்டி உரசினான். வெளிச்சம் வெளியே பரவாதிருக்கக் கைகளால் மறைத்துப் பற்றவைத்து ஓரிரண்டு முறை புகையை வெளியே விட்டான்.

"அண்ணே, சோறு சாப்பிட்டியா, ராத்திரி. . . . போடட்டுமா?"

"சோறு இருக்காம்மா?"

"இருக்கு"

முன்பு தினமும் இரவு கஞ்சியாக இருந்தது. இப்போது சோறு பழக்கமாகியிருக்கிறது. எல்லோரும் சாப்பிட்டு முடித்த பின்னரும் எஞ்சியிருக்கும் அளவுக்கு சோறு. தான் இப்படி இருந்த போதிலும் தன்னுடைய வீட்டில் ஒரு செழுமை.

"யாரு கிரிஜா இங்கே செலவெல்லாம் கவனிச்சிக்கிடுறது?"

யாரென்று தெரியும். ஆனாலும் கேட்டான். அவள் பதில் சொல்லவில்லை. சிறிது நேரம் உலர்ந்திருந்த அவளுடைய கண்கள் மீண்டும் பொழியத் தொடங்கின.

உடனுக்குடன் அவன் நினைத்தான். . . . திண்ணையில் அச்சுவைக் காணோம். அங்கேதானே படுத்திருப்பான்.

"அச்சு இங்கேதானே இப்போ படுக்கை?"

"உள்ளே இருக்காரு."

இனி எதற்காக அவன் திண்ணையில் படுத்திருக்க வேண்டும். இந்த வீட்டின் செலவினம் பார்த்துக்கொள்பவன். இங்கே வீட்டுப் பொறுப்பேற்றவன். நாளை தன்னுடைய மைத்துனனாக மாற இருப்பவன். அதற்கு இனி அதிகக் காலம் இல்லை அல்லவா?

மங்கிய இருட்டில் கிரிஜாவின் விம்மல் சத்தம். அவன் அவளை அருகில் சேர்த்திழுத்து தலையில் மெதுவாகத் தடவிக்கொடுத்தான். அவளுக்கு வியர்வையின் மணம் உண்டாயிருந்தது. குளித்து எத்தனையோ நாட்களாயின. அவளுக்குச் சாப்பாடில்லை. உறக்கமில்லை. அழுவதற்கு மட்டுமே அவளால் இன்று முடியும்.

"அண்ணன் மட்டும்தான் எனக்கு . . . . ."

"நான் இப்படி ஆயிட்டேனில்ல?"

"நானும் உன்கூட வந்திரட்டா?"

"எங்கேம்மா? இந்த அண்ணன் உன்னை எங்கே கூட்டிப் போவான்?"

அவனுக்குத் தலை சாய்க்க ஓரிடம் இருக்கிறதா? பசியை அடக்க சாப்பாடு உண்டா? பயணம் இடர்பாட்டில் சிக்கியிருக்கிறது இன்று. நூற்றுக்கணக்கான விடுதலைப் போராட்டக்காரர்கள் ஊண் உறக்கம் இல்லாமல் புரட்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். வாழ்க்கை நிலையாக இல்லை. நாளை சிறைப்பட நேரலாம். துப்பாக்கிக்கு இரையாகலாம். . . . அந்த

உலகத்திற்கு கிரிஜாவை எப்படி அழைத்துச் செல்வது? கால் வீங்கி மந்தமாய் நடக்கும் நிலையில் இருக்கும் தான் மற்றொரு நபரின் பாரத்தை எப்படி சுமப்பது?

"தங்கச்சி, நிம்மதியா இரு. நான் எப்படியாவது ஒரு வழி கண்டுபிடிக்கிறேன் உன்னைக் காப்பாத்த."

அப்பாவின் காலைப் பிடிக்க வேண்டும். காலைப் பிடித்துக் கெஞ்ச வேண்டும். . . . கிரிஜாவைப் பலி கொடுத்திராதீங்க. . . .

"அண்ணன் சொன்னா அப்பா கேட்டுக்குவாங்களா?"

"கேட்டுக்குவாங்க கிரிஜா. நான் சொன்னா அப்பா கேட்காம இருக்கமாட்டாங்க."

"இல்லே. . . . ."

முட்டைவிளக்கின் சிவப்பு வெளிச்சத்துடன் ரைட்டரின் குரல்.

"நீ சொன்னா கேட்டுக்கிட்டிருந்த காலம் போயிரிச்சி."

கிரிஜா திடுக்கிட்டெழுந்தாள். ஒரு கையினால் வேட்டியைத் தாங்கிப் பிடித்து மறுகையில் விளக்குமாக ரைட்டர் வாசற்படியில் வந்து நின்றார்.

கடைசியில் அந்த நிமிடம் வந்துவிட்டது. . . தாசனுக்குப் புரிந்துவிட்டது. மனிதரும் விலங்குகளும் உறங்கும், நடுச்சாமக்கோழி கூவும், அந்த நேரம். அவர்கள் முகத்துக்கு முகம் பார்த்துக்கொண்டார்கள். எனக்கு தைரியத்தைக் கொடு. . . என் தங்கைக்காகப் போரிட எனக்கு தைரியத்தைக் கொடு. . .

"எதுக்காகடா நீ என்னை மீறிப் போனே?"

கையிலிருந்த முட்டைவிளக்கு விறைத்தது. குரலை உயர்த்தாமல் கண்கள் ஒரு கொள்ளிவாய்ப் பிசாசின் கண்களைப் போன்று தீப்பற்றி இருந்தன.

தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டு, குரலை உயர்த்தாமல் அமைதியாக, தாசன் சொன்னான்.

"எனக்கு உங்ககிட்ட சில விஷயங்களைப் பேசணும்ப்பா"

"நீ என்கிட்ட எதுவும் பேசத் தேவையில்லே."

"அச்சு யாருன்னு உங்களுக்குத் தெரியுமில்லே?"

"தெரியும்."

"அவன் ரௌடி"

"நீ ரௌடியில்லையாடா? மெறிக்குத் தீ வச்சது யாரு? இந்த ஊரிலே கலகம் உண்டாக்கினது யாரு?"

அப்பாவா இதைச் சொல்வது? தாசனால் நம்ப முடியவில்லை. தான் ஒரு ரௌடியா? அச்சுவைப் போல ஓர் அடியாளா? உயிர்த்தெழுந்த மய்யழி மக்கள் நடத்திய ஜனநாயகப் புரட்சி வெறும் ரௌடித்தனமா?

"அவனை ரௌடின்னு வச்சிக்கிட்டாலும் என்னைத் தொட்டதில்லே. நீயோ? நீ என்னை ஜெயில்லே இருக்க வச்சே. போலீஸ் காரங்ககிட்ட அடியும் குத்தும் வாங்க வச்சே. டேய், அச்சு ரௌடி தான். ஆனாலும் ஈவு இரக்கம் இருக்கிறவனாக்கும் அவன். வெள்ளைப்பட்டாளம் வந்தப்போ அவன்தான் உன் ஆத்தாளையும் தங்கச்சியையும் மானம்காத்தது. அன்னிக்கு நீ எங்கே போயிருந்தே?"

ரைட்டரின் குரல் உயர்ந்தது. என் அப்பாவின் குரலா இது? என் அப்பாவா இது?

"அப்பா, எதுவும் தெரியாதது மாதிரி நீங்க பேசக்கூடாது. நான் இப்படி இருக்கிறேன்னா அது இந்த நாட்டுக்காகத்தான். நம்ம குடும்பம்

கண்ணீரும் கம்பலையுமா ஆனது அதுக்காகத்தான். நமக்கு அதிலே பெருமைதானேப்பா?"

"போதும் உன் பிரசாங்கம்."

"நம்ம கஷ்டமெல்லாம் தீரும். . . . சீக்கிரமாகவே. நம்ம எல்லாச் சங்கடங்களும். . . ."

"இங்கே இப்போ யாருக்கும் எந்தக் கஷ்டமும் இல்லே."

"கிரிஜாவோட கண்ணீரை நீங்க பார்க்கலையா? வெளிப்படையா சொல்லுங்கப்பா. . . .கிரிஜாவை அச்சுவுக்குப் பிடிச்சிக் கொடுக்கணும்னு உங்களை எது தூண்டுது?"

அதற்கான பதில் ரைட்டரின் நாக்கு நுனி வரை வந்தது. இனியுள்ள காலம் தன் போக்குப்படி கழிந்தால் மன சமாதானத்துடன் கண் மூடலாம். அச்சு கருத்தானவன். அவனுடைய நிழலில் மட்டுமே இந்தக் குடும்பம் அபயம் தேடிக்கொள்ள முடியும்.

"சொல்லுங்கப்பா. . . . ."

"என்னோட விருப்பம். எனக்குப் பிடிச்சதை நான் செய்வேன்."

"என் விருப்பத்தை அப்பா பார்க்க வேண்டாம். கிரிஜாவோட விருப்பத்தையாவது நீங்க பார்க்கணும்."

"உன் விருப்பம்...? நீ இந்தக் குடும்பத்தை அழிச்சிட்டே. வயசுக்காலத்திலே மத்தவங்களை ஜெயிலுக்கு அனுப்பிவச்சே. இன்னமும் திருப்திப்படல்லே உனக்கு? இப்பவும் வந்திருக்கியாக்கும் மத்தவங்க குடிகெடுக்க?"

ரைட்டரின் கையிலிருந்த மூட்டைவிளக்கு துள்ளிற்று. அவர் ஓடித் தளர்ந்த மானைப் போல பெருமூச்செறிந்தார். முட்டைவிளக்கை ஜன்னல்படிமேல் வைத்துவிட்டு, வெளிப்புறத்தை நோக்கிக் கையைச் சுட்டிக்காட்டி அவர் ஆணையிட்டார்.

"வெளியே போ."

எல்லாம் முடிந்துவிட்டதா? இதற்காகத்தானா நான் வாழ்க்கையை ஆபத்திற்குள்ளாக்கிக் கொண்டேன்.

"நான் போறேன்."தாசன் எழுந்துகொண்டான். "என் அம்மாவை நான் ஒரு தடவை பார்த்துக்கிடுறேன்."

அவன் உள்ளே போக முயன்றபோது ரைட்டர் தடுத்தார்.

"அவ உன் அம்மா இல்லே. நான் உன் அப்பனும் இல்லே. வெளியே போ. . ."

நெஞ்சில் ஆணிகள் இறங்கியது போன்று தாசன் வேதனைப்பட்டான். அவனுடைய கண்களில் இரத்தம் போன்று கண்ணீர் வழிந்தது.

ஜன்னல்படியிலிருந்தபடி முட்டைவிளக்கு எரிந்துகொண்டிருந்தது. ற்யூ த் லா ஸிமித்தியேரில் போலீசின் சிவப்புத் தொப்பி அப்போதும் தென்பட்டது. ஆனாலும் விளக்கை அங்கிருந்து அகற்ற அவன் முயலவில்லை.

"அண்ணே போகாதே. . . "

கிரிஜாவின் அழுகுரல். தாசன் வாசலை நோக்கி நடந்தான்.

"அண்ணே. . . . ."

"அழாதே கிரிஜா நீ."ரைட்டர் அவளை நோக்கித் திரும்பிக் கையை ஓங்கினார். "இந்த நட்டநடு ராத்திரியிலே என் கைச்சூடு உனக்கு விழ வேண்டாம். . . . . "

தாசன் கதவின் தாழ்ப்பாளை நீக்கினான்.

"அப்பா நான் போறேன். கிரிஜாவை யானைக்கால் அந்தோனிக்கு வேணும்னாலும் பிடிச்சித் கொடுங்க. ஆனா அச்சுவுக்குக் கொடுக்காதிங்க. அதைச் சொல்லத்தான் வந்தேன்."

"போடா நாயே வெளியே. . . . ."

ரைட்டர் அலறினார். அந்தக் கூக்குரலில் வீடு முழுவதும் எழுந்துகொண்டது. கௌசுவம்மாவும் அச்சுவும் ஓடி வந்தார்கள். குறம்பியம்மா பத்தாயத்தின் மேலிருந்து ஊர்ந்து இறங்கினாள்.

தாசன் வாசலில் இறங்கினான். பின்னாலேயே ரைட்டர் கதவுகளை அடைத்துத் தாழிட்டார். அடுத்து எங்கேயோ போலீஸ்காரர்களின் விசில் சத்தம் அவருக்குக் கேட்டது. கௌசுவம்மாவின் கூக்குரலும்.

காரிருட்டு. நிலா அஸ்தமித்திருந்தது. நடக்க முடியவில்லை. எதுவும் முடியவில்லை. அசையக்கூட முடியாதபடி தளர்ந்திருந்தான். கண்ணீரின் வெப்பத்தில் வெந்துபோய்க் குருடாகிவிட்ட கண்கள். தட்டுத் தடுமாறிப் படியிறங்கி சாலையில் கால் வைத்தபோது பூட்சுகள் ஒலியெழுப்பின. இருட்டில் உயரும் லத்திக்கம்புகள். . . . .

அவன் தரையில் விழுந்தான்.

# 29

மய்யழிக்கு மேலாக வெளிறிய வெளிச்சம் பரவியிருந்தது. வானம் மூடி மறைத்திருந்தது. கனகமலையின் உச்சியில் திரண்டிருக்கும் மழைமேகங்கள்

பப்பன் உறக்கச்சடவினால் உப்பியிருந்த கண்களுடன் குஞ்ஞாமனின் வீட்டின் வராந்தாவில் உட்கார்ந்திருந்தான். அவனுடைய மனதில் புயல் வீசிக்கொண்டிருந்தது. சிரு தயாரித்துக்கொண்டு வந்திருந்த வெல்லக் காப்பியைத் தொட்டுக்கூடப் பார்க்கவில்லை. கஞ்சி வைத்துக் கொடுத்ததையும் குடிக்கவில்லை.

தாசன் திரும்பி வரும்வரை காத்திருப்பதாக அல்லவா அவன் சொல்லியிருந்தான்? இப்போதும் காத்திருக்கிறான். இனி ஒரு போதும் வராத தாசனை. . . .

விடியும்வரை பாயின் அருகில் குப்பியில்லாத முட்டைவிளக்கு எரிந்துகொண்டிருந்தது. தலையணையில் கம்யூனிஸ்ட் கட்சியின் மானிஃபெஸ்டோ இருந்தது. எல்லா வேதனைகளிலிருந்தும் விமோசனம் தேடித்தரும் வேதகிரந்தம். தூக்கம் வராதபோது எடுத்துப் படித்தால் போதும். . . தூக்கம் வரும், மனது கலக்கமடைந்திருந்தால் அமைதி பெறும். மார்க்ஸிஸம்-லெனினிஸம் அவனுடைய பசியையும் தாகத்தையும் தணிக்க வல்லது. . . காதல் உணர்வைப் போல.

"உலகத் தொழிலாளர்களே, ஒன்று சேருங்கள். இழப்பதற்கு உங்களிடம் இருப்பது கைவிலங்குகள் மட்டுமே. . ." மானிஃபெஸ்டோவின் கடைசி வாக்கியத்தை முதன்முறையாக வாசித்தபோது தனக்கு அதிர்ச்சித் தடுமாற்றம் ஏற்பட்டதுபோல் அவனுக்குத் தோன்றியது.

அந்த வேதகிரந்தத்தினாலும்கூட இன்று அவனுடைய மனதில் அமைதியை உண்டாக்க முடியாது போகிறது.

பப்பன் சிந்தித்துக்கொண்டிருந்தான். . . தாசனைப் பற்றி மட்டுமே. முந்தின நாள் நள்ளிரவு வீட்டை நோக்கித் திரும்பி நடந்து வந்தபோது தோன்றவில்லையே, தாசன் திரும்பி வரமாட்டானென்று? மய்யழி

ஆற்றிலிருந்து வீசிய நள்ளிரவுக் காற்று முணுமுணுத்துக் கொண்டிருந்ததோ... தாசன் திரும்பி வரமாட்டான். தாசன் திரும்பி வரமாட்டான்...

இனி ஒருபோதும் தாசனைக் காண முடியாது போகலாம். நீண்ட பன்னிரண்டு ஆண்டுகள். அவ்வளவு காலத்திற்குள் எத்தனை எத்தனை மாற்றங்கள் வந்து சேருமோ! எல்லோருமே என்றென்றைக்கும் கண்மூட நேரலாம்! பன்னிரண்டு வருட காலம் தாசன் சிறைவாசம் அனுபவிப்பானோ? போலீஸ்காரர்கள் கையையும் காலையும் ஒடிப்பார்கள். அதை நினைத்தபோது கோபமல்ல, அடக்க முடியாத வேதனைதான் ஏற்பட்டது.

"பப்பா,... ப்யூடலிசத்தின் காலத்தில் நீ ஒரு பூர்ஷ்வா ஆகிக்கொள். பூர்ஷ்வாவின் காலத்தில் நீ ஒரு ப்ரோலிட்டேரியன் ஆகிக்கொள். ஆனால், பப்பா, முதலிலிருந்து கடைசிவரை நீ ஒரு மனிதனாக இரு. . . . "

முன்பொரு சமயம் பாலத்தில் ரிபப்ளிக் சிலையடியில் உட்கார்ந்து தர்க்கம் செய்துகொண்டிருந்தபோது தாசன் சொன்னது. தாசன் சொன்னதையெல்லாம் அவன் நினைத்துப்பார்த்தான். இனிமேல் ஒருவேளை, ஒருபோதும் கேட்க முடியாததான தாசனின் குரலைத் தனது காதுகள் மறந்துவிடக் கூடாது.

கண்ணுக்கெட்டாத தொலைவுவரை அறுவடை முடிந்த வயல்கள். தொலைவில் மஞ்சள் காமாலை பிடித்த ஆறு ஊர்ந்து போய்க்கொண்டிருந்தது. காலை வண்டி கடந்து போவதை அவன் பார்த்தான். சந்திரிகா கல்லூரிக்குச் செல்லும் வண்டி. தாசன் இருந்திருந்தால் இப்போது ரயிலின் அருகே சென்று நின்றுகொண்டிருப்பான்.

தாசன்-சந்திரிகாவின் கதை புரட்சியில் ஈடுபட்டுள்ளவர்களுக் கெல்லாம் தெரியும்.

"மய்யழிக்கு சுதந்திரம் கிடச்சதும் முதல்லே தாசனுக்கும் சந்திரிகாவுக்கும் கல்யாணம்."

கணாரன் அண்ணாச்சி சொல்லிக்கொண்டிருப்பார். வாசூட்டியின் நெற்றி மட்டும் சுருங்கும். . . .கடுக்காய்க் கஷாயம் குடித்தது போல. . .

"ஒருத்தனுக்குக் காதலிக்கக் கிடைச்ச நேரம்! மத்தவங்க உயிரைப் பிடிச்சிக்கிட்டு நடக்கிறாங்க இங்கே."

"நீயும் நானும் யாரையும் காதலிக்கலேன்னா நம்ம இயலாமை அது, வாசூட்டி"

பப்பன் சொல்வான்.

அதைக் கேட்கும்போது வாசூட்டியின் கோபம் மேலும் அதிகரிக்கும்.

"இங்கே ஒவ்வொருத்தனும் காதலிக்கிறதுதான் வேலைன்னு ஆச்சுதுன்னா மத்தவங்க நாடும் வீடும் விட்டு கஷ்டப்படுறது எதுக்காக? கையும் காலும் முடங்கிப்போன அப்பா பட்டினி கிடந்து செத்தாரு. மத்தவங்க எதுக்காக இதையெல்லாம் பொறுத்துக்கிடணும்?"

"உன்னைவிடப் பெரிய தியாகம் செய்தவன்தான் தாசன்."

"என்ன தியாகம் அவன் செஞ்சிட்டான்? மூப்பன்துரை வேலை தர்றேன்னு சொன்னதை வேண்டாம்னு சொன்னதா? மத்தவங்க இருந்த வேலையையும் விட்டுட்டாக்கும் இங்கே வந்திருக்காங்க."

"தாசன் அவனோட வீட்லே காலெடுத்து வைக்க முடியாமப் போயிடிச்சி."

"அது அவனோட குத்தம்."

"ரைட்டர் ஜெயிலுக்குப் போனது தாசனோட குத்தமா? நம்ம எல்லோருக்குமே அதிலே பங்கிருக்கு."

அத்தனையும் சொன்ன பிறகு வாகூட்டியின் ஆத்திரம் அதிகரிக்கும்.

"நீ எதுக்கு எப்பவும் தாசனுக்கு ஏண்டுக்கிட்டு வர்றே?"

"நான் யாரையும் சார்ந்து பேசலே. உண்மையைச் சொல்றேன்."

"ஒரு அரிச்சந்திரன் வந்திருக்காரு. . . உண்மை பேசறதுக்கு!"

"உங்களுக்கு என்னாச்சி தம்பிகளா? எப்போப் பார்த்தாலும் இப்படிக் கீரியும் பாம்புமா இருக்க ஆரம்பிச்சா சங்கடம்."

கணாரன் அண்ணாச்சி இடைமறித்தார். அப்போது இருவரும் பின்வாங்கினார்கள். அதுதான வழக்கம்.

வாகூட்டிக்கு இனிமேல் தாசனுக்கு எதிராகப் பொறாமைப்பட வேண்டியதில்லை அல்லவா? தனக்கு இனிமேல் தாசனைச் சார்ந்து பேச வேண்டியதில்லை அல்லவா? எல்லாமே முடிந்து போய்விட்டன.

பப்பன் கைகளில் முகத்தை ஊன்றியிருந்தான். எவ்வளவு முயன்றும் தன்னுடைய மனதின் துக்கத்தை அவனால் அடக்க முடியவில்லை. தாசனின் இல்லாமை—தனக்கு நெருங்கிய கூட்டாளி ஒருவன் நஷ்டப்படுவது மட்டுமல்ல நடந்திருப்பது. தன்னை முழுவதுமாகப் புரிந்துகொள்ளும் யாரேனும் புரட்சியில் இருப்பார்களானால் அது தாசன் மட்டும்தான். தாசனின் பிரிவு பப்பனை அனாதையாக்கிவிட்டது.

அறுவடை முடிந்த வயல்களின் நடுவிலூடே சந்திரிகா நடந்து போவதைக் கண்டபோது அவனுடைய துக்கம் அதிகரித்தது. செந்தென்னைகள் நிழல் விரித்த ஆற்றங்கரை நோக்கி அவள் நடந்துகொண்டிருந்தாள். எதற்கென்று பப்பனுக்குத் தெரியும் . . . . .

தாசனுக்கும் சந்திரிகாவும் இடையேயான உறவைப் பற்றி வேறு எவரையும்விட பப்பன் நன்கு அறிவான்.

அந்த உறவைக் காதல் என்று பெயரிட்டு அழைக்க அவனுக்குத் தோன்றவில்லை. தாசனே ஒரு சமயம் சொல்லியிருந்தான்.

"ஆணாகப் பிறந்தால் ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுக்க நேரும். முன்ஜன்மத்திலேயே முடிவுபண்ணி இந்த ஜன்மத்திலே நான் சந்திரிகாவைத் தேர்ந்தெடுக்க முடிஞ்சிருக்கு. . . . ."

"மனத்தில் தீயாக இருக்கிற நாட்களிலே சந்திரிகா ஒரு ஆறுதலா இருக்கிறா." தாசன் அவனிடம் சொல்வதுண்டு.

சந்திரிகா ஆற்றங்கரையைச் சென்றடைந்தாள்.

அவளுக்கு எதுவும் தெரியாது போலிருக்கிறது. தெரிந்திருந்தால் வந்திருக்கமாட்டாளே! அவள் காத்திருக்கிறாள். . . எப்போதும் வர முடியாத தாசனுக்காக.

மழைமேகத்தில் கனகமலை மூடி மறைந்திருந்தது. வானம் கீழே கீழே இறங்கி வந்துகொண்டிருந்தது. ஆற்றிலிருந்து வீசிய காற்றில் ஈரப்பதம் கலந்திருந்தது. கனகமலை உச்சியில் மழை பெய்துகொண்டிருக்கலாம்.

தொலைவில் உயிரற்ற மய்யழி ஆற்றின் ஆள் நடமாற்றமற்ற கரையில் ஒரு நிழலைப் போல்ச் சந்திரிகாவை அவனால் பார்க்க முடிந்தது. எவ்வளவு நேரம் அவள் இப்படிக் காத்து நிற்பாள்?

அர்த்தமில்லாத இந்தக் கா ிருப்பு இனியும் தொடரக் கூடாது. அவள் காத்திருப்பதற்கான நபர் இனி வரமாட்டானென்று யாராவது போய் அவளிடம் சொல்ல வேண்டும். விதி அந்த பாரத்தைத் தன்மீது

சுமத்தியிருப்பதாகப் பப்பனுக்குத் தோன்றியது.

அவன் எழுந்து சட்டையிட்டுக் கொண்டான். இடைவழியில் தண்ணீர் தேங்கியிருந்தது... என்றோ பெய்த மழையினால்.

எப்படி சந்திரிகாவிடம் விவரத்தைச் சொல்வது? எப்படி அவளுடைய முகத்தைப் பார்த்துத் தன்னால் நின்றிருக்க முடியும்? அவனுக்குத் தெரியவில்லை. ஆனாலும் அவன் அவளை நோக்கி நடந்தான்.

வயலிலிருந்து கரை ஏறும்போது முதல் மழைத்துளி நெற்றியில் விழுந்தது. காற்றின் வேகம் அதிகரித்தது. செந்தெங்கின் கன்றுகள் வளரத் தொடங்கியிருந்தன.

இங்கே மண்ணின் நிறம் மாறுகிறது. புழுதி போன்று வெள்ளை மணல். அதில் அவன் காலடிச் சுவடுகளைக் கண்டான். பரஸ்பரம் உரசி நிற்கும் நிலையிலான சிறிதும் பெரிதுமான இரண்டு ஜோடிப் பாதப் பதிவுகள். தாசனுடையதும் சந்திரிகாவினுடையதுமான காலடிச் சுவடுகள்...

அவன் சந்திரிகாவின் அருகில் சென்றான். அவனுடைய காலடி ஓசை கேட்டும் அவள் திரும்பிப் பார்க்கவில்லை.

அவள் ஆற்றையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவன் பின்புறம் நின்றான். அவளுடைய தலைமுடி காற்றில் பறந்துகொண்டிருந்தது. தாசனின் விரல்கள் கோதிப் பதிந்த தலைமுடி

"சந்திரி..."

அவன் கூப்பிட்டான். அவள் திரும்பிப் பார்க்கவோ குரலைக் கேட்கவோ இல்லை.

பப்பன் என்ன பேச வேண்டும் என்று தெரியாமல், என்ன செய்ய வேண்டும் என்று தெரியாமல் அவளுக்குப் பின்னால் நின்றிருந்தான். சிறிது நேரம் கழிந்தபோது அவள் அழுதுகொண்டிருக்கிறாள் என்று அவனுக்குத் தெரிந்தது. பேசுவதற்கான விஷயத்தை அவன் திரட்டிக்கொண்டிருந்தான்.

"அழாதே."

பப்பன் மிடறு விழுங்கினான். எதற்காக அவள் அழுகிறாள்? தாசன் வராமல் தாமதப்படுத்துவதற்காகவா? அப்படியானால் இனி அவன் ஒருபோதும் வரமாட்டான் என்பதை அறிந்தால்?

"சந்திரி..."

பப்பன் மீண்டும் அழைத்தான். அவள் கைவிரல்களினால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். முதன்முதலாக அவள் முகம் திரும்பி அவனைப் பார்த்தாள். ஆற்றின் குளிர் பாதித்த முகத்தில் கண்ணீர் துடங்கள் அவனுக்குத் தென்பட்டன.

"காலேஜுக்குப் போகலையா?"

"இல்லே."

அவள் தலையாட்டினாள். விஷயத்தை வெளிப்படுத்த தைரியமில்லாமல் அவன் வேறு எதையெல்லாமோ பேசத் தொடங்கினான்.

"இப்போ எந்த இயர்?"

"ஃபர்ஸ்ட் இயர்"

மீண்டும் மௌனத்தின் இடைவெளி. மழை பெய்யத் தொடங்கியிருந்தது. ஆற்றின் பரப்பில் மழைத்துளிகள் விழுவதை அவன் பார்த்தான். தொலைவில் கனகமலை கலங்கி அலைக்கழிந்தது. அங்கே புயல் வீசிக்கொண்டிருக்குமோ?

"ஒரு விவரம் சொல்லத்தான் நான் வந்தேன்."

அவள் தலை நிமிரவில்லை. கன்னங்களில் உலர்ந்த கண்ணீர்த் தடங்கள்.

"சத்தியம் செய். அப்படீன்னாத்தான் என்னாலே சொல்ல முடியும்."

பதில் வரவில்லை. அழக்கூடாது என்று அவளிடம் எப்படிச் சொல்வான்? தாசனுக்காக அவளைத் தவிர வேறு யார் அழுவார்கள்?

"தாசன். . . "பப்பன் மீண்டும் மிடறு விழுங்கினான்.

"தாசன் நேத்துத் திரும்பி வரலே."

"போலீஸ் பிடிச்சிட்டாங்க. அப்படித்தானே?"

சந்திரிகா கண்ணீருடன் புன்னகைத்தாள். அவன் அவளுடைய முகத்தைப் பார்த்துத் திகைத்து நின்றான்.

"எனக்குத் தெரியும் பப்பா."

ஒரு கோழையைப் போல அவன் அவளுடைய முகத்தைப் பார்த்தவாறிருந்தான்.

"பப்பன்... போங்க."

அதன் பிறகு அவனுக்கு எதுவும் பேசத் தோன்றவில்லை. எதுவும் செய்யத் தோன்றவில்லை. பப்பனுடைய கடமை முடிந்துவிட்டிருந்தது. இனி அவன் போகலாம்.

மழை மும்முரமாகப் பெய்துகொண்டிருந்தது.

பப்பன் வீட்டிற்குத் திரும்பினான். மழை நிற்காமல் பெய்து வயலில் தண்ணீர் பெருகிற்று. மதியம் கழிந்தது. அப்போதும் தொலைவில் ஆற்றங்கரையில் அவள் நின்று கொண்டிருப்பதை அவனால் பார்க்க முடிந்தது.

★ ★ ★

தாய்மாமனின் கையைப் பிடித்துக்கொண்டு அவள் படிக்கற்கள் மீது ஏறினாள்.

சந்திரிகாவைப் பார்த்த லீலாவுக்குப் பொறுக்க முடியவில்லை. முழுவதும் நனைந்து ஈரமாகியிருந்தது. புடைவைத் தலைப்பு தரையில் மழைநீரில் புரண்டுகொண்டிருந்தது. தலைமுடி அலைக்கழிந்து கிடந்தது.

"நீ எங்கே போயிருந்தே இவ்வளவு நேரம்?"

சந்திரிகா எதுவும் பேசாமல் உள்ளே போனாள். அவளும் பின்னாலேயே சென்றாள்.

"எங்கே உன் புஸ்தகம்?"

கையில் புத்தகம் இல்லை. எங்கே வைத்தோம் என்று அவளுக்கு நினைவு வரவில்லை.

"ஆத்தங்கரையிலே உக்காந்திருந்தா, மழையிலே."

தாய்மாமன் சட்டையைக் கழற்றினார். அவர் தலையிலும் பிடரியிலும் இருந்த மழை ஈரத்தைத் துண்டினால் துடைத்துக்கொண்டார்.

"கூப்பிட்டா வரவேண்டாமா? சொன்னாக் கேக்க வேண்டாமா?"

தாய்மாமன் விவரித்தார்.

"இவளாலே பெரும்பாடாப் போச்சி. எப்படி இங்கே வந்து சேர்ந்தோம்னு தெரியலே."

லீலாவுக்கு வந்தது கோபமா துக்கமா என்று தெரியவில்லை.

அவள் சந்திரிகாவின் தலையைத் துவட்டினாள். ஜலதோஷம் பிடிக்காமல் இருப்பதற்காகக் குறுமிளகை அரைத்து நெற்றியில் தடவினாள்.

நாற்காலியில் உட்கார வைத்து ஒரு கம்பளியினால் போர்த்தினாள்.

"தாசன். . . . . "

கம்பளி போர்த்திருந்த அவள் விம்மி அழுதாள். காய்ச்சல் வருவது போன்று நாடி விறைத்தது.

"அவன் எல்லாத்தையும் அனுபவிக்கத் தயாராகித்தானே வீட்டைவிட்டு வெளியேறினது?"

உள்ளுக்குள் லீலாவுக்கும் சங்கடம் ஏற்பட்டது. வெளியே காட்டிக் கொள்ளவில்லை. அவ்வளவுதான். இன்றில்லாவிட்டால் நாளை தாசனுக்கு இது நேரும் என்று அவள் பயந்து கொண்டுதான் இருந்தாள். கடைசியில் அது நடந்தேவிட்டது.

அவளால் சந்திரிகாவை சமாதானப்படுத்த முடியவில்லை. யாரால் முடியும் அது?

மழை தொடர்ந்து பெய்தது. ஆறு கலங்கிப் பெருகிற்று. வயல்கள் படிப்படியாக வெள்ளத்தில் மூழ்கின.

மய்யழியில் கடலின் இரைச்சல் எப்போதும் கேட்டுக்கொண்டே இருந்தது.

ஒரு பிரளயத்தின் வருகையோ?

மறுநாள் செய்தித்தாளில் முதல் பக்கத்திலேயே தாசனின் கைது பற்றிய செய்தி இருந்தது. அவனுடைய புகைப்படமும். பாண்டிச்சேரியில் படித்துக்கொண்டிருந்த காலத்தில் எடுத்த புகைப்படம். குட்டைத் தலை முடியும். செறிவான மீசையும். கண்ணில் கற்சிலையின் உறுதி.

தாசனுக்காக எல்லோரும் கண்ணீர் சிந்தினார்கள். கௌசுவம்மா பாதிப்பிரக்ஞையிலிருந்தாள். கிரிஜாவுக்கு அழுவதற்கு ஒரு காரணம் கிடைத்துவிட்டிருந்தது. கண்ணீர் வற்றிய அவளுடைய கண்களுக்கு அதற்கு மேலும் அழ முடியுமா?

தாவீதுதுரையின் நீதிமன்றம் தாசனுக்குப் பன்னிரண்டு ஆண்டு சிறைத்தண்டனையை விதித்தது.

அவ்வாறாக, தான் தொடங்கி வைத்த வேள்வி முடிவடைவதற்கு முன்னதாகவே தாசன் திரைமறைவானான்.

# 30

கிரிஜாவின் கல்யாணம் எந்த ஆரவாரமும் இல்லாமல் நடந்தேறியது. ஒரேயொரு மகள். நான்கு பேரை அழைத்து, இல்லாத ஆடம்பரத்துடன் கல்யாணத்தை நடத்த ரைட்டருக்கு ஆசை இல்லாமலில்லை.

"எல்லாரையும் கூப்பிடணும்கிற எண்ணம் எனக்குண்டு. இருந்தாலும் யாருக்கும் தெரியாம நடக்கணும்கிறது அவளோட விதின்னு யாருக்குத் தெரியும்!"

அச்சுதான் தன் மகளின் கழுத்தில் தாலி கட்டுவது. . . எவ்வாறான நியாயங்களைக் கொண்டு பார்த்தாலும் அவருக்குப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. மனது அடங்கவில்லை.

"பந்தல் போடாம, நாகஸ்வரம் இல்லாம, நாலுபேரைக் கூப்பிடாம என்ன கல்யாணம்?"

குறும்பியம்மாவுக்கு சகிக்கவில்லை. அவள் மடியிலிருந்து டப்பி எடுத்துப் பொடியை உள்ளங்கையில் கொட்டினாள்.

கிரிஜாவுக்கு முலையும் தலையும் வருவதற்கு முன்பாகவே அவளுடைய கல்யாணத்தைப் பற்றிக் கனவு காணத் தொடங்கியவளல்லவா? அச்சு அவளைத் திருப்திப்படுத்தினான். அவன்தான் கிரிஜாவின் கணவன் என்றறிந்து அவள் மகிழ்ந்தாள். ஆனாலும் பந்தலும் நாதஸ்வரமும் இல்லாமல் அதென்ன கல்யாணம்!

"ஒண்ணும் இல்லேன்னாலும் முன்னாலே ஒரு பந்தலாவது போடணும், தாமு."

"பந்தல் போட்டுக் கல்யாணப் பணற மாதிரியா இருக்கு இங்கே? ஒருத்தன் ஜெயில்லே. அவனோட அம்மாவைப் பொறுத்தவரை படுக்கையிலேருந்து எந்திரிச்சி எத்தனை நாளாச்சி?"

கௌசல்யம்மாவுக்குக் குளிப்பில்லை, சாப்பாடில்லை. தாசன் போன பின்னர் படுக்கையிலிருந்து எழுந்திருக்கவில்லை. கிரிஜாவைப் பொறுத்தவரை கண்ணெதிரில் அவளை யாரும் பார்க்கவில்லை. ஒரு கல்யாண வீடுதானா இது? இல்லாவிட்டால் இழவு வீடா?

குறம்பியம்மா ஒரு நுள்ளல் பொடி அதிகமாகவே கொட்டி உறிஞ்சினாள். அவள் திண்ணைத் தூணில் சாய்ந்து கூனிக் குறுகியிருந்தாள். இந்த வீட்டுக்கு என்னவோ நடந்திருக்கிறது. இங்கே கண்ணீர் வறறாது என்ற நிலை வந்துவிட்டது. முன்னால் அல்லல்களும் இன்னல்களும் மட்டுமே இருந்தன. எவரும் அழுததில்லை. இன்று அதற்குமட்டுமே இங்கே நேரமிருக்கிறது.

எல்லா வீடுகளிலும் பண்டிகை உற்சவம் பார்க்க ஆசைப்படுபவள் குறம்பியம்மா. மய்யழியின் மக்கள் மகிழ்ச்சியுடனும் ஆரவாரத்துடனும் நடமாடுவதைக் காண ஆசைப்படுவள் சாயங்காலங்களில் பாலத்தடியில் கோய்யேத்தி மரங்களின் கீழே பரஸ்பரம் கைகோத்து காற்று வாங்கிக்கொண்டு நடக்கும் துரைமார்களையும் துரைச்சானிமார்களையும் போல, குதிரைவண்டிகளில் புன்சிரிப்புடன் தொப்பி எடுத்து வீசிக் காண்பித்து சஞ்சரிக்கும் கால்சராய்க்காரர்களைப் போல, வண்ண விளக்குகளும் பேண்டும் ஆள்கூட்டமும் உள்ள கத்தோர்ஸ்முயியைப் போல. . . . .

ஆனால் எங்கேயோ ஏதோ முறைகேடுள்ளதாக அவள் கண்டாள. துடிப்பான இளைஞர்கள் சிறைக்குச் செல்கிறார்கள். தாய்மார்களின் தங்கைமார்களின் கண்களைத் துடைக்க நேரமில்லை. சாலையில் அதிகரித்துவரும் போலீசையும் பட்டாளத்தையும் காண்கிறாள். . . . .

குறம்பியம்மா கண்களை மூடியிருந்தாள். கண்மூடுவதற்கு முன்பு எதையெல்லாம் காணவும் கேட்கவும் வேண்டியிருக்குமோ!

அச்சு இரிம்ஸினருகில் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்தான். அவன ராமனாசாரியை வீட்டிலிருத்தி கட்டில் பொருத்தவும், நாற்காலியும் மேசையும் செய்து கொடுக்கவும் ஏற்பாடு செய்தான். கொல்லர்களிடமிருந்து செம்பும் கிண்ணங்களும் தயாரித்துக் கொண்டு வந்தான். தினமும் யாராவது அவனுடைய வீட்டுக்கு ஏதாவது சாமான்களைக் கொண்டு வருவார்கள். கல்யாணத்திற்கு வெகு முன்னதாகவே அச்சுவின் வீடு தயாராகிவிட்டது.

ஒரு நாள் சாப்பாடு முடிந்து ஆபீசுக்குப் புறப்படும்போது அச்சு சொன்னான்.

"சாயங்காலம் நான் வர மாட்டேன்."

"உம்."

திண்ணையில் உட்கார்ந்திருப்பது ரைட்டர் வழக்கம்.

"வீட்லே சாமான்களெல்லாம் வந்தாச்சி. இன்னிலேருந்து குடியிருக்கலாம்னு நினைக்கிறேன்."

"நல்லது."

வீடும் குடியும் இல்லாத காலத்தில், மிருகமாக நடமாடி வந்த காலத்தில், இங்கே தங்கியிருந்தான். இங்கேதான் மனிதனாக மாறியது. இப்போது சொந்தமாக ஒரு முகவரி, வீடு அமைந்தாயிற்று. இனியும் அவன் இங்கே எதற்காகத் தங்க வேண்டும்.?

"நல்லது அச்சு."

ரைட்டர் மறுபடியும் சொன்னார். அச்சு பட்டணம் பாக்கு விளம்பரம் பதித்த சாக்குப்பையில் தன்னுடைய சட்டையும் வேட்டியும் ஷேவிங்செட்டும் எடுத்து வைப்பதை அவர் பார்த்துக்கொண்டிருந்தார்.

ஒரு காலத்தில் அச்சுவின் மிகவும் விலை மதிப்பான சொத்தான அவனுடைய கத்தி அந்தப் பையில் இல்லை. நெடுங்காலமாக அது ஜன்னல்படியில் சும்மா கிடந்தது. கத்திமுனை துருவேறியிருந்தது. ஒரு நாள் அந்தக் கத்தி ஜன்னல்படியிலிருந்து காணாமல் போயிற்று.

அச்சு அதை யாரும் காணாதபடி மய்யழியில் மறைத்து வைத்திருந்தான்.

"அப்படீன்னா நான் கிளம்பறேன்."

அச்சு சாக்குப்பையைப் பிடித்தபடி சாலையில் நிதானமாக நடந்து போனான். ரைட்டரும் குறம்பியம்மாவும் அவன் நடந்து மறையும் வரை பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அச்சுவின் நடக்கும் முறையில் மாற்றம் வந்திருந்தது. கத்தியை வீசிக்கொண்டு நடப்பதான ரௌடியைப் போன்றதல்ல இப்போதைய நடை. பேசும் முறையிலும் நடக்கும் முறையிலும் எல்லாவற்றிலும் ஒரு பணிவு வந்திருந்தது.

தனித்துத்தான் இப்போது நடப்பது. பழைய பரிவாரம் இல்லை.

"மோம் கொப்பேன், நீ எங்களை மறந்துவிட்டாயா?"

(பொன்னார் நண்பனே, நீ எங்களை மறந்துவிட்டாயா?)

ஒரு சமயம் அந்த்ருப்போலீஸ் வழியில் தடுத்து நிறுத்திக் கேட்டார். அச்சு சும்மா ஒரு முறை சிரிக்க மட்டுமே செய்தான்.

அந்த்ருப்போலீஸ்... மய்யழியில் அபயம் தேடி வந்த முதல் நாள் தொட்டு எத்தனையோ ஆண்டுக் காலம் தன்னுடைய உற்ற தோழனாய் இருந்தார் அவர். அவருடன் எத்தனையெத்தனை அடிபிடி நடந்ததுண்டு... எத்தனையெத்தனை தடவை விபச்சாரத்தில் ஈடுபட்டதுண்டு...

கள்ளுக்கடையில் ஏறியதில்லை. ஏறி வந்துவிட்டால் பேருக்குக் கொஞ்சம் குடிப்பது மட்டும் உண்டு.

மறுநாள் குறம்பியம்மாவை அச்சு தன்னுடைய வீட்டைக் காண்பிக்க அழைத்துக்கொண்டு போனான். அவள் சரிகைக் கரையிட்ட முண்டு உடுத்தியிருந்தாள். யானைத் தந்த பொடி டப்பியை எடுத்து மடியில் வைத்துக்கொண்டாள். நடக்க முடிந்த தூரம்தான் இருந்தது. ஆனாலும் அச்சு ஒரு குதிரைவண்டி அமர்த்திக்கொண்டு வந்திருந்தான்.

அச்சுவுடன் குதிரைவண்டியில் ஏறும்போது அவளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. ப்ருகாதியே செட்டியப்பாவின் வீட்டுக்கு

முன்பாகச் சென்றடைந்தபோது அவள் வண்டியை நிறுத்தச் செய்தாள்.

"நாணீ, நாணீ, நீ இருக்கியா இங்கே?"

"கொறம்பியம்மா எங்கே போறாப்பிலே?"

நாணியும் தேவியும் வெளியே வந்தார்கள்.

"அச்சுவோட வீட்டுக்கு." பெருமையாக அவள் தெரிவித்தாள். "குட்டியப்பாவோட வீடில்லே? அதுதான்."

வண்டியில் உட்கார்ந்து நாணியுடன் பேசும்போது குறம்பியம்மாவின் குரல்வளை விம்மியது. . . மகிழ்ச்சியினால், பெருமையினால். எவ்வளவோ காலமாக மய்யழியின் மக்கள் குதிரைவண்டியில் சஞ்சரிப்பதை அவள் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறாள்! ஆனால் அவள் எத்தனை தடவை குதிரைவண்டியில் ஏறியதுண்டு? வாழ்க்கை மொத்தத்தில் ஒரு தடவை மட்டுமே. . . .

அது லெஸ்லீதுரையின் காலத்தில்தான். மிஸ்ஸி சுகமில்லாமல் படுக்கையில் கிடந்த ஒரு நாள் கஸ்தோன் குதிரைவண்டியில் கூப்பிட வந்தான்.

அதற்குப் பிறகு காலம் எவ்வளவு கடந்துவிட்டது! லெஸ்லீதுரை மண்ணடியில் போயாயிற்று. மிஸ்ஸி அவரைப் பின்தொடர்ந்து போய்விட்டாள். கஸ்தோன் தாடியும் மீசையும் வளர்த்துக்கொண்டு தன்னுடைய அறையில் சிறைக்கைதியாக வாழ்ந்துகொண்டிருக்கிறான்...

"உள்ளே வா. வந்து கொஞ்சம் டீ குடிச்சிட்டுப் போகலாம்."

நாணி கூப்பிட்டாள். முன்பு பெரும்பாலும் தினமும் அச்சு செட்டியப்பாவைப் பார்ப்பதற்காக வருவதுண்டல்லவா? அங்கே மர்டிப்படி ஏறி மாதக்கணக்கில் கடந்து போயிருந்தது.

"இப்போ வேண்டாம். ப்ருகாதி இருக்கிறப்போ வர்றேன்."

அவள் சாக்குப்போக்குச் சொன்னாள்.

அச்சுவும் குறம்பியம்மாவும் பயணத்தைத் தொடர்ந்தார்கள். மற்றும் பலருடைய வீடுகளுக்கு முன்பு வண்டியை நிறுத்தச் செய்து குறம்பியம்மா பேசினாள்.

அவளுக்கு மறக்க முடியாத ஒரு நாளாக இருந்தது அது. குதிரைவண்டியின் உடைமையாளரை ஆராதிக்கவும் குதிரைவண்டிகளைக் காணவும் செய்யும் அவளுக்கு அந்த வண்டியில் ஒரு தடவை ஏறிக்கொள்ள வருடக்கணக்கில் காத்திருக்க வேண்டியிருந்தது.

குறம்பியம்மா தினமும், அல்லது அவ்வப்போது, அச்சுவின் வீட்டிற்குச் செல்வாள். ராமனாசாரி தச்சுவேலை செய்த புதிய தேக்குக்கட்டிலில் படுத்திருப்பாள். வாழ்க்கையில் முதன்முதலாக அவள் இப்போதுதான் ஒரு கட்டிலில் படுத்திருக்கிறாள். கேளுவச்சனின் காலத்திலிருந்தே அவளுடைய படுக்கை பத்தாயத்தின் மேல்தான் அல்லவா!

அச்சுவின் திருமணம் முடிந்தால் தான் அவனுடன்தான் இருக்கப்போவதாகக் குறம்பியம்மா சொன்னாள். அச்சுவுக்கு அது மகிழ்ச்சியைத் தந்த ஒரு விஷயமாக இருந்தது.

கல்யாண நாள் வருவதைக் காண குறம்பியம்மா நாட்களை விரல்கள் விட்டு எண்ணிக் கணக்கிட்டுக் கொண்டிருந்தாள். கடைசியில் காலச் சக்கரத்தின் சுறுசுறுப்பான சுழற்சியினால் அந்த நாள் வரவும் செய்தது.

அப்போதும் கிரிஜாவிடம் மாற்றம் உண்டாகவில்லை. பேசுவதற்கான திறன் இழந்திருந்த அவள் ஓசைப்படாமல் இருந்தாள். யாரெல்லாமோ

அவளைக் குளிப்பாட்டவும் சரிகைப் புடவை உடுத்திவிடவும் செய்தார்கள். தலையில் முல்லைப் பூச் சூடினார்கள். பல முறை அவளுடைய கண்களில் மை எழுதவும் கன்னங்களில் பவுடர் பூசவும் செய்தார்கள். அவை எல்லாவற்றையும் அவளுடைய கண்ணீர் கழுவிக் களைந்தது.

எவரையும் அழைத்திருக்கவில்லை. மெறி பதிவு அலுவலகத்திற்குப் போகும்போது அச்சுவும் கிரிஜாவும் தவிர ஐந்தாறு பேர் மட்டும் இருந்தார்கள். சாட்சிகளாக வந்த நாணுவக்கீலும் ஒஸ்ஸியே நாதனும் அந்தக் குழுவில் இருந்தார்கள்.

மெறியில் ரிஜிஸ்தரில் ஒப்பமிட்ட பின்னர் அவர்கள் வீட்டிற்குத் திரும்பினார்கள். அங்கே ஒரு தேநீர் உபசாரம் தயாராகியிருநதது.

''நான் இந்த ஊர்க்காரனில்லே. ஆனாலும் உற்றாரும் வேண்டியவர்களுமாக நாலுபேர் எனக்கும் உண்டு. அவங்களைக் கூப்பிட்டு ஒரு கிளாஸ் டீயாவது கொடுக்கணும்னு எண்ணமிருக்கு எனக்கு."

விருந்து வைபவத்திற்கு ரைட்டர் மறுத்தபோது அச்சு சொன்னான். ரைட்டருக்கு அதன் பிறகு எதுவும் பேச முடியவில்லை. அது, அச்சுவின் சொந்த விஷயமல்லவா!

அச்சுவின் வீட்டிற்கு முன்பாகக் குதிரைவண்டிகளும் கார்களும் வந்து நின்றன. அழைக்கப் பட்டிருந்தவர்கள் வந்திருந்தார்கள்.

"ஃபெலிஸித்தாஸ்யோம். நோ வீவ் ஃபெலிஸித்தாஸ்யோம்."

அவர்கள் அச்சுவின் கையைப் பிடித்து வாழ்த்துக்கள் தெரிவித்தார்கள்.

பார்ட்டி முடிந்தபோது நேரம் மிகவும் கடந்திருந்தது. இரிமீஸில் நெடுங்காலமான சவக்கல்லறைகளும் சிலுவைகளும் நிலாவில் விழித்திருந்தன. கள்ளுக்கடைகள் அடைத்திருந்தன. குறம்பியம்மா லெஸ்லீதுரையின் குதிரையின் குளம்படி ஓசையைக் கேட்கத் தொடங்கியிருந்தாள்.

கடைசியில் விருந்தினார்கள் போன பின்னர் எதனாலோ அச்சு தளர்வுற்றிருந்தான். முன்பக்கத்துக் கதவைத் தாழிடும்போது கைகள் விறைத்தன.

கடைசியில் அந்த நாள் வந்திருக்கிறது. அச்சு புருஷார்த்தம கண்டறியும் நாள்.

படுக்கையறை நோக்கி நடந்தபோது கால்களும் விறைத்தன. மெறியிலிருந்து வந்த பிறகு அவன் கிரிஜாவைப் பார்க்கவே இல்லை. விருந்தினர்கள் சந்தடி. ஆனாலும் எப்போதும் அவளுடைய முகம் மனதில் இருந்தது. அவளுடைய கன்னங்களில் கண்ணீரில் நனைந்த பவுடரின் வாசனைக்காக அவன் தவித்தான். அவளுடைய கண்ணீரைத் துடைப்பதற்காக அவன் துடித்தான்.

உள்ளே இருட்டாயிருந்தது. நிலைப்படியில் அவன் சந்தேகத்துடன் நின்றான்.

"கிரிஜா. . . . ."

கூப்பிடாமலேயே உள்ளே போகலாம். எதுவும் செய்யலாம். ஆனாலும் அவன் குரல் கொடுத்தான். ஆனால், சத்தம் வெளியே வந்ததா?

"என்மேல் கோபமா?"

அவன் உள்ளே போகாமலே நின்றிருந்தான். கோபம்தான் என்று அவனுக்குத் தெரியும். அவளுடைய வற்றாத கண்ணீரை அவன் பார்த்தான். ஆனால் அச்சு தனக்குள் பிரதிக்ஞை செய்திருந்தான்... அன்பினால் நான்

உன்னுடைய கண்ணீரைத் துடைப்பேன். அன்பினால் நான் என்னுடைய கடந்த காலத்தைச் சுட்டெரித்து அழிப்பேன். அன்பினால் நான் உன்னைப் பணியச் செய்வேன்...

அவன் அவளது குரலைக் கேட்பதற்காகக் காத்து நின்றான். நிமிடங்கள் கடந்து போய்க்கொண்டிருந்தன. அவன் உள்ளே போனான். முல்லைப் பூவின், பவுடரின் வாசனை அல்ல அவன் இதுவரை அனுபவித்தது. வார்னிஷின் வாசனைதான்.

அவன் தீப்பெட்டியை உரசினான். ராமனாசாரி செய்த கட்டில் வெறுமையாய்க் கிடந்தது.

அவன் உரத்த குரலில் அவளுடைய பெயரைக் கூப்பிட்டான். விளக்குகள் ஒவ்வொன்றாக ஏற்றினான். கையில் சுடர்விடும் முட்டைவிளக்குடன் அவன் முற்றத்திற்குச் சென்றான்.

நிலா வெளிச்சத்தில் மூழ்கிய, பூத்திராத பாரிஜாதத்தின் அடியிலிருந்து அவன் தேம்பல்களைக் கேட்டான்.

"கிரிஜா..."

"நான் வரமாட்டேன்."

அவள் கால்முட்டுகளில் முகம் புதைத்திருந்தாள். தலையில் சூடியிருந்த முல்லைப் பூக்கள் மண்ணில் சிதறிக் கிடந்தன. பிளவுசின் முன்பகுதி கண்ணீரில் நனைந்திருந்தது. முட்டைவிளக்கின் வெளிச்சத்தில் அவனால் எல்லாவற்றையும் பார்க்க முடிந்தது.

"இதென்ன சிறுபிள்ளைத்தனம்? யாராச்சும் பார்த்தாங்கன்னா?"

அவள் முழங்கால்களிலிருந்து முகத்தை நிமிர்த்தவில்லை. சிறிது நேரம் அவன் அசையாமல் நின்றான்.

சட்டென்று அவன் அவளுக்கு நேராகத் திரும்பினான். மய்யழியின் புத்திரிகளை பலாத்காரம் செய்த ஆண்மகன். அவனுடைய பாறை போன்ற வலுவான கைகள் குழந்தையைத் தூக்குவது போல அவளைத் தூக்கின. அவளைக் கையிலேந்தி ஒரு புயலைப் போன்று அவன் படுக்கையறை நோக்கி நடந்தான்...

பின்னர் கதவுகள் அடைபட்டன.

சாமக்கோழி கூவிற்று. அடைத்த கதவின் மறுபுறத்திலிருந்து கிரிஜாவின் தேம்பல்கள் கேட்டுக்கொண்டிருந்தன. ஆனால், மய்யழிமாதாவின் தேவாலயத்திலிருந்து விடிகாலை மணி ஓசையிட்டபோது அவளுடைய உரத்த சிரிப்பும் வளையோசையும் கேட்கத் தொடங்கின.

சிதைவுற்ற கன்னிச்சவ்வுடன் காலையில் வெளியே வந்தபோது கிரிஜாவின் முகத்தில் கண்ணீர்ச்சுவடுகள் இருக்கவில்லை. கன்னங்கள் சிவந்தும் கண்கள் இடுங்கியும் இருந்தன.

மெல்லிய சலனத்திலும் சப்தத்திலும் அவளுடைய மனது துடித்தது. அவள் மூழ்கி நனைந்தாள். சிரித்தாள். அச்சு என்ற ஆண் அவளுடைய எல்லா துக்கத்தையும் அழித்துவிட்டிருந்தான்.

அதற்குப் பிறகு கிரிஜாவின் கண்கள் நனையவே இல்லை.

# 31

தாசனின் இல்லாமை, அண்ணாச்சியை வெகுவாக பாதித்திருந்தது. அவர்தான் புரட்சியின் தலைவராக இருந்தபோதிலும் அதன் பிரதான

சூத்திரதாரன் தாசன்தான். வெள்ளைக்காரர்களின் வரலாறும் மனோதத்துவமும் மற்றவர்களைவிட அவனுக்குத் தெரிந்திருந்தது. தாசன் தண்டிக்கப்பட்டான் என்றறிந்தபோது சில நாட்கள் கணாரன் அண்ணாச்சி உண்ணவோ உறங்கவோ இல்லை. ஊன்றுகோலை இழந்த முடவனைப் போல அவர் அலைக்கழிந்தார்.

"கணாரன் அண்ணாச்சி, அவனுக்குப் பன்னிரண்டு வருஷம்தான் கிடைச்சிருக்கு. அவங்க அவனைக் கொன்னிடலே. அதுக்கு நாம சந்தோஷப்படணும்."

வாசூட்டிதான் அதைச் சொன்னது. பப்பன் எதுவும் பேசாமல் உட்கார்ந்திருந்தான்.

"தப்பு என்னோடதுதான். எனக்குத்தான் தாசனைவிட வயசு. மய்யழிக்குப் போறப்போ அவனை நான் தடுத்திருக்கணும்."

"அதையெல்லாம் பேசி இனிமே என்ன பயன்?"

"குற்றவாளிகள் நாம இல்லே. அவனோட அப்பாதான்... அந்தப் படுக்காளி. அவரு அவனைப் பிடிச்சிக் கொடுத்ததுக்குச் சமமில்லே? வெளியிலே போலீஸ்காரங்க நின்னுக்கிட்டு இருக்கிறப்போதானே அவனை விரட்டி வெளியே தள்ளினது?"

பப்பனின் முகம் சிவந்தது.

"யாரும் யாரையும் குற்றம் சொல்லிப் பயனில்லே. வரவேண்டியது வர்ற காலத்திலே வந்தே தீரும்."

கணாரன் அண்ணாச்சி தன்னை ஆசுவாசப்படுத்திக் கொள்ள முயன்றார். அவர் விதியையும் தெய்வத்தையும் நம்புகிறவர். விடுதலைப் போராட்டம் உச்சக்கட்டத்தில் இருந்த காலத்திலும் அவர் கோயிலுக்குப் போவார். மண்டல பூஜைக் காலத்தில் மீன் சேர்த்துக் கொள்ள மாட்டார்.

சில நாட்கள் பித்தம் பிடித்தவரைப் போலக் கணாரன் அண்ணாச்சி உறக்கத்தில் ஆழ்ந்திருந்தார். ஆனால் அதிக காலம் அது தொடரவில்லை. அவர் கர்மக்ஷேத்திரத்தில் இருந்தார். கடமைகள் அவரை விழித்தெழச் செய்தன. மய்யழியின் அழுகை மீண்டும் காதுகளில் முழங்கத் தொடங்கியது.

தாசனைப் பற்றியதான சோகச் சிந்தனைகளை மறந்து அவர் இலட்சியத்தை நோக்கிய தனது பயணத்தைத் தொடரலானார்.

மய்யழியின் எல்லைப்பகுதிகளில் கதர் அணிந்த விடுதலை வீரர்கள் பெருகினார்கள். காந்தியின் காலகட்டத்தில் சத்தியத்தின், சுதந்திரத்தின் செய்திகளைப் பரப்பி நடந்த திருத்தொண்டர்களின் மறு அவதாரமாக இருந்தார் அவர்.

அவ்வப்போது மய்யழியில் இரகசியமாக நடமாடி வந்த ஜனார்த்தனன் ஒரு செய்தியைக் கொண்டு வந்தான்.

"ஸெக்ரத்தேர் கருணன் சம்மதிக்கிற நிலைமை உண்டாயிருக்கு."

இதற்குள்ளாக மய்யழியிலிருந்து பல உத்தியோகஸ்தன்மார்கள் வேலைகளை ராஜினாமா செய்துவிட்டுப் போராட்டத்தில் சேர்ந்திருந்தார்கள். த்ராவோ ப்யூப்ளிக்கில் அப்துல்லா, ஒஸ்ஸியே நாதன், கூர்கோம்ப்லமாந்தேரில் பேராசிரியர் கேசவன், லபூர்த்தனெ கல்லூரியில் லட்சுமி டீச்சர் என்பதாக எத்தனையோ பேர். கடைசியாக இதோ வெள்ளைக்காரர்களின் காவல்படையிலிருந்த கருணனும் காலத்தின் அறைகூவலைக் கேட்கத் தொடங்கியிருக்கிறார்.

கணாரன் அண்ணாச்சி கருணனுக்குப் பல தடவைகள் கடிதங்கள்

எழுதி அனுப்பியிருக்கிறார். காலத்தின் குரலைக் கேட்க அவரை வற்புறுத்தினார். வெள்ளைக்காரர்களின் அடியாளாக நீங்கள் இனிமேலும் அதிக காலம் தொடர முடியாது. கணாரன் அண்ணாச்சி எழுதினார். இன்றில்லாவிட்டால் நாளை அவர்கள் வெளியேறுவார்கள். அன்று நாங்கள் உங்களை தண்டிப்போம். அந்த தண்டனையைத் தவிருங்கள். நாங்கள் பொறுத்திருக்கிறோம். நீங்கள் எங்களுடன் வந்துவிடுங்கள்.

முதலில் கருணன் அந்தக் கடிதங்களையெல்லாம் சுருட்டிச் சேர்த்து எறிந்துவிட்டார். பின்னர் அவற்றையெல்லாம் படிக்கும் நிலை வந்தது. ஒரு சமயம் மடியில் கணாரன் அண்ணாச்சியின் கடிதத்துடன் அவர் நீண்ட நேரம் வெளிவராந்தாவில் சாய்வுநாற்காலியில் சிந்தனையில் ஆழ்ந்தார். தன்னுடைய சிம்மாசனம் நழுவுகிறது என்பதாக அவருக்குத் தோன்றியது. காலடியில் பூமி சரிகிறது.

அவர் மீண்டும் கணாரன் அண்ணாச்சியின் கடிதத்தைப் படித்தார். கறுத்த உப்பிய முகத்தில் வியர்வை துளிர்த்தது. சாராய மயக்கத்தில் மரத்துப்போன முகம் வெளிறியது. கடைசியில் கடிதத்தைப் பிடித்திருந்த கை விறைத்தது...

காலத்தின் குரல் ஸெக்ரத்தேர் கருணனின் செவியைச் சென்றடைந்தது.

"என்ன தூங்கலே?"

சௌமினியம்மா பல தடவை வெளிவராந்தாவில் வந்து நின்று கேட்டாள். அவர் படுக்கையறைக்குப் போகவில்லை. ஒருபோதில் சாய்வுநாற்காலியில் படுத்துக்கிடப்பார். இல்லாவிட்டால் பின்புறம் பிணைத்துவைத்த கைகளுடன் உலாத்துவார். அவ்வாறு குஞ்சக்கன் கொளுத்தி வைத்த முனிசிபல் விளக்குகள் அணையும் வரை.

"தூக்கம் வரலே. நீ போய்ப் படுத்துக்கோ சௌமினி."

எதனால் தூக்கம் வரவில்லையென்று அவள் கேட்கவில்லை. உள்ளே சென்று படுத்தாள்.

ஸெக்ரத்தேர் கருணனின், பத்திருபது ஆண்டுகளாக மய்யழியில் வாழும் முடிசூடா மன்னனின், மனதில் நடக்கும் கலவரத்தை சௌமினியம்மா அறிந்திருக்கவில்லை. மய்யழியில் நடக்கும் எதுவும் அவளுக்குத் தெரியாமலிருந்தது. பகலின் பெரும்பகுதியை அவள் உறங்கித் தீர்ப்பாள். மீதி நேரம் பூஜை அறையில். அளவுக்கதிகமாகப் பருத்து, கண்களில் மிதப்புள்ள ஒரு தோற்றத்திலிருந்தாள் அவள்.

நேரம் பாதி இரவு கழிந்தது. வெள்ளையடித்த மதிலுக்கு அந்தப் புறத்தில் சாலை வெறுமையாய் இருந்தது. இரவில் வெளியே செல்ல மய்யழியின் மக்கள் பயப்படத் தொடங்கியிருந்தார்கள். சந்தேகப்பட்டவர்களைப் போலீசோ அடியாட்களோ பிடித்து அடிப்பார்கள்.

சாராய போதையில் வாழப் பழகி நைந்தவர்களும் சோம்பேறிகளும் ஆன மய்யழி மக்களின் வாழ்க்கையில் போராட்டம் குறுக்கிட்டிருக்கிறது.

அன்று மட்டுமல்ல, பல இரவுகளில் மீண்டும் அவ்வாறு தூக்கம் வராமல் வராந்தாவில் உலவினார். அவர் நினைக்கலானார்... திரைச்சீலை இறங்குவதான நல்ல நாட்களைப் பற்றி... கோட்டும் தொப்பியும் அணிந்து குதிரைவண்டியில் சவாரி செய்துகொண்டிருந்த நாட்கள்... மூப்பன்துரையின் பங்களாவில் விருந்துக்குப் போன நாட்கள்... சாயங்காலம் சௌமினியுடன் சேர்ந்து கடற்கரையில் காற்று வாங்கப் போன நாட்கள்... அந்த நாட்கள் முடிவுக்கு வந்துகொண்டிருக்கின்றன.

குதிரைவண்டிக்குப் பதிலாக இன்று கார் இருக்கிறது. ஆனால் இன்று விருந்துகள் இல்லை. சாயங்கலாம் காற்று வாங்கப் போக வெள்ளைக்காரர்களுக்கோ உயர்ந்த உத்தியோகஸ்தர்களுக்கோ தைரியம் இல்லை. போராட்ட நாட்கள். பதுங்கியிருக்கும் ஆபத்தான நாட்கள்.

காலம் மாறிக்கொண்டிருக்கிறது. அவர் புரிந்துகொண்டார். கடந்துபோன நாட்கள் இனி திரும்பி வராதென்றிருக்க, இனி கடந்த காலத்தைப் பற்றிச் சிந்தித்து எதற்காகக் கவலைப்பட வேண்டும்? காலத்திற்கேற்பத் தானும் மாறத்தான் வேண்டும். அவர் நிச்சயித்துக்கொண்டார்.

அவ்வாறாக அவர் கணாரன் அண்ணாச்சியின் கடிதங்களுக்கு முதன்முதலாக ஒரு பதில் எழுதினார். கணாரன் அண்ணாச்சியை அது மகிழச் செய்தது.

"ஜனார்த்தனா. நீ கருணனைப் பார்த்து வரணும்."

வாசூட்டி பயந்தான். கணாரன் அண்ணாச்சி தன்னுடைய பிரதிநிதியாக ஜனார்த்தனனை அனுப்பி வைப்பது வேறு யாரிடமுமல்ல. ஸெக்ரத்தேர் கருணனிடம். எப்படி பயப்படாமலிருப்பது? பிடித்து போலீசில் ஒப்படைக்க மாட்டார்களென்று யாருக்குத் தெரியும்?

"அவங்களாலே இனிமே நம்மை எதுவும் செய்ய முடியாது. செய்தால் அது நெருப்போடு விளையாடின மாதிரிதான்."

ஜனார்த்தனனுக்கு தைரியம் இருந்தது.

ஸெக்ரத்தேர் கருணனின் பங்களாவுக்குள் நுழைந்து சென்றபோது கொஞ்சம்கூட பயம் உண்டாகவில்லை. மய்யழியின் மக்களுக்கு துரோகம் செய்து நடந்த ஒரு காலம் முன்பு இருந்தது. அந்தக் காலம் அவருக்கு எதிராகத் திரும்பிவிட்டது. இனிமேலும் துரோகம் செய்ய அவரால் முடியாது.

கணாரன் அண்ணாச்சியின் கடிதத்துடன்தான் சென்றான். அதனால் ஜனார்த்தனனைப் புரிந்துகொள்ள அவருக்கு இடர்ப்பாடு எதுவும் இல்லை.

"உட்காரு. . . . "

மேலே அலுவலக அறையில் ஜனார்த்தனன் உட்கார்ந்தான். சுவரில் துளையிட்டு மாட்டிய மூப்பன்துரையின் படம் இருந்தது.

"மொஸ்யே கணாரனின் கடிதமெல்லாம் எனக்குக் கிடைச்சது. . . ."

கருணன் ஜனார்த்தனனுக்கு நேர் எதிரே உட்கார்ந்தார். வளைகோடுகளிட்ட பான்ட்டாக இருந்தது அவர் அணிந்திருந்தது. அதனால் தலை நரைத்த அசாதாரண வளர்ச்சி பெற்ற ஓர் இளைஞனைப் போலிருந்தார் கருணன்.

ஐந்து நிமிட நேரம் பேசிய பிறகுதான் ஏதேனும் இக்கட்டில் சிக்க வைக்கும் உத்தேசம் இல்லையென்று ஜனார்த்தனனுக்கு நம்பிக்கை வந்தது. அப்போது அவன் அரட்டைக்காரனாகிவிட்டான். அடுத்தடுத்து பீடி புகைத்துக்கொண்டு அவன் விடுதலைப் போராட்டத்தின் முன்னேற்றம் பற்றி விவரித்தான்.

"இனிமே எங்களை யாராலும் தடுக்க முடியாது. கடவுளாலேகூட!" ஜனார்த்தனன் காட்டத்துடன் சொன்னான்.

"நீங்க சர்க்கார் உத்தியோகஸ்தருங்க எங்ககூட நில்லுங்க. அது அரசாங்கத்தை செயலிழக்கச் செய்ய உதவியாயிருக்கும். எங்க வேலை அதனாலே குறையும். நீங்க என்ன சொல்றீங்க மொஸ்யே?"

கருணன் நாற்காலியில் கொஞ்சம் அசைந்துகொடுத்தார்.

"பணம் எவ்வளவு வேணுமானாலும் நான் தர்றேன். இப்போதைக்கு வேறெதையும் நீங்க என்னை வற்புறுத்தக்கூடாது."

"உங்க பணம் மட்டும் போதாது எங்களுக்கு. நீங்களும் வேணும்."

"என்னோட கஷ்டத்தை நீங்க புரிஞ்சிக்கணும். நான் யாருன்னு உங்களுக்குத் தெரியுமில்ல?"

"தெரியும், மூப்பன்துரையோட வலது கையாக இருந்து நாடாளும் ஸெக்ரத்தேர் கருணன். நல்லாவே தெரியும். அதனாலேதான் உங்களை நாங்க வற்புறுத்துறோம்."

கருணன் எழுந்திருந்து அறை நெடுக உலவத் தொடங்கினார். அவருடைய தடித்துக் கொழுத்த உடம்பு நாற்காலிகளுக்கும் சோபாக்களுக்கும் இடையிலூடே, இலட்சிய நோக்கம் நஷ்டப்பட்டுவிட்டது போன்று அலைந்தது. மூப்பன்துரையின் முகம் அவருடைய மனக்கண்களுக்கு முன்பு தெரிந்தது. இருபது முப்பது ஆண்டுக்காலம் வெள்ளைக்காரர்களுக்குப் பணிபுரிந்த, அவர்களுடைய அப்பம் தின்று ஆளான, தான் கணாரனின் பக்கம் சேர்ந்ததாக அறியும்போது மூப்பன் துரையினால் பொறுத்துக் கொள்ள முடியுமா?

சொந்த எஜமானனைக் கடித்த ஒரு நாயைப் போல அவர் புழுங்கினார்.

அவன் உலவிக்கொண்டே இருந்தார். அப்படி நடந்து நடந்து கால்கள் தேய்ந்து போகுமென்று தோன்றிற்று. கருணனின் முகம் வியர்வையில் குளித்தது. அவர் பெருமூச்செறிந்தார்.

கருணனுடைய உணர்வு மாற்றத்தை வெளிப்படுத்துவதாய் அவருடைய உதடுகள் சுழிப்பதைப் பார்த்தபடி ஜனார்த்தனன் உட்கார்ந்திருந்தான்.

கடைசியில் ஸெக்ரத்தேர் கருணனின் கால்கள் நிலைத்தன. அவர் ஜனார்த்தனனுக்கு எதிரில் வந்து நின்றார். அவருடைய வெளிறிய உதடுகள் அசைந்தன.

"போயி கணாரன்கிட்டச் சொல்லு.... அவர் சொல்றதையெல்லாம் நான் ஒப்புத்துக்கொள்கிறேன்னு."

"மெர்ஸி, மொஸ்யே..."

ஜனார்த்தனன் மகிழ்ச்சியுடன் எழுந்தான். அவன் கம்பளம் விரித்த மாடிப்படியில் ஓடியபடி இறங்கினான். பங்களாவின் கேட் கடந்து வெளியில் வந்தான்.

"அது குட்டியச்சனின் இளைய மகனில்ல? அவன் எதுக்காக இந்த நடுநாத்திரியிலே வந்தது?"

ஜனார்த்தனன் போன பின்னர் சௌமினியம்மா மெதுவாக வெளியே வந்தாள். கருணனுக்கு அவள் சொன்னது கேட்கவில்லை. அவர் சிகரெட்டின் விலை திறந்து ஒரு 'கோல்வா' எடுத்துப் பற்றவைத்தார். அவர் மனம் நிலை தடுமாறும்போது மட்டுமே, எப்போதாவது புகைபிடிப்பார். கடந்த சில நாட்களில் அவர் குடித்துத் தீர்த்த சிகரெட்டுகளுக்குக் கணக்கில்லை.

மூன்று நான்கு நாட்கள் கழிந்தன.

"சௌமினி, நீ குழந்தைங்களோட கண்ணூரிலே போய் இருந்துக்கோ. இங்கே ஒரு அமைதி இல்லே. குழப்பமெல்லாம் முடிஞ்சி வந்தாப் போதும்."

"இங்கே இப்போ என்ன குழப்பம்?"

"குழப்பம் உண்டாகப் போகுது."

"அப்போ நீங்க?"

"லீவு கிடைச்சா நானும் வரலாம். நீ குழந்தைங்களோட இன்னிக்கே போயிடு."

சௌமினியம்மா ஒப்புக்கொண்டாள். அவளுக்கு சந்தேகப்படுவதற்கு எதுவுமில்லை. அன்றைக்கே அவள் தனது மூன்று குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு தாய்வீட்டுக்குப் போனாள்.

மறுநாள் இரவு கருணன் எல்லைப்புறத்தைக் கடக்க நிச்சயித்திருந்தார். தினமும் உத்தியோகஸ்தர்களும் அல்லாதவர்களுமாக மய்யழியின் மக்கள் மய்யழியை விட்டுவெளியேறிப் போய்க்கொண்டிருந்தார்கள். அதைத் தடுப்பதற்காக எல்லைகளில் போலீஸ் பந்தோபஸ்து போடப்பட்டிருந்தது.

எல்லையைக் கடப்பதற்கான நேரமும் இடமுமெல்லாம் கணாரன் அண்ணாச்சி முன்கூட்டியே நிச்சயித்திருந்தார். எல்லாவற்றையும் விளக்கமாக அவர் கணாரனுக்குத் தெரிவித்தும் இருந்தார். சாதாரணமானவனுக்கு எல்லைப்புறத்தைக் கடப்பது என்பது ஒரு அக்னிப் பரீட்சைதான். பிரெஞ்சுப் போலீசின் குண்டுக்கு இரையாக நேரலாம். ஆனால் வெள்ளைக்காரர்களின் வலது கையான ஸெக்ரத்தேர் கருணனுக்குஅது எளிதாக இருக்கும். அவரைப் போலீஸ்காரர்கள் எப்படி சந்தேகப்படுவார்கள்? மய்யழியின் மக்கள் எல்லோருமே போய்விட்டாலும் வெள்ளைக்காரர்களுடன் நிற்க வேண்டியவர் அல்லவா அவர்?

அன்றும் வழக்கம்போல் ஸெக்ரத்தேர் கருணன் சூட்டும் தொப்பியும் அணிந்து காரில் மூப்பனின் பங்களாவுக்குச் சென்று வேலை பார்த்தார். மதியம் வெள்ளைக்காரர்களுடன் சேர்ந்து உணவருந்தினார். சாயங்காலம் ஸெக்ரத்தாரியாயிலிருந்து வெளியே வரும்போது அவருடைய கண்களில் நீர் சுரந்தது. கோட்டுப் பையிலிருந்து கைக்குட்டை எடுத்து யாரும் பார்க்காதபடி அவர் கண்ணீரைத் துடைத்தார். கேட்டின் அருகில் கார் நின்றிருந்தது. அவர் கடைசியாக ஒரு தடவை திரும்பிப் பார்த்தார். அலையெழுப்பும் சமுத்திரத்தின் ஓரத்தில், மய்யழிஆற்றின் கரையில், குன்றின் உச்சியில் அமைந்திருந்த மூப்பனின் பங்களா. பங்களாவின் நிழலில் ஸெக்ரத்தேரியா. . . . .

தலைவனே, விடைபெறுகிறேன்! அவருடைய உதடுகள் முணுமுணுத்தன.

சௌமினியும் குழந்தைகளும் இல்லாமல் தனித்திருந்த பங்களாவில் உட்கார்ந்து அவர் குப்பியைத் திறந்தார். இரவு பதினோரு மணிக்கு ஜனார்த்தனன் வந்தபோது குப்பி காலியாகியிருந்தது.

ஜனார்த்தனனுடன் குனிந்த தலையுடன் அவர் காரில் ஏறினார். எல்லையிலிருந்து சிறிது தொலைவில் அவர்களை இறக்கிவிட்ட பின்னர் டிரைவர் காரைத் திருப்பி ஓட்டினார். கருணன் பெருமூச்சு விட்டுக்கொண்டு முன்னோக்கி நடந்தார்.

எல்லைச்சாவடி இருட்டாக இருந்தது. பிரதான சாலையிலிருந்து தொலைவில் ட்யூட்டியிலிருந்த சாமுபோலீஸ் சலாம் செய்தார். அவர் கணாரன் அண்ணாச்சியுடன் தொடர்பு கொண்டவர். எல்லைச்சாவடிக்குப் பின்னால் மங்கிய இருட்டில் கணாரன் அண்ணாச்சியின் மெலிந்த உருவத்தைக் கருணன் பார்த்தார். இருட்டில் அவருடைய கண்கள் பிரகாசித்துக் கொண்டிருந்தன.

"நன்றி கருணா!"

தன்னை நோக்கி நடந்து வரும் கருணனைப் பார்த்து கணாரன் புன்னகைத்தார். அவர் . கருணனைத் தழுவிக்கொண்டார். சட்டென்று கணாரன் அண்ணாச்சி தன்னுடைய கைகளைப் பின்னுக்கிழுத்தார்.

கருணனின் உடம்பு பனியைப் போலக் குளிர்ந்திருந்தது. அவர் நின்ற இடத்திலேயே நின்றபடித் தள்ளாடினார். இருந்தாலும் பின்னர் சமாளித்துக்கொண்டார். வலையிட்ட நரைத்த தலையிலிருந்த தொப்பி தூரத்தில் எகிறி விழுந்தது.

சாமுபோலீசும் ஜனார்த்தனனும் திகைத்து நிற்க, கணாரன் அண்ணாச்சி ஸெக்ரத்தேர் கருணனின் அருகில் உரசியபடி நின்றார். அவருடைய சுவாசம் ஸ்தம்பித்திருந்தது. கணாரன் அண்ணாச்சி தெரிந்துகொண்டார்... ஸெக்ரத்தேர் கருணனின் உயிர்த்துடிப்பற்ற சரீரம் இன்னும் குடிகொண்டிருப்பது எல்லைக்கு அப்புறத்திலுள்ள பிரெஞ்சு மண்ணில்தான்.

அந்த மண்ணிலிருந்து அவர் எங்கே போவார்?

# 32

*1954 ஏப்ரல் 27.*

பெருந்திரளான விடுதலைப் போராட்ட வீரர்கள் துப்பாக்கிகளை சுவாலிட்டுக் கொண்டு மய்யழியின் ஒரு பகுதியான செறுகல்லாயியை வசப்படுத்த முயன்றார்கள். பட்டாளம் வெடி வைத்தது. தோழர்கள் அச்சுதனும் அனந்தனும் இரத்த சாட்சிகளானார்கள்.

அதிகாலை வண்டிக்கு வடகரைச் சந்தைக்குப் போவதற்காகப் புறப்பட்ட குஞ்ஞானன் திரும்பி வந்தான்.

"குஞ்சக்கன்தானே அது?"

குறம்பியம்மா அதிகாலையிலேயே எழுந்து வெளிவராந்தாவுக்கு வந்து உட்கார்ந்திருந்தாள்... அன்றைய நாளின் முதன்முதலான பெர்டியை உள்ளேற்றிக்கொண்டு.

"நான் குஞ்ஞானன் கொறம்பியம்மா."

"வரவர கண்ணு பார்க்க முடியலே குஞ்ஞானா. நீ எங்கேயாக்கும் காலங்காத்தாலே?"

"சந்தைக்குப் போகணும்னு. எல்லையைத் தாண்ட அவங்க விடமாட்டேங்கறாங்க. அந்தக் கணாரனோட ஆளுங்க."

"அதென்ன குஞ்ஞானா?"

"போராட்டமாம். சுதந்திரம்னும் போராட்டம்னும் சொல்லி மத்தவங்களோட பொழப்பைக் கெடுக்கிறாங்க."

"யாரு குஞ்ஞானா போராட்டம் பண்றது?"

"ஒங்க தாசனில்லே... அவனும் கூட்டாளிங்களும்தானே இந்த அனர்த்தம் வரவழைச்சது?"

குறம்பியம்மா சலித்துக்கொண்டாள். தாசன் சிறையிலிருப்பது அவளுக்குத் தெரியும். யாருக்கும் எந்த விவரமும் தெரியவில்லை. சிறைச்சாலை சென்று பார்த்து வரப் போலீசார் எவரையும் அனுமதிக்கவில்லை. சில சமயங்களில் தாசனைப் பற்றி நினைத்து நெஞ்சு வெடித்து அவள் அழுவதுண்டு.

"நான் போறேன்."

சாலையில் நின்றிருந்த குஞ்ஞானன் சொன்னான்.

தலையில் கட்டியிருந்த துண்டை அவிழ்த்து முகத்தைத் துடைத்துக்கொண்டு அவன் நடக்கத் தொடங்கினான். மில்லில் தைத்த கையில்லாத சட்டைப் பையில் உப்பிய பணப்பை தென்பட்டது.

கொஞ்ச காலமாக ஊரில் ஏதோ நடந்துகொண்டிருப்பது குறம்பியம்மாவுக்குத் தெரியும். போலீஸ்காரர்களும் அடியாட்களும் வீட்டிற்குள் புகுந்து கண்டதையெல்லாம் போட்டு உடைத்தார்கள்? தாமுவை ஜெயிலில் அடைத்தார்களல்லவா? இப்போது இதோ தாசன் ஜெயிலில் இருக்கிறான்.

எங்கேயோ ஏதோ தகராறு. காலம் மாறுகிறது. அதில் எதுவும் குறம்பியம்மாவுக்கு அக்கறையில்லை. ஆனால், வெள்ளைக்காரர்களை மய்யழியிலிருந்து விரட்டியடிக்கத்தான் இந்தப் போராட்டம் என்றறிந்தபோது குறம்பியம்மா நடுங்கினாள். தாசனை ஜெயிலில் அடைத்திருப்பது வெள்ளைக்காரர்கள் என்பதாகக் கேள்விப்பட்டபோது அவள் நம்பவில்லை.

"அவங்க எதுக்காக அவனை ஜெயில்லே போடணும்?"

"தாசன் வெள்ளைக்காரங்களோட எதிரி."

"என் தாசனைப் பத்தி இல்லாததும் பொல்லாததும் பேசக் கூடாது... கேட்டீரா உன்னிநாயரே!"

தாக்கீது செய்வது போலத்தான் குறம்பியம்மா பேசினாள். தாசனைப் பற்றிப் பொல்லாப்பாகப் பேசுவது அவளுக்குப் பொறுக்கவில்லை. ஆனாலும் ஊர்க்காரர்கள் பேசினார்கள். குறிப்பாக உன்னிநாயரும் குஞ்ஞானனும்.

தாசன் வெள்ளைக்காரர்களின் எதிரியாமே! இன்றோ நேற்றோ அல்ல அவள் இதைக் கேள்விப்பட்டது. எவ்வளவோ காலமாகிவிட்டது. இருந்தபோதிலும் இன்றும் அவளால் அதை நம்ப முடியவில்லை.

"என் தாசன் அப்படிச் செய்ய மாட்டான். என் தாசன் அப்படிச் செய்ய மாட்டான்..."

புத்தி மழுங்கத் தொடங்கிய குறம்பியம்மா மீண்டும் மீண்டும் சொல்வாள். கடந்த காலத்தின் பெரும்பகுதியின் நிழல் பரவிக் கிடக்கிறது. நினைவுகளுக்கு திக்பிரமை பிடித்திருக்கிறது. . . . .

சந்தைக்குப் புறப்பட்ட குஞ்ஞானன் மட்டுமல்ல திரும்பி வந்தது. பலவகையான சாமான்கள் கொண்டு வருவதற்காகத் தலைச்சேரிக்குப் புறப்பட்ட மாட்டுவண்டிகளை விடுதலை வீரர்கள் பாலத்து முனையில் தடுத்து நிறுத்தினார்கள். வெறுமையாக மாட்டுவண்டிகள் ஒவ்வொன்றாகத் திரும்பிப் போயின. மறுநாள் காரைக்காலிலிருந்து அரிசி ஏற்றி வந்த குட்ஸ்வண்டியை விடுதலை வீரர்கள் தடுத்தார்கள்.

மய்யழியிலிருந்து எவரும் வெளியே போகவோ, வெளியிலிருந்து மய்யழிக்கு வரவோ முடியவில்லை. கோழிக்கோட்டிலிருந்தும் வடகரையிலிருந்தும் தலைச்சேரிக்குப் போகும் பஸ்களுக்கும் மற்ற வாகனங்களுக்கும் மய்யழிக்குள் நுழையத் தடை ஏற்பட்டது. அதனால் வாகனங்கள் மய்யழியைத் தொடாமலே சுற்று வழியாகப் போய்வரத் தொடங்கின. அதற்காக விடுதலைப் போராட்ட வீரர்கள் புதிய பாதைகளை வெட்டியிருந்தார்கள்.

தடைகள் தொடர்ந்ததால் மய்யழி ஒரு தீவு போன்று தனித்துவிட்டது. போக்குவரத்து இல்லாததால் சாலைகள் வெறிச்சோடின. விடுதலைப் போராட்ட வீரர்கள் எல்லைச் சாவடிகளில் சீல் வைத்துவிட்டதனால்

அரிசியும் சர்க்கரையும் எண்ணெயும் கிடைக்கவில்லை. கடைகள் அடைத்துக் கிடந்தன.

"நாலு நாளுக்கான அரிசிதான் இருக்கு! அது தீர்ந்திட்டா வெள்ளைக்காரங்க என்ன செய்வாங்க? ஊர்க்காரங்க அரிசி தா அப்படீன்னு கூப்பாடு போடுவாங்கல்ல? அவங்க எல்லாரையும் பட்டினி போட்டுக் கொல்லுவானோ?"

"ஊர்க்காரங்க பட்டினி கிடக்க வேண்டியிருக்கும். இலையும் கிழங்கும் பறிச்சித் தின்ன வேண்டியிருக்கும். ஆனால் வெள்ளைக்காரங்க என்ன தின்பாங்க, ஜனார்த்தனா?"

வாசூட்டி கைகொட்டிச் சிரித்தான்.

"வகையான இக்கட்டில் நாம அவங்களை சிக்கவச்சிட்டோம்."

"இனி அதிகம் போனால் பத்து நாள். பத்து நாளிலே மய்யழி நம்ம கையிலே, கணாரன் அண்ணாச்சி!"

விடுதலைப் போராட்ட வீரர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வந்தது. குஞ்ஞனந்தன் மாஸ்டரும் கணாரனும் தொடங்கி வைத்த போராட்டம் ஒரு மகாசமுத்திரம் போல அலையெழுப்பியது. உத்தியோகஸ்தர்களும் ஆசிரியர்களும் மற்றவர்களும் கூட்டமாய் மய்யழியிலிருந்து தலைமறைவாகி போராட்டத்தில் சேர்ந்துகொண்டார்கள். ஒரு வாரம் கழிந்தபோது எதிர்பார்த்தது போல மய்யழியில் ஒரு மணி அரிசிகூடக் கிடைக்கவில்லை. ஆஸ்பத்திரியில் கிடந்த நோயாளிகளுக்குக் கொடுக்க மருந்தில்லை. ஆசிரியர்களின் இல்லாமையினால் பள்ளிக்கூடங்கள் அடைக்கப்பட்டன. உத்தியோகஸ்தர்கள் இல்லாததால் அரசாங்கக்கூடம் வெறிச்சோடியது.

எண்ணெய் இல்லாத காரணத்தால் முனிசிபல் விளக்குகள் எரியவில்லை. இருட்டில் எல்லா நேரங்களிலும் பட்டாளத்துக்காரர்களின் காலடி ஓசைகள் கேட்டுக்கொண்டிருந்தன. உணவு கிடைக்காமல் மய்யழி மக்கள் திக்குமுக்காடிப்போய்க் கதவுகளை அடைத்துவிட்டிருந்தார்கள். ஒரு காலத்தில் சாராயம் ஓடிக்கொண்டிருந்த மய்யழி ஒரு நரகமாக மாறியது.

"மக்கள் புரட்சி இதோ தொடங்கிவிட்டது. மய்யழி மக்களே... விழித்தெழுக! விழித்தெழுக!"

ஊரெல்லையிலிருந்து மய்யழிக்குத் திரும்பி வந்த தேர்ந்த பேச்சாளர்களிடையே பப்பனும் வாசூட்டியும் இரவு பகலென்றில்லாமல் அழைப்பு விடுத்துக்கொண்டே இருந்தார்கள்.

மேற்கு ஊரெல்லையான பாலத்தின் முகப்பில் போராட்டம் அதிகரித்தது. அதற்கு அந்தப் புறத்தில் ஸ்லோகன்களை முழக்கும் எண்ணற்ற விடுதலை வீரர்கள். இந்தப் புறத்தில் நீட்டிப் பிடித்த துப்பாக்கிகளுடன் நிற்கும் பட்டாளம். அவர்கள் முகத்துக்கு முகம் பார்த்து நின்றிருந்தார்கள்.

அவர்களுடைய காலடிச்சுவடுகளின் கீழே மய்யழி ஆறு சமுத்திரத்தை நோக்கிச் சென்று அலையுடன் கலந்தது.

"கணாரன் அண்ணாச்சி, எனக்கொரு கொடி தாங்க. . . "

"எதுக்கு பப்பா?"

"தாங்களேன்!"

பப்பன் யாருடைய கையிலிருந்தோ ஒரு தேசியக்கொடியைத் தட்டிப் பறித்தான். அவனுடைய கண்ணிலிருந்து நெருப்பாற்றிலிருந்து வந்தது

போல தீ வெளிப்பட்டது. உயிர்த்தெழுந்த புரட்சியுணர்வினால் அவன் ஆவேசமுற்றான். அவனில் மனிதத்துவம் அதன் உச்சத்திற்கு உயர்ந்தது. உயர்த்திப் பிடித்த தேசியக்கொடியுடன் பாலத்தின்மீது அவன் முன்னோக்கிப் பாய்ந்தான். பின்னால் கோஷங்கள் முழக்கிக்கொண்டு ஏராளமான விடுதலை வீரர்கள்...

அவர்கள் மற்ற எல்லைச்சாவடிகள் வழியாகவும் மய்யழி நோக்கி முன்னேறினார்கள்.

"செறுகல்லாயி பிடிச்சிட்டாங்க. பாலமும் அவங்க கையிலே......"

பதியத்துக்கு முன்பாகவே கடையை அடைத்துவிட்டு வீட்டுக்குப் போய்க்கொண்டிருந்த உன்னிநாயர் பெருமூச்செறிந்தார்.

அதைக் கேட்டபோது அச்சுவின் காலடிகளிலிருந்து ஒரு சிலிர்ப்பு மேல்நோக்கிப் பரவியது.

சாலைகள் முழுவதும் சூனியம். பட்டாளத்துக்காரர்கள் கூட்டம் கூட்டமாக எல்லைச்`சாவடிகளை நோக்கிப் போயிருந்தார்கள்.

"என்னங்க...?"

கிரிஜா வெளியில் வந்தாள். அவளுடைய கண்கள் வாழைத்தண்டைப் போல வியர்த்திருந்தன. கையில் புளியங்காய் இருந்தது.

''செறுகலாயி சுதந்திரமாயிரிச்சி! பாலத்தையும் அவங்க பிடிச்சிட்டாங்க. கிரிஜா, நான் கொஞ்சம் வெளியே போய்ட்டு வர்றேன்."

"ஐயோ அத்தான்...!"

"என்ன நடக்குதுன்னு கொஞ்சம் பார்த்து வர்றேன். நான் இப்போ வந்திருவேன். கிரிஜா."

அவன் வேட்டியை மடித்துக் கட்டிக்கொண்டு சாலையில் இறங்கினான். தொண்டையில் திரண்டு வந்த வாந்தியை அடக்கிப்பிடித்து பயத்துடன் அவள் அதைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

அரை மணி நேரம் கழித்து அவன் திரும்பி வந்தான்.

"நடயிம்மல் நூறுவாரம்கிற இடம் இருக்குல்ல, அதுக்கு இந்தப் பக்கம் வந்திட்டாங்க அவங்க. தெற்கேயும் அவங்க இப்படிப் போயிருக்காங்க. சுங்கச்சாவடியைக் கடந்திட்டாங்க."

மய்யழியை அங்குலம் அங்குலமாக விடுவித்துக்கொண்டு விடுதலை வீரர்கள் முன்னேறியிருந்தார்கள்.

"எனக்கு பயமா இருக்கு."

"நாம எதுக்காக பயப்படணும்?"

"அவங்க நம்மளை ஒண்ணும் செய்யமாட்டாங்கல்ல?"

தளர்வுடன் கிரிஜா அவனுடைய தோளில் தலை சாய்த்தாள். அவளுக்குத் தலை சுற்றியது.

"கிரிஜா போய்ப் படுத்துக்கோ."

சுவரைப் பற்றிப் பிடித்தபடி அவள் உள்ளே போனாள்.

அச்சு படபடக்கும் மனதுடன் வராந்தாவுக்குச் சென்று நின்றிருந்தாள். அவனுடைய நெஞ்சுத்துடிப்பு அதிகரித்தது. ஒரு காலத்தில் அவன் பள்ளிக்கூட வாசலிலும் சாலையிலும் நாய்களைப் போல அடித்து நொறுக்கிய சிறுவர்கள். அவர்கள் வளர்ந்து விட்டிருக்கிறார்கள். ஆற்றல் படைத்தவர்களாகிவிட்டார்கள். செறுகல்லாயியும் பள்ளூரும் விடுதலை பெற்றுவிட்டன. எந்த நிமிடமும் மய்யழி வசப்பட்டுவிடும். காலம் நல்கிய கவசம் அணிந்துகொண்டு கண்களில் சுதந்திர உணர்வு நெருப்புடன்

அவர்கள் இதோ வருகிறார்கள். நாலாபுறங்களிலிருந்தும் அவர்களுடைய காலடி ஓசைகள் அவனுடைய காதுகளில் முழங்கியிருந்தன.

"தம்பி, அச்சு..."

அவன் திடுக்கிட்டுத் திரும்பினான். ரைட்டர்தான் கூப்பிட்டது. ஒரு கையினால் கௌசுவம்மாவைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு அவர் வாசலில் நின்றிருந்தார். பின்னாலேயே தள்ளாடிக்கொண்டு குறம்பியம்மா வந்துகொண்டிருந்தாள்.

"என்னங்க?"

"அந்தக் கணாரனும் வாசூட்டியும் எல்லாரும் இங்கே வந்திட்டாங்க. வெள்ளைக்காரங்க பக்கம் சேர்ந்தவங்களை சும்மா வச்சிருக்க மாட்டாங்க. அச்சு, நான் வெள்ளைக்காரங்க பக்கம் சேர்ந்தவன்தான்."

ரைட்டரின் நரைத்த கண்களில் பயம் குடிகொண்டிருந்தது.

அச்சு மௌனமானான். தாசனைப் போலீஸ்காரர்களின் கைகளில் பிடித்துக் கொடுத்த ரைட்டர். அவர் தாசனின் அப்பாதான். ஆனாலும் அவர்கள் அவரை சும்மா விடமாட்டார்கள். பப்பனையும் வாசூட்டியையும் பிறரையும் அறிந்தவனான அச்சு அந்த நினைப்பினால் பயந்தான். அவனுக்கு நாக்கு தளர்ந்து போயிற்று. எதுவும் பேச முடியவில்லை.

ரைட்டரைவிடப் பெரிய குற்றம் செய்தவனல்லவா தான்? தானல்லவா முதலில் பாதுகாப்பு வழியைத் தேடவேண்டியது?

"ஆபத்துக் காலத்திலெல்லாம் நீ என்னோட குடும்பத்தோட மானத்தைக் காப்பாத்தினே. அச்சு, என்னைக் காப்பாத்துப்பா..."

காசநோயாளியான அவர் வாசலில் நின்றபடி விம்மினார்.

"என்னோட காலமெல்லாம் முடிஞ்சிபோச்சி. ஆனாலும் வாங்க..."

ரைட்டரும் குடும்பத்தாரும் உள்ளே போனார்கள்.

தேவாலயத்தின் உச்சியில் சிலுவையில் கண் வைத்தபடி அச்சு நின்றிருந்தான்.

"பாரத் மாதா கீ... ஜே!"

தொலைவில் எங்கிருந்தோ ஒரு முழக்கம். ஓடி வரும் மனிதக்கூட்டம். தேவாலயத்திலிருந்து கூட்டமணி முழங்கிக்கொண்டிருந்தது.

1954 ஜூலை 14.

நிராயுதபாணிகளான எண்ணற்ற விடுதலை வீரர்களைத் திரட்டிக்கொண்டு கணாரனும் கூட்டாளிகளும் மய்யழி நோக்கி மார்ச் செய்தார்கள். தலைமறைவாயிருந்த சுதந்திரவாதிகள் கூட்டமாக வெளியே வந்து அவர்களுடன் சேர்ந்துகொண்டார்கள். ஊர்வலமாக அவர்கள் மூப்பன்துரையின் பங்களா நோக்கி நடந்தார்கள். உயர்ந்து பொங்கியெழுந்த ஏராளமான தேசியக்கொடிகள்! எதிரொலிக்கும்படியான முழக்கங்கள்!

அவர்கள் பங்களாவின் வாசலை அடைந்தார்கள். பாலம் ஜே முழக்கம் கேட்டு கலகலத்தது. கடலும் ஆறும் அந்த முழக்கக்குரலில் பங்கெடுத்தன. மூப்பன்துரை மாடியில் அமைதியாக வந்து நின்றார். தனக்கு எதிரில் பரந்து கிடந்து சுதந்திரம் சுதந்திரம் என்று புலம்பும் மய்யழியின் மக்களை அவர் கண்ணிமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தார். ஒரு காலத்தில் தன்னை தெய்வமாக வழிபட்டு வந்த மய்யழி மக்கள். தனது பிரியப்பட்ட பிரஜைகள்...

மூப்பன்துரை நிதானமாக மாடிப்படி இறங்கிக் கீழே வந்தார்.

பசியும் தூக்கமின்மையும் காரணமாகத் தளர்ந்திருந்தார். தாடியும்

முடியும் வளர்ந்து பட்டிக்காட்டானாகத் தென்பட்ட கணாரனை மூப்பன்துரை அடையாளம் கண்டுகொண்டார். அவர் கணாரனின் குழிவிழுந்த கண்களை ஒரு நிமிடம் உற்றுப் பார்த்தார். மூப்பன் துரையின் வலது கை கணாரனின் தோளில் படர்ந்தது.

"மாஹே, ஸேத்தாவூ. . ."

மய்யழி உங்களுடையதுதான்.

கணாரன் அண்ணாச்சி விம்மி அழுதார்.

மய்யழியின் மேலாக சுதந்திரச் சூரியன் உதித்து மேலெழுந்தான். அவ்வாறு சமுத்திரங்களில் புயலும் கரைகளில் பிரளயமும் உருவாக்கும் காலப்போக்கின் நியமம் தவிர்க்க முடியாதபடி தொடர்ந்துகொண்டிருந்தது.

# 33

துறைமுகத்திலிருந்து கப்பலின் சங்கொலி முழங்கிக்கொண்டிருந்தது. மய்யழியிலிருந்து என்றைக்குமாக விடைகூறிப் போகும் வெள்ளைக்காரர்களுக்காக வந்த கப்பல்.

அவர்கள் போகிறார்கள். மய்யழி மக்கள் விதியின் கடிவாளத்தை என்றென்றைக்கும் இழந்துவிட்ட அவர்கள் போகிறார்கள்.

"நாங்களும் போறோம்."

"எங்கே?"

பப்பனுடைய கேள்விக்கு உன்னிநாயரிடமிருந்து பதிலில்லை. ஆனால் அவனுக்கு ஒன்று தெரியும். . . வெள்ளைக்காரர்கள் எங்கே போகிறார்களோ அங்கே. தேவையானால் இந்த பூமியின் கடைசிவரை அவர்களைப் பின்தொடர அவர் தீர்மானித்திருப்பார்.

"வெள்ளைக்காரங்க அப்படியே போயிருவாங்கன்னு நினைக்காதிங்க. அவங்க திரும்பி வருவாங்க. கப்பலும் பீரங்கியும் கொண்டு வருவாங்க. பார்த்துக்கிட்டே இருங்க. . ."

காலத்தின் நியமங்களை அறிய முடியாத குஞ்ஞானன் தெரிவித்தான்.

"வெள்ளைக்காரங்க திரும்பி வரமாட்டாங்க."

பல்லாண்டுகளாக சமுத்திரத்தை நோக்கிப் பிரவகிக்கும் மய்யழி ஆற்றின் வெள்ளம் திரும்பிப் பாயாது. . .

"நாம பார்க்கத்தான் போறோம்."

அவ்வாறு, உன்னிநாயர், குஞ்ஞானன், குஞ்சக்கன் முதலியோர் விதிக்கு ஆட்பட்டு மாறான நினைப்புடன் பயணத்திற்கு ஏற்பாடு செய்தார்கள். எண்ணிக்கையில் அவர்கள் ஏறத்தாழ நூறுபேர் இருந்தார்கள்.

முதலில் துறைமுகத்தை அடைந்தது குஞ்சக்கனும் குஞ்ஞானனும். தான் ஐம்பது ஆண்டுகளாகச் சுமந்து நடந்த ஏணியையும் எண்ணெய் டின்னையும் குஞ்சக்கன் உதறித் தள்ளினான். குஞ்ஞானன் தன்னுடைய குடிசையை என்றென்றைக்குமாய் அடைத்துத் தாளிட்டான். தொலைவில் புகைவிட்டு நிற்கும் கப்பலில் கண்வைத்து, தங்களுடைய வாய்ப்புக்காகக் காத்து, அவர்கள் கடற்கரையில் நின்றிருந்தார்கள்.

அப்போது தனியாகவும் கூட்டமாகவும் மற்ற மய்யழி மக்களும் துறைமுகம் நோக்கிப் புறப்பட்டார்கள்.

"அச்சு, நீ வரலையா?"

தோளில் சாமான்களுடன் உன்னிநாயர் எதிர்ப்பட்டார். அச்சுவை

வெளியில் காண முடியவில்லை. உன்னிநாயரின் கேள்விக்கு பதில் வரவில்லை.

குஞ்ஞானனைப் போல என்றென்றைக்குமாகத் தன்னுடைய கள்ளுக்கடையை அடைத்துவிட்ட உன்னிநாயர் சாமான்களுடன் பயணப்பட்டார்.

பயணத்திற்குத் தயாராகி நின்ற ஆசாரிராமன் ஆசாரிச்சியிடம் பயணம் சொல்லிக் கொண்டான்.

"நான் பிரான்சுக்குப் போய் வீடும் மத்ததும் அமர்த்தி வர்றேன். உன்னையும் குழந்தைகளையும் கூட்டிக்கிட்டுப் போறேன்."

"என்னையும் குழந்தைகளையும் மறக்காம இருந்தாப் போதும்."

ஆசாரிச்சி கண்ணீர் பெருக்கினாள்.

ராமன் உன்னிநாயரைப் பின்தொடர்ந்தான். அவனுடைய தோளிலும் சாமான்கள் இருந்தன. எத்தனையோ மய்யழி மக்களுக்குக் கட்டில் செய்து தந்த தன்னுடைய உளியை அவன் எடுத்து வைத்திருந்தான்.

ஜன்னல் இடைவெளியினூடே பார்த்துக்கொண்டிருந்த அச்சுவால் எல்லாவற்றையும் பார்க்க முடிந்தது. கணாரன் அண்ணாச்சியும் மற்றவர்களும் மய்யழிக்குள் நுழைந்ததும் அவனுடைய மன அமைதி கெட்டிருந்தது. தான் ஒரு காலத்தில் மய்யழி மக்களிடம் செய்த அடாத செயல்களை ஒவ்வொன்றாக அவன் நினைத்துப் பார்க்கலானான். விதியின் நேரம் வந்துவிட்டதாக அச்சுவுக்குத் தோன்றியது. பப்பனோ வாசூட்டியோ யாராவது எந்த நிமிடத்திலும் இங்கே வர நேரலாம், அவர்கள் பழிவாங்க நேரலாம். . . . .

அதைப் பற்றி நினைத்து அச்சு வியர்வையில் மூழ்கினான். வெளியில் ஏதேனும் காலடி ஓசை கேட்டால் அவன் திடுக்கிடுவான். . .

சாயங்காலமாகியும் எவரும் அவனைத் தேடி வரவில்லை. படிப்படியாக அவன் நிம்மதியானான்.

அச்சு மட்டுமல்ல, ரைட்டரும். முந்தின நாள் இரவு அவர் ஒரு கணம்கூடக் கண் மூடவில்லை.

"நீங்க எதுக்கு பயப்படுறீங்க? நீங்க யாருக்கும் எந்தத் தீங்கும் செஞ்சதில்லையே?"

"தீங்கு செஞ்சிட்டுதானா அச்சு. நான் ஜெயிலுக்குப் போனது? தெரிஞ்சவங்க யாருக்கும் எந்த துரோகமும் செஞ்சதில்லே நான். அப்படியான என்னைத்தானே அவங்க ஜெயில்லே போட்டு அடிக்கவும் உதைக்கவும் செஞ்சாங்க?"

"அது வெள்ளைக்காரங்க காலத்திலேயில்ல? அவங்க போயிட்டாங்க."

வெள்ளைக்காரர்கள் போய்விட்டார்கள். ரைட்டருக்கு அது தெரியும். நிரந்தரமாக அவர்கள் போய்விட்டார்கள். ஆனால், அது நல்லதற்கா கெட்டதற்கா? அவருக்குத் தெரியாது. . .

சுதந்திரப் போராட்டம் வெற்றியடைந்துவிட்டது. அதுவும் ரைட்டருக்குத் தெரியும். அப்படியானால் அதற்காக வேண்டி மிகவும் பெரிய தியாகம் செய்தது தான்தான். தன்னுடைய குடும்பம் அழிந்தது. ஒரேயொரு மகனை இழந்தாயிற்று. . . .

"மாதாவே, எனக்கு ஒரேயொரு பிரார்த்தனைதான் இருக்கு." ரைட்டர் தேவாலயத்தின் உச்சியில் தென்பட்ட சிலுவையை நோக்கித் திரும்பி நின்றார். "இனியும் என்னைச் சோதிக்காதே! என்னோட குடும்பத்துக்கு

நல்லது வரணும்...!"

அச்சுவின் கண்களும் வெகுதொலைவில் உயரத்தில் தென்பட்ட சிலுவையில் பதிந்தன. அவனும் மௌனமாகப் பிரார்த்தித்துக் கொண்டான். துறைமுகத்தில் நங்கூரமிட்டிருக்கும் கப்பல் புறப்பட்டுப் போனதும் ஒரு புதிய யுகம் பிறக்கும். அது சாந்தியும் சமாதானமும் கொண்டதாய் இருக்கட்டும். தன்னுடையது மட்டுமல்ல, மய்யழி மக்கள் எல்லோருடைய வாழ்க்கையும் சமாதானம் என்பது என்னவென்று அறியட்டும்...

சுவரைப் பிடித்துக்கொண்டு தட்டுத் தடுமாறிக்கொண்டு குறம்பியம்மா மெதுவாக அவர்களுக்கு அருகில் வந்து நின்றாள்.

"உன்னிநாயரும் போயாச்சி. ஆசாரியும் போயாச்சி. நாமும் போகலாமா, அச்சு?"

"நாம எங்கே போறோம், பாட்டி?"

"நம்மளும் மூப்பனுக்குப் பின்னாலே போவோம்."

"வெள்ளைக்காரங்க அவங்க நாட்டுக்குப் போறாங்க. நம்ம நாடு இதுதானே?"

குறம்பியம்மா தீனமாக அச்சுவின் முகத்தைப் பார்த்தாள். மூப்பன்துரைக்கும் மய்யழி மக்களுக்கும் வெவ்வேறு நாடுகளா?

"வெள்ளைக்காரங்க திரும்பி வருவாங்களாப்பா?"

அவர்கள் திரும்பி வருவார்களானால் குறம்பியம்மாவுக்கு நிம்மதி. அப்படியானால் கண்ணில் எண்ணெய் ஊற்றிக்கொண்டு அந்த நாளுக்காக அவள் காத்திருப்பாள்.

குறம்பியம்மாவின் கேள்விக்கு அச்சு பதில் சொல்லவில்லை. அவனும் தனக்குத் தானே கேட்டுக்கொள்ளும் கேள்விதான் அது. வெள்ளைக்காரர்கள் திரும்பி வருவார்களா?

குறம்பியம்மா சிறிது நேரம் அச்சுவின் முகத்தைப் பார்த்தபடி நின்றாள். பின்னர் அவள் வராந்தாவுக்குச் சென்று பெஞ்சில் அமர்ந்தாள். கண்களை மூடிக்கொண்டு அவள் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தாள்.

"அவங்க வருவாங்க... வராம இருக்க மாட்டாங்க."

குறம்பியம்மா யாரோடென்றில்லாமல் பேசினாள்.

பருகாதியே செட்டியப்பா கால்சராயும் கோட்டும் அணிந்து போவதற்குத் தயாராக இருந்தார். கத்தோழ்ஸ்முயியே, நோயேல் முதலிய பண்டிகை நாட்களில் மட்டுமே செட்டியப்பா அலங்காரமாய்த் தோற்றமளிப்பார். அவருக்கு அருகில் பெரியதொரு தகரப்பெட்டி இருந்தது.

"அழுகாதே..."

நிலைப்படியின்மேல் நின்றபடி நாணி அழுதுகொண்டிருந்தாள். அவளுடைய மறைவில் நின்றுகொண்டு தேவியும் சிணுங்கி அழுதுகொண்டிருந்தாள். இருவருடைய ஆடைகளைப் பற்றிக்கொண்டு செட்டியப்பாவின் குழந்தைகள் நின்றிருந்தன.

"நான் திரும்பி வந்திருவேன்."

அவர் கைக்குட்டை எடுத்து உரல் போலப் பருத்த தனது கழுத்தின் வியர்வையைத் துடைத்தார். செட்டியப்பாவுக்குத் தெரியும் தான் சொன்னது உண்மையல்லவென்று. அவருக்கு இனி ஒருக்காலும் மய்யழியின் மண்ணில் கால் வைக்க வேண்டிய தேவை வராது.

செட்டியப்பா நாணியையும் தேவியையும் சமாதானப்படுத்தப் பார்க்கும்தோறும் அவர்களுடைய தீவிரம் அதிகரித்துக்கொண்டே இருந்தது.

அதைப் பார்த்து செட்டியப்பாவின் குழந்தைகளும் அழத் தொடங்கின.

செட்டியப்பா அதற்குப் பிறகு அங்கு நிற்கவில்லை. அவர் தன்னுடைய வைப்பாட்டிமார்களையும் குழந்தைகளையும் புறம்தள்ளிவிட்டு நடந்தார். பின்னாலேயே தகரப்பெட்டியைத் தலையிலேந்திக்கொண்டு போலீஸ்ஸ்டேஷன் சங்குவும்.

குஞ்ஞிச்சிருதையின் வீட்டுவாசலில் நின்றுகொண்டு தாவீதுதுரை பயணம் சொல்லிக் கொண்டார்.

"நான் வர்றேன். வந்து உன்னையும் பிள்ளைகளையும் பிரான்சுக்குக் கூட்டிப் போறேன். "

"என் குழந்தைகளுக்கு யாரும் இல்லே."

"நான் வர்றேன்."

குஞ்ஞிச்சிருதையின் முகத்தைப் பார்க்காமல், தொலைவிலிருந்து கேட்கும் கப்பலின் சங்கொலியை கவனத்தில் கொண்டு தாவீதுதுரை மீண்டும் விடைபெற்றார். அதற்குப் பிறகு அவர் கையசைத்து பயணம் சொல்லிக்கொண்டு சாலையில் இறங்கினார்.

தாவீதுதுரையின் உயரமான, சற்றே ஒடிசலான சரீரம் சாலையின் முனையில் மறைந்தது. குஞ்ஞிச்சிருதை தன்னுடைய குழந்தைகளை அணைத்துப்பிடித்துத் தேம்பி அழுதாள்.

கப்பலின் சங்கொலி இடையிடையே முழங்கிக்கொண்டிருந்தது. அப்போதும் ர்யூ த்யு கூவர்ணமான் வழியே பெட்டியும் சாமான்களுமாய் மய்யழியின் மக்கள் துறைமுகத்தை நோக்கிப் போய்க்கொண்டிருந்தார்கள்.

கடல்பயணம் சொல்லிக்கொண்டு புறப்பட்ட மய்யழி மக்களின் எண்ணிக்கை பெருகிக் கொண்டே வந்தது. சுடும் வெயிலில் அரவமில்லாமல் அவர்கள் மூப்பன்துரையை எதிர்பார்த்து நின்றார்கள்.

மூப்பன்துரை தனது பங்களாவின் பால்கனியில் கடைசி முறையாக வந்து நின்றார். தேவாலய கோபுரத்தின் மீதான சிலுவையில் அவருடைய கண்கள் பதிந்தன. பின்னர் கோய்யேத்தி மரங்கள் இரத்த மலர்களை வாரித் தெளித்த ர்யூ த் ரெஸிதாம்ஸில், மய்யழி ஆற்றுக்கு மேலிருந்த பாலத்தின் ஊடாகத் தொலைவில் தெரிந்த பச்சைக் குன்றுகளில். . . .

மூப்பன்துரையின் கண்கள் மய்யழியைக் கடைசித் தடவையாகத் தழுவிக்கொண்டன. . . .

சமுத்திரத்திலிருந்து சிம்ஃபனி எழுந்தது. வெள்ளைக்காரர்களின், சட்டைக்காரர்களின் ஊர்வலம் அமைதியாகத் துறைமுகத்தை நோக்கிப் புறப்பட்டது. . . .

அவர்கள் துறைமுகத்தை அடைந்தார்கள். காலத்தின் செய்திகளைக் கூப்பிட்டுக் கூறிக்கொண்டு கடற்காற்று வீசிக்கொண்டிருந்தது.

மூப்பன்துரையின் நீலக்கண்கள் கடற்கரையில் அணிதிரண்டு நிற்கின்ற மய்யழி மக்கள் ஒவ்வொருவராகத் தழுவின.

விடைபெறுகிறேன். மக்களே. . .!

அவருடைய வலது கை மெதுவாக உயர்ந்தது. கூட்டத்தில் அச்சுவின் கைப்பிடித்து நின்றிருந்த குறம்பியம்மா விம்மி அழுதாள்.

கப்பலின் நங்கூரம் மேலெழுந்தது.

அகன்றகன்று செல்கின்ற கப்பலை நோக்கி துறைமுகத்தில் வரிசையாய் நின்ற மய்யழி மக்கள் அழுதார்கள். அவர்களுடைய கண்ணீர் விழுந்து சூடான புழுதி நனைந்தது. படிப்படியாக சமுத்திரத்தின் முடிவில்,

அடிவானத்திற்கும் அப்பால், கப்பல் தென்படாது போயிற்று.

## 34

சிறை வாசல் அகலத் திறக்கப்பட்டது.

தாசன் வெளியில் வந்தான். பல ஆண்டுகளுக்குப் பிறகு அவனுடைய குழிவிழுந்த கண்களில் வெயில் நாளங்கள் வந்து விழுந்தன. நேற்றுப் பெய்த மழையின் ஈரம் இன்னும் காயாத மண்ணில் அவன் நின்றான்.

எங்கே போவதென்று நிச்சயமில்லாமல் சிறைக்கு முன்பாக ஒரு நிமிடம் நின்றான். அப்பா, அம்மா, சந்திரிகா, பாட்டி, கிரிஜா. . . அவர்கள் எல்லோருடைய முகங்களும் ஒரு சினிமாவைப் போல கண்ணெதிரே கடந்து போயின.

சிறையில் அவனை வந்து பார்க்க எவருக்கும் அனுமதி கொடுக்கப்படவில்லை. இல்லாவிட்டால் யாராவது வந்திருப்பார்கள். அப்பாவும் கிரிஜாவும் வராமல் இருந்திருக்கலாம். அம்மா வருவதற்கு அப்பா சம்மதிக்காமல் இருந்திருக்கலாம். வேறு யார் வராவிட்டாலும் சந்திரிகா வந்திருக்கலாமல்லவா?

தொலைவில் மூப்பனின் குன்றின் மேல் கொடிமரத்தில் பறந்து மகிழும் தேசியக் கொடியை அவன் பார்த்தான். சாலையில் கடந்து போகும் ஆட்களின் கைகளிலும் காகிதக் கொடிகள் தென்பட்டன.

இதோ, கடைசியில் விடுதலையின் காலம் வந்திருக்கிறது. . . .

ற்யூ த் லா றெஸிதாம்ஸ் வழியே அவன் முன்னோக்கி நடந்தான்.

பாலத்தின் மீதாக மய்யழி நோக்கி ஆட்கள் கூட்டமாக வந்துகொண்டிருந்தார்கள். தொலைவுப் பகுதிகளிலிருந்து வருகிறவர்களும் அந்தக் கூட்டத்தில் இருந்தார்கள். ஒரு மகாநாடகத்தின் முடிவைக் காண்பதற்காக வரும் மய்யழி மக்களின் நண்பர்கள்... எல்லா சாலைகளிலும் மனிதக்கூட்டம். அறிமுகமில்லாத முகங்கள். அவர்களுக்கு நடுவே தாசன் நடந்தான்.

ற்யூ த் லெக்லீஸ் வழியாக, ற்யூ த் லாகார் வழியாக, ற்யூ த் லா ப்ரிஸோன் வழியாக. . . அவனது நடை தொடர்ந்தது. மய்யழியின் ஒவ்வொரு முக்கிலும் மூலையிலும் அவனுடைய வெளிறிய பாதங்கள் பதிந்தன.

கடைசியில் சரளைகள் நிறைந்ததும் ஒரு விளக்குக் கம்பம் மட்டுமே உள்ளதுமான ஒரு சாலையின் திருப்பத்தைச் சென்றடைந்தபோது தாசனின் கால்கள் மண்ணில் தயங்கி நின்றன. எட்டத்தில் அவன் தன்னுடைய வீட்டைப் பார்த்தான். அசைய முடியாமல் அவன் ஸ்தம்பித்து நின்றான்.

“போடா நாயே வெளியே. . . .”

அப்பாவின் குரலை வேறு ஏதோ ஓர் உலகத்திலிருந்து வருவது போல அவன் கேட்டான். சிறையில் கிடந்து சூரிய வெளிச்சம் கிட்டாமல் வெளிறிப்போன கண்களுக்கு எதிரே வாசலை நோக்கிக் கையைச் சுட்டிக் காட்டி நின்றிருக்கும் அப்பாவின் உருவம் துலாம்பரமாக வந்தது.

சட்டென்று அவன் திரும்பி நடந்தான்.

அப்பாவை இழந்தாயிற்று. கிரிஜா போய்விட்டாள். ஆனால், உணர்ச்சிகளின் நடுவில் உழலும் நோயாளியான அம்மாவையும் பாட்டியையும் பார்க்க தாசனுக்கு ஆசை உண்டாயிற்று. ஆனால் அதற்காக அப்பாவின் வீட்டில் அடியெடுத்து வைக்க வேண்டுமா?

தாசன் மீண்டும் நடையைத் தொடர்ந்தான். இப்படி நடந்து ஆண்டுகள் பல ஆகிவிட்டன. சிறையில் ஆறடி நீளமுள்ள அறை மட்டுமே இதுவரை உலகமாக இருந்ததே!

சாலைகளில் ஆட்கள் தாசனை அடையாளம் கண்டுகொள்ளவில்லை. சிறைவாசம் அவ்வளவு அதிகமாக அவனை மாற்றிவிட்டிருந்தது. குறிப்பாகத் தலைமுடி இல்லாமை. யாராவது தன்னை அடையாளம் கண்டுகொள்ள வேண்டுமென்று அவனுக்கு ஆர்வம் உண்டாகவில்லை. ஆர்வம் அடங்கிப்போயிருந்தது. எவரும் தன்னை அடையாளம் கண்டுவிடக் கூடாது என்று பிரார்த்தித்துக்கொண்டான்.

ஏற்கெனவே கடந்து வந்த சாலைகளின் வழியே அவனுடைய காலடிகள் மீண்டும் கடந்து சென்றன. அவன் தனது பிறந்த நாட்டை மறுதரிசனம் செய்யலானான். இதோ, இங்கேதான் குபேரன்செட்டியார் பாம்பாக வந்து குஞ்ஞிமாணிக்கத்தை அடையப்பெற்றது. இதோ, இங்கேதான் வெள்ளைக் குதிரையின் மீதிருந்து வெளுத்தச்சன் வைசூரி அம்மனுடன் போரிட்டது. இதோ, இங்கேதான் குருத்தோலை உடுத்திய குளிகனால் தண்டிக்கப்பட்டு குஞ்சக்கனின் கொள்ளுத் தாத்தா கால்லொடிந்து விழுந்தது. இதோ, இங்கேதான் மலையன் உததுமன் தனது கிரீடம் தாங்கிய கழுத்து ஒடிந்து தடுமாறி விழுந்து இறந்தது. இதோ, இந்த வழியாகத்தான் தினமும் காலையில் போதையால் உணர்விழந்த கரடிதுரையைத் தாங்கிப் பிடித்து மேரி நடந்து போனது. இந்தக் கூரையான் பிடித்த மாடியிலிருந்துதான் தினமும் நள்ளிரவில் பேடிதுரை தனது துக்க கான ஆலாபனம் நடத்தி வந்தது. . . . .

"தாசா. . . . "

நடைபாதைமேல் சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்திருந்த தாசன் தலை நிமிர்த்திப் பார்த்தான். நடந்து தளர்ந்திருந்த அவன் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தான்.

"நான் உங்களைத் தேடாத இடமில்லே. எங்கே இருந்தீங்க நீங்க இவ்வளவு நேரம்?"

எதிரே கையில் ஒரு பேண்டேஜுடன் ஜனார்த்தனன் நின்றிருந்தான். கை கழுத்து வழியே கட்டப்பட்டிருந்தது.

"என்னாச்சி உன் கைக்கு?"

"கொம்மீஸாரின் பரிசு."

அவன் புன்னகைத்தான்.

"அதிருக்கட்டும். பேச்சுவார்த்தையெல்லாம் பின்னாலே. நாம போவோம்."

"எங்கே?"

"கணாரன் அண்ணாச்சிதான் என்னை அனுப்பிவச்சாரு. உடனே உங்களைக் கூட்டி வரச் சொன்னாரு. முதல்லே நாம உங்க வீட்டுக்குப் போவோம். அதுக்குப் பிறகு கணாரன் அண்ணாச்சிகிட்ட."

"எனக்கு வீடு கிடையாது."

ஜனார்த்தனன் தாசனின் முகத்தை அதிர்ச்சியுடன் பார்த்தான்.

"எனக்கு நாடு கிடைச்சிரிச்சி. ஆனா வீடு போயிரிச்சி."

"அப்படியெல்லாம் பேசக்கூடாது."

ஜனார்த்தனன் வேண்டிக்கொண்டான். அவன் தாசனைக் கைத்தாங்கலாக எழுந்திருக்கச் செய்தான்.

தாசன் வீட்டுக்குப் போகவில்லை. அவர்கள் பாலத்தை நோக்கி நடந்தார்கள்.

அங்கே கொடிகளுடனும் தோரணங்களுடனும் திருவிழாவாக இருந்தது. எங்கும் வரவேற்பு வளைவுகளும் தோரணங்களும். மூப்பன்துரையின் பங்களாவுக்கு எதிரே அலங்காரமான பெரியதொரு பந்தல் தென்பட்டது. அங்கே காந்தி, நேரு ஆகியோரின் பெரிய படங்கள் அலங்கரித்து வைக்கப்பட்டிருந்தன. புழுதியை விட்டெறிந்தால் கீழே விழ முடியாதபடி நெரிசலாகக் குழுமியிருந்த மனிதக் கூட்டம். எல்லோரும் மார்பில் தேசியக் கொடியின் படம்கொண்ட பேட்ஜ் குத்தியிருந்தார்கள். குழந்தைகளின் கைகளில் காகிதக் கொடிகள். மூப்பனின் குன்றில் கொடிமரத்தில் மட்டுமல்ல, ந்யூ த் றெஸிதாம்ஸில் பங்களாக்களின் மாடிகளிலும் தேசியக்கொடிகள் படபடத்துப் பறந்துகொண்டிருந்தன.

தொலைவில் ஓர் அரவம் கேட்டது. ஒரு நீண்ட ஊர்வலத்தின் வருகையாயிருந்தது அது. பேண்டு சத்தம். ந்யூ த் லா ப்ரீஸோனிலிருந்து முழங்கியது. ஊர்வலத்தில் மய்யழியின் எல்லா ஆண்களும் குழந்தைகளும் பங்கேற்றிருந்தார்கள். அயலூர்களிலிருந்து வந்த மய்யழி மக்களின் நண்பர்களின் எண்ணிக்கைப் பெருக்கத்தில் அவர்கள் பிரமித்துப்போனார்கள். அலங்கரித்த ஒரு திறந்த ஜீப்பில் கூப்பிய கைகளுடன் கணாரனும் வாசூட்டியும் நின்றிருந்தார்கள். கழுத்தில் சுமக்க முடியாத அளவுக்குப் பூமாலைகள் அணிந்திருந்தார்கள் அவர்கள்.

ஊர்வலம் நெருங்கி வந்தபோது கூட்டம் தாசனைப் பாதையோரமாகத் தள்ளிற்று. கோஷங்கள் போடவும் வெற்றிமுரசு முழங்கவும் செய்த அவர்களுடைய ஒதுக்கித்தள்ளலுக்கு ஏற்ப அவன் சாக்கடையில் இறங்கி நின்றான். கூடவே ஜனார்த்தனனும். ஜீப்பும் பேண்டுக்காரர்களும் அவர்களைக் கடந்து போனார்கள். பின்னாலேயே கைகளில் தீப்பந்தங்கள் ஏந்தி ஆடும் திற ஆட்டக்காரர்கள். அவர்களுக்குப்பின்னால் மாப்பிளமாரின் கோலாட்டம். . . . .

கடைசியாக ஊர்வலம் கடந்து போன பின்னர் சாலை வெறிச் சோடிற்று. அங்கே கடந்துபோன ஆயிரக்கணக்கான மனிதர்களின் கால்சுவடுகள் மட்டும் தென்பட்டன.

"ஜனார்த்தனா, பப்பன் எங்கே, அவனை ஜீப்பிலே காணோமே?"

"பப்பன் ஆஸ்பத்திரியிலே. செறுகல்லாயிலே வெடிகுண்டு வச்சான்."

செறுகல்லாயியில் வெடிகுண்டு வைத்தார்கள் என்பதை அறிந்தபோது தாசன் நினைத்ததுதான், பப்பன் அங்கே போயிருப்பானென்று. இரத்தம் சிந்துமிடமெல்லாம் பப்பன் இருப்பானல்லவா?

"ஜனார்த்தனா, எனக்கொரு ஆசை."

"என்ன?"

"எங்கேயிருந்தாவது நீ கொஞ்சம் பூ கொண்டு வரணும். குஞ்ஞனந்தன் மாஸ்டருக்காக"

ஜனார்த்தனனின் முகம் மலர்ந்தது.

குன்றின் சரிவில் மயானத்தில் ஆள் நடமாட்டமில்லாத ஒரு மூலையில் கையில் பூவுடன் தாசன் நின்றான். எண்ணற்ற மழைக்காலத்து மழைகள் குஞ்ஞனந்தன்மாஸ்டரின் சவமேடையைச் சமனப்படுத்தி விட்டிருந்தன. உள்பொதிந்து கிடக்கும் மண்ணில் உலர்ந்த தொட்டாற்சுருங்கிச் செடிகள். . .

அப்போதும் தொலைவிலிருந்து பேண்டின் சத்தம் கேட்டுக்-

கொண்டிருந்தது.

"ஜனார்த்தனா, இனிமே நீ போகலாம்."

திரும்பி நடந்தபோது தாசன் சொன்னான். அவனுக்கு எங்கேயாவது போய்ச் சிறிது நேரம் இருக்க வேண்டுமென்று தோன்றியது.

"கணாரன் அண்ணாச்சியைப் பார்க்க வேண்டாமா?"

"நெரிசல் முடியட்டும். எப்போ வேணும்னாலும் நாம இனி பார்த்துக்கிடலாம். நாம சுதந்திரம் அடைஞ்சவங்க."

மிகவும் வற்புறுத்தியதனால் ஜனார்த்தனம் போனான். தொலைவிலிருந்து பேண்டு சங்கீதமும் கோஷங்களும் மீண்டும் கேட்டன. எங்கே போவது என்று தெரியாமல் தாசன் நடுச்சாலையில் நின்றான். மண்டையோட்டில், சிகரத்தின் மேல் நிற்கும் மலையேறியின் மனதிலான சூனியத்தின் முழக்கம். இந்திரியங்களின் புணர்ச்சிக்குப் பின் கடைசியில் அனுபவப்படும் பயமுறுத்தும் நரம்புத் தளர்ச்சி.

கடைசியில் அவன் கடற்கரை நோக்கி நடந்தான். அங்கே மனிதக்கூட்டமும் சந்தடியும் இல்லாதிருந்தன. சலனமற்ற நரைத்த கடல். நட்சத்திர ஒளியில் மின்னி மிளிரும் வெள்ளியாங்கல் அவனுக்குத் தென்பட்டது. பிறப்புக்களின், மறுபிறப்புக்களின் இடையிலான ஓய்விடம். அப்போதும் அங்கே ஆத்மாக்கள் தும்பிகளைப் போலப் பறந்து விளையாடிக்கொண்டிருந்தன.

# 35

சந்திரிகாவின் வீட்டிற்கு அருகாமையில் கட்டி முடிக்கப்படாத ஒரு வீடு இருந்தது. பினாங்குக்காரரான அபூட்டிமாப்பிளைக்குச் சொந்தமானது அது. வீட்டு வேலை முடிவடைவதற்கு முன்பாகவே அபூட்டிமாப்பிளை இரத்தக்கொதிப்பு வந்து இறந்துபோனார். தளம் கட்டி முடித்துச் சுவர்கள் பாதிக்கு மேல் எழும்பியும் இருந்தன.

மேல்பூச்சு பூசப்படாத சுவர்களின் நிழலில் ஆடாதொடை தழைத்து வளர்ந்திருந்தது. அறைகளில் தொட்டால்சுருங்கிச் செடிகள் பரவிக்கிடந்தன. காட்டுச்செடிகளும். சுவர்கள் ஒன்றுசேரும் இடத்தில் செம்போத்துகள் கூடுகட்டியிருந்தன.

தாசனும் சந்திரிகாவும் சந்தித்துக்கொள்ளும் இடம்.

"நீங்க ஜெயில்லே இருந்தப்போ எனக்குத் துக்கமே வராது. ரெண்டு மூணு வருஷம் எப்படி சமாளிச்சேன்னு எனக்கும் கடவுளுக்கும்தான் தெரியும்."

அவன் எதுவும் பேசாமல் அவளுடைய கையை வருடினான். அவள் வெகுவாக மெலிந்துபோயிருந்தாள். கைகளின் கறுத்த வளையல்கள் சில சமயங்களில் நழுவிவிழும். அவ்வளவுக்கு அவள் மெலிந்திருந்தாள்.

"ஜெயில்லே இருந்தப்போ நீங்க என்னைப் பத்தி நினைச்சீங்களா?"

"தினமுமா?" குற்ற உணர்வுடன் அவன் சொன்னான். "இல்லே"

"அது எனக்குத் தெரியும். உங்களுக்கு நினைக்கிறதுக்கு எத்தனை எத்தனையோ விஷயங்கள் இருக்கும்! எனக்கு நீங்க மட்டும்தான்."

அவன் நினைத்துப் பார்த்தான். "ஜெயிலில் இருந்தபோது சில சமயங்களில் எண்ணி எண்ணி உள்ளும் புறமும் வேகும். இரவுகளில் தூக்கம் வராது. அப்போதெல்லாம் காய்ச்சிய தேங்காயெண்ணெயின்

குளுமைதரும் ஒரு காற்று வந்து தழுவிப் போகும். அது தன்னைக் குறித்ததான அவளுடைய எண்ணமல்லவா? தன்னைச் சார்ந்ததான அவளுடைய நினைவுகள் காற்றாக வந்து தழுவியிருக்குமோ?"

"எனக்கு ஜெயிலுக்கு வரணும்னு எண்ணமிருந்தது. வந்து உங்களை ஆசுவாசப்படுத்தணும்னு எண்ணம். அதுக்கு யாரும் சம்மதிக்கலே. அம்மாகூட."

தலை குனிந்தபடி அவள் பேசினாள். கண்களில் நீர் கட்டியிருந்ததை அவனால் காண முடிந்தது. தாசன் துரதிருஷ்டசாலி. அவனுடன் தொடர்பு வைத்திருந்தவர்களுக்கெல்லாம் கெடுதி தொற்றுகிறது. . . வைசூரியைப் போல.

"நீ படிப்பை நிறுத்திட்டேன்னு பப்பு சொன்னான். உண்மைதானா?"

"உம்."

அவள் உம்கொட்டினாள். தாசன் சிறைக்குச் சென்ற பின்னர் அவள் கல்லூரிக்குப் போகவில்லை.

"அது ஏன் சந்த்ரீ?"

"படிச்சி என்ன பண்ண?"

அவளுக்கு எதிலும் பற்றில்லாமல் போயிருந்தது. அவளுடைய தோற்றமும் போக்கும் அதைத்தான் சுட்டிக்காட்டின. இஸ்திரியிடாத ஒரு வாயில்சேலைதான் உடுத்தியிருந்தாள். காதுத்துளைகளில் ஈர்க்குச்சி செருகியிருந்தாள். தேவைப்படும்போது மட்டும் அமையும் சிரிப்பு.

"என்னாச்சி உனக்கு சந்த்ரீ?"

"ஒண்ணுமில்லே."

அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் சுரந்து வழிந்தது. அவள் குனிந்திருந்தாள்.

"நீ வேதனைப்படக் கூடாது. உனக்குப் பணமிருக்கு. உயிரைவிட அதிகமாக உன்னை நேசிக்கிற அம்மாவும் அப்பாவும் இருக்கிறாங்க. உனக்கு எல்லாமே இருக்கு. உனக்கெல்லாமே இருக்கு. . . .

"மன அமைதி மட்டும் இல்லே. . . ."

அவன் மௌனமாக இருந்தான். சுதந்திரப் போராட்டம் முடிந்துவிட்டது. கணாரன் அண்ணாச்சியும் வாசூட்டியும் பப்பனும் எல்லோருமே இன்று சுதந்திரமானவர்கள். அவர்களுக்கு இனிமேல் பிரச்சினைகள் இல்லை. ஆனால், தன்னுடைய பிரச்சினைகள் ஓய்வதில்லை. . .

"நீங்க இனிமே எப்பவும் வீட்டுக்குப் போகப்போறதில்லையா?"

"இல்லே."

அவளிடமிருந்து ஒரு தேம்பல் வெளிப்பட்டது. சிறிது நேரம் கழிந்தபோது சுண்டுவிரலினால் அவள் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். அவளுடைய முகம் நிறையக் கண்ணீரின் அடையாளங்கள்.

"நீ இப்படி அழக்கூடாது. ஜெயில்லேருந்து வந்த பிறகு சிரிக்கிற முகத்தோட உன்னைப் பார்க்கவே இல்லே."

திடீரென்று அழுவதும் திடீரென்று சிரிப்பதும் அல்லவா அவளுடைய இயல்பு? இப்போது திடீரென்று அழ மட்டுமே செய்கிறாள். சிரிப்பு மறந்துவிட்டது போலிருக்கிறது. . . .

அவன் அவளைத் தன்னுடன் சேர்த்து அணைத்தான். எதுவும்

பேசாமல் அவர்கள் அப்படியே இருந்தார்கள். அவளுடைய இருதயத் துடிப்புகள் அவனுக்குக் கேட்டன. அவளுடைய கண்ணீரின் சுவையை அவன் அறிந்தான். நிர்வாணமான சுவரோடு ஒட்டி மண்ணில் அவர்கள் ஒன்றிணைந்து கிடந்தார்கள்...முதலில் வளையல் உடைந்தபோது சுவர்களின் மூலையிலிருந்து செம்போத்துகள் வெளியேறிப் பறந்து போயின. . . .

அந்தியாகிவிட்டது. கட்டி முடிக்கப்படாத வீட்டின் பூச்சுப் பூசப்படாத சுவர்களில் குளவி கூடு கட்டியது. செம்போத்துகள் நிலைகொள்ளாமல் வெளியில் பறந்துபோய்க் களித்திருந்தன.

செம்போத்துகள் கூடுகளுக்குத் திரும்பி வந்தபோது நன்றாகவே இருட்டிவிட்டிருந்தது. போகப்போக தினமும் அது ஒரு வழக்கமாகிவிட்டது.

"உங்களுக்கு இப்படிப் படுத்துக் கிடக்க இஷ்டமா?"

"உம்."

"எனக்கும்தான்."

அவன் மற்ற எல்லாவற்றையும் மறக்க முயன்று அவளுடைய கதகதப்பிலும் வாசனையிலும் மயங்கிக் கிடந்தான். அவன் அவளில் அபயம் காணலானான். எனக்கொரு சுமைதாங்கி வேண்டும். தாசன் சொல்லிக்கொள்வான். பாரத்தைக் கொஞ்சம் இறக்கி வைக்க.

இந்த வாழ்க்கையின் அவனுடைய வெள்ளியாங்கல்லாயிருந்தாள் சந்திரிகா. அவளில் அவன் நிம்மதி காண்பான்.

அவளில் ஒரு தும்பியாகி பாரமில்லாமல் அவன் பறந்து மகிழலாம்.

ஆனால கட்டி முடிக்கப்படாத வீட்டிலிருந்து வெளியே வரும்போது தனக்குத தானே ஒரு கேள்விக்குறியாக மாறுவான். எங்கே போவது?

மய்யழிக்கு வெளியில் போராட்டத்துடன் கழிந்த நாட்களில் நினைத்த இடத்திற்குச் சென்று படுத்திருந்தான். இனிமேல் அப்படிப் போய்ப் படுத்திருக்க முடியுமா?

சில நாட்கள் லீலாக்கா வீட்டில்தான் தங்கினான்.

"கொஞ்ச காலம் நாடும் வீடும் இல்லாம நடந்தாச்சி. இனிமேலும் அதுவேண்டாமா?" என்று லீலாக்கா கவலைப்படுவாள்.

"என்னதான் இருந்தாலும் ரைட்டர் உன்னோட அப்பா. மகன்கிட்ட அப்பா மன்னிப்புக் கேட்கத் தேவையில்லே."

"எல்லாம் எனக்குத் தெரியும் லீலாக்கா. யாரும் எனக்கு உபதேசம் பண்ண வேண்டாம்."

ஒரு சமயம் கடுமையாய்ச் சொன்னான். லீலாக்கா தடுமாறிப்போனாள். நேரே மாடிக்குப் போய்ப் படுத்தாள்.

அதற்குப் பிறகு மூன்றுநான்கு நாட்கள் அந்தப் பக்கம் போகவில்லை.

"நீ என் வீட்டிலே தங்கிக்கோ."

பப்பன் தினமும் வேண்டுவான். விடுதலைப் போராட்டம் முடிந்ததும் அவனுடைய அப்பா மய்யழிக்குத் திரும்பி வந்திருந்தார். அந்தப் பெரிய வீட்டில் மீண்டும் வெளிச்சம் பரவியது.

"நீ என்கூட இருந்துக்கோ. அதைவிடப் பெரிய சந்தோஷம் என்ககு வேறெ இல்லே."

"எனக்குத் தலைசாய்க்க ஒரு வீடு இல்லாமப் போச்சி. என்னோட விதி." அதைச் சொல்லும்போது பீடிக்கறை படிந்த பற்களில் புன்சிரிப்பு உண்டாகியிருந்தது.

"விதியில்லே. நீ உண்டாக்கிக்கிட்டது."

"பப்பா, நீயும் என்னைக் குற்றவாளியாக்கக் கூடாது. எனக்குச் சில குறிக்கோள்கள் உண்டு. வேணும்னா பிடிவாதக்காரன்னு சொல்லிக்கோ. அதுதான் என்னை நானாக ஆக்கியிருக்கு."

தாசனுடைய குறிக்கோள் மகத்தானதாகவோ தரங்கெட்டதாகவோ இருந்துவிட்டுப் போகட்டும். குறிக்கோள் என்பது ஒன்றே. இல்லாமை நிர்வாணமாக்கிவிடும்; நிராயுதபாணியாக்கிவிடும்.

சில சமயங்களில் தாசன் பப்பனுடைய வீட்டில் படுத்திருப்பான். அங்கே இல்லாதபோது சந்திரிகாவின் வீட்டில். அவனுக்கு அது கொஞ்சமும் பிடிக்கவில்லை. தனக்கே இழிவாகத் தோன்றும்.

எப்படியாவது கொஞ்சம் பணம் சம்பாதித்து ஒரு சிறிய வீட்டை வாடகைக்கு எடுத்தாலென்ன? இல்லாவிட்டால் ஓர் அறைகூடப் போதுமானது அப்போதைக்குத் தோன்றும்... நிறைவேறாது எதிர்காலத்தைப் பற்றி நிறைய நினைப்பதுண்டு. நினைத்துத் தீர்மானிப்பதும் உண்டு. இந்தப் பிறவியிலேயே நான் மறுபிறவி எடுத்திருக்கிறேன். புதிய வாழ்க்கையின் சட்ட திட்டம் நிர்மாணிக்கிறேன். என்ன நடக்க வேண்டுமென்று நிச்சயிக்க வேண்டும்...

ஆனால், எதுவும் முடியாது. நினைக்கவே முடியாது. மனது ஒரு நிலையில் நிற்பதில்லை.

அதனால் சும்மா அங்கேயும் இங்கேயும் தெம்மாடித்தனமாய் அலைந்தான். நிறையப் பீடி புகைத்தான். சில சமயங்களில் கையில் காசிருந்தால் இரண்டு ட்ராம் அறக்குச்சாராயம் வாங்கிக் குடிப்பான்.

காதுகளில் சூனியத்தின் முழக்கத்துடன் நடந்துகொண்டிருந்தபோது ஒரு நாள் அச்சு தேடி வந்தான். பப்பனின் தந்தை வீட்டில் இல்லை. பப்பன் மட்டுமே இருந்தான்.

"இந்தப் பிடிவாதம் நல்லா இல்லே."

வாசலில் நின்றபடி அச்சு சொன்னான். அவனைப் பார்த்ததும் பப்பன் உள்ளே போய்விட்டான். எவரும் உட்காரக்கூடச் சொல்லவில்லை.

"அச்சுவுக்கு என்ன வேணும்?"

வாசலில் நின்றபடியே அவன் பேசினான்.

"உங்களைக் கூட்டிக்கிட்டுட்டுப் போகத்தான் நான் வந்தேன். நடந்ததெல்லாம் விதியாலேன்னு நினைச்சி சமாதானப்படணும். தாசன் வரணும்."

"கூப்பிட வேண்டியவங்க வந்து கூப்பிட்டா நான் வர்றேன்."

"நான் என்ன அன்னியனா?"

அவன் கிரிஜாவின் கணவன். அவளுடைய குழந்தைகளின் தகப்பன். ஆனாலும் அச்சு தன்னுடைய குடும்பத்தில் ஓர் உறுப்பினன்தான் என்று கருத தாசனுக்கு முடியவில்லை, தாசனுடைய கண்ணில் அச்சு இன்னும் பழைய அச்சுதான். மரமேறி குமாரனின் மகளை பலாத்காரம் செய்த அச்சு. வாசூட்டியின் பல்லை உடைத்து நொறுக்கிய அச்சு. கடந்த காலத்திலிருந்து அவனுக்கு விடுதலையில்லை.

தாசன் பேசாமல் இருப்பதைக் கண்டு அச்சு வராந்தாவுக்குப் படியேறி வந்தான்.

"தாசன், ரைட்டர் உங்க அப்பாதான். தகப்பன் மகனுக்கு முன்னாலே தோத்து நிக்கணுமா?"

"வேண்டாம்."

“உங்க அப்பாவைப் பத்தி உங்களுக்குப் புரியலே, அப்பா யாருக்கு முன்னாலேயும் தலை குனிய மாட்டாங்க.”

“எனக்கு அதிலே சந்தோஷம்தான்.”

அச்சு சிறிது நேரம் பேசாமல் நின்றிருந்தான். அங்கே வேறு யாரும் இருக்கவில்லை. பப்பன் வெளியே வரவே இல்லை.

“அங்கே வீட்டுக்குப் போகத்தானே உங்களுக்குத் தயக்கம்? அப்படீன்னா ஒரு காரியம் செய்யுங்க. என்னோட வீட்டிலே தங்குங்க.”

அச்சு அதுவரை வந்தாயிற்று. அவன் சொன்னதைக் கேட்டு தாசன் சிரிக்க மட்டுமே செய்தான்.

அச்சு பல தடவை மீண்டும் வந்தான். ஆனால் தாசன் விட்டுக்கொடுக்கவில்லை.

சிறையிலிருந்து வந்ததற்குப் பிறகு ஒரு நாள் தாசன் அச்சுவின் வீட்டிற்குச் சென்றிருந்தான். கிரிஜாவையும் குழந்தைகளையும் பார்ப்பதற்காக. அச்சு வீட்டில் இல்லை. அவள் தடித்திருந்தாள், நிறம் கூடியிருந்தது. பார்த்தால் அடையாளம் புரிந்துகொள்ள முடியாத அளவுக்கு மாற்றம்.

அண்ணனைக் கண்டதும் அவள் பதுங்கினாள். வெளியில் வராமல் கதவுக்குப் பின்னால் பாதி மறைந்து நின்றாள். தாசனுக்கு எதிரில் அவள் எப்படி வந்து நிற்பாள்?

“சுகம்தானே கிரிஜா?”

அவள் தலையாட்டினாள்.

“உனக்கு எத்தனை குழந்தைங்க?”

“ரெண்டு.”

இரண்டும் ஆண் குழந்தைகள். அச்சுவைப் போலத் தடித்து உருண்ட ஆரோக்கியசாலிகளான குழந்தைகள்.

அவள் கதவுக்குப் பின்னாலும் அவன் திண்ணை அருகிலும் நின்றிருந்தார்கள். அவர்களுக்கிடையே மௌனம் வந்து நிறைந்தது.

அவர்களுக்குப் பரஸ்பரம் பேசிக்கொள்ள ஒன்றுமில்லையா?

அன்று, மய்யழி நோக்கி ஒளிந்து வந்த ஆபத்தான அந்த இரவு, தன்னுடைய கைகளில் கிடந்து அழுத செல்லத் தங்கச்சி... அவளுக்கு அண்ணனோடு பேச ஒன்றுமே இல்லையா?

காலத்தின் போக்கில், கர்மபூமியில் ஆட்டம் தொடர்கையில், தனது ஆத்மாவின் பகுதிகள்கூட அறிமுகமில்லாதவையாய் முடிந்துவிட்டிருந்தன.

“நான் போறேன்.”

அவள் ஏதோ சொல்வதற்காக ஆமென்றாள். சத்தம் வெளியே வரவில்லை.

அவன் படியிறங்கி வந்து விட்டான்.

அதற்குப் பிறகு அந்தப் பக்கம் போகவே இல்லை.

வீட்டிற்குத் திரும்பிப் போகச் சொல்லி எல்லாப் பகுதிகளிலிருந்தும் தூண்டுதல் ஏற்பட்டது. பப்பன் மட்டுமல்ல, கணாரன் அண்ணாச்சியும் வாசூட்டியும்கூட அவனுக்கு உபதேசம் செய்தார்கள், திரும்பிப் போகச் சொல்லி.

“நாட்டுக்காக வேண்டி நீ வீடு துறந்திட்டே இன்று நீ சுதந்திரமானவன். போய் வீட்டுக் காரியங்களை கவனி.”

“அவங்களுக்கு இனிமே நான் தேவையில்லை.”

அப்பாவுக்குப் பென்ஷன் வந்தது. கிரிஜாவுக்கு ஒரு வழி பிறந்துவிட்டது.

போதாதற்கு குடும்பக் காரியம் பார்க்க அச்சு இல்லையா?

"நான் ஒரு மனிதாபிமானின்னு நீ சொன்னதில்லே?" வாசூட்டி கேட்டான். "அந்த மனிதாபிமானம் இன்னிக்கு எங்கே? உன் அம்மாவோட கண்ணீரை நீ பார்க்கலையா?"

"என்னை ஆளாக்குற சில நியமங்கள் இருக்கு. என்னில் மனிதாபிமானத்தையும் அது வளர்க்குது."

"நீயும் உன்னோட ஒரு குறிக்கோளும்..."

வாசூட்டி கோபத்துடன் எழுந்து போனான்.

வாசூட்டி தென்படவே இல்லை என்று சொல்லலாம். வழியில் எங்காவது தென்படும்போது நைச்சியம் பேசுவான். வீட்டிற்குத் திரும்பிப் போகச் சொல்லி உபதேசம் செய்வான், அவ்வளவுதான்.

கணாரன் அண்ணாச்சி இன்று நிர்வாகக் கவுன்சிலின் தலைவர். மூப்பன்துரையின் பங்களாவில் இருந்துகொண்டு மய்யழியைப் பரிபாலிக்கிறார்.

அதிகாரம் ஏற்றுக்கொண்ட சில நாட்கள் கழித்து கணாரன் அண்ணாச்சி ஆளனுப்பிக் கூப்பிட்டார். கள்ளுக்கடையிலிருந்து நேராக பங்களாவுக்குச் சென்றான். அறக்கின் வாசனை இருந்திருக்க வேண்டும் வாயில்.

மீண்டும் ஒரு தடவை பங்களாவின் கேட் கடந்து, பூந்தோட்டத்தின் நடுவே நடந்தான். வெளியில் வேறு பலர் கணாரன் அண்ணாச்சியைப் பார்ப்பதற்காகக் காத்து நின்றுகொண்டிருந்தார்கள். தாசனுக்கு காத்து நிற்கத்தேவையில்லை...

பட்டுத் திரைச்சீலைகளை விலக்கி தளவிரிப்பு வழியே உள்ளே சென்ற தாசன் வாசற்படியில் சட்டென்று நின்றான்....

மய்யழியின் மக்கள் அவதாரங்கள் என்று நம்பிய கடவுளுக்குச் சமமான மூப்பன்துரைமார்கள் ஒரு நூற்றாண்டுக்கு மேலாக இருந்து மய்யழியை நிர்வகித்த அதே நாற்காலியில் கணாரன் அண்ணாச்சி உட்கார்ந்திருந்தார். தலையில் வெளுத்து இஸ்திரியிட்ட கதர்த் தொப்பி.

சுவரிலிருந்து நெப்போலியன், மூாந்தார்க் முதலியோரின் படங்கள் காணாமல் போயிருந்தன. பதிலாக காந்தி, நேரு ஆகியோரின் படங்கள்.

பங்களாவுக்குக் கீழே குன்றின் சரிவில் கடலலைகள் வந்து ஆர்ப்பரித்தன.

"நான் எல்லாம் கேள்விப்பட்டேன். உனக்கென்னாச்சி, தம்பி?"

"நீங்க எதுக்காக என்னைக் கூப்பிட்டீங்க?"

"நீ இப்படி அலைஞ்சிதிரிஞ்சி புத்தியையும் ஆரோக்கியத்தையும் கெடுத்துக்கக் கூடாது. உனக்கு நான் வேலை தர்றேன். மெறியில் வேணுமா? இல்லாட்டி ஸெக்ரத்தாரியிலா? சொல்லுப்பா....."

முன்பு மூப்பன்துரை சொன்ன அதே வார்த்தைகள்.

"அண்ணாச்சி, நீங்க தர்ற வேலை ஒரு காலத்திலே நான் ஒதுக்கினதுதான். அதைவிடப் பெரிய வேலை ஏதாச்சும் உங்களாலே தர முடியுமா?"

"உனக்கு என்னதான் வேணும் தம்பி? சொல்லு."

"எனக்கொண்ணும் வேண்டாம் அண்ணாச்சி. உங்க அன்பு போதும்."

கணாரன் அண்ணாச்சி தாசனின் முகத்தைப் பார்த்திருந்தார். போகும்போது அவர் மறுபடியும் சொன்னார்.

"இந்த பங்களா உன்னுடையதும்தான், தாசா. இருக்க இடமில்லேன்னா நீ இங்கே தங்கிக்கிடலாம்."

மூப்பன்துரையின் நாற்காலியில் அவர் உட்கார்ந்திருந்தார். ஆனாலும் கணாரன் அண்ணாச்சியிடம் மாற்றமில்லை.

மெறியிலாவது செக்ரத்தாரியிலாவது வேலை ஒரு காலத்தில் வேண்டாமென்று நிராகரித்ததுதான். அந்த உலகம் தனக்கு விலக்கப்பட்டதாக இருந்தது. காலம் மாறிய இந்தச் சூழலில் எதற்காக அந்த வழியில் செல்ல வேண்டும்?

வாழ்வதற்கு இனிமேலும் நிறையக் காலம் எஞ்சி இருக்கிறது. எப்படி வாழ வேண்டும்? தெரியவில்லை. நினைத்தால் மனது நடுங்குகிறது...

# 36

வெள்ளைக்காரர்களின் கப்பல் மய்யழியை விட்டகன்று மூன்றுநான்கு மாதங்கள் கழிந்துவிட்டன. வெள்ளைக்காரர்களைச் சிதைவரை பின்தொடர்வதாக நாடும் வீடும் விட்டு ஒரு நாள் கப்பல் ஏறிப்போன உன்னிநாயர் மய்யழியில் தோன்றினார்.

"நீங்க பிரான்சுக்குப் போகலே?"

உன்னிநாயரைப் பார்த்த கப்பியார் மூக்கின்மேல் விரல் வைத்தார். நரைத்த தாடியும் முடியும் வளர்ந்திருந்தன. கண்கள் குழிந்து போயிருந்தன. நடப்பதற்கான தெம்புகூட இல்லாதிருந்தது உன்னிநாயருக்கு.

கப்பியாரின் கேள்விக்கு பதில் சொல்லாமல் அவர் தன்னுடைய வீட்டை நோக்கி நடந்தார்.

மறுநாள் மங்கலாபுரம் மெயில் ஸ்டேஷனில் வந்து நின்றது. அதிலிருந்து குஞ்சக்கன் கெந்திக்கொண்டு கீழே இறங்கினான். பின்னாலேயே குஞ்ஞானனும். அவர்கள் நிலைகுலைந்திருந்தார்கள். தாடியும்முடியும் நீண்டிருந்தன. குஞ்ஞானன் குஞ்சக்கனைத் தாங்கிப் பிடித்துக்கொள்ள மய்யழி நோக்கி நடந்தார்கள்.

இரண்டு மூன்று நாட்கள் கழித்து ஆசாரி ராமன் திரும்பி வந்தான். நீண்ட பயணத்தின் அடையாளம் தென்பட்டது. பட்டினி கிடந்தும் நடந்தும் களைத்திருந்தான்.

அடுத்து வந்த நாட்களில் கப்பல் ஏறிப்போன மற்ற மய்யழி மக்களும் ஒவ்வொருவராக ரயில் வழியாகவும் கரை வழியாகவும் திரும்பி வந்தார்கள்...

கப்பல் கொழும்பைச் சுற்றி பாண்டிச்சேரி துறைமுகத்தில் நங்கூரமிட்டபோது உன்னிநாயரைப் போன்ற மய்யழி மக்களுக்கு அங்கே இறங்க நேர்ந்தது. அவர்களை மட்டுமல்லாத, பாண்டிச்சேரியையும் மற்ற இடங்களையும் சேர்ந்த கறுத்தவர்களும் வெளுத்தவர்களுமான பல துரைமார்களையும் ஏற்றிக்கொண்டு கப்பல் பயணத்தைத் தொடர்ந்தது.

"பிரான்சிலே போய் இருக்கலேன்னா என்னவாம்? நாங்க கப்பல்லே ஏறிப் பார்க்கலே? கொளம்பு பார்க்கலே?"

ஆசாரி ராமனுக்கு அது போதுமானதாயிருந்தது.

சில நாட்களுக்கு உன்னிநாயர் வெளியே வரவே இல்லை. வெளியே வந்தபோது கப்பியார் மீண்டும் கேட்டார்.

"என்ன உன்னிநாயரே, நீங்க பிரான்ஸ் போகலே?"

"மடையனாக்க வேண்டாம். நான் போவேன்."

"எப்போ உன்னிநாயரே?"

"அது போறப்போ பார்க்கலாம்."

வீறாப்புடன உன்னிநாயர் நடந்து போனார்.

உன்னிநாயர் மீண்டும் கடையைத் திறந்தார். குஞ்சக்கன் மீண்டும் முனிசிபல் விளக்குகள் ஏற்றினான். ஆசாரி ராமன் மீண்டும் உளி எடுத்தான்...

"நாளை போவேன். நாளைக்குக் கூட்டிப்போக வேறே கப்பல் வரும்."

உன்னிநாயர் கள்ளுக்கடையிலிருந்தபடி சொல்வார். அவர் அப்படி நம்பிக்கொண்டிருந்தார். உன்னிநாயர் அப்படி வெள்ளைக்காரருடைய கப்பலுக்காகக் காத்திருக்கிறார். அவர் மட்டுமல்ல, மேலும் ஏராளமான மய்யழிக்காரர்களும்தான்.

"வெள்ளைக்காரங்க திரும்பி வருவாங்களா உன்னிநாயரே?"

வராந்தாவில் கால் நீட்டிக்கொண்டு பொடி உறிஞ்சும் குறம்பியம்மா தன்னுடைய பங்கலான கண்களை இடுக்கித் திறந்துகொண்டு கேட்பாள். அப்போது நம்பிக்கையுடன் உன்னிநாயர் பதில் சொல்வார்.

"அவங்க வருவாங்க."

★ ★ ★

ஆற்றங்கரையில் பாறையிலிருந்து வெயிலின் சூடு தணிந்திருக்கவில்லை. புகைவண்டிப் பாலத்திற்குக் கீழே தெளிந்த ஆறு சமுத்திரத்தை நோக்கி ஓடிக்கொண்டிருந்தது. தொலைவில் போக்குவெயிலில் மூழ்கியிருக்கும் கனகமலை.

தாசனும் பப்பனும் பாறையின் மேல அமர்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள்.

பாலத்தைக் குலுக்கிக்கொண்டு ஒரு வண்டி கடந்து போயிற்று.

"வண்டியைப் பார்க்கிறப்போ எனக்கு என்னவெல்லாமோ தோணுது. எங்கேயாவது போகணும்... முன்பின் தெரியாத ஊர்களுக்கு..."

அகன்றகன்று போகும் வண்டியின் சத்தத்தில் பப்பன் செவிமடுத்தான்.

"ஒரு நாள் நான் போவேன்... புதிய அறிவுகள் தேடி..."

மய்யழி விடுதலை அடைந்ததும் பப்பனின் புரட்சித் தீ குன்றிப்போயிருந்தது. கண்களில் தீ அணைந்துபோயிருந்தது. இடையிடையே வெடிகுண்டேற்ற இடது கைத்தண்டையைப் பார்த்தபடி அவன் உட்கார்ந்திருப்பான், கடந்து போன யுத்த பூமியைக் குறித்ததான சோகச் சிந்தனைகளுடன்.

"நீ எங்கேயும் போகக்கூடாது."

"இங்கே எனக்கு இனிமே எதுவும் செய்யறதுக்கில்லே."

புதிய கர்மக்ஷேத்திரங்களைத் தேட வேண்டியிருக்கிறது. புதிய புரட்சித் தீயை மூட்ட வேண்டியிருக்கிறது. மய்யழியில் இருந்துகொண்டு அவனால் இனி எதுவும் செய்ய முடியாது.

"நீ ஊரைவிட்டுப் போகாதே. காலேஜிலே சேர்ந்து படிப்பைத் தொடரு."

"படிக்கிறதுக்கு எனக்கு இனிமே தெரியாது. போராட்டம் நடத்தவும் போலீஸ்காரங்ககிட்ட உதை வாங்கவும் மட்டும்தான் எனக்கு இனிமே தெரியும்."

போராட்டம் அவனுடைய ஒரு வாழ்க்கைப் போக்காக அமைந்துவிட்டிருந்தது. மற்றொரு போக்கை ஏற்றுக்கொள்ள அவனால்

முடியாது.

பப்பன் சோம்பேறியும் உதவாக்கரையும் ஆகிவிட்டான். அவன் பெரும்பாலும் படுத்துத் தூங்குவான். தூங்காதபோது தாசனைத் தேடிப்பிடித்து அவனுடன் அலைந்து திரிவான். சில சமயங்களில் வாசூட்டியும் இருப்பான்.

விடுதலைப் போராட்டத்தில் சேர்ந்து வேலை இழந்தவர்கள் ஏராளமாக இருந்தார்கள். அவர்களில் நிறையப் பேருக்கு வேலை மீண்டும் கிடைத்தது. வாசூட்டிக்கும். ஆனால் அவன் தன்னுடைய வேலையை ஏற்றுக்கொள்ளவில்லை.

"தேவையில்லே." வாசூட்டி சொன்னான். "நான் கொஞ்சம் யோசிக்கிறேன்."

இழந்த வேலையைப் பற்றி சதா குறை சொல்லிக்கொண்டிருந்த வாசூட்டி புதிய வேலையை ஏற்றுக்கொள்ளாதது எல்லோருக்கும் வியப்பாயிருந்தது.

"நான் உங்களையெல்லாம் ஆச்சரியத்தில் ஆழ்த்துவேன்." ஒரு நாள் வாசூட்டி பப்பனிடம் சொன்னான். "ஒரு நாள் எதிர்பாருங்க"

ஒரு சிரிப்புடன் அவன் நடந்து போனான்.

வாசூட்டி தாசனுடனோ பப்பனுடனோ நடமாடுவதில்லை. அவன் எல்லா இடங்களுக்கும் தனியாகவே போனான். சில சமயங்களில் மூப்பனின் பங்களாவில் கணாரன் அண்ணாச்சியின் பக்கத்தில் போய் உட்கார்ந்திருப்பான். சில சமயங்களில் தொடர்ந்து நாட்கணக்கில் அவனை வெளியில் பார்க்க முடியாது.

மய்யழி சட்டப்படி இந்திய யூனியனில் சேர்வதற்கு முன்பு தங்களுக்கு விருப்பமான குடியுரிமையை ஏற்பதற்கான சுதந்திரம் மய்யழியின் மக்களுக்குக் கிடைத்தது. அவ்வாறாக மய்யழி மக்கள், மற்றொரு சோதனைக்கு உள்ளாக்கப்பட்டார்கள். ஒரு தேர்தலுக்கான நிர்பந்தத்திற்கு அவர்கள் உள்ளானார்கள். இரண்டு வழிமுறைகளுக்கு முன்பாக அவர்கள் திகைத்து நின்றார்கள்.

"உண்ணிநாயரே..."

ற்யூ த் லா லிமித்தியேர் வழியாக நடந்து போய்க்கொண்டிருந்தார் உண்ணிநாயர். அப்போதுதான் நாணி கூப்பிட்டாள்.

"ஆப்சன்னு சொன்னா, என்ன, உண்ணிநாயரே?"

உண்ணிநாயருடைய தலையிலும் 'ஆப்ஷன்' பற்றியதான சிந்தனைதான் இருந்தது. அந்தச் சொல்லுக்கான பொருளை அவர் மற்றவர்களிடம் ஏற்கெனவே கேட்டுப் புரிந்துகொண்டிருந்தார்.

"அப்படீன்னா, உனக்கிப்போ நினைச்சா வெள்ளைக்காரியாகலாம். அதுதான் அர்த்தம்"

"அதெப்படி உண்ணிநாயரே? நான் கருப்பில்ல? வெள்ளைக்காரங்க கொய்யேத்திப் பூ மாதிரி சிவப்பில்ல?"

"அப்படீன்னா, தோல் வெளுத்த வெள்ளைக்காரியா ஆக்குறதில்லே." உண்ணிநாயர் விளக்கினார். "பிரெஞ்சு குடியுரிமையை ஏத்துக்கிடுறியான்னு அர்த்தம்."

குடியுரிமை என்ற சொல்லுக்கான பொருளையும் உண்ணிநாயர் விவரித்து சொல்ல வேண்டியதாயிற்று. ஆனாலும் நாணிக்குப் பிடிபடவில்லை. கடைசியில் எல்லாம் புரிந்தபோது நாணி குழப்பத்துடன்

கேட்டாள்.

"அதனாலே ஏதாச்சும் நன்மை கிடைக்குமா, உன்னிநாயரே?"

"நான் ஒண்ணு கேட்கட்டுமா?"

உன்னிநாயர் வராந்தாவில் படியேறி துண்டினால் பெஞ்சைத் துடைத்துவிட்டு அங்கே உட்கார்ந்தார். செட்டியப்பா போனதுடன் நாணியும் குடும்பமும் மீண்டும் திக்கில்லாமல் நிற்க நேரிட்டது. அரிசி இல்லை உலை வைக்க. துணி இல்லே உடுத்த. செட்டியப்பா வாங்கிக் கொடுத்திருந்த நகைகள் ஒவ்வொன்றாகக் கைவிட்டுப் போய்க்கொண்டிருந்தன. . . .

"ஆப்சன் முடிஞ்ச பிறகு பட்டினி கிடக்க வேண்டியிருக்காது. வெள்ளைக்காரங்க பணம் தருவாங்க. பிரான்சுக்குப் போகணும்னு நினைக்கிறவங்க போகலாம். சர்க்கார் உத்தியோகஸ்தர்களா இருந்தா பணம் கிடைக்கும்!"

பிரெஞ்சுக் குடியுரிமையை ஏற்றுக்கொண்டால் கிடைப்பதான வசதிகளை உன்னிநாயர் நினைத்து நினைத்துப் பேசினார்.

பிரான்சுக்குப் போக முடியும் என்றறிந்தபோது நாணியின் மனம் துள்ளிற்று. கப்பல் ஏறிப் போனதற்குப் பிறகு செட்டியப்பாவைப் பற்றி யாதொரு தகவலும் இல்லை. எப்படியாவது பிரான்சுக்குப் போய்ச் சேர்ந்துவிட்டால் தானும் தேவியும் தங்களுடைய ஐந்து பிள்ளைகளும் காப்பாற்றப்படுவார்கள்.

"எல்லாருக்கும் ஆப்சன் செய்ய முடியுமா, உன்னிநாயரே?"

"அது ஏன் முடியாது?"

"நீங்களும் செய்வீங்களா?"

அதைப் பற்றியெல்லாம் கேட்கலாமா என்கிற மாதிரியில் உன்னிநாயர் லேசாகச் சிரித்தார்.

கிளம்பிப் போகும் நேரத்தில் அவர் மீண்டும் ஒரு முறை வற்புறுத்தினார்.

"நீயும் தேவியும் ஆப்சன் செய்திருங்க, நாணி. அஞ்சு குழந்தைங்கல்ல உங்களுக்கு இருக்குது? அதுங்களை நினைச்சாவது செய்யணும். குழந்தைங்க பட்டினி கிடக்கக் கூடாது."

நாணி ஆலோசித்தாள்.

அவள் மட்டுமல்ல, மய்யழியின் மக்களில் பெரும்பகுதியினர் ஆலோசனையில் ஈடுபட்டார்கள். உன்னிநாயரும் மற்றவர்களும் பிரச்சாரம்செய்தபடி நடந்தார்கள்.

"பிரான்சுக்குப் போகணும்னு நினைக்கிறவங்க பிரான்சுக்குப் போகலாம். வேலை இல்லாதவங்களுக்கு வேலை, பணத்துக்குப் பணம். எதுக்கு நண்பர்களே நீங்க தயங்குறீங்க?"

பட்டாளத்திலிருந்த கப்போறல் கிட்டு அப்போதுதான் இந்தோசைனாவிலிருந்து திரும்பி வந்தது. அவன் விலையுயர்ந்த சிகரெட் புகைப்பதையும், பணத்தைத் தண்ணீராகச் செலவழிப்பதையும் மய்யழி மக்கள் காண நேர்ந்தது.

"சொர்க்கமாக்கும் பிரான்ஸ்!"

தினமும் சாயங்காலம் அலங்கரித்துக்கொண்டு கிட்டு கடைத்தெருவில் வந்து நிற்பான். மய்யழி மக்களுடன் பேசிக்கொண்டிருப்பான்.

"பொம்பளைக்குப் பொம்பளை, கள்ளுக்குக் கள்ளு. பணத்தை விட்டெறிஞ்சா ஒரு குறையும் இல்லே."

அரைப்பட்டினியுடன் நாள் கடத்தும் மய்யழி மக்கள் அதைக் கேட்டு

வாய் பிளந்து நிற்பார்கள். அவர்களுடைய காதுகளில் எப்போதும் கப்போறல் கிட்டுவின் குரல் தங்கியிருக்கும். வேலை இல்லாதவர்களுக்கு வேலை. நிறைய சம்பளம். அப்படியிருக்க, பிரான்சுக்குப் போகாமலிருப்பானேன்? அதாவது, பிரான்சுக்குப் போனால்தான் என்ன? மாதாமாதம் பணம் கிடைக்குமல்லவா?

"நானும் ஆசாரிச்சியும் வெள்ளைக்காரங்களாகலாம்."

ஆசாரி ராமன் தன்னுடைய தீர்மானத்தைக் கள்ளுக்கடையில் வைத்துத் தெரிவித்தான். அதற்கு முன்புதான் உன்னிநாயர் குடியுரிமை ஏற்று முடித்திருந்தார்.

தன்னுடைய கடையிலமர்ந்து குடிக்கும் குஞ்சக்கன், குஞ்ஞானன், கப்பியார் முதலியோரிடம் உன்னிநாயர் சொன்னார்.

"இனிமே நீங்க வேறே கடையைப் பார்த்துக்குங்க. நான் பிரான்சுக்குப்போறேன்."

"நாங்களும் பிரெஞ்சுக்காரராகணும். நாங்களும் வர்றோம் பிரான்சுக்கு."

குஞ்சக்கன் தெரிவித்தான். குஞ்ஞானன் தலையாட்டினான்.

கடையில் ஒரு மூலையில் உட்கார்ந்து குடித்துக்கொண்டிருந்த கண்ணன்போலீசுக்குச் சிரிப்பு வந்தது.

"நீங்கயெல்லாம் கப்பல் ஏறிப் போனீங்களே ஒரு சமயம். அதெல்லாம் என்னாச்சி?"

"கப்பல் வரத்தான் வரும். நாங்க போகத்தான் போறோம். நீ பாத்துக்கிட்டே இரு."

உன்னிநாயர் வீறாப்போடு பேசினார்.

சாயங்காலம் நடப்பதற்காக வெளியேறிக் கிளம்பிய கப்போறல் கிட்டு நாணியின் வீட்டு வாசலில் சென்று நின்றான். தலையிலிருந்து தொப்பியைக் கழற்றி அதனுள்ளே பார்த்தவாறு கப்போறல் கேட்டான்.

"நாணி, தேவி, நீங்க ஏன் தயங்குறீங்க? உன்னிநாயரும் குஞ்ஞானனும் எல்லாரும் ஆப்சன் செய்திட்டாங்கல்ல?"

"உன்னியார் சொல்றதெல்லாம் உண்மையா? எங்களுக்கு பிரான்சுக்குப் போக ஒத்து வருமா?"

"ஆப்சன் செய்திருங்க. அதுககடுத்து நிச்சயமா நீங்க ரெண்டு பேரும் பிரான்சிலே, செட்டியப்பாவோட பங்களாவிலே!"

கப்போறல் வராந்தாவில் படியேறி பெஞ்சில் உட்கார்ந்தான். தொப்பியை மடியில் கவிழ்த்து வைத்தான்.

"நீங்க குழந்தைங்களோட பப்பாவைப் பார்த்தீங்களா?"

நாணியினுடைய, தேவியினுடைய கண்கள் விரிந்தன.

"பார்த்தீங்களாவா? தினமும் அவரைப் பார்ப்பேன். சாயங்காலம் நானும் செட்டியப்பாவும் சேர்ந்துதான் பலாழிக்கு. அதாவது கடற்கரைக்குப் போவோம்."

"குழந்தைங்களோட பப்பா தடிச்சிருக்காரா? சமைக்க பரிமாற யாராவது இருக்காங்களா?"

"அலமேலுவும் குழந்தைங்களும் அங்கேதானே."

அதைக் கேட்டபோது நாணியின், தேவியின் இரத்தம் சேர்ந்து கொதித்தது.

அந்தி மயங்கும் வரை கப்போறல் அங்கே உட்கார்ந்து

பேசிக்கொண்டிருந்தான். பிரான்சின் அதிசயங்களை விவரித்தான்.

அவன் ஒரு தடவைக் கூட பிரான்ஸ் பார்த்ததில்லை. நான்காண்டுகள் இந்தோசைனாவில் சண்டையிட்டான். கையில் காயம் ஏற்பட்டதால் பட்டாளத்திலிருந்து திருப்பி அனுப்ப நேர்ந்தது.

இறங்கிப் போகும் நேரத்தில் அவன் மீண்டும் சொன்னான்.

"நீங்க தயங்காம ஆப்சன் செய்யுங்க. அதுக்குப் பின்னாலே கப்பல் ஏறலாம்."

அவ்வாறாக நாணியும் மகள் தேவியும் பிரெஞ்சு குடியுரிமை ஏற்றுக்கொண்டார்கள். அன்றே குஞ்ஞிச்சிருதையும்.

பப்பனும் ஜனார்த்தனனும் ஊர் நெடுக நடந்து சொன்னார்கள்.

"ஆப்ஷன் செய்தால் பழைய சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குத்தான் நன்மை. நீங்க யாரும் பிரான்சுக்குப் போக முடியாது. . . ."

அவர்களுடைய பேச்சு எவர் காதிலும் விழவில்லை. அடுத்து வந்த நாட்களில் வேறு பலரும் குடியுரிமையை ஏற்றுக்கொண்டார்கள். சிலர் பணமும் பதவியும் எதிர்பார்த்து. சிலர் இதயத்தில் அணையாதிருந்த ராஜபக்தியினால். குஞ்ஞிச்சிருதையும் நாணியையும் போன்றவர்கள் கை நழுவிப்போன தாவீதுதுரைமார்களையும் செட்டியப்பமார்களையும் தேடிக்கொண்டு.

வாசூட்டி பிரெஞ்சு குடியுரிமையை ஏற்றுக்கொண்டான் என்றறிந்தபோது மய்யழி மக்கள் திகைத்தார்கள்.

கணாரன் அண்ணாச்சிக்குத் தலைச்சுற்றல் ஏற்பட்டது.

"இப்போதுதான் அவனுக்கு மூளை சரியாயிருக்கு."

உன்னிநாயர் மகிழ்ந்தார்..

கணாரன் அண்ணாச்சியையும் வாசூட்டியையும் ஆக எல்லோரையும் அவர் தனக்குள் வெறுத்துவந்தார். கணாரன் அண்ணாச்சி மூப்பன்துரையின் பங்களாவுக்குத் தன் குடியிருப்பை மாற்றிக்கொண்டபோது அவருடைய நெஞ்சு சிதைந்துவிட்டது. அவர் சதா அவரை சபித்துக்கொண்டிருந்தார்.

வாசூட்டி அவருடைய சாபத்திலிருந்து விடுதலை பெற்றான்.

"அவன்தான் ஆம்பிளை."

உன்னிநாயர் மகிழ்ச்சியுடன் சொன்னார்.

ஊர்க்காரர்களிடையே வாசூட்டி பேசுபொருளானான். ஆபீசிலிருந்து வந்த அச்சு வராந்தாவில் சாய்வுநாற்காலியில் படுத்து அயர்ந்திருந்த ரைட்டரை எழுப்பினான்.

"உங்களுக்குத் தெரியுமா? அந்த வாசூட்டி ஆப்ஷன் கொடுத்திருக்கான்."

"உன்கிட்ட யாரு சொன்னது?"

ரைட்டருக்கு நம்பிக்கை வரவில்லை. அவருக்குத் தூக்கம் கெட்டது. சாய்வுநாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு அவர் அச்சுவின் முகத்தைப் பார்த்தார்.

"அப்படீன்னா அவன் எதுக்காக வெள்ளைக்காரங்களோட சண்டைக்குப் போனான்?"

அச்சுவுக்கும் புரியவில்லை. போராட்டம் என்று சொல்லி இருந்த வேலையை ராஜினாமா செய்தவன் அவன். குடும்பத்தைப் பட்டினி போட்டவன்.

"இந்த புத்தி காலாகாலத்திலே தோணியிருந்தா அவங்கப்பன் பட்டினி கிடந்து சாக நேர்ந்திருக்காது."

ரைட்டர் சாய்வுநாற்காலியிலிருந்து எழுந்து வெளிமுற்றத்தில் உலவினார். மரமேறி பொக்கனச்சன் பட்டினி கிடந்துதான் செத்தான். சாகக் கிடக்கும்போது தொண்டை நனைக்க ஒரு துளி நீராகாரம்கூட அவனுக்குக் கிடைக்கவில்லை. ரைட்டர் அதை நினைத்துக் கொண்டார்.

"எல்லாருடைய புத்தியும் உருப்படியாகும்..." எதையோ நினைத்துக்கொண்டு ரைட்டர் யாரோடு என்றில்லாமல் பேசினார். அவர் மீண்டும் சாய்வுநாற்காலிக்கு வந்து படுத்தார்.

"என் மகனைப் போல ஆகலேயில்லெ அவன். அது போதும்."

அவர் கண்மூடிக் கிடந்தார்.

வாசூட்டி சில நாட்கள் வெளியே வரவே இல்லை. பலர் அவனைப் பார்க்கச் சென்றார்கள். வாசூட்டி அவர்களைப் பார்க்கவில்லை. கணாரன் அண்ணாச்சி பல தடவை ஆளனுப்பிக் கூப்பிட்டார். அவன் போகவில்லை.

ஒரு வாரம் கழித்து வாசூட்டி வெளியே வந்தான். அவன் நேராகச் சென்றது பப்பன் வீட்டுக்குத்தான். தாசனும் அங்கே இருப்பானென்பது அவனுக்குத் தெரிந்ததுதான்.

"பப்பனில்லையா இங்கே?"

முற்றத்தில் நின்றுகொண்டு அவன் குரல்கொடுத்துக் கேட்டான். பப்பனும் தாசனும் மாடியிலிருந்து இறங்கி வந்தார்கள். அவர்கள் முகத்தோடுமுகம் பார்த்து நின்றார்கள்.

"நான் பயணம் சொல்லிக்கிட வந்திருக்கேன்." வாசூட்டி சொன்னான். "நாளைக்கு நான் பாண்டிச்சேரிக்குப் போறேன். அங்கேருந்து பிரான்சுக்குக் கப்பல் ஏறுவேன்."

தாசனும் பப்பனும் வாசூட்டியை முறைத்துப் பார்த்தார்கள்

"என்ன வாசூட்டி, உனக்கு ஏன் இப்படித் தோணிச்சி?"

"வாசூட்டி, நீ பிரான்சுக்குப் போக நான் சம்மதிக்க மாட்டேன் அதுக்கு முன்னாலே உன்னை நான் பொணமாக்குவேன்."

பப்பனின் உடம்பு விறைப்புக் காட்டியது.

வாசூட்டி சிரித்தான். வெளுத்துத் தேய்த்த அருமையான சட்டையும் வேட்டியும் அவன் உடுத்தியிருந்தான். எண்ணெய் தடவிய தலைமுடி அழகாக ஒரு பக்கமாக சீவப்பட்டிருந்தது.

"சொல்லு வாசூட்டி... எதுக்காக நீ இதைச் செய்தே?"

"யாருக்கும் விளக்கம் சொல்லத் தேவையில்லே எனக்கு. விடுதலைப் போராட்டம் முடிஞ்சுபோச்சி. நம்ம விருப்பப்படி எதையும் செய்கிற சுதந்திரம் நமக்கு இன்னிக்கு இருக்கு."

"உனக்கு மனச்சாட்சின்னு ஒண்ணு இல்லே? உன்னோட குறிக்கோளெல்லாம் எங்கே?"

"என்னோட குறிக்கோள் மய்யழி விடுதலையோட முடிஞ்சிபோச்சி. இப்போ எனக்கிருக்கிறது புது குறிக்கோளுங்க."

"குறிக்கோளுங்க உனக்கு உடுத்தின வேட்டி போலேயாக்கும்? மாத்தி மாத்தி உடுத்துறதுக்கு?"

"குறிக்காளுங்க மாறணும்... காலம் மாறுகிறதை அனுசரிச்சி!"

வாசூட்டி தொடர்ந்தான். "வெள்ளைக்காரங்க மேலே எனக்கு ஒருபோதும் வெறுப்பு கிடையாது. மய்யழியிலிருந்து வெளியேறிப் போக நான் அவங்களோட போராடினது சினேகபூர்வமா இருந்தது. காலத்தோட நியமமா இருந்தது அது. அவங்களுக்கு அது புரியாம இருந்ததனாலே நான்

சொல்லிக் கொடுத்தேன். . . . "

"மேலே சொல்லு வாசூட்டி, நாங்க கேட்டுக்கிடுறோம்..."

வாசூட்டி சற்றே சந்தேகித்தான். ஆனாலும் தாசனின் முகத்தைப் பார்த்தவாறு தொடர்ந்தான்.

"அவங்க போயிட்டாங்க. அதனாலே இனிமே அவங்க நம்ம எதிரிங்க இல்லே, அவங்க இனிமே நமக்கு பந்தமில்லே. அதனாலே நீயோ நானோ இன்னிக்கு பிரெஞ்சு குடியுரிமை ஏத்துக்கிட்டா, பிரிட்டிஷ் குடியுரிமையோ அமெரிக்கக் குடியுரிமையோ ஏத்துக்கிட்டதுக்கு சமம்தான்."

"வாசூட்டி, உன்னை எனக்குப் புரியலே."

வாசூட்டி தொண்டையைச் செருமினான். அவன் துவாலையை எடுத்து கழுத்தும் முகமும் துடைத்துக்கொண்டான்.

"ஆனால், பணம் சம்பாதிக்கவும், அப்படி என் குடும்பத்தின் தரித்திரம் முடிவுக்கு வரவும் நான் பிரான்சுக்குக் கப்பல் ஏறும்போது ஒருத்தர் மட்டும் புரிஞ்சிக்கிடுவாரு. . . . ரெண்டு காலும் இழந்த, புட்டத்தில் அல்சர் வந்து பட்டினி கிடந்து செத்துப்போன என்னோட அப்பா."

அதற்குப் பிறகு யாருக்கும் எதுவும் பேசத் தோன்றவில்லை.

"அத்யே..."

கை நீட்டியபடி வாசூட்டி விடைபெற்றான். ஆனால், தாசனோ பப்பனோ அவனுடைய நீட்டிய கையைப் பொருட்படுத்தவில்லை. கையை நீட்டியபடியே அவன் ஒரு நிமிடம் அப்படியே நின்றான். பின்னர் வெளியேறி நடந்தான்.

மறுநாள் வாசூட்டி பாண்டிச்சேரிக்கு வண்டி ஏறினான். ஒரு வாரத்திற்குப் பின்னர் அங்கிருந்து கப்பல் ஏறினான்.

## 37

பரதன் பென்ஷன் பெற்றுக்கொண்டு ஊர் திரும்பினார். கடல்களுக்கும் துறைமுகங்களுக்கும் அவர் நிரந்தரமாக விடைகொடுத்தார்.

சென்ற தடவை அவர் ஊருக்கு வந்தபோது தாசன் சிறையில் இருந்தான். சிறைச்சாலைக்குச் சென்று அவனைப் பார்ப்பதற்கு பரதன் முயன்றார். ஆனால் அவருக்கு அனுமதி கிடைக்கவில்லை.

வண்டியிலிருந்து இறங்கி வீட்டுக்குள் நுழைந்தபோது வராந்தாவில் எல்லோரும் நின்றுகொண்டிருந்தார்கள். லீலா, சந்திரிகா, வயதானதால் நிற்கக்கூடத் தெம்பில்லாதாகிவிட்ட தாய்மாமன், உறவினர்கள், மற்றவர்கள். இந்தத் தடவை பெட்டிகளும் சூட்கேஸ்களும் அதிகமாக இருந்தன. கடைசித் தடவையாக வருகையல்லவா!

வராந்தாவில் நின்றிருந்த எல்லோரையும் அவர் உன்னிப்பாகப் பார்த்தார். தாசனைக் காணவில்லை. புகைவண்டியிலிருந்து இறங்கியபோது அவர் முதலில் நினைத்தது தாசனைத்தான். மய்யழி சுதந்திரம் அடைந்து விட்டதல்லவா. மய்யழியின் சுதந்திரம் தாசனை நினைக்கச் செய்தது.

தாசனைப் புகைவண்டி நிலையத்தில் காணவில்லை. வீட்டிலும் அவன் அவசரத்தில் இருப்பான். அவர் நினைத்துப்பார்த்தார். இப்போது மய்யழி அவனுடையதும் அவனுடைய கூட்டாளிகளுடையதுமாக ஆகியிருக்க வேண்டும்.

"தாசன் வர்றதில்லையா?"

சாப்பிட உட்கார்ந்தபோது பரதன் மனைவியிடம் கேட்டார். அவள் சும்மா தலையை மட்டும் ஆட்டினாள். சந்திரிகா சட்டென்று சாப்பிடுவதை நிறுத்தினாள்.

"அவன் இப்போ என்ன செய்யறான்?"

அதைத் தெரிந்துகொள்ள பரதனுக்கு ஆர்வம் உண்டாயிற்று. போராட்டமும் புயலும் நிறைந்தல்லவா இருந்தது தாசனின் வாழ்க்கை? இப்போதாவது அவனுடைய வாழ்க்கை கரை கண்டால் போதுமென்றிருந்தது.

லீலா அமைதியாக தாசனைப் பற்றிச் சொல்லத் தொடங்கினாள். அப்போதுதான் அவருக்கு நினைவுக்கு வந்தது. தாசனுக்குக் கோபம் என்றும், வீட்டிற்குப் போவதில்லை என்றும் லீலா எழுதியிருந்தாளே?

எல்லாவற்றையும் தெரிந்துகொண்டபோது பரதனுக்கு வருத்தம் உண்டாயிற்று.

"அவன் சரியாயிருவான்." அவர் தனக்குள் சொல்லிக்கொண்டார்.

"நான் அவனோட கொஞ்சம் பேசிப் பார்க்கிறேன்."

அப்போதுதான் அவர் கவனித்தார். சந்திரிகா சாப்பிடாமல் பிளேட்டைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

"ஏன் சோறு சாப்பிடல்லே?"

"பசிக்கலேப்பா."

"அவளுக்கு இப்போ பசியோ தூக்கமோ கிடையாது." லீலா சொன்னாள். "அவளுக்கு என்னாச்சின்னு தெரியலே, எனக்கு பயமா இருக்கு."

சந்திரிகா ரொம்பவும் மெலிந்து போயிருந்தாள். முகம் ஒடுங்கிப்போயிருந்தது. செழுமையாக வளர்ந்து தொங்கிய தலைமுடி மட்டும் அப்படியே இருந்தது.

மை தீட்டாத வெளிறிய கண்கள்.

லீலா அவளைப் பற்றிப் பேசத் தொடங்கியதும் சந்திரிகா எழுந்து உள்ளே போனாள்.

அன்று சாயங்காலம் பரதன் வெளியே போகவில்லை. வராந்தாவில் இருந்தபடி மனைவியுடன் அவர் எதிர்காலத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். ஒரு பெரிய வீடு கட்ட வேண்டும். சந்திரிகாவை யாருடைய கையிலாவது பிடித்துத் தர வேண்டும். எதிர்காலம் அவருக்குத் தெளிவாகத் தெரிந்தது. நடக்கும்போதும், உட்கார்ந்திருக்கும்போதும், எந்த நேரத்திலும் அவர் அதைப் பற்றித்தான் சிந்தித்தார்.

இரண்டு நாட்கள் கழித்து அவர் தாசனைச் சந்தித்தார்.

"நீ ஜெயிச்சிட்டேல்ல?"

தாசன் நின்றிருந்தது விடுதலை பெற்ற மய்யழியின் மண்ணில்.

"எப்படியும் நீ ஜெயிப்பேன்னு எனக்கு முன்னாடியே தெரியும். குஞ்ஞனந்தனோட ஆத்மாவுக்கு இப்போவாச்சும் மோட்சம் கிடைச்சிருக்கும்."

"ஆமாம் பரதன் சார்."

அவன் துயரம் கலந்து சிரித்தான்.

"ஆனால் என்னோட ஆத்மாவுக்கு மட்டும் மோட்சம் இல்லே, பரதன் சார்."

தாசன் ஏதாவது உயர்ந்த வேலை ஏற்றுக்கொண்டு அந்தஸ்து ஸ்

வாழ்ந்துகொண்டிருப்பான் என்றல்லவா முதலில் பரதன் நினைத்திருந்தார்? ஆனால், அவர் தாசனிடம் எந்த மாற்றத்தையும் காணவில்லை. இஸ்திரி போடாத அரைக்கைச் சட்டை. காடாக மண்டிக் கிடக்கும் தலைமுடி முகத்தில் ஒரு வாரத்து வளர்ச்சி. எந்த ஒருமாற்றமும் இல்லாத தாசன். கண்களில் அந்தப் பழைய தாட்டிகம்-அதே மாதிரியில்.

"இப்போ எங்கே தங்கியிருக்கிறே?"

தாசனின் தோளில் கைபோட்டுக்கொண்டு ற்யூ த் லெக்லீஸ் வழியாக அவர் நடந்தார்.

"எனக்குத் தலைசாய்க்கவா இந்த பூமியிலே இடமில்லாப் போயிரும்?"

"பப்பனோட வீட்டிலேதானே?"

"தங்குறது எனக்கொரு பிரச்சனை இல்லே, பரதன் சார்."

"எனக்கு ஒரு வீடு இருக்கிறப்போ கண்ட இடத்திலேயெல்லாம் இருக்கணுமா?"

"பரதன் சார் மன்னிக்கணும்."

"நான் ஒண்ணுதான் சொல்லணும்." பரதன் சொன்னார். "யாரோ ஒருத்தரோட வீட்டைவிட நல்லது என்னோட வீட்டிலே இருக்கிறது."

"நான் யோசிக்கிறேன், பரதன் சார்."

சந்திரிகாவின் வீட்டில் தங்கியிருப்பதைவிடப் பெரியதொரு மகிழ்ச்சி என்ன இருக்கிறது அவனுக்கு? எப்போதும் அவளுடைய பாதசரங்களின் கிலுங்கலோசை கேட்டுக் கொண்டிருக்கும். காய்ச்சிய தேங்காயெண்ணெயின் நறுமணம் பரப்பி அவள் நடந்து போகும் அறைகளில் எப்போதும் நடமாடிக்கொண்டிருக்கலாம். அவளுடைய நிழலில் வாழலாம். . . .

ஆனால், என்றென்றைக்கும் அவனுக்கு அங்கே தங்கியிருக்க சாத்தியமில்லை. சொந்த வீடு நிராகரிக்கப்பட்டுவிட்ட நிலையில் நடுத்தெருதான் அவனுடைய வீடு.

பாலத்தில் உட்கார்ந்திருந்த அவர்கள் சூரிய அஸ்தமனத்தைப் பார்த்தார்கள். அப்போதுதான் பரதனுக்குச் சொல்லத் தோன்றியது. . . அனாவசியமான இந்தக் கோபம் தொடரக் கூடாது என்று, வீட்டிற்குத் திரும்பிப் போக வேண்டும் என்று. ஒரு வீடு என்றில்லாமல் எவ்வளவு காலம் இப்படி நடுத்தெருவில் கழிப்பது? தாசனுடன் அவரால் ஒத்துப் போக முடியவில்லை. ஆனால், எப்படி இதை அவனிடம் எடுத்துச் சொல்வது? எப்படி அவனுக்கு அறிவுறுத்துவது?

வயதுப்படி தாசன் தன் மகனுக்குச் சமம். ஆனாலும் அவனுக்கு எதிரில் நிற்கும்போது தான் சிறுத்துப்போவதாக அவருக்குத் தோன்றுகிறது.

கடைசியில், சூரியன் அஸ்தமித்தபோது, கடல் வெளிறி இருண்டபோது, அவன் வெளிப்படையாகவே சொன்னான்.

"நான் போறேன்" தாசன் சொன்னான். "அப்பாதான் என்னை விரட்டியடிச்சாரு. அப்பா என்னைத் திருப்பிக் கூப்பிடட்டும்."

"உங்கப்பா அப்படிக் கூப்பிடமாட்டாரு."

அதற்கு தாசனால் பதில் சொல்ல முடியவில்லை.

பலர் ரைட்டரை வேண்டிக்கொண்டிருந்தார்கள், தாசனைக் கூப்பிடும்படி, அப்போதெல்லாம் ரைட்டர் சொல்லிவிட்டார்.

"நான் கூப்பிட்டு அவன் இந்தப் படி ஏற வேண்டியதில்லே."

ரைட்டரை பரதனுக்கு நன்றாகத் தெரியும். அவர் மகனுக்கு எதிரே தலைகுனிய மாட்டார்.

"நீ உன் அப்பாவை மன்னிக்கக் கூடாதா? உனக்காக நிறையப் பொறுத்துக் கொண்டவர் உன் அப்பா. ஜெயிலுக்குப் போனவர்."

"அது மய்யழியின் சுதந்திரப் போட்டத்திலே அப்பா எடுத்துக்கிட்ட பங்கு. ஒரு நாட்டினுடைய சுதந்திரம் சாதாரண விஷயமில்லே. அது ரத்தத்தையும் கண்ணீரையும் காவு கேட்கும். . . ."

பரதன் மௌனமானார். என்னால் உன்னோடு விவாதிக்க முடியாது, தம்பி. அவர் மனதுக்குள் சொல்லிக்கொண்டார். நீ என்னைவிட எவ்வளவோ பெரியவன்...!

தாசன் இடையிடையே பரதனுடைய வீட்டிற்குச் செல்வான். சில சமயங்களில் அங்கேயே தங்கிவிடுவான். லீலா முன்னைப் போல அவனுடன் பேசுவதில்லை. அவளுடைய களிப்பும் சிரிப்பும் முடிந்துவிட்டன போலும். லீலாவின் கண்கள் எப்போதும் அவனுக்குப் பின்னாலேயே போகும். அவள் எதற்கோ பயப்படுகிறாள்.

கட்டி முடிக்கப்படாத வீட்டில் புதர் மண்டிக் கிடக்கும் சுவரை ஒட்டிப் படுத்திருந்தபோது சந்திரிகாவின் தலைமுடியைக் கோதிக்கொண்டே அவன் சொன்னான்.

"உங்கம்மாவுக்கு என்னைப் பிடிக்காத மாதிரி தெரியுது."

"ஆனால் எனக்கு உங்க மேலே இருக்கிற ஆசை அதிகமாயிட்டே இருக்கு."

சந்திரிகாவின் அழுத்தலான சிரிப்பொலி, அவளுடைய பாதசரங்களின் கிலுக்கம். . . .

★★★

வாசூட்டி போய் அதிக நாட்கள் ஆவதற்கு முன்பாகவே பப்பனும் ஊரைவிட்டுப் போனான். தனக்குத் தானே என்னவென்று அறிந்துகொள்ள முடியாத ஒரு குறிக்கோளுடன் முன்பின் பழக்கமில்லாத ஏதோ ஊரை நோக்கி.

ஒரு நாள் தோளில் பையுடன் பப்பன் தாசனுக்கு எதிரே வந்து நின்றான்.

"நான் போயிட்டு வர்றேன்."

"எங்கே பப்பா?"

"எனக்குத் தெரியாது. தொலைவா ஏதாவது ஊருக்கு."

பல நாட்களாகவே பப்பன் ஊரைவிட்டுப் போகும் விஷயத்தைச் சொல்லிக் கொண்டிருந்தான். இந்த இடைக்காலத்தில் அது மட்டுமே அவனுடைய பேச்சாக இருந்தது. சில சமயங்களில் புகைவண்டி நிலையத்திற்குப் போய் நின்றுகொண்டு தொலைவிலிருந்து வருகின்ற, தொலைவுக்குப் போகின்ற, வண்டிகளை அவன் பார்த்தவாறிருப்பான்.

"எப்போ நீ திரும்பி வருவே?"

"அதுவும் எனக்குத் தெரியாது, தாசா!"

தாசன் பப்பனுடன் ஸ்டேஷன்வரை சென்றான்.

"நான் கடுதாசி போடுறேன். எனக்காக வேண்டி சந்திரிகாகிட்ட பயணம் சொல்லிடு."

பன்னிரண்டரைக்கும் ஒரு மணிக்குமாக இரண்டு வண்டிகள் மய்யழி வழியே கடந்து செல்லும். தெற்கிலிருந்தும் வடக்கிலிருந்தும் வரும், வெவ்வேறு இலக்குகளை நோக்கிப் பயணம்தொடரும், மெயில் வண்டிகள். தினமும்

நேரம் தவறித்தான் அந்த வண்டிகள் மய்யழியை வந்தடையும். எது முதலில் வரும் என்று சொல்ல முடியாது.

"முதல்லே வர்ற வண்டியிலே நான் ஏறிக்கிறேன். எனக்கு லட்சியமில்லே."

பப்பன் பிளாட்பாரத்தில் நின்றுகொண்டு ரயில் தண்டவாளங்களைப் பார்த்தான். வண்டி வருவதாகத் தெரியவில்லை.

"தாசா, நீ ஏதாச்சும் ஒரு தீர்மானம் எடுக்கணும். எவ்வளவு காலம் நீ இப்படி இருப்பே?"

"நான் சிலதைத் தீர்மானிச்சிருக்கேன்."

கூர்கோம்பலமாந்தேரில் ஓர் ஆசிரியப் பணியிடம் காலியிருந்தது. அல்லல் இல்லாமல் அது கிடைக்கும். ப்ளாஸ் தார்மினுக்கு அடுத்து சட்டைக்காரர்கள் குடியிருக்கிற இடத்தில் அறை ஒன்று தேவைப்பட்டால் கிடைக்கும்.

அதைக் கேட்டபோது பப்பனுக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று.

"நாம புதிய மேய்ச்சல் நிலங்களைக் கண்டுபிடிப்போம். . . ."

தொலைவில் வண்டியின் உறுமல் கேட்டது. ஏதோ ஒரு வண்டி வருகிறது.

பப்பன் வாக்கைக் காப்பாற்றினான். முதலில் வந்த வண்டியில் அவன் ஏறினான்.

"நான் திரும்பி வருவேன், என்னைக்காவது."

கிளம்பிப் போகும் வண்டியில் வெளியே பார்த்து நின்றபடி பப்பன் கையை ஆட்டிக் கொண்டிருந்தான். வண்டி கண்ணிலிருந்து மறையும்வரை தாசன் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு அமைதியாக அவன் திரும்பி நடந்தான்.

# 38

லெஸ்லீதுரையின் பழங்காலத்து பங்களாவின் முன்பக்கத்து வாசல் திறக்கப்பட்டது.

கறையான் பிடித்த திரைச்சீலைகள் தொங்கிய ஜன்னல் வழியே கைத்தடி ஊன்றி நின்றபடி கஸ்தோன்துரை மய்யழியைப் பார்த்துக்கொண்டிருந்தார். பழையனவேயானாலும் நல்ல நிலைமையிலிருந்த கால்சராயும் கோட்டும் தொப்பியும் அணிந்திருந்தார் அவர். கழுத்தில் அகலமான சிவப்பு நிறத்திலான டை.

கைத்தடியை ஊன்றிப் பற்றியபடி அவர் நிதானமாக சாலைக்கு வந்தார். முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு அப்படி முதன்முதலாகப் பேடிதுரை தன்னுடைய பங்களாவிலிருந்து வெளியே வந்தார். முழுதும் நரைத்த முடிந்திருந்த தலைமுடி வெள்ளை நார்கள் போன்று தோள்களில் விழுந்து கிடந்தது. உருக்குலைந்துவிட்ட ஒரு தேவதூதனைப் போல இருந்தார் அவர்.

தடியை ஊன்றிக்கொண்டு துரை ற்யூ த் றெலிதாய்ஸ் வழியாக மெதுவாக நடந்தார். அவர் நடப்பதற்கு மறந்துபோயிருந்தார். ஒரு குழந்தை தத்தி நடப்பது போல இருந்தது அவருடைய நடை.

சில அடி தூரம் நடந்த பின்னர் துரை சாலையில் நின்றார். இளம் வெயில்பட்டதால் உடம்பு பொரிந்தது. சூரிய ஒளியை ஏற்று முப்பது

வருடங்கள் ஆகிவிட்டதல்லவா?

சிறிது நேரம் பெருமூச்சுவிட்டு நின்ற பின்னர் கஸ்தோன்துரை மீண்டும் நடக்கத் தொடங்கினார். பூர்வஜன்மங்களிலிருந்து வரும் நினைவுகள் போன்று ரியூ த் றெனிதாம்லையும் சுற்றுச் சூழல்களும் அவர் கண்ணெதிரே துலாம்பரமாக வந்தன. ஆழ்ந்த துக்கத்தின் கொப்புளமுற்ற கண்களில் கண்ணீர் துளிர்த்து மின்னிற்று.

பாலம் வெறுமையாய்க் கிடந்தது. நேரம் புலர்ந்து அதிக நேரம் ஆகிவிடவில்லை. நிலா வெளிச்சம் போல மெல்லிய படலமாக வெயில் கடலிலும் ஆற்றிலும் படர்ந்து கிடந்தது.

முதலில் கஸ்தோன்துரையைப் பார்த்தது கப்பியார்தான். அவன் விடிகாலை மணி அடித்து முடித்த பின்னர் தேவாலயத்திலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்தான். தடியை ஊன்றி நின்றுகொண்டு கஸ்தோன்துரை கப்பியாரைப் பார்த்தார். இருவருக்கும் ஒருவருக்கொருவர் அடையாளம் புரியவில்லை.

"என் மாதாவே...!"

ஆள் அடையாளம் தெரிந்தபோது கப்பியாருடைய தொண்டையிலிருந்து ஓர் அலறல் வெளிப்பட்டது. கஸ்தோன்துரை தன்னுடைய நீண்ட சிறைவாசத்தை முடித்துக்கொண்டு வெளியே வந்திருக்கிறார். ஓடிப்போய் தேவாலயத்தில் எல்லா மணிகளையும் ஒருசேர அடிக்க வேண்டுமென்று கப்பியாருக்குத் தோன்றிற்று.

"பீட்டர்தானே... இல்லே?"

கஸ்தோன்துரையின் உதடுகள் அசைந்தன. கப்பியார் துரையின் அருகில் சென்று நின்றான். ஒரு கையினால் தடியை ஊன்றிப் பிடித்து, மறு கையைக் கப்பியாரின் தோளில் வைத்து அவர் முன்னோக்கி நடந்தார்.

மூ அடித்துக்கொண்டு நிற்கும் பத்ரோஸ் பிரமை பிடித்து நின்றான். பத்ரோஸின் மூக்கடையில் உட்கார்ந்து உரக்கப் பத்திரிகை படித்துக்கொண்டிருந்த கேளுபாண்டர் மௌனமானார். தர்மசத்திரத்தின் வராந்தாவிலிருந்து யானைக்கால் அந்தோனி காலை இழுத்தபடி வந்தான். எல்லோரும் கஸ்தோன்துரையைப் பார்த்தார்கள். துரையின் முகம் அவர்களை அச்சுறுத்தியது. அவருடைய உடம்பு ஒரு பிரேதத்தைப் போல வெளிறியிருந்தது. மேலும் துரையின் பார்வை ஒரு மனிதனுடையதைப் போன்று இருக்கவில்லை. அவரில் மனித இயல்புக்குப் புறம்பான ஏதோ ஒன்று அமைந்திருந்தது.

பத்ரோஸ் சாலையில் இறங்கி வந்தபோது துரை கப்பியாரின் முகத்தைப் பார்த்தார்.

"மூக்கடை பத்ரோஸை துரை மறந்திட்டீங்களா?"

பத்ரோஸின் குரலில் பச்சாத்தாபம் இருந்தது.

"நீ பாறக்கலாயிலே இருந்தேல்லே?"

கஸ்தோன்துரையின் சோகம் தொடங்கிய காலத்தில் பாறக்கலாயில் இருந்தது பத்ரோஸின் மூக்கடை.

"படிக்கிற காலத்திலே நானும் தாமஸும் உன்னோட கடையிலேதான் மூ துடிப்போம். உன்னோட வறுவலோட ருசி இப்பவும் என் நாக்கிலே இருக்கு. உனக்கு அதெல்லாம் ஞாபகம் இருக்கா பத்ரோஸ்?"

துரை பத்ரோஸைப் பார்த்துப் புன்னகைத்தார். பத்ரோஸ் கிறங்கிப்போனான். கேளுபாண்டரும் யானைக்காலனும் மற்றவர்களும

இதற்குள்ளாக வந்து சேர்ந்திருந்தார்கள். கஸ்தோன்துரையின் குரல் கேட்டு அவர்கள் எல்லோரும் மகிழ்ச்சி அடைந்தார்கள். ஆண்டுக்கணக்காக அவர்கள் கேட்டு மறந்திருந்த கஸ்தோன்துரையின் குரல்!

"துரை வாங்க. துரைக்கு நான் என்னோட வறுவலை எடுத்துத் தர்றேன்."

பத்ரோஸின் தொண்டை இடறிற்று. கடையின் முன்பாக வாசற்படிகளின் மேலேற அவன் துரைக்கு உதவினான். தடியைச் சுவர்மீது சாய்த்து வைத்துவிட்டு கஸ்தோன்துரை பெஞ்ச் மீது உட்கார்ந்தார். தொப்பியை எடுத்து அருகில் வைத்தார். இளவெயில் பட்டு அவர் வியர்த்திருந்தார்.

பத்ரோஸ் விறைத்த கையினால் ஆவி பறக்கும் வறுவலை துரையின் முன்பாகக் கொண்டு வந்து வைத்தான். ஒரு பெரிய கிளாசில் டீயும்.

"இருந்தாலும் துரை ரொம்பவும் மாறிப்போயிட்டீங்க. எங்களையெல்லாம் மறக்கலேல்ல?"

"நான் என்னையே மறக்கப் பார்த்துக்கிட்டிருந்தேன் கேளுமாஸ்டரே."

"இப்போவாச்சும் துரை வெளியே வந்தீங்களே. அது போதும்."

பத்ரோஸ் அதில் மகிழ்ச்சி கண்டான்.

வாசற்படி அருகில் அந்தோனி நின்றிருந்தான். அவனுடைய இரண்டு கால்களையும் யானைக்கால் பிடித்திருந்தது. வெடிப்புகளில் ஈக்கள் மொய்த்து மயங்கியிருந்தன. கஸ்தோன்துரை கால்சராய்ப் பையிலிருந்து நாலணா எடுத்து அந்தோனியின் நீட்டியிருந்த கைகளில் கொடுத்தார்.

கப்பியாரின் தோளைப் பற்றிக்கொண்டு ர்யூ த் லெக்லீஸை இலக்காக வைத்து நடந்தார். மேடு மேலேறும்போது மலையில் ஏறுவது போல அவர் பெருமூச்சு விட்டார். சாலை ஓரங்களில் வீடுகளிலிருந்து பெண்களும் குழந்தைகளும் வெளியே வந்தார்கள். யாருக்கும் கஸ்தோன்துரையைத் தெரியவில்லை. ஒவ்வொரு வீட்டின் முன்பாகவும் தடி ஊன்றி அவர் நின்றார். வீட்டின் இருப்பிடம் அறிந்து ஆட்களை அடையாளம் புரிந்துகொள்ள முயன்றார்.

"கணாரியில்லே இங்கே?"

பேண்டுக்காரக் கணாரியின் வீட்டுக்கு முன்பாகப் போய் நின்று அவர் கூப்பிட்டுக் கேட்டார். கணாரி இறந்து நெடுங்காலம் ஆகிவிட்ட போதிலும் அவனுடைய ட்ரம்பெட் திண்ணைச் சுவர்மீது இப்போதும் தொங்கிக்கொண்டிருந்தது.

"அவரு போய்ட்டாரு."

முற்றத்திலிருந்தபடி ஓலை முடைந்துகொண்டிருந்த நாணி எழுந்து நின்றாள்.

"இந்தப் பொண்ணு யாரு?"

"மக, தேவி,"

"இந்தக் குழந்தைங்க...?"

செட்டியப்பாவின் குழந்தைகளைப் பார்த்து துரை கேட்டார். அவர் எல்லாவற்றையும் கேட்டுத் தெரிந்துகொண்டார். மய்யழியின் மக்களைக் குறித்ததான நினைவுகளைப் புதுப்பித்துக்கொள்வதாகவும் புதிய நினைவுகளுக்கு வித்துப் பாவுவதாகவும் இருந்தது.

ர்யூ த் லா ஸெமித்தியேர். . . கஸ்தோன்துரையின் உதடுகள் வெளிறின. இரிமிஸேக்குப் போகின்ற வழியாக இருந்தது அது. பப்பாவும்

மம்மியும் இறுதி யாத்திரை செய்த வழி. . . .

"என்ன துரை?"

"ஒண்ணுமில்லே கப்பியாரே."

கஸ்தோன்துரை கோட்டுப் பையிலிருந்து துவாலை எடுத்துக் கண் துடைத்தார். கப்பியாரின் தோளைப் பிடித்துக்கொண்டு மீண்டும் நடந்தார். இப்போது நடையில் பழக்கம் வரத் தொடங்கியிருந்தது. அவர் நடக்கப் பழகிவிட்டார். தொலைவில் ரைட்டரின் வீட்டைப் பார்த்தபோது துரையின் கால்களுக்கு வேகம் கூடிற்று. ஒரு காலத்தில் தனது உற்ற தோழனாயிருந்த தாழு. ஒரு காலத்தில் தான் யாரோடு அணைந்து கிடந்து முலைப்பால் குடிக்க வைத்த குறம்பியம்மா. . .

கப்பியாருடைய தோளிலிருந்து கை எடுத்துவிட்டுத் தடியை வலுவாக ஊன்றிக் கொண்டு அவர் ரைட்டரின் வீட்டுப்படி ஏறினார். கஸ்தோன்துரையின் குரலைக் கேட்டபோது குறம்பியம்மாவுக்கு மின்சாரம் தாக்கியது போல இருந்தது. சுறுப்பி படிந்த அவளுடைய காதுகளுக்கு பத்துநூறு மைல்கல் தொலைவுக்கு அப்பாலிருந்து வந்தாலும் அந்தக் குரலை அடையாளம் புரிந்துகொள்ள இடர்பாடில்லை.

"கஸ்தோனா? என்னோட தங்கமகனே. . . வா!"

பஞ்சடைந்துபோன அவளுடைய கண்களுக்கு கஸ்தோனைக் காண்பதற்காகவே பார்வை திரும்பி வந்துவிட்டதோ?

ரைட்டரும் கௌசுவம்மாவும் கிரிஜாவும் வராந்தாவை வந்தடைந்தார்கள். ரைட்டர் கஸ்தோனைப் பிடித்து சாய்வுநாற்காலியில் உட்கார வைத்தார். சிறிது நேரம் அங்கே அமைதி. அமைதியில் குறம்பியம்மாவின் தேம்பல் மட்டும் கேட்டது. . . .

"என்னோட மகள், கிரிஜா."

கஸ்தோன் கிரிஜாவையே உற்றுப் பார்ப்பதைக் கண்டபோது ரைட்டர் சொன்னது. அவளை கஸ்தோன்துரை பார்த்ததில்லை.

"மூத்தது ஆணில்லே? அவன் எங்கே?"

தாழுவின் முதல் குழந்தை ஆண் என்று கஸ்தோன்துரைக்கு நினைவில இருந்தது. அவருடைய கேள்விக்கு யாரும் பதில் சொல்லவில்லை.

"இங்கே இல்லே?"

"அவனோட கதையைச் சொல்றேன், கஸ்தோன். நிறையச் சொல்ல வேண்டியிருக்கு."

தாசனின் கதையை ஒன்றோ இரண்டோ வார்த்தைகளில் சொல்லித் தீர்க்க முடியாதல்லவா. தாசனின் கதையைச் சொல்லும்போது கூடவே கண்ணீரையும் பெருக்க வேண்டும். அது மனித விதியின் கதை . . . .

ரைட்டரும் கஸ்தோன்துரையும் வராந்தாவில் இருந்தபடி பேசத் தொடங்கினர். அவர்களுக்கு எத்தனை விஷயங்கள் பேச இருக்கின்றன. . .! குறம்பியம்மா தரையில் கஸ்தோனின் காலடியில் உட்கார்ந்து அவர்கள் பேசியதைக் கேட்டுக்கொண்டும் இடையிடையே அழுவும் செய்தாள். சாப்பாடு தயாராகும் நேரத்தில் ரைட்டர் தன்னுடைய சோகக் கதையின் பெரும்பகுதியைச் சொல்லி முடித்திருந்தார்.

"நீ பயப்பட வேண்டாம் மோனமே." கஸ்தோன்துரை மோனமே (தோழனே) என்றழைத்துத் தன்னுடைய தோழனை சமாதானப்படுத்தினார். "தாசன் வருவான்."

வெயில் வெப்பம் தணிந்தபோது கஸ்தோன்துரை தனது கைத்தடியை

எடுத்துக் கொண்டு படியிறங்கினார். கப்பியாரின் தோளைப் பிடித்துக்கொண்டு அவர் பயணத்தைத் தொடர்ந்தார்.

கஸ்தோன்துரை தனது பங்களாவிலிருந்து வெளியே வந்த விவரம் இதற்குள்ளாக மய்யழி மக்கள் எல்லோருக்கும் தெரிந்துவிட்டிருந்தது. அவரை ஒரு பார்வை பார்ப்பதற்காக சாலைகள் தோறும் அவர்கள் காத்துக்கொண்டிருந்தார்கள். வழியில் ஒவ்வோர் இடத்திலும் நின்றுகொண்டும், காலம் மாற்றி மறைத்த முகச்சாடைகளை அடையாளம் புரிந்துகொண்டும் துரை நடந்துகொண்டே இருந்தார்... அந்தி மயங்கும்வரை. கடைசியில் அவர் மய்யழிமாதாவின் தேவாலயத்தின் முன்பாகத் தடியை ஊன்றி விறைப்பாக நின்றார். கோபுரத்து உச்சியில் கைகள் விரித்து நிற்கும் சிலுவையையும், மய்யழியின் ஆத்மாவின் அழுகையை எதிரொலிப்பதற்காகப் பிறப்பெடுத்த பிரும்மாண்டமான வெண்கல மணிகளையும் அவர் பார்த்து நின்றார். தேவதூதர்களின் சித்திரங்களாலும் கண்ணாடி விளக்குகளாலும் அலங்கரிக்கப்பட்ட தேவாலயத்தில் பலிபீடத்துக்கு முன்பாக அவர் முழங்காலிட்டார். . . . . .

நெஞ்சின்மீது தொங்கிக் கிடக்கும் தலையுடன் அவர் என்னவெல்லாமோ முணுமுணுத்தார். மீண்டும் தலையை நிமிர்த்தியபோது மெழுகுவர்த்தி உருகுவது போலக் கண்களிலிருந்து நீர் உருகி வழிந்தது.

தேவாலயத்திலிருந்து வெளியே வந்த கஸ்தோன்துரை கப்பியாருக்கு விடைகொடுத்தார்.

அவர் மீண்டும் நடந்தார். . . அலையில்லாமல் பரவிக் கிடக்கும் சமுத்திரம் எதிரே வழிமறித்துக் கிடக்கும்வரை. அதற்கு அப்பால் நடக்க அவருக்கு ஆர்வம் ஏற்படவில்லை. அவர் தன்னுடைய இலட்சியத்தை எட்டிவிட்டிருந்தார். அவருடைய கையிலிருந்து நிதானமாகத் தடி கீழே விழுந்தது. . . . . .

பின்னர் ஒருபோதும் மய்யழி மக்கள் பேடிதுரையின் சோக கீதத்தைக் கேட்க நேரவில்லை.

# 39

வானம் தேவாலயத்தின் உச்சியிலுள்ள சிலுவையைவிடத் தாழ்வாக இருந்தது. மய்யழியின் மீது தொடர்ந்து மழை பெய்துகொண்டிருந்தது. கலங்கிச் சிவந்த ஆறு மழையின் கனத்த மறைப்புக்குக் கீழாகக் கடலை நோக்கி ஓடிக்கொண்டிருந்தது. கடைசியில் ஒரு நாள் ஆறு கரைகளை உடைத்துக்கொண்டு வெள்ளப் பெருக்கெடுத்தது. தாத்தகுளமும் சுற்றுப்புறங்களும் வெள்ளத்தில் மூழ்கின. ரயூத் லாகார் வழியே தோணிகள் நடமாடத் தொடங்கின. வெள்ளத்தின் எல்லையில்லாப் பரப்பில் முழுவதுமாக மூழ்காமல் இருந்தது-நடைபாதையிலிருந்த ஒரு விளக்குக்கம்பம் மட்டும்தான். உயர்ந்துவரும் வெள்ளத்திலிருந்து பாதுகாத்துக்கொள்வதற்காக ஏராளமான உயிரினங்கள் அந்த விளக்குக் கம்பத்தைப் பற்றிப் பிடித்துகொண்டிருந்தன. . . தேளும் பாம்பும் அட்டையும் தவளையும் புழுக்களும். அது மற்றொரு நோவாவின் பெட்டகமாயிருந்தது.

சந்திரிகாவின் வீட்டின் மூன்று பக்கமும் வெள்ளமாக இருந்தது. எங்கும் நிற்காமல் பெய்யும் மழையின் அரவம். பகல் முழுவதும் பரதன் கம்பளிக் குப்பாயமிட்டு எதிரில் மேசையில் விரித்து வைத்த தனது வீட்டின்

ப்ளூப்ரின்ட்டைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

அழூட்டிமாப்பிள்ளையின் வீடு கட்ட இருந்த இடத்தை பரதன் விலைக்கு வாங்கினார். சில சமயங்களில் அவர் தாசனையும் அழைத்துக்கொண்டு கட்டி முடிக்கப்படாத வீட்டின் அருகில் போய் நிற்பார். அவர்கள் வயலைச்சுற்றி நடப்பார்கள். பரதனின் கையில் அவர் கட்டப்போகும் பங்களாவின் ப்ளூப்ரின்ட் இருக்கும். அவர் அதைக் கையைவிட்டுக் கீழே வைப்பதில்லை. மேசை மீது விரித்து வைத்து பணிக்கணக்கில் அவர் அதைப் பார்த்துக்கொண்டிருப்பார். பென்சிலால் வரைவதும் குறிப்பதும் அடிப்பதுமாக இருப்பார். இரவு படுத்திருக்கும்போதும் அந்தக் காகிதம் விரித்து வைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

"இதோ, இங்கேதான் எங்க பெட்ரூம்."

அவர் தனது பிரம்பினால் மண்ணில் அடையாளம் செய்தார்.

"இங்கே பாத்ரூம். அப்புறம் அதோ, அங்கே ஒரு சிறிய பால்கனி இருக்கும். சாயங்காலம் நாம உட்கார்ந்து அரட்டையடிக்க அது. கொஞ்சம் குடிக்கவும்."

பரதன் தாசனைப் பார்த்துக் குலுங்கிச் சிரித்தார். ஊர் நக்கு வந்ததற்குப் பிறகு திடீரென்று அவர் கொஞ்சம் பருத்திருந்தார். முகத்தில் பரங்கிமாங்காயின் சிவப்பு.

"அப்பா! அழூட்டிமாப்பிள்ளையோட இந்த வீட்டை இடிச்சிருவீங்களா?"

அவருடனிருந்த சந்திரிகா கேட்டாள். அவள் தாசனின் நிழலில் நின்றிருந்தாள்.

"இடிக்காம பின்னே என்ன செய்றதாம் மண்டு?"

"அதை இடிக்க வேண்டாம்."

"அப்படீன்னா நான் அதை இடிக்கலே." பரதன் உரக்கச் சிரித்தார். "கல்யாணம் நடந்ததும் நீயும் உன்னோட புருஷனும் அதிலே குடியிருங்க. தாசன் என்ன சொல்றே?"

அவன் எதுவும் சொல்லாமல் மிடறு விழுங்கினான்.

கூர் கோம்பலமாந்தோரில் ஆசிரியப் பணி நிச்சயமாகக் கிடைக்கும். ஒரு வாரத்திற்குள் அப்பாயின்ட்மென்ட் வாங்கித் தருவதாக கணாரன் அண்ணாச்சி சொல்லியிருக்கிறார். அதற்குப் பிறகு பரதனிடம் பேச வேண்டியிருக்கும். அதற்கான தைரியத்தைத் திரட்டிக்கொண்டிருந்தான் தாசன்.

அவன் கட்டி முடிக்கப்படாத வீட்டினுள் சென்று வெறுமனே சுற்றி நடந்தான். அடை காத்துக்கொண்டிருந்த செம்போத்துக் கூட்டிலிருந்து சத்தம் வந்தது. புதர்க்கொடி படர்ந்து கிடக்கும் சுவரின் அருகில் தரையில் ஒரு பாதசரம் கிடப்பதை தாசன் பார்த்தான். சுற்றிலும் பீடித்துண்டுகள். அவன் அவளுடைய கால்களைப் பார்த்தான். ஒரு காலில் மட்டுமே பாதசரம் இருந்ததைப் பார்த்திருந்தான். . . .

அன்று சாயந்திரம் அந்தப் பாதசரத்தை அவன் அவளுடைய காலில் அணிவித்தான்.

இரண்டுமூன்று நாட்கள் கழித்து பரதனின் கூலியாட்கள் கட்டி முடிக்கப்படாதிருந்த வீட்டை இடித்து சமனப்படுத்தத் தொடங்கினார்கள். அடைகாத்திருந்த செம்போத்து தொண்டையில் அழுகையுடன் சிவந்த சிறகுகளை அடித்துக்கொண்டு பறந்து போயிற்று. அதனுடைய முட்டைகள்

விழுந்து நொறுங்கின. சுவர்கள் தரையைத் தழுவின...

கடைசியில் சந்திரிகாவின் தலையிலிருந்து விழுந்த ஹேர்ப்பின்களுக்கும் அவளுடைய கைகளிலிருந்து உடைந்து விழுந்த வளையல்களுக்கும் மேலே ஒரு பெரிய மண்மேடு மட்டும் எஞ்சியது.

தாசன் அதைப் பார்த்தபடி நின்றான். அவனுடன் நின்றுகொண்டு அடக்கிப்பிடித்த அழுகையுடன் சந்திரிகாவும்.

அடுத்த நாள் வானம் கர்ப்பவதி ஆயிற்று. அதைத் தொடர்ந்து பிரசவம்போல மழை பெய்தது. பிறகு அது பேய்மழையாய் வளர்ந்து மய்யழியில் பிரளயத்தை உருவாக்கவும் செய்தது.

★★★

வெளியில் இருட்டு கனத்துக் கிடந்தது. பெருகிக் கிடக்கும் வெள்ளத்தின் மீது மழை பொழியும் அசுகமான சத்தம் மட்டும் எங்கும். நேரம் நள்ளிரவு கடந்திருந்தது. மய்யழி மக்கள் பயங்கரக் கனவுகள் கண்டு உறங்கும் நேரம்.

பரதனுடைய வீட்டில் திடீரென்று விளக்குகள் எரிந்தன. கையில் முட்டைவிளக்குடன் அவர் மாடிக்குச் சென்றார். பின்னால் லீலாவும். அவர்கள் சந்திரிகாவின் அறைக்கு முன்பாகப் போய் நின்றார்கள். கதவு உட்புறமாகத் தாழிடப்பட்டிருந்தது.

அவர் கதவைத் தட்டிக் கூப்பிட்டார். உள்ளேயிருந்து பதில் இல்லை. லீலா ஏதோ கிசுகிசுத்தாள். விளக்கின் வெளிச்சத்தில் பரதனின் கழுத்தில் நரம்புகள் புடைப்பதைக் காண முடிந்தது. அவருடைய கண்கள் இடுங்கியிருந்தன.

"சந்த்ர், கதவைத் திறக்கிறதுதான் உனக்கு நல்லது. இல்லேன்னா நான் உதைச்சி உடைப்பேன்."

"அப்பாவுக்கு என்ன வேணும்?"

"கதவைத் திறக்கிறதுதான் உனக்கு நல்லது. உன்னை சும்மா விடப்போறதில்லே நான்..."

பரதனின் கையிலிருந்த விளக்கு துடித்தது.

கதவு திறந்தது. தாசனும் பரதனும் முகத்துக்கு முகம் பார்த்து நின்றார்கள். தாசனுக்குப் பின்னால் கலைந்த கூந்தலுடன் சந்திரிகா பதுங்கி நின்றிருந்தாள்.

வேதனையும் வெறுப்பும் கொண்டு பரதனுக்குக் கண் தெரியவில்லை.

"தாசா, நீ இப்படிச் செய்வேன்னு நான் நினைக்கலே."

லீலாவின் கண்கள் நிறைந்தன. பரதன் சுவாசிக்க சிரமப்பட்டார்.

"என்கிட்ட இப்படி நடந்துக்கிட்டிருக்க வேண்டாம், தாசா."

பேசுவதற்கு அவர் சிரமப்பட்டார். வார்த்தைகள் தொண்டையில் தடைப்பட்டன.

"இதுதான் உன்னோட கொள்கை, இல்லே? கொள்கை பேசி நடக்கிறவன்..."

"அப்பா, தாசனைத் திட்டாதீங்க." தாசனுக்குப் பின்னால் நின்றுகொண்டுதான் அவள் பேசினாள்.

"நான் கூப்பிட்டதனாலேதான் அவர் வந்தாரு."

"பேசாதே...!"

மழையினுடையதையும் காற்றினுடையதையும் மீறி அவருடைய

குரல் உயர்ந்தது.

"தாசா, கீழே இறங்கி வா."

விளக்குடன் அவர் மாடிப்படி இறங்கினார். பின்னாலேயே தாசனும்.

"உனக்கு ஏதாவது சொல்ல வேண்டியிருக்கா?"

"இருக்கு, பரதன் சார். . . ."

இதுவரை பேசாமலிருந்த தாசன் பேசினான்.

"அறிவு தெரிஞ்சதிலேருந்து ஒரு நாள்கூட மன அமைதியோட நான் இருந்ததில்லே. மய்யழியோட சுதந்திரம் மத்த எல்லாருடைய கண்ணீரையும் முடிவுக்குக் கொண்டு வந்திரிச்சி. என்னோடதைத் தவிர. இன்னிக்கு என்னோட ஒரே சந்தோஷம் சந்திரிகாதான். அவ இல்லேன்னா எனக்குப் பைத்தியம் பிடிச்சிரும். . . . ."

"உனக்குப் பைத்தியம் பிடிக்காம இருக்கிறதுக்காக என் மக விபச்சாரம் பண்ணணும்னு நீ சொல்றியா?"

"பரதன் சார் ஒண்ணும் தெரியாதது மாதிரிப் பேசறீங்க."

"ஆமாண்டா, எனக்கொண்ணும் தெரியலே. நான் மடையன்னு நீ நினைச்சிட்டே."

"பரதன் சார் முதல் தடவையா என்னையும் சந்திரிகாவையும் சேர்த்துப் பார்க்கறீங்க. அதனாலேதான் உங்களுக்குக் கோபம். ஆனால், பரதன் சார், இது முதல் தடவை இல்லே நாங்க. . . . ."

திடீரென்று வெளியே கையைச் சுட்டிக் காட்டி அவர் ஆணையிட்டார். "போ வெளியே. . .!"

அவர் விறைத்து நின்றார். கையில் பிடித்திருந்த விளக்கு விழுவதுபோல் தெரிந்தது. தாசன் அவருடைய முகத்தை எதிர்நின்று பார்த்தான். பரதனை இவ்வளவு கோபக்காரராக அவன் ஒருபோதும் பார்த்ததில்லை.

"தயவுசெய்து பரதன் சார் கொஞ்சம் அமைதியா இருங்க. நான் சொல்லவேண்டியதைக் கேளுங்க."

"எனக்கு இனிமே எதுவும் கேட்க வேண்டாம். பால் ஊத்தின கையை நீ திண்டிட்டே."

"பரதன் சார். . . . . "

"இனிமே உனக்கு இந்த வீட்டிலே இடமில்லே. போ வெளியே. . ."

பரதன் கதவின் தாழ் நீக்கினார். வெளியில் மழை கொட்டிப் பெய்தது. வயல்களின் மீது இருட்டு கனத்துக் கிடந்தது. . . .

"தாசன், போகாதீங்க!. . . . .

"கொன்னுருவேன் உன்னை நான், மூதேவி!" பரதன் சந்திரிகாவுக்கு நேரேதிரும்பினார். "போ உள்ளே. . . ."

"நான் மறுபடியும் வருவேன் சந்த்ரீ. . ."

"இந்தப் படியைத் தாண்டக்கூடாது, நீ இனிமே. . . . "

தாசனின் எதிரிலேயே கதவுகள் அடைபட்டன.

அவன் வாசலில் இறங்கினான். மழையில் நனைந்த ஒரு நிமிடத்திற்குள் குளித்தது போலாகிவிட்டது. ஈரக் காற்றில் அவன் நடுங்கி விறைத்தான்.

சகதியும் தண்ணீரும் நிறைந்த ஒற்றையடிப் பாதை வழியாக அவன் நடக்கலானான். மறுபடியும் தாசன் விரட்டியடிக்கப்பட்டிருக்கிறான். முதல் தடவை அப்பா கதவைத் திறந்து கொடுத்தபோது வெளியே வெள்ளைக்காரர்களின் போலீசைப் பார்த்தான். இன்று பிரளயம்.

தாசன் அதிக தூரம் முன்னேறிப் போக முடியவில்லை. அடைத்துக்

கிடக்கும் சந்திரிகாவின் வீடு பின்புறம். முன்னால ஆதியும் அந்தமும் இல்லாது பரந்து கிடக்கும் வெள்ளக்காடு. தன்னுடைய நினைவு தவறுவதாக அவனுக்குத் தோன்றிற்று.

விஞ்ஞானபோஷினி வாசகசாலை மய்யழியில் அறிவுஜீவிகளின் மதகாக இருந்தது. அங்கே உட்கார்ந்துகொண்டுதான் குஞ்ஞனந்தன்மாஸ்டர் புதிய தலைமுறைக்குப் புரட்சியுணர்வைச் சொல்லிக்கொடுத்தது. சர்ச்சைகளும் சூடுபிடித்த வாதப்பிரதிவாதங்களும் அங்கே வழக்கமாயிருந்தன. மய்யழியின் வரலாற்றுப் போக்கை மாற்றுவதில் விஞ்ஞானபோஷினி வாசகசாலைக்கு ஒரு பங்கிருந்தது.

தாசனின் பால பருவத்தில் உலக இலக்கியத்தின்பால் அவனுடைய வழிகாட்டியாக இருந்தது அந்த வாசகசாலை. பிரெஞ்சுப் புரட்சியைக் குறித்தும் சுதந்திரத்தைக் குறித்தும் உள்ள முதல் கட்டப் பாடங்கள் அவனுக்குக் கிடைத்தது அங்கிருந்துதான். ருஸ்ஸோவின் 'க்ரோம்த்ரா ஸோஸ்யால்' கையில் கிட்டியபோது அந்தப் புத்தகத்துடன் சிறுவனான தாசன் வீட்டை நோக்கி ஓடினான். எத்தனையோ இரவுகள் முட்டைவிளக்கின் வெளிச்சத்தில், அருகில் வைத்திருந்த அகராதியுடன் உட்கார்ந்து தாசன் அதை வாசித்துத் தீர்த்தான்! பால்சாக்கின நாவல் பரம்பரைகளினூடே பிரெஞ்சு சமூகத்தின் நிகழ்வுகளையும் பரிமாணங்களையும் தாசன் புரிந்துகொண்டான். ஆந்திரே ழீதினுடைய படைப்புக்கள் மனித விதியின் கர்ப்பகிருகங்களை நோக்கித் தாசனுக்கு வழிகாட்டின. . . . . .

மய்யழியினுடையது மட்டுமல்ல, தாசனுடைய விதிக்கும் உருவம் கொடுத்ததில் விஞ்ஞானபோஷினி வாசகசாலைக்குப் பங்கிருந்தது.

பல நாட்களுக்குப் பிறகு மீண்டும் ஒரு முறை தாசன் வாசகசாலையின் படியேறினான். . . கையில் ஒரு பையுடன். நீண்ட மேசையின் இருபுறத்தும் போடப்பட்டிருந்த பெஞ்சுகளில உட்கார்ந்து இளைஞர்கள் வாசித்துக்கொண்டிருந்தார்கள்.

"ஜனார்த்தனன் இல்லே?"

தாசனைக் கண்டதும் ஐயராமன் எழுந்து நின்றான். அவன் வாசகசாலையின் துணைச்செயலாளர். ஜனார்த்தனன் தலைவர்.

ஐயராமனும் மற்றவர்களும் சோகத்துடன் தாசனைப் பார்த்தார்கள். தாசன் காட்டுமிராண்டியாகத் தென்பட்டான். முகத்தில் தலைமுடியைவிட நீண்ட ரோமங்கள் உண்டாயிருந்தன. திக்பிரமை பிடித்த பார்வை. சிந்தனைகளின் சலனம் கண்களில் தெளிவாகத் தெரிந்தது.

"ஜனார்த்தனன் இப்போ வருவார். உக்காருங்க."

ஐயராமன் நாற்காலி சரிசெய்து கொடுத்தான். செயலாளர் உட்காரும் நாற்காலி.

இளைஞர்களில் பலருக்கு தாசனிடம் உரையாட வேண்டும் போலிருந்தது. அவர்களில் சிலர் லபூர்த்தனெ காலேஜிலும் கூர் கோம்ப்லமாந்தேரிலும் படித்துக்கொண்டிருந்த மாணவர்கள். தாசனுடைய சரித்திரம் அவர்களுக்குத் தெரியும். இருப்பிடம் தேடி அலைபவனாகவும் காட்டுமிராண்டியாகவும் இருக்கிறான் அவன். ஆனாலும் அவர்களுடைய பார்வையில் அவன் உன்னதமானவனாயிருந்தான். மலைச்சிகரத்தைப் போல இருந்தான்.

அவர்கள் என்னவெல்லாமோ கேட்டார்கள்.

தாசன் என்னவெல்லாமோ பதில் சொன்னான். தாசனைப் பார்த்து அவர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். அவர்கள் சந்தித்து நெடுநாட்களாகியிருந்தன.

"ஜனார்த்தனா, என்க்குப் படுக்க ஒரு இடமில்லே."

"நான் எல்லாத்தையும் கேள்விப்பட்டேன்."

"வாசகசாலையிலே படுக்கிறதிலே உனக்கு ஏதாச்சும் மறுப்பிருக்கா?"

"மறுப்பா! இது உங்க வாசகசாலை தாசா."

தாசனுடைய கேள்வி ஜனார்த்தனனை வேதனைப்படுத்தியது.

"அதிக இடமொண்ணும் எனக்கு வேண்டாம். ராத்திரி தலை சாய்க்க ஒரு பெஞ்ச் போதும். அவ்வளவுதான்."

ஜனார்த்தனனுக்கு அதைக் கேட்கப் பொறுக்கவில்லை. அவன் தாசனின் பையை எடுத்துக்கொண்டு வாசகசாலையின் மாடிக்குச் சென்றான். கீழேதான் லைப்ரரி இருந்தது. மாடியில் கேரமும் செஸ்ஸும் சீட்டு விளையாட்டுமாக இருந்தன.

"தாசா, உங்களுக்கு விருப்பப்பட்ட நேரத்திலே இங்கே வரலாம், போகலாம். இதை உங்க சொந்த வீடுன்னு கருதணும்."

ஜனார்த்தனன் சாவிக்கொத்திலிருந்து ஒரு சாவியைத் தனியே எடுத்து தாசனிடம் நீட்டினான்.

"நன்றி, ஜனார்த்தனா."

தாசனின் பிடிக்கறை படிந்த பற்கள் புன்னகைத்தன.

அவ்வாறாக அன்று முதல் விஞ்ஞானபோஷினி வாசகசாலை தாசனின் இருப்பிடமாயிற்று.

# 40

கார்மேகங்கள் மய்யழி ஆற்றைக் கடந்து திரும்பிப் போயின. புதிய சூரியனின் வெளிச்சத்தில் தேவாலய கோபுரத்தின் உச்சியில் சிலுவை பளிரிட்டு மின்னியது. வயல்களிலும் சாலைகளிலும் வெள்ளப் வடிந்திருந்தது! அமைதியான ஆற்றுக்கு மேலாகப் பறவைகள் மறுபடியும் மய்யழி நோக்கிப் பறந்து வந்தன.

பிரளயம் முடிந்தது. மழைக்காலம் முடிவடைந்தது.

"இனிமே நம்ம வேலையைத் தொடங்கலாம்."

கோரன்மேஸ்திரி பரதனின் எதிரில் பவ்யமாக நின்றார்.

"தெறத் திருவிழாவுக்கு முன்னாலே வேலை முடியணும். உங்களாலே முடியுமா மேஸ்திரி?"

"அதுக்கு நான் பொறுப்பு. ஆனா வெளியிலேருந்து வேலைக்கு ஆட்களைக் கொண்டு வர வேண்டியிருக்கும்."

"கொண்டு வந்துக்குங்க. அதுக்கொண்ணும் நீங்க தயங்க வேண்டாம் மேஸ்திரி. தெறய்க்கு முன்னாலே என் வீட்டுவேலை முடிஞ்சாகணும். அவ்வளவுதான் எனக்கு வேண்டியது."

"நான் பொறுப்பு."

கோரன் மேஸ்திரி வாக்குக் கொடுத்தார். பரதன் அலமாரியில் வைத்துப் பூட்டியிருந்த ப்ளுப்ரின்ட்டை எடுத்து மேஸ்திரியிடம் ஒப்படைத்தார். பணிவுடன் மேஸ்திரி வாங்கிக்கொண்டார்.

வீட்டுவேலை திடீரென்று தொடங்கிற்று. கிழக்கிலிருந்து ஒரு லாரி நிறைய சித்தாட்கள் வந்தார்கள். எங்கும் தூசியும் மண்ணும். அதற்கிடையே அபூட்டி மாப்பிளையின் இடித்துத் தரைமட்டமாக்கப்பட்ட வீட்டின்மேலேயே பரதனின் பங்களா கண்விழித்தது...

நாற்காலியில் இருந்தபடி பரதன் வீட்டின் வளர்ச்சியை மேற்பார்வையிட்டார். மடியில் சிகரெட் இருந்தது. அவருக்கு அருகில் விலையுயர்ந்த புடவையுடுத்து வேறொரு நாற்காலியில் லீலாவும் உட்கார்ந்திருந்தாள்.

"நீ வரலையா?"

பங்களா வேலையைப் பார்க்கப் போகும்போது அவர்கள் சந்திரிகாவைக் கூப்பிட்டார்கள்.

"'இல்லே.'

அவள் தலையாட்டினாள்.

"உன்னோட வீடுதான்." பரதன் சொன்னார். "உனக்காகத்தான் நான் இதைக் கட்டிக்கிட்டிருக்கேன். உனக்கு உன் பங்களாவைப் பார்க்க வேண்டாமா?"

"எனக்கு எதுக்குப்பா பங்களா?"

அவள புடவைத் தலைப்பினால் கண்ணைத் துடைத்தாள். அவளுக்குஎதன் மீதும் நாட்டமில்லை. எங்கேயும் போவதில்லை. கணவன் இறந்த ஒருத்தியைப் போலத்தான் அவள் இருந்தாள்.

பிரளயத்தன்று தாசன் வெளியேறினான். அதற்குப் பிறகு அவள் அவனைப் பார்க்கவே இல்லை. தனியே வெளியே போக அவளை பரதன் அனுமதிக்கவில்லை. அந்த சுதந்திரத்தைக் கொடுத்தால் அவள் தாசனை நோக்கி ஓடிப்போவாள் என்பது அவருக்குத் தெரியும்.

தாசன் இனி ஒருபோதும் தன் வீட்டின் வாசற்படி ஏறப்போவதில்லை. பரதனுக்கு அது தெரியும். அதில் பரதனுக்கும் லீலாவுக்கும் வருத்தம்தான். இன்றோ நேற்றோ தொடங்கியதல்லவே தாசனுக்கும் அவர்களுக்கும் உள்ள உறவு. குஞ்ஞனந்தனுடன் முதன்முதலாக அவன் வீட்டுக்கு வந்த நாள். இன்றைக்கும் லீலா நினைத்துப் பார்க்கிறாள். அவனுக்கு மீசை முளைத்திருக்கவில்லை. மய்யழி மக்களின் வாத்சல்யம் முழுவதுமாக அன்று அவன்மீது இருந்தது.

இன்று அவன் யாருக்கும் தேவையில்லை. அவன் யாருமற்றவனானான்.

"எல்லாம் அவன் தானா வரவழைச்சிக்கிட்டதுதான். அவனை நமக்குக் கொடுத்து வைக்கலே."

சில சமயங்களில் அவளுடைய கண்கள் நிறையும்.

அன்று ஜெயிலிலிருந்து வெளியே வந்ததும் நேராக தாசன் வீட்டிற்குப் போயிருந்தானானால், கணாரன் அண்ணாச்சி கொடுத்த ஏதாவதொரு வேலையை அவன் ஏற்றுக்கொண்டிருந்தானானால்... பரதன் ஆர்வமாயிருந்தார். ஆனால் தாசன் தலை விதிதான் வேறு மாதிரியாக இருந்ததே...

திறப்புக்கு முன்னதாகவே வீட்டு வேலை முடிந்தது. கட்டிடத்திற்குச் சுற்றிலுமுள்ள கிடுகுத் தடுப்பை இடித்துத் தகர்த்தபோது மண்ணிலிருந்து முகிழ்த்து விரிந்த ஓர் அற்புதம் போல லெஸ்லீதுரையின் பங்களாவை நிகர்த்து அதிசயிக்கும்படியான பரதனின் பங்களா பிரத்தியட்சமாயிற்று. சமுத்திரங்களுக்கு அப்பால் உள்ள நாடுகளில் பரதன் பார்த்த

மணிமண்டபங்களின் வளைவுகளும் மாடங்களும் அதில் அமைந்திருந்தன. கண்டவர் கண்டவர் வியந்தனர்.

"உன்னோட பங்களா சந்த்ரி..."

வராந்தாவில் சந்திரிகாவின் தோளில் கைவைத்து நின்றுகொண்டு பரதன் அவளுக்குத் தன்னுடைய புதிய பங்களாவைச் சுட்டிக் காண்பித்தார்.

"எவ்வளவு பாக்கியசாலி நீ, என் கண்ணு...!"

அந்த பங்களாவுக்கு அடியில் அழூட்டிமாப்பிள்ளையின் கட்டி முடிக்கப்படாத வீடல்லவா? அதனடியில் அவளுடைய கைகளிலிருந்து உடைந்து விழுந்த வளையல்களும், அவளுடைய தலையிலிருந்து விழுந்த வசியப்படுத்தும் பூக்களும் அல்லவா?

அந்த நினைவில் மீண்டும் ஒரு முறை அவளுடைய கண்களில் கண்ணீர் வந்து நிறைந்தது.

இரவு முழுவதும் பரதன் உறங்கவில்லை. அவர் சிந்தனையில் மூழ்கியிருந்தார். இடையிடையே கட்டிலில் எழுந்து உட்கார்ந்து சிகரெட் பற்ற வைத்தார். பாதி இரவு கழிந்தபோது அவருடைய கண்ணிமைகள் துடித்தன.

புலரப் போகும்போதுதான் கண்கள் அயர்ந்தன. உடனே பதறி எழுந்திருக்கவும் செய்தார். கண் திறந்ததும் பரதன் பார்த்தது அருகில் உறங்காமல் படுத்திருந்த மனைவியைத்தான். மேலே தொங்கும் லஸ்தர் விளக்கைப் பார்த்துக்கொண்டு அவள் படுத்திருந்தாள். வெளியே வானம் வெளிறிக்கொண்டிருந்தது.

"லீலா எந்திரிச்சிட்டியா?"

"உம்."

அவள் சற்றே திரும்பிப் படுத்தாள். எங்கேயோ ஒரு சேவல் கூவிற்று.

பரதனைப் போலவே அவளும் உறங்கவில்லை. சிந்தனைகள் அவளுடைய உறக்கத்தைத் தடுத்து நிறுத்தின. கண் மூடும் போதெல்லாம் சந்திரிகாவின் முகம் மனதில் தெரியும். இரு கன்னங்கள் வழியே கண்ணீர் உகுத்து நிற்கும் சந்திரிகா. அதற்குப் பிறகு அவளுக்கு உறக்கம் வராது...

"ஏன் உறங்கலே?"

பரதன் கேட்டார். அவருக்குத் தெரியும் அவள் ஏன் உறங்கவில்லை என்று. ஆனாலும் கேட்டார்.

"சந்திரி சம்மதிக்கமாட்டா. அதிலே எனக்குச் சந்தேகமில்லே."

"சம்மதிக்கலேன்னா அவளோட சம்மதம் இல்லாமலே நான் அதை நடத்துவேன். இனிமேலும் அவளை இப்படி நிறுத்தி வைக்கக் கூடாது."

"என் மக கண்ணீரைப் பார்க்க எனக்குத் தாள முடியலே."

"இன்னும் நல்லா அவ அழட்டும். பின்னாலே ஒருபோதும் அவ அழமாட்டா. சந்தேகமில்லே, லீலா."

பரதன் மனைவியைத் தேற்ற முயன்றார்.

சந்திரிகாவின் கண்ணீர் அவரையும் தளரச் செய்தது. ஆனாலும் அவர் ஒரு தீர்மானம் எடுத்து முடித்திருந்தார். கண்ணீர் பிரவகிக்கட்டும். அது இப்போதைக்கு மட்டுமே இருக்கும். பரதன் நம்பினார். பின்னர் எவரும் அழ வேண்டியிருக்காது. தனது வீட்டில் வீசும் புயல் என்றென்றைக்குமாய் ஓயும்.

அப்பாவும் அம்மாவும் உறங்காமலிருப்பது சந்திரிகாவுக்குத் தெரியாது. அவள் அவளுடைய அலங்காரமான அறையில் தேக்குக் கட்டிலில் படுத்து

உறங்கிக்கொண்டிருந்தாள். துக்கத்தினால் தளர்ந்த அவள் பிரக்ஞையற்று மயங்கியிருந்தாள். அவளுக்கு எதுவும் தெரியாது. காலையில் அவளைப் பார்ப்பதற்காகத் தலைச்சேரியிலிருந்து ஓர் இளைஞன் வருவதோ, அப்பாவும் அம்மாவும் அவளை என்றென்றைக்குமாய் தாசனிடமிருந்து பிரித்துவிட இரகசிய ஆலோசனை செய்வதோ எதுவும் அவளுக்குத் தெரியாது. கன்னங்களில் கண்ணீர்த் தடங்களுடன் அவள் உறங்கிக்கொண்டிருந்தாள்... அமைதியாக.

பரதன் புது வீட்டுக்கு இடம் மாறி ஒரு மாதம் ஆகியிருந்தது. இதற்கிடையில் ஒரு தடவைகூட சந்திரிகா வெளியே எந்த இடத்திற்கும் போகவில்லை. பங்களா மாடியில் தன்னுடைய அறையில், பூக்கள் பின்னிய குஷனிட்ட நாற்காலியில், ஒரு சிலையைப் போல உட்கார்ந்து அவள் பொழுதைப் போக்குவாள்.

அவளுடைய போக்கு லீலாவை அச்சுறுத்தியது.

"கண்ணு, நீ குளிக்க வேண்டாமா?"

வற்புறுத்தினாலொழிய அவள் குளிப்பதில்லை. லீலாவே அவளைக் குளியலறைக்குள் இட்டுச் செல்வாள். இடுப்புவரை வளர்ந்திருக்கும் கூந்தல் எண்ணெய் தேய்க்காமல் நார்போல் ஆகிவிட்டிருந்தது. அவள் கூந்தலை அவிழ்த்துக் கோதிவிட்டுப் பாடம் செய்த தேங்காயெண்ணெய் தேய்த்தாள்.

"கண்ணு எதுக்காக அம்மாவை இப்படிக் கவலைப்பட வைக்கிறே?"

சந்திரிகா குளியலறையில் மார்பிள் பதித்த தரையைப் பார்த்தபடி நின்றிருந்தாள்.

தண்ணீர் விளாவி வைத்திருந்தாள். லீலா சோப்பும் சீகைக்காயும் எடுத்துக் கொடுத்தாள்.

"குளிம்மா."

"நான் குளிக்கலே."

"உன்கிட்ட நான் தோத்திட்டேம்மா, சந்திரி..."

அவள் குளிக்கத் தொடங்க நெடுநேரம் ஆயிற்று.

லீலா வெளியே வந்து கதவைச் சாத்தி வைத்தாள். மாற்றிக்கொள்ள புடவையும் பெட்டிக்கோட்டும் எடுத்து வந்து கொடுத்தாள்.

சிறிது நேரம் கழித்து சாப்பாட்டு மேசையில் சோறு பரிமாறியபோது அவள் மாடிக்குச் சென்றாள். சந்திரிகா நாற்காலியில் வழக்கம்போல் உட்கார்ந்திருந்தாள். துவட்டாமல் இருந்ததனால் கறுத்த புள்ளிகளுள்ள புடவையும் வெள்ளை பிளவுசும் மழையில் அகப்பட்டது போல நனைந்து ஈரமாயிருந்தன. தலைமுடியிலிருந்து அப்போதும் தண்ணீர் வழிந்துகொண்டிருந்தது.

"உன்னைச் சமாளிக்க என்னாலே முடியாது."

லீலாவுக்கு அழுகை வந்தது. நொந்துகொண்டே அவள் துண்டு எடுத்து வந்து தலையை துவட்டிவிட்டாள். தலை சீவி நெற்றியில் பொட்டும் இட்டாள். ஆனால், அவளுடைய கண்ணில் தீட்டிய மை முழுவதும் கை எடுப்பதற்கு முன்பாகவே கண்ணீருடன் கீழே வழிந்தது.

அப்படி ஆகியிருந்தது சந்திரிகாவின் வாழ்க்கைமுறை.

நாட்கள் செல்லச்செல்ல லீலாவின் ஆதங்கம் அதிகரித்தது. பரதன் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டார். ஆனாலும் சில சமயம் மன உறுதி தளர்ந்து போகும்.

"அவளோட அப்பன் செத்திட்டான். உக்காந்து அழட்டும்."

அவருடைய முகம் இரத்தம்போல சிவக்கும். துடித்த கன்னங்கள் விறைக்கும்.

"இப்படித்தான் நடக்கும்னு தெரிஞ்சிருந்தா கடல்லேயே காலத்தைக் கழிச்சிருக்கலாம். வயசுக் காலத்திலே அமைதியா ஒரு இடத்திலே தலைசாய்க்கணும்தான் இங்கே வந்தது. அப்படி இல்லாம உன்னோட கண்ணீரைப் பார்க்கிறதுக்காக இல்லே."

அவர் கைகளைப் பிசைந்துகொண்டு புலம்பினார்.

உறக்கம் வராத இரவில் போர்ட்டிகோவில் உட்கார்ந்து பரதன் ஊதித் தள்ளுகிற சிகரெட்டுகளுக்குக் கணக்கே இல்லை. காலியான சிகரெட் டின்கள் குவிந்து கிடந்தன.

மறுநாள் காலையில் தலைச்சேரிக்காரர்கள் வந்தார்கள். அவர்களுடைய பெரிய கார் புழுதி பரப்பிக்கொண்டு பரதனின் பங்களாவுக்கு முன்பாக வந்து நின்றது.

பரதனுக்கு நிம்மதியாயிற்று.

"ஊர் முழுக்க வம்பாயிரிச்சில்ல? தலைச்சேரிக்காரங்களோட காதுக்கு எட்டினா..."

பரதன் காலையில்கூடத் தனக்குள் சொல்லிக்கொண்டார். தாசனுடைய, சந்திரிகாவினுடைய கதை மய்யழி மக்கள் எல்லோருக்கும் தெரிந்திருந்தது. வெள்ளம் வந்த அன்று தாசனைத் தன்னுடைய வீட்டிலிருந்து வெளியேற்றியதும் ஊரில் வம்பாகியிருந்தது.

தலைச்சேரிக்காரர்கள் வந்து பார்த்தபோது அவருக்கு ஏற்பட்ட நிம்மதி கொஞ்சநஞ்சமல்ல.

லீலா காலையிலேயே சந்திரிகாவைக் குளிக்கச் செய்திருந்தாள். புது புடவையும் பிளவுஸும் உடுத்திவிட்டாள். அவளே சந்திரிகாவின் நெற்றியில் ஒரு கறுத்த சாந்துப்பொட்டும் வைத்துவிட்டாள்.

"சுதாகரனை உனக்குத் தெரியாது? லட்சுமணன் டாக்டரோட மகன் சுதாகரனை?"

இல்லையென்று சந்திரிகா தலையாட்டினாள்.

"உன்கூட காலேஜிலே படிச்சவர்தான். இப்போ மெட்ராஸ்லே இருக்காரு. தெரியலே உனக்கு?"

வேறேதோ சிந்தனைகளில் ஆழ்ந்திருந்த அவளுக்கு அம்மா சொன்னது கேட்கவில்லை.

லீலா அவளுடைய கண்களில் மை தீட்டினாள். விரலில் எஞ்சியிருந்த மையினால் அவளுடைய புருவங்களை அலங்கரித்தாள். கண்ணாடியில் அவளுடைய பிரதிபிம்பத்தைப் பார்த்தபோது தாயின் மனம் குளிர்ந்தது. ஒரு பிரார்த்தனையை மட்டுமே அப்போது அவளுடைய உதடுகள் உச்சரித்தன. அவள் அழாமல் இருந்தாலே போதும். அழுது கண்மை இழிந்த கண்களுடன், கண்ணீர்த் தடங்கள் பதித்த முகத்துடன் அவள் சுதாவை நிராகரிக்காமல் இருந்தால் மட்டும் போதும்.

மாடிப்படி ஏறிவரும் பூட்ஸின் ஒலி. லீலாவின் நெஞ்சு துடித்தது. அவள் திடீரென்று சந்திரிகாவின் முன்பாக மண்டியிட்டு அவளுடைய கைகளைச் சேர்த்துப் பிடித்தாள்.

"கண்ணு, அம்மாவை வருத்தப்பட வச்சிராதே!"

எதுவும் புரியாமல் சந்தரிகா விழித்தாள்.

லீலா புடவைத் தலைப்பினால் கண்ணைத் துடைத்துக்கொண்ட

பின் திரைச்சீலையை விலக்கிக்கொண்டு வெளியே போனாள். அப்போது ஷூஸின் ஒலி வாசற்படியை எட்டியிருந்தது.

"மே ஐ கமின்?"

பதிலுக்குக் காத்திராமலே அவன் உள்ளே வந்தான். மடியில் விழுந்து கிடக்கும் புடவையை எடுத்து மார்பை மறைத்துக்கொண்டு அவள் அவனை நேருக்கு நேராகப் பார்த்தாள்.

"சந்திரி, உனக்கு என்னை ஞாபகம் இருக்கா? காலேஜிலே எஸ்ஸெஃபியோட தலைவர் சுதாவை?"

அவனை அவள் அடையாளம் புரிந்துகொண்டாள். அவன் பிரசங்கம் செய்வதும், கோஷம் முழக்குவதும், ஊர்வலம் நடத்துவதும் எல்லாமே அவள் பார்த்திருக்கிறாளல்லவா?

"பயப்படாதே, பாலிடிக்ஸையெல்லாம் நான் விட்டுட்டேன். இப்போ மெட்ராஸ்லே ரப்பர் வியாபாரம்."

அவன் ஒரு நாற்காலியை இழுத்தான். பான்டின் மடிப்புகளை நோரகப்பிடித்துக்கொண்டு அவளுக்கு எதிரில் உட்கார்ந்தான். பின்பு அவளுடைய முகத்தைப் பார்த்து அவன் வெறுமனே ஒரு முறை புன்னகைத்தான்.

"யு ஹேவ் க்ரோன் ப்ரெட்டியர்."

சுதாகரன் மீண்டும் சிரித்தான். அவனுடைய முகத்திலிருந்து ஆஃப்டர் ஷேவ் லோஷனின் நறுமணம் பரவியது.

"மாணவர் தலைவனிலிருந்து ரப்பர் வியாபாரியான மெட்டாமார்ஃபோஸிஸ் எப்படி?"

அவளால் சிரிக்க முடியவில்லை. துக்கத்தின் திட்சண்யத்தில் உணர்வு மழுங்கிப் போயிருந்தாள் அவள்.

"ரப்பர் வியாபாரம் மட்டுமில்லே, படம் எடுக்கிறதும் உண்டு. சந்திரிகாவுக்கு சினிமா பிடிக்கும்தானே? சந்திரிகாவை நான் என்னோட சினிமாவிலே கதாநாயகி ஆக்கட்டுமா?"

அவன் நாற்காலியைக் கொஞ்சம் முன்னோக்கி நகர்த்தினான். ஆஃப்டர் ஷேவ் லோஷனின் நறுமணம் ஒரு வலையைப் போல அவள் மீது வந்து விழுந்தது.

"சந்திரிகா ஏன் ஒண்ணும் பேச மாட்டேங்கறே? என்னைப் பார்க்க பயமா இருக்கா?"

சுதா பேசிக்கொண்டே இருந்தான். அவனுடைய குரலை மட்டும் அவள்கேட்டாள். அவன் என்ன பேசுகிறானென்று அவளுக்கு புரியவில்லை. அவளுடைய மனது வேறெங்கேயோ இருந்தது. அவளுடைய எண்ணமெல்லாம் வேறு யாரைக் குறித்தோ இருந்தது.

பத்து நிமிடங்கள் தானே பேசிக்கொண்டிருந்துவிட்டு சுதாகரன் போனான்.

மாடிப்படியில் அவனுடைய காலடியோசை முடிவடைந்தபோது அவள் தனது தூக்கத்திலிருந்து விழித்தெழுந்தாள். அவளுக்கு எல்லாம் புரிந்தது.

சுதாகரனின் கார் புழுதி பரப்பிக்கொண்டு இடத்தை விட்டகன்றது.

சிறிது நேரத்திற்கு அப்பாவோ அம்மாவோ அவளுடைய அறைக்கு வரவில்லை. காரில் ஏறும்போது சுதாகரன் உரக்கச் சிரித்துக்கொண்டிருந்தான். அவனுடைய எக்களிப்பு அவர்களுக்கு

நிம்மதியைத் தந்தது. இருந்தாலும் சந்திரிகாவை எதிர்நோக்க அவர்களுக்குத் தைரியம் வரவில்லை.

கடைசியாக, பல கற்பனைகளுடன் லீலா சந்திரிகாவின் அறைக்குள் நுழைந்தாள்.

"நல்ல இளவட்டம், இல்லையா கண்ணு?"

நாற்காலியில் விக்கிரகத்தைப் போலிருந்த அவள் அதைக் கேட்டதாகத் தெரியவில்லை.

"உன்னோட நல்லதுக்குதான் அப்பாவும் அம்மாவும் இதெல்லாம் செய்றது."

லீலா நாற்காலியில் உட்கார்ந்து சந்திரிகாவின் தலைமுடியைக் கோதிக் கொடுத்தாள். வாசலுக்குப் பின்னால் மறைந்து நின்றிருந்த பரதனும் உள்ளே நுழைந்தார்.

"உனக்கு அப்பாகிட்ட அன்பிருக்கும்னா இதுக்கு சம்மதிக்கணும்."

"செத்தாலும் சம்மதிக்க மாட்டேன்."

அவள் சட்டென்று கைவிரல்களால் முகம் பொத்தினாள். லீலா நடுங்கினாள். பயங்கரக் கனவுகளாக அவர்கள் கேட்டிருந்த அதே குரலும் வார்த்தைகளும்.

"நீ மத்தவங்க மன நிம்மதியை அழிக்கிறதுக்காகவே பிறந்தவ. நாசகாரி."

பரதன் முன்னோக்கிப் பாய்ந்தார். அவருடைய முகம் மீண்டும் சிவந்தது. உடம்பு மறுபடியும் விறைக்கத் தொடங்கியது.

"வாழ்க்கைக் காலம் முழுசும் கடல்லே கிடந்து கஷ்டப்பட்டேன். வயசுக் காலத்திலேயாவது நிம்மதியா இருக்கலாம்னு நினைச்சேன். அதுக்கும் நீ சம்மதிக்க மாட்டேல்ல... மூதேவி?"

கதவுகளை ஓங்கிச் சாத்திவிட்டு பரதன் இறங்கிப் போனார். லீலா ஸ்தம்பித்து நின்றாள். வாழ்க்கையில் ஒருக்காலும் அவரை இவ்வளவு கோபக்காரராக அவள் பார்த்ததில்லை. அவர் இப்படி நிலை தடுமாறிப் பேசியதை அவள் கேட்டதில்லை.

அன்று பகல் முழுவதும், அன்று இரவு முழுவதும் பரதன் போர்ட்டிகோவில் சிகரெட் புகைத்தபடி நடந்தார். சிகரெட் புகைத்துப் புகைத்து அவருடைய உதடுகள் வெடிப்புக் கண்டன.

"சந்திரி சம்மதிக்கலேன்னாலும் நான் இதை நடத்துவேன். இல்லேன்னா என் பேர் பரதன் இல்லே."

விடிகாலையில் உறங்காமல் படுத்திருக்கும் மனைவியின் அருகில் சென்று படுத்த அவர் தெரிவித்தார். கணவனின் கோபம் அவளை நிலைகுலையச் செய்தது. முன் வைத்த காலை அவர் இனி பின் வைக்க முடியாது.

பரதன் கல்யாணத்திற்கான ஏற்பாடுகளைத் தொடங்கினார்.

நிச்சயதார்த்தம் முடிந்த நாள். பரதன் போர்ட்டிகோவில் உட்கார்ந்திருந்தார். புகை பிடித்துக்கொண்டிருந்தார். ஒரு சடங்கு கழிந்துவிட்ட நிம்மதியும், இனி வரவிருக்கும் நாட்களில் போராட்டமும் அவருடைய முகத்தில் மாறி மாறிப் பிரதிபலித்துக்கொண்டே இருந்தன.

முற்றத்தில் காலடி ஓசை கேட்டபோது அவர் தலை நீட்டிப் பார்த்தார்... தாசன்.

மேசைமீது எடுத்து வைத்திருந்த கால்களைக் கீழே வைத்து அவர் நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்திருந்தார். தாசன் வருவானென்று அவர்

எதிர்பார்த்ததுதான். சந்திரிகாவை அவனிடமிருந்து அறுத்துப் பிரிக்கும் இந்தச் சந்தர்ப்பத்தில் தாசன் பேசாமலிருக்கமாட்டானென்று அவர் ஊகித்திருந்தார்.

"உள்ளே வா தாசா."

தாசன் அதைக் கேட்டதாகத் தெரியவில்லை. அவன் முற்றத்திலேயே நின்றிருந்தான். கறுத்துப்போயிருந்த முகம் வியர்வையில் குளித்திருந்தது. சட்டையின் முன்புறத்தில் பொத்தான்கள் துளை மாறியிருந்தன. அவன் பெருமூச்சு விட்டபடி இருந்தான்.

"கோபம் வந்தப்போ அன்னிக்கு என்னவெல்லாமோ பேசிட்டேன். நீ அதையெல்லாம் மறந்திரணும்..."

பரதன் குரலைத் தாழ்த்திக்கொண்டு பேசினார். மாடியில் இருக்கும் சந்திரிகா எங்கே கேட்டுவிடுவாளோ என்பதாக இருந்தது அந்த பயம். அவர்கள் ஒருவரையொருவர் பார்த்து மாதக்கணக்கில் கடந்துபோயிருந்தது. அவருக்கு அது தெரியும். இந்தச் சாயங்கால நேரத்தில்இனியும் அவர்கள் சந்தித்துக்கொள்ளக் கூடாது.

பரதன் திடீரென்று உள்ளே போனார். அவர் வேகமாக மாடிப்படி ஏறினார். சந்திரிகாவின் அறையை வெளிப்பக்கம் பூட்டிய பின்னர் நிம்மதியாக அவர் திரும்பி வந்தார்.

"நான் கேள்விப்பட்டது உண்மைதானா?"

"என்ன தாசா?"

"சந்திரிகாவின் கல்யாணம்?"

"ஆமாம். உனக்குத் தெரியப்படுத்தணும்னு இருந்தேன். அதுக்கு உன்னை நேரிலே பார்க்க முடியலேல்ல?"

பரதன் திடீரென்று மௌனமானார். தாசனுடைய முகபாவம் கண்டு அவர் பயந்தார்...

"சந்த்ரீ சம்மதிச்சாளா?"

"ஆமாம்."

பரதன் தாசனின் முகத்தைப் பார்க்கவில்லை.

"நீங்க பொய் சொல்றீங்க. பரதன் சார், நான் ஒரு தடவை அவளைப் பார்க்கணும்."

"நீங்க இனிமே பார்த்துக்கக் கூடாது. உங்க ரெண்டு பேரோட நல்லதுக்காகவும்தான் நான் இதைச் சொல்றேன்."

"பரதன் சார், உங்களுக்குத் தெரியாதா சந்திரி எனக்கு எப்படீன்னு?"

"தெரியும். ஆனால், நாம பேசிக்கிறதனாலே பலனில்லே." பரதன் மீண்டும் நாற்காலியில் சென்றமர்ந்தார். அவர் தனது கைகளால் தன்னுடைய முகத்தை மறைத்தபடி குனிந்து உட்கார்ந்திருந்தார். அதற்குப் பிறகு அவர் எதுவும் பேசவோ தலை நிமிரவோ இல்லை.

"பரதன் சார், தெய்வம் உங்களை மன்னிக்காது..."

தாசனின் தொண்டை விறைத்தது. அவன் யாரையோ தேடுவது போல பங்களாவின் மாடியை நோக்கினான்...

சிறிது நேரம் கழிந்தபோது தாசனின் அகன்று போகும் காலடி ஓசையை பரதன் கேட்டார். அப்போது மட்டும் அவர் தலை நிமிர்த்தினார். லீலா அவரருகில் வந்து நின்றாள்.

கோடை வெயிலில் வறண்டு கிடக்கும் வயலின் நடுவாக தாசன் நடந்து போவதை அவர்கள் பார்த்துக்கொண்டிருந்தார்கள். நடக்கும்போது

குடித்திருந்தது போல அவன் தள்ளாடினான்.

## 41

அறையில் எப்போதும் டர்ப்பெண்டைனின் மணம் இருக்கும். புகையிலைப்பொடியின் மயக்கத்தில் கண்கள் பாதி மூடியபடி கம்பளிக்கட்டிலில் நாள் முழுக்க குறம்பியம்மா படுத்திருப்பாள். மங்கலான இருட்டு நிறைந்ததும் நிசப்தமுமான அந்த அறை மட்டுமே அவளுடைய உலகமாக இருந்தது. நெஞ்சில் தாசனைப் பற்றிய வேதனையுடன், காலப் பிரவாகத்தின் மாய்ந்துபோன கால்சராய்க்காரரும் தொப்பிக்காரருமான வீரபுருஷன்மார்களின் நினைவுகளுடன், திரும்பி வரும் வெள்ளைக் காரர்களின் கப்பலுக்காகக் காதைத் தீட்டிக்கொண்டு குறம்பியம்மா நாட்களை நெட்டித் தள்ளிக்கொண்டிருந்தாள்.

கட்டிலுக்கடியில் வைத்திருக்கும் எச்சில் துப்பும் கோளாம்பி நிறையும்போது அதை எடுப்பதற்காக வரும் கிரிஜா கேட்டாள்.

“பாட்டிக்கு ஏதாச்சும் வேணுமா?”

வேண்டாமென்று அவள் தலையாட்டிக் காட்டுவாள்.

ஒரு நள்ளிரவில் அவள் திடுக்கிட்டெழுந்து கிரிஜாவைக் கூப்பிட்டாள். உறக்கச் சடவுடன் கையில் விளக்குடன் வந்த கிரிஜா அவள் கட்டிலில் எழுந்து உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாள்.

“அவங்க வந்திட்டாங்களாம்மா?”

“யாரு பாட்டி?”

“வெள்ளைக்காரங்க.”

“யாரும் வரல்லே. பாட்டி, படுத்துத் தூங்கு.”

கிரிஜா கொட்டாவி விட்டாள்.

“கப்பலோட சத்தம்தானே அது கேக்குது?”

“பாட்டிக்கு சும்மா அப்படித் தோணுது.”

குறம்பியம்மாவின் காதுகள் விடைத்தன. அவளுக்கு அப்போதும் கேட்டுக்கொண்டிருந்தது... கப்பலின் சங்கொலி.

கிரிஜா திரும்பிப் போய்க் குழந்தைகளுக்குப் பக்கத்தில் படுத்தாள்.

அதற்குப் பிறகு அது ஒரு வழக்கமாகிவிட்டது. தினமும் இரவில் குறம்பியம்மா விழித்தெழுந்து கட்டிலில் உட்கார்ந்துகொண்டு கிரிஜாவைக் கூப்பிடுவாள். காதைத் தீட்டிக் கொண்டிருக்கும் அவளிடம் தினமும் கிரிஜா சொல்வாள்.

“கப்பல் இனிமே வராது பாட்டி.”

“வெள்ளைக்காரங்க எப்பவுமே வரமாட்டாங்களா?”

“வரமாட்டாங்க.”

வெள்ளைக்காரர்களின் கடைசிப் பயணத்திற்குப் பிறகு துறைமுகம் சூனியமாகக் கிடந்தது. அதற்குப் பிறகு எந்தக் கப்பலும் அங்கே வந்து நங்கூரமிட்டதில்லை. ஆனால் குறம்பியம்மா நம்பிக்கொண்டிருந்தாள்... ஒரு நாள் மிகப் பெரிய கப்பலில், அதிகப் பொலிவுடன், மூப்பன்துரை திரும்பிவருவார். உன்னிநாயரும் குஞ்ஞானனும் கப்போறல் கிட்டுவும் அப்படித்தான் சொல்லியிருக்கிறார்கள். வெள்ளைக்காரர்கள் இல்லாத மய்யழி—தேவர்கள் இல்லாத தேவலோகத்திற்குச் சமமல்லவா!

வெள்ளைக்காரர்கள் இனிமேல் ஒருக்காலும் திரும்பி

வரமாட்டார்களென்றும், இனிமேல் எந்தக் கப்பலும் வந்து துறைமுகத்தில் நங்கூரமிடாது என்றும் கிரிஜா வந்து சொல்லும்போது குறம்பியம்மா திடும்மென்று மௌனமாகிவிடுவாள். ஏதோ ஓர் ஆழ்ந்த துக்கத்தின் அலைகள் என்பதாக அவளிடமிருந்து பெருமூச்சுகள் வெளிப்படும்...

கௌசுவம்மா எவ்வளவோ காலமாகப் படுக்கையில்தான். குறம்பியம்மாவும் படுத்துவிட்டதும் கிரிஜாவுக்கு வீட்டுக்குப் போக நேர்ந்தது. அச்சுவுக்கு அங்கே தங்கியிருக்க உள்ளூர ஆர்வமில்லாதிருந்தது. இந்த வீட்டில் அழைக்காமலே உள்ளே புகுந்தவன்தான் அவன். அந்தக் காலம் கடந்து போய்விட்டிருந்தது. இப்போது அவன் ஒரு புதிய மனிதனல்லவா. அச்சுவின் இன்றைய ஆசைஎன்றென்றைக்கும் சொந்தக் காலில் நிற்க முடிய வேண்டும் என்பது மட்டும்தான்.

கிரிஜாவின் குழந்தைகள் எங்கும் ஓடியாடவும் கூச்சல் போடவும் செய்வார்கள். நீண்ட காலத்திற்குப் பிறகு தாமுரைட்டருடைய வீடு அவ்வாறாக விழித்தெழுந்தது. அங்கே சத்தமும் சந்தடியும் உண்டாயின. அச்சு ஆபீசுக்குப் போனதும், கிரிஜா அடுக்களைக்குள் நுழைந்ததும், அவளுடைய இளைய மகளை மடியில் இருத்தி ரைட்டர் சாய்வுநாற்காலியில் சாய்வார். குழந்தையின் இரு கைகளையும் தன்னுடன் சேர்த்து, தாளம் போட்டுக்கொண்டு அவர் பாடுவார்.

“நம்ம நம்ம ஞாயிற்றுக்கிழமை.”

“சாப்பாட்டுக் கிண்ணத்திலே என்ன இருக்கு?”

“கண்ணுக்கு ஊட்ட சோறிருக்கு.”

“சாப்பிடத் துணையா என்ன இருக்கு?”

“கோழிக்குஞ்சு மூக்கிருக்கு.”

பாட்டின் முடிவில் அவர் குழந்தைக்குக் கிச்சுக்கிச்சு மூட்டுவார். அவளுடைய அரிசிப்பற்கள் காட்டும் சிரிப்பில் அவர் மகிழவும் தன்னை மறக்கவும் செய்வார்.

தினமும் சாயங்காலம் ரைட்டருக்கு இரண்டு ட்ராம் அறக்கு குடித்தாக வேண்டும். இல்லாவிட்டால் இரவு உறக்கம் வராது. அதனால் அந்தி வந்ததும் அவர் கள்ளுக்கடைக்குப் போவார். சில சமயங்களில் அச்சுவும் கூடப் போவான். அவன் குடிக்க மாட்டான். சும்மா ரைட்டருடன் நடப்பதற்காக மட்டுமே.

தாசனைப் பற்றிய அபவாதம் ஊருக்குள் பரவியபோது, கள்ளுக்கடையில் அது ஒரு சர்ச்சைக்குரிய பேசுபொருளானபோது, சில நாட்களுக்கு அவர் அங்கே போகவில்லை.

“ஊர்லே தலை காட்ட முடியலே. இனி இதைவிடவும் அவன் செய்யத்தான் போறான்.”

தாசனைப் பற்றி மய்யழி மக்கள் பேசத் தொடங்கியது இன்றோ நேற்றோ அல்ல அல்லவா? என்னதான் ஆனாலும் இதுவரை யாருக்கும் அவனைப் பற்றி எந்த அபவாதமும் சொல்ல நேர்ந்ததில்லை. இப்போது அவர்களுக்கு அதையும் சொல்ல நேர்ந்துவிட்டது.

பரதன் தாசனை நள்ளிரவில் வெளியே விரட்டிவிட்டது பல நாட்கள் கள்ளுக்கடையில் ஒரு பேசுபொருளாய் இருந்தது. இப்போதும் அது முற்றுப்பெற்றுவிடவில்லை.

கள்ளுக்கடையில் வைத்துத்தான் ரைட்டர் சந்திரிகாவின் திருமணம் நிச்சயிக்கப்பட்ட விவரத்தைத் தெரிந்துகொண்டார்.

"பங்குனி பதினாலு சமயத்திலே பரதன் மகளுக்குக் கல்யாணம்."
உன்னிநாயர்தான் அதைச் சொன்னார்.

"அவ சம்மதிச்சாளா?"

"எதைப் பார்த்து சம்மதிக்காம இருப்பா? அவனுக்கு வேலை வெட்டி இல்லேன்னாலும் போகட்டும், பைத்தியம் பிடிச்சவன் மாதிரியில்ல இப்போ நடக்கிறான்?"

அப்போதுதான் ரைட்டர் கடைக்குள் நுழைந்தார். உள்ளே எடுத்து வைத்த காலைப் பின்னுக்கெடுத்தார். எதையும் கேட்காதது போலத் திரும்பி நடந்தார்.

தாசனைப் பற்றி யார் என்ன சொன்னாலும் ரைட்டர் பதில் சொல்வதில்லை. பேசாதிருப்பார். இல்லாவிட்டால் இடத்தை விட்டு நகர்ந்துவிடுவார்.

மீண்டும் ரைட்டர் கடைக்குப் போக முடியாமல் போயிற்று. தினமும் சாயங்காலம் கொஞ்சம் அறக்கு வீட்டிற்கு வரவழைப்பார். வீட்டிலேயே இருந்து குடிப்பார்.

வெளியில் போகும்போது தாசனைப் பார்க்க நேர்வதான வழிகளில் அவர் நடப்பதில்லை. பார்த்தால்கூடத் தொலைவிலேயே வழிமாறி நடந்துவிடுவார்.

ஒருநாள் தாசனின் குரல் தெருவிலிருந்து கேட்டது. அவன் அம்மாவைக் கூப்பிட்டுக் கொண்டிருந்தான்.

வராந்தாவில் சாய்வுநாற்காலியில் படுத்திருந்த ரைட்டர் எழுந்து உள்ளே போனார்.

கிரிஜா கௌசுவம்மாவைத் தாங்கிப் பிடித்து வராந்தாவுக்கு இட்டு வந்தாள். இரத்தப் பொலிவில்லாத அவளுடைய முகம் மஞ்சள் நிறமாயிருந்தது. படுத்துக்கொண்டே இருந்ததால் கைகால்களில் நீர் கோததிருந்தது.

பின்னாலேயே தட்டுத்தடுமாறிக்கொண்டு குறும்பியம்மாவும் வந்து சேர்ந்தாள்.

"அம்மா சுகம்தானே கிரிஜா?"

"இல்லே. போன அமாவாசைக்கு அதிகமாயிரிச்சி."

கௌசுவம்மாவுக்கு தாசனைப் பார்த்ததாகவோ, அவனுடைய குரலைக் கேட்டதாகவோ தெரியவில்லை. கிரிஜாவுக்கு அதிக நேரம் அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவள் அம்மாவை உள்ளே அழைத்துச் சென்று படுக்க வைத்தாள்.

குறும்பியம்மா நிலைப்படியைப் பிடித்துக்கொண்டு மௌனமாக தாசனைப் பார்த்தபடி நின்றாள். பார்வைக்குறைவாக இருந்த போதிலும் தாசனின் தகர்ந்துபோன உருவத்தைக் குறும்பியம்மாவால் பார்க்க முடிந்தது. அவளுடைய துருப்பிடித்த கண்கள் நனைந்தன. கால்சராயும் தொப்பியும் அணிந்து குதிரைவண்டியில் வந்து இறங்குவதாக அவள் கனவு கண்டிருந்த அந்த தாசன்தான் இது...

"உள்ளே வாண்ணா."

வாசலை விட்டிறங்கி கிரிஜா சொன்னாள். அவன் பொருட்படுத்தவில்லை. அவன் நடக்கலானான்.

"தாசன் வா."

விவரம் தெரிந்துகொண்ட அச்சு சொன்னான்.

"இன்னிக்குத் தெரு வரைக்கும் வந்தாச்சில்ல? நாளை உள்ளே வருவான்."

ஆனால் அவன் சொன்னது தவறு. தாசன் வரவே இல்லை.

★ ★ ★

சில நாட்கள் தொடர்ந்து படுத்திருந்ததால் குறம்பியம்மாவுக்குத் தளர்ச்சி 'கிரிஜா, பாட்டியைக் கொஞ்சம் பிடி' கிரிஜா கோளாம்பி எடுக்க வந்தபோது அவள் கட்டிலில் எழுந்து உட்கார்ந்திருந்தாள்.

கிரிஜா அவளைத் தாங்கியபடி வராந்தாவுக்குக் கொண்டுபோய் உட்கார வைத்தாள். தலையணையின் அடியிலிருந்து பொடிடப்பியை எடுத்துக் கொடுத்தாள். பல நாட்களுக்குப் பிறகு அன்று மீண்டும் குறம்பியம்மா வராந்தாவில் கால் நீட்டி உட்கார்ந்து பொடி போட்டாள்.

சாலை வழியே கடந்து போகும் மய்யழியின் மக்களிடம் குறம்பியம்மா குசலம் விசாரிக்கவில்லை. அவளுக்கு மௌனம் கடைப்பிடிக்கும் காலம் வந்திருந்தது.

"குறம்பியம்மாவா?"

சாலை வழியே போய்க்கொண்டிருந்த குஞ்ஞானன் கூப்பிட்டான். முன்பு அந்த வழியே கடந்து போகும்போதெல்லாம் அவன் குறம்பியம்மாவைப் பார்ப்பதுண்டு. அவளிடம் ஏதாவது கேட்கவோ பேசவோ இல்லாமல் அவன் அதைக் கடந்து போனதில்லை. இதற்கிடையே அவன் அவளைப் பார்க்கவில்லை. குஞ்ஞானன் அந்த வழியே வராதது அல்ல காரணம். குறம்பியம்மா வராந்தாவில் தென்படாதிருந்தாள்.

"குறம்பியம்மாவைப் பார்க்க முடியலையே?"

குஞ்ஞானனின் கேள்வியைக் கேட்டு அவள் ஒரு புன்னகை மட்டுமே புரிந்தாள்.

"குஞ்சக்கன் எங்கே? அவனும் என்னை மறந்திட்டானா?"

அதைக் கேட்டு குஞ்ஞானனின் முகபாவத்தில் மாற்றம் உண்டாயிற்று. குஞ்சக்கன் மண்ணுக்குள் மறைந்து மாதம் இரண்டாகிவிட்டது.

"அவன் போயிட்டானில்ல?"

குறம்பியம்மா மெதுவாக அதை நினைத்துப் பார்த்தாள். அவள் டப்பியிலிருந்து ஒரு நுள்ளல் பொடி எடுத்து உறிஞ்சினாள்.

"லெஸ்லீதுரை போயாச்சி, செக்குழப்பர் போயாச்சி. ஸெக்ரத்தேர் போயாச்சி. குஞ்சக்கனும் போயாச்சி. எல்லாரும் போறாங்க. . . . ."

குறம்பியம்மா குஞ்ஞானனைப் பார்த்துச் சிரித்தாள். குஞ்ஞானனுக்குச் சிரிக்க முடியவில்லை. வீரபுருஷன்மாரும் சாமானியருமாக மய்யழியின் மக்கள் ஒவ்வொருவராக காலத்திரைக்குப் பின்னே மறைகிறார்கள். குஞ்ஞானனின் தலை முழுவதுமாக நரைத்துப் போயிருந்தது. எல்லா ஜீவராசிகளையும் போல மரணபயத்திலிருந்து அவனாலும் விடுபட முடியவில்லை.

குஞ்சக்கனின் மரணத்திற்குப் பிறகு அவனுடைய ஒரு நினைவுச்சின்னம் போலக் குஞ்ஞானன் நடமாடினான். அவனுடைய வீட்டில் குஞ்ஞக்கனின் ஏணியும் எண்ணெய் டின்னும் அனாதையாகக் கிடந்தன. குஞ்சக்கன் தினமும் ஏற்றிவைத்த விளக்குகளே மய்யழி மக்களின் இரண்டு தலைமுறைகளுக்கு வெளிச்சத்தை அடுத்தடுத்துக் கொடுத்தன. குஞ்சக்கனின் முடிவு ஒரு பழங்கதையின் முடிவாகவும் ஆகியிருந்தது.

குஞ்சக்கன் கெந்திக் கெந்தி நடக்கும்போது அந்த நடையில் சூரனும், சத்தியத்தையும் நீதியையும் உயர்த்திப் பிடிப்பவனுமான குளிகனின் சான்னித்தியத்தை மய்யழி மக்கள் பார்த்ததுண்டு. வரவிருக்கும் தலைமுறைகளில் குழந்தைகளை மடியிலிருத்தி பாட்டிமார்கள் குளிகனின் வீரச்செயல்களை வர்ணிக்கும்போது புரியும்படிச் சொல்வதற்காகச் சுட்டிக்காட்ட ஒரு நொண்டி குஞ்சக்கன் இனி இல்லை.

குறம்பியம்மா கண்களைப் பாதி மூடியபடி வராந்தாவிலேயே உட்கார்ந்திருந்தாள். உச்சி வெயிலுக்கு சூடு ஏறியது. சரீரம் தளர்ந்தது. ஆனாலும் அவள் படுக்கப் போகவில்லை.

அங்கே கடந்து போன கப்போறல் கிட்டுவும் சாலையில் நின்றுகொண்டு அவளுடன் இங்கிதம் பேசினான்.

கிட்டுவுக்குப் பிறகு வந்தது வாசூட்டியின் அம்மா. அவள் வராந்தாவில் ஏறி வந்து பெஞ்சுமீது உட்கார்ந்தாள். அவள் புதிய முண்டு உடுத்தியிருந்தாள். வளர்த்த காதுகளில் ஓலை நறுக்குகள் மறைந்து போயிருந்தன. பதிலாக, தங்கத்தில் பாம்படங்கள்.

"கல்லுவம்மா தபாலாபீசுக்கா?"

ஈரக் கையைப் புடவையில் துடைத்துக்கொண்டு கிரிஜா வந்து வாசறபடியில் நின்றாள்.

"என்னவானாலும் தப்பாம அனுப்பி வைக்க வேணாமா? வயசாயிட்ட பொம்பளைங்களாச்சில்ல?"

எல்லா மாதமும் அவள் தபாலாபீசுக்குப் போவாள், வாசூட்டியின் பணம்வரும் நாள்.

"கல்லுவம்மா பாக்கியசாலி." புடவையைப் பிடித்துத் தொங்கிய மகனை கிரிஜா கையிலெடுத்தாள். "கல்லுவம்மாவோட கஷ்டமெல்லாம் தீர்ந்திரிச்சி."

"ஒருபாடா பட்டிருக்கேன் நான். நானும் என்னோட பிள்ளைகளும் பட்டினி கிடந்ததுக்குக் கணக்கிருக்கா!"

கல்லுவம்மா அல்லற்பட்ட கதை யாருக்குத் தெரியாது?

"ஒண்ணு நினைக்கிறப்போதான் என்னோட நெஞ்சு வெடிக்குது. நல்ல காலம் வந்தப்போ அதை அனுபவிக்க என் மச்சான் இல்லாமப் போயிரிச்சே."

வாசூட்டி பிரான்சிலிருந்துகொண்டு பணம் வாரிக் கொட்டுகிறானென்று கேள்வி. கல்லுவம்மையின், குழந்தைகளின் அல்லல்களுக்கு அப்படி ஒரு விடிவுகாலம் வந்தது. அவளுடைய நல்ல காலம் உதயமாயிற்று. ஆனால் அதைப் பார்க்க மரமேறி பொக்கனச்சன் மட்டும் இல்லை.

"கொறம்பியம்மா, நீங்க என்ன ஒண்ணுமே பேசலே?"

குறம்பியம்மா அவளுடைய கேள்வியைக் கேட்டு திடுக்கிட்டு உணர்வு பெற்றுப் புன்னகைத்தாள். கிரிஜா டீ தயாரிக்க உள்ளே போனாள். செல்லத்திலிருந்து ஒரு பிடி வெற்றிலை எடுத்து கல்லுவம்மா அதன்மீது சுண்ணாம்பு தடவினாள்.

"கொறம்பியம்மா கேக்கலையே, அந்த பரதனோட மக கல்யாணம் வர்ற பதினாலிலே."

குறம்பியம்மாவுக்கு அது தெரிந்துதானிருந்தது. பரதனே வந்து விவரத்தை ரைட்டரிடம் சொல்லியிருந்தார்.

"இங்கே தாசனைப் பத்தி ஒவ்வொருத்தர் ஒவ்வொண்ணு சொல்றாங்க. அந்தப் பொண்ணு சாப்பிடாமக் கொள்ளாம உக்காந்து அழுதுக்கிட்டிருக்காம்."

குறம்பியம்மா எதுவும் பேசாமல் கண்மூடியபடி சுவர்மீது சாய்ந்திருந்தாள். அவளுடைய முகத்தில் புன்னகை படிப்படியாய் மறைந்து போயிற்று.

கிரிஜா கொண்டு வந்த டீ குடித்து, ஒரு தடவை வெற்றிலை போட்டுத் துப்பிய பிறகு கல்லுவம்மா எழுந்து போனாள். கோடி முண்டு சரசரக்க, காதுகளில் தங்கப் பாம்படம் பிரகாசிக்க, வாசூட்டியின் அம்மா நடந்து போனாள்.

"கண்ணு, பாட்டி கொஞ்சம் தலை சாய்க்கட்டும்."

கிரிஜா அவளைப் பிடித்து எழுந்திருக்க வைத்தாள். மீண்டும் இருண்ட, டார்ப்பெண்ணை..ன் மணமுள்ள அறை. உச்சிவெயிலின் களைப்பில் குறம்பியம்மாவின் கண்கள் அமைதியாக மூடலாயின.

# 42

சமுத்திரத்தில் வெகுதொலைவில் வெள்ளியாங்கல் பிரகாசித்துக் கொண்டிருந்தது. உறக்கச் சடவினால் தாசனின் தலை சுற்றியது. மூன்று நாட்களாக அவனுடைய கண்கள் கொஞ்சம்கூட மூடவில்லை. உறக்கத்தைச் சுட்டெரிக்க வேண்டும் போலிருந்தது அவனுடைய மனவேதனை. சந்திரிகாவை இழப்பதான இந்த நிமிடத்தில் பூமி பிளவுறுவதையும், சூரியன் வெடித்துச் சிதறுவதையும் காண அவன் விரும்பினான்.

சந்திரி ஒருக்காலும் சம்மதித்திருகக மாட்டாள். தாசனுக்குத் தெரியும். ஒரு பெட்டி நிறையத் தங்கம் கொடுக்கிறேன் என்று சொன்னாலும் தாசனைத் தவிர அவள் யாருடனும் போக மாட்டாள். அவளுடைய கண்ணீர் ஒருக்காலும் உலராது. தாசனுக்குச் சிறகுகள் இருந்திருக்குமானால் ஒரு கந்தர்வனைப் போல அவன் பறந்து சென்று சந்திரிகாவைக் கையிலேந்தி மனிதர்களின் கண்ணுக்கெட்டாத ஏதாவது ஒரு மலைச்சிகரத்திற்குப் பறந்து போயிருப்பானல்லவா?

வா என்று சொன்னால் அவள் வந்துவிடுவாள். தனக்காக வேண்டி மட்டுமே இதுவரையிலும் வாழ்ந்த அவள் இனிமேலும் தனக்காக வேண்டி வாழ்வாள். ஆனால், அவனுக்கு அவளை ஒரு பார்வை பார்க்கக்கூட முடியாது போய்விட்டது. சந்திரிகாவை பரதன் சிறைப்படுத்தி வைத்திருக்கிறார்.

சில மாதங்களுக்கு முன்புவரை தனது தோளில் கை இணைத்து நடந்தவர். எவ்வளவோ காலம் தனக்கு டீ போட்டுத் தரவும், தன்னோடு சேர்ந்து மகிழவும், சிரிக்கவும் செய்த லீலாக்கா. அவர்களுக்கு தாசன் இன்று உறவற்றுப்போனான்.

இனி எதுவும் செய்வதிற்கில்லை. நினைவில் கொள்ள... சந்திரிகாவைப் பற்றிய நினைவுகளைப் புதுப்பித்துக் கொள்ள... ஓர் ஆளை ஒளித்து வைத்துக்கொள்ளும் அளவிலான அவளுடைய கூந்தல்... தென்னம்பாளையின் நிறத்திலான அவளுடைய இடுப்பு... கால்களில் பாதசரங்களின் கிலுக்கம்... தாசன் என்பதான அவளுடைய உச்சரிப்பு எல்லாமே நினைவுகளாக மட்டுமே ஆகிவிட்டிருக்கின்றன.

வெள்ளியாங்கல்லின் மீது கண்களை நட்டு அவன் உட்கார்ந்திருந்தான். கடலலைகளின் எழுச்சியால் ஒரு நிமிடம் அது கண்ணிலிருந்து மறையும். மீண்டும் தென்படும். அங்கே புறாக்களைப் போலப் பறந்து திரியும் மனித ஆத்மாக்களை அவனால் காண முடிந்தது.

அருகில் ஓசையும் பேச்சுக்குரலும். தாசன் திடுக்கிட்டுத் திரும்பினான். பரதன் சாரும் சங்குமாஸ்டரும் அருகருகே நின்றிருந்தார்கள். தாசனின் மனது அலைக்கழிந்தது. எதற்காக பரதன் சார் வந்திருக்கிறார்? இந்தக் கடைசி நேரத்திலாவது அவருடைய மனம் மாறிவிட்டதா?

தாசன் எழுந்து நின்றான்.

"சந்திரி எங்கே?"

பரதன் கேட்டார். அவருடைய முகம் ஒரு வெறிபிடித்தவனைப் போல ஆகியிருந்தது.

"எங்கேண்ணேன்...?"

பரதன் மறுபடியும் கேட்டார். ஒன்றும் புரியாமல் தாசன் பரதனுடைய, சங்குமாஸ்டருடைய முகங்களை மாறிமாறிப் பார்த்தான்.

"உன்கூட வரல்லே அவ?" மாஸ்டர் தாசனைப் பிடித்துக் குலுக்கினார். "எங்கே அந்தப் பொண்ணை நீ ஒளிச்சி வச்சிருக்கே?"

தாசனுக்கு எதுவும் கேட்கவில்லை. அவனுடைய காதுகள் பஞ்சடைந்துபோயிருந்தன. கடற்காற்றின் போக்கில் அவன் சரிந்து விழுந்துவிடுவான் போலத் தோன்றியது.

"தாசா, உண்மையைச் சொல்லு, நீ பார்க்கலே சந்திரியை?"

"இல்லே."

பரதன் திகைத்தார். அவருடைய சட்டை குளித்தது போல வியர்வையில் மூழ்கியது. அவர் தாசனின் முகத்தை மறுபடியும் பார்த்தார். பெருமூச்சின் தீவிரம் ஒவ்வொரு நிமிடமும் அதிகரித்துக்கொண்டே இருந்தது.

"இனிமே எங்கே போய்ப் பார்க்கிறது?" சங்குமாஸ்டர் யாரிடமென்றில்லாமல் கேட்டார். சந்திரிகா வரவேண்டிய இடம் தாசன்தான். அவனருகில் அல்லாமல் வேறெங்கே போயிருப்பாள் அவள்?

இனி எங்கே போவது?

பரதனுடைய பங்களாவில் கூட்டம் சேர்ந்திருந்தது. வராந்தாவிலும் முற்றத்திலும் எங்கும் ஆட்கள். எல்லோருடைய கண்களும் தாசன் மீது பதிந்தன. அதன் பின்னர் மௌனம். உள்ளேயிருந்து லீலாவின் அழுகை கேட்டுக்கொண்டிருந்தது. கோயில்கள் தோறும் அவள் நேர்ந்துக் கொண்டிருந்தாள்.

"என்னாச்சி உத்தமா?"

யாரோ படியேறி வந்தார்கள்.

"கோயில் குளத்திலும் முங்கிப் பார்த்தாச்சி?"

"இனி எந்தக் குளத்திலே கெணத்திலே முங்கிப் பார்க்கிறது... கடவுளே..."

"அல்ஸனாரோட கெணத்திலேயும் பார்க்கலாம்."

உத்தமன் உடுத்தியிருந்த ஈர முண்டின் தலைப்பைக் கூட்டிப் பிடித்துப் பிழிந்தான்.

ஆட்கள் வருவதும் போவதுமாக இருந்தார்கள். வெயில் ஆறத் தொடங்கிற்று. முற்றத்தில் வந்த காலிலேயே நின்றிருந்தான் தாசன். எத்தனையோ மணிக்கணக்காக அவன் அப்படி நிற்கிறான்.

"உடுத்தினதோடே ஓடிப்போயிட்டா. நகையோ பணமோ எடுத்துக்கிடல்லே. என்ன அதோட அர்த்தம்?"

யாரோ சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

அந்தி ஆகிவிட்டதால் தேடிப்போனவர்கள் ஒவ்வொருவராகத் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு திரும்பி வந்தார்கள். முற்றத்தில் நிழல்கள் பெருகின. பரதனுடைய பங்களா ஓர் இழவு வீடாக மாறிக்கொண்டிருந்தது. . . . .

பஞ்சடைந்த காதுகளில் வெள்ளியாங்கல்லிலிருந்து வரும் காற்றில் சந்திரிகாவின் குரல். பாதசரங்கள் கிலுங்கியிருக்கின்றன.

"பெரியவனாயிட்டா தாசன் என்னைக் கல்யாணம் பண்ணிக்குவீங்களா?"

தாசனின் கால்கள் இயங்கின. தாலியாப் பூக்களின் ஆளுயரத்திலான செடிகள், கிளிஞ்சல் பதித்த நீண்ட நடைபாதை வழியாக அவன் நடந்தான். பின்புறம் பரதனின் பங்களா இருட்டில் மறைந்தது.

சந்திரிகா எங்கிருக்கிறாள் என்று தாசனுக்குப் புரிந்தது. தேடிப் பயனில்லை. யாராலும் அவளைக் கண்டுபிடிக்க முடியாது. தாசனுக்கு மட்டும் அறிமுகமான, அவனுடைய கண்களுக்கு மட்டும் தென்படுகிற ஓர் உலகத்தில் இருக்கிறாள் அவள். ஆத்மாக்கள் தும்பிகளைப் போன்று உலவித் திரியும் வெள்ளியாங்கல்லில். . . . .

சந்திரி, நீ எங்கே என்று எனக்குத் தெரியும். . . .

மய்யழி மக்கள் எல்லோருமே சந்திரிகாவுக்காகப் பிரார்த்தித்தார்கள்.

ஆனால், அதற்குப் பிறகு எவரும் சந்திரிகாவைப் பார்க்கவில்லை.

மேகம் மூடிய விடிகாலைகளில் கிழக்கிலிருந்து தவழ்ந்து வரும் இளம் காற்றில், தாசனுக்கு மட்டுமே அவளுடைய பாதசரங்களின் கிலுக்கம் கேட்டுக் கொண்டிருந்தது . .

★ ★ ★

காலம் கடந்துபோய்க்கொண்டிருந்தது. சந்திரிகாவுக்கென்று கட்டிய பங்களாவில் அவளில்லாமல் இரண்டு அனாதைப் பிணங்களைப் போல பரதனும் லீலாவும் வாழ்ந்திருந்தார்கள். கடைசியில் ஒரு நாள் லீலா என்றென்றைக்குமாகக் கண் மூடினாள்.

தன்னுடைய பெரிய பங்களாவில் தனித்து, மோட்சம் கிட்டாத ஒரு துர்தேவதையைப் போல, பரதன் இப்போதும் வாழ்ந்துகொண்டிருக்கிறார்.

# 43

குப்போறல் கிட்டு பென்ஷன் வாங்குவதற்காக இடையிடையே பாண்டிச்சேரி போய்க்கொண்டிருந்தான். ஒரு சமயம் பாண்டிச்சேரியிலிருந்து திரும்பி வந்த அவன் மய்யழி மக்களைத் திகைப்பிலாழ்த்திய ஒரு செய்தியைக் கொண்டு வந்தான்.

"ப்ரொகிபிஷன் வரப்போகுது, மய்யழியிலே."

"அப்படீன்னா என்ன கிட்டு?"

உன்னிநாயர் வினவினார்.

"அப்படீன்னா மய்யழியிலே இனிமே ஒரு கள்ளுக்கடைகூட இருக்காது. இனிமே யாரும் இங்கே குடிக்க முடியாது."

கிட்டு பணத்தைக் கொடுத்துவிட்டு, தன்னுடைய தொப்பியை எடுத்துத் தலையில் வைத்துக்கொண்டு நடந்தான். கால்சராயும் தொப்பியும் அணிகின்ற கடைசி சட்டைக்காரனாயிருந்தான் அவன். மேயர் செக்குமூப்பன், ஸெர்ஜாம் ஆம் றெத்ரேத் குஞ்ஞிக்கண்ணோன், ஸைக்ரத்தோர் கருணன் முதலியோர் என்றைக்கோ பரலோகம் போய்ச் சேர்ந்துவிட்டார்கள் அல்லவா.

அவன் சொல்றது உண்மைதானா?

சாக்குக்கட்டியால் கணக்கு எழுதிக்கொண்டு மேசைக்கு முன்னால் இருந்த உன்னிநாயர் திகைப்பிலாழ்ந்தார்.

"உண்மையா இல்லாம சொல்லமாட்டாங்கல்ல...!"

குஞ்ஞானனும் திகைத்துப்போனான்.

மறுநாள் மய்யழியில் எம்மெல்லே சங்கரன் முதலாளி செய்தியை உறுதிப்படுத்தினார். அப்போது இடி இழுந்தது போல உன்னிநாயர் உட்கார்ந்துவிட்டார், அவரால் அசைய முடியவில்லை. குஞ்ஞானனின் முகம் காகிதம் போல வெளிறிப்போயிற்று.

"முடிஞ்சது! எல்லாமே முடிஞ்சது!"

உன்னிநாயர் தலையில் அடித்துக்கொண்டார்.

நினைவு தெரிந்த நாள்முதல் குஞ்ஞானன் குடிக்கிறான். மழையானாலும் காற்றானாலும் இருட்டும்போது அவன் கடைக்கு வந்துவிடுவான். அவன் மட்டுமல்ல. அவனைப் போன்று மற்ற எத்தனையோ மய்யழி மக்களும்தான்.

"மகாபாவிங்களா. நீங்க வெள்ளைக்காரங்களைத் துரத்தியடிச்சது, மத்தவங்க கொஞ்சம் தொண்டையை நனைச்சிக்கிறதுகூட இல்லாமல் செய்யவா?"

குஞ்ஞானன் கள்ளுக்கடைக்கு முன்பாக நடந்துபோன ஒரு கதரணிந்தவரை நேரடியாக சாப வசனங்களால் சாடினான்.

"படைச்சவனுக்கே பொறுக்காது நீங்க செஞ்சது, பாத்துக்கிடுங்க..."

"காலம் மாறும்."

ஒரு மூலையில் உட்கார்ந்து அமைதியாகக் குடித்துக்கொண்டிருந்த கேளுமாஸ்டர் யாரிடமென்றில்லாமல் சொன்னார்.

மதுவிலக்கு வருவதான செய்தி காட்டுத் தீ போன்று பரவியது. கேட்டவர் கேட்டவர் திகைத்து நின்றார்கள். மதுபானம் இல்லாத மய்யழி! குடிக்காத மய்யழி மக்கள்! ஒரு முரண்பாடான நிலையல்லவா அது? மய்யழியில் மதுவிலக்கு வருவது ஓர் அற்ப நிகழ்ச்சியல்ல. அதற்கு வரலாற்று ரீதியிலான ஒரு முக்கியத்துவம் ஏற்பட்டிருந்தது. மய்யழியின் தனித்தன்மைகளில் ஒன்றாயிருந்தது அங்கே பாய்ந்தோடிய சாராயம். சாராயத்தின் கதை க்லெமாம்துரையின் தலைமுறைக்கு எவ்வளவோ முன்புதொடங்குகிறது. பாம்பாக மாறிய குபேரன்செட்டியார், சேட்டுகள், ஜாலவித்தைக்காரர்களான கொங்கணிகள், மய்யழித் திருவிழாவுக்குக் கூட்டமாக வரும் தீர்த்தாடனக்காரர்கள்... இவர்களெல்லாம் பல்வேறு உத்தியோகங்களுடன் மய்யழிக்கு வந்தவர்கள். ஆனால், அவர்களுக்கெல்லாம் பொதுவான ஒரு குறிக்கோளாக இருந்தது... மய்யழியில் பாயும் சாராயம்.

அவ்வாறு கடந்த காலத்தின் விலங்குகளை ஒவ்வொன்றாக மய்யழி உடைத்து எறிந்துகொண்டிருந்தது.

மதுவிலக்கு நடைமுறைக்கு வந்த நாள் கிரகணம் பிடித்த நாள்

போன்று களையிழந்திருந்தது. சாலைகளில் வழக்கமான ஆள் நடமாட்டம் இல்லை. டாக்கீசில் செகண்ட் ஷோ நடக்கவில்லை. கடைகள் நேரத்தோடேயே அடைக்கப்பட்டுவிட்டன. அந்தி கழிந்ததும் மய்யழி மௌனமாயிற்று.

உன்னிநாயர் போய் அடைத்திருந்த தனது கடைக்கு முன்பாக நெடுநேரம் நின்றார். அன்று அவருக்கு நடப்பதற்கு ஒரு கைத்தடியின் உதவி தேவைப்பட்டது. . . . . .

பின்னர் ஒவ்வொரு நாளும் அவர் கப்பல் வருவதற்காகக் காத்திருந்தார். குறம்பியம்மாவைப் போல அவரும் கப்பலின் சங்கொலிக்காக எப்போதும் காதைத் தீட்டிக்கொண்டிருந்தார்.

"உன்னிநாயரே, உங்க கப்பல் வந்திரிச்சி?"

ஊர்க்காரர்கள் விசாரிப்பார்கள். உள்ளுக்குள் ஆற்றாமையை அடக்கிக்கொண்டு தன்னம்பிக்கையுடன் அவர் சொல்வார்.

"கப்பல் வரத்தான் செய்யும். நான் போகத்தான் போறேன்."

முதலில் அனுதாபப்பூர்வமாக இருந்தது மய்யழி மக்கள் அவ்வாறு கேட்டது. பின்னர் அவர்கள் பரிகசிக்கத் தொடங்கினார்கள்.

"உன்னிநாயரே! கப்பல் வந்திருக்கு."

பள்ளிக்கூடத்துக்குப் போகும் குழந்தைகள் கூப்பாடு போடும். அப்போது கிழவர் உன்னிநாயர் குழந்தைகளுக்கு நேராகத் தடியை ஓங்குவார். குழந்தைகள் ஓடிப்போவார்கள்.

என்னவானாலும் கப்பல் வருமென்று அவர் நம்பினார். மூப்பன்துரை வாழும் மண்ணிலேயே சாக வேண்டும் என்பதாக கடைசிக் காலத்தில் அவருடைய ஒரே ஆசை.

கப்பலின் சங்கொலிக்காகக் காதைத் தீட்டிக்கொண்டிருந்தவர்கள் மேலும் பலர் இருந்தார்கள். குஞ்ஞிச்சிருதை, நாணி, தேவி, குஞ்ஞானன், ஆசாரி ராமன். . . . . அப்படி எத்தனையோ பேர், ஒரு நாள் தங்கள் தங்களுடைய முன்னோர்களின் பூமிக்கு அழைக்கப்படுவார்கள் என்று அவர்கள் நம்பினார்கள். சிலர், குறம்பியம்மாவைப் போலிருந்தவர்கள், மோட்சத்தை எதிர்பார்ப்பது போல வெள்ளைக்காரர்களின் மறுவரவுக்காகக் காத்திருந்தார்கள். கிறிஸ்துவர்கள் ஏசுகிறிஸ்துவின் மறுவரவுக்காகக் காத்திருப்பது போன்றதான ஒரு காத்திருப்பாயிருந்தது அவர்களுடையது.

★ ★ ★

பிரான்சிலிருந்து விடுப்பில் வந்த வாசூட்டியை மய்யழி மக்கள் பலருக்குஅடையாளம் தெரியாமல் போயிற்று. ஒரு காலத்தில் போலீசாரின், அடியாட்களின் அடியும் உதையும் வாங்கியபடி அரைப்பட்டினியாயிருந்த வாசூட்டி அல்ல இது. அவன் பருத்து சிவந்திருந்தான். கைத்தண்டையில் தங்கச் சங்கிலியிட்ட வாட்ச். வெள்ளைசில்க்கில் பேண்ட்டும் புஷ் ஷர்ட்டும். கையில் எப்போதும் மாலும்பியின் படமுள்ள சிகரெட் டின் தென்பட்டது.

வந்த நாளன்றே வாசூட்டி விஞ்ஞானபோஷினி வாசகசாலைக்குச் சென்றான்.

"தாசனில்லே இங்கே?"

"இல்லே"

ஜயராமன்தான் பதில் சொன்னான்.

"எங்கே அவன் தங்கியிருக்கிறது?"

"தெரியலே."

வாசூட்டி ஜயராமனின் முகத்தைப் பார்த்துச் சற்றே சிரித்துவிட்டு இறங்கி நடந்தான். அவன் நடந்தபோது ஆட்கள் விலகி வழிவிட்டார்கள். பலர் பணிவுடன் நின்றிருந்தார்கள். அப்படி நிற்பவர்களின் கைகளில் ஒன்றின், இரண்டின், ஐந்தின் நோட்டுகள் வந்து விழுந்துகொண்டிருந்தன. கடற்கரையில் வெள்ளியாங்கல்லைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்த தாசனின் அருகில் அவன் போய் நின்றான்.

"தாசனுக்கு என்னைத் தெரியுதா?"

"நீ எப்போ வந்தே?"

"இன்னிக்கு."

வாசூட்டி தாசனை உச்சி முதல் உள்ளங்கால்வரை ஒருமுறை பார்த்தான். பின்னர் அவன் சூடாறிக்கொண்டிருந்த பாறையில் தாசனுடன் சேர்ந்து உட்கார்ந்தான்.

"எல்லாத்தையும் நான் கேள்விப்பட்டேன். சந்திரியோட கதையைக் கேட்டு பிரான்சில் இருந்தபடி நான் அழுதேன்."

தாசனுடைய கண்கள் அப்போதும் வெள்ளியாங்கல்லின் மீதே இருந்தன.

"உன்னை என்னாலே பார்க்கவே முடியலே தாசா. என்கூட வந்திரு. போட்டுக்க ஷர்ட்டும் வேட்டியும் நான் வாங்கித் தர்றேன். வீட்டுக்குப் போகலேன்னா வேண்டாம். என்கூட இருந்துக்கோ."

"வாசூட்டி, நீ போயிரு."

"நீ வராம நான் போக மாட்டேன்."

"நான் எங்கே வர்றது? இதுதான் என்னோட வீடும் உலகமும்."

"இந்தக் கடற்கரையா?"

"வாசூட்டி, நீ வெள்ளியாங்கல்லைப் பத்திக் கேள்விப்பட்டதில்லே? பிறக்கிறதுக்கு முன்னாலே நம்ம ஆத்மாக்கள் அங்கேதான் இருந்திச்சி. வெள்ளியாலே செஞ்ச அந்தப் பாறை பிறப்புக்கும் இறப்புக்கும் இடையிலே ஓய்வெடுக்கிற இடம். அங்கே ஆத்மாக்களுக்கு சுமை இல்லே. தும்பியைப் போல நமக்கு அங்கே பறக்க முடியும். வாசூட்டி, வெள்ளியாங்கல் என்னைக் கூப்பிடுது. . . ."

"தாசா!"

"வாழ்ந்து நான் தளர்ந்திருக்கேன். வாழ்க்கையோட சுமை இல்லாம வெள்ளியாங்கல் மேலே நான் கொஞ்சம் ஓய்வெடுக்கிறேன்."

அதற்குப் பிறகு தாசன் பேசவில்லை. வெள்ளியாங்கல்லின் மீது பதிந்திருக்கிற கண்களுடன் அவன் மௌனமாக இருந்தான். அவனுடைய காதுகளில் வெள்ளியாங்கல்லின் அழைப்புக்குரல் மட்டுமே இருந்தது. அது மட்டும்தான்.

காலம் மீண்டும் கடந்துகொண்டிருந்தது. சுதந்திரத்திற்குப் பிறகு மய்யழியின் முகச்சாடைகள் ஒவ்வொரு நாளும் மாறிக்கொண்டிருந்தன. இந்த மாற்றங்களுக்கிடையில் மய்யழி மக்களின் தலைவிதி திருத்தி எழுதப்பட்டது. குஞ்ஞிச்சிருதை இன்று தாவீதுதுரைக்காகக் காத்து நிற்கவில்லை. மய்யழியில் புதிதாகத் தொடங்கிய துணிமில்லில் வேலை செய்த அவள் தன்னுடைய வாழ்க்கைக்குப் புதிய உருவம் கொடுத்தாள். பருகாதி செட்டியப்பாவுக்காகக் காத்திருந்த நாணி கண் மூடினாள். தேவி வீட்டு வேலையும் பிறவும் செய்து செட்டியப்பாவின் குழந்தைகளை

*வளர்த்தாள். உன்னிநாயரும் குஞ்ஞானனும் காலத்திரைக்குப் பின்னே மறைந்துபோனார்கள்.*

*ஒரு காலத்தில் குண்டும் குழியும் நிறைந்திருந்த சாலைகள் தாரிடப்பட்டு வலுவாகிவிட்டன. இன்று குஞ்சக்கன் எரிய வைக்கும் எண்ணெய் விளக்குள் இல்லை. மின்விளக்குகள் மய்யழி மக்களுக்கு இன்று வெளிச்சத்தை வினியோகித்துக்கொண்டிருக்கின்றன. ஷப்பன்துரையின் பங்களாவில் இன்று குடியும் விருந்தும் இல்லை. நள்ளிரவுதாண்டும்போது குடித்து உன்மத்தரான வீரபுருஷன்மாரை ஏற்றிச்செல்லும் குதிரைவண்டிகளின் வரிசை இன்று ற்யூ த் றெஸிதாய்ஸ் வழியாகச் செல்வதில்லை. குடித்துத் தடுமாறும் பட்டாளத்துக்காரர்களின் மய்யழி. சாராயம் பாய்ந்தோடும் மய்யழி, கால்சராய் தொப்பிக்காரர்களின் மய்யழி... அது இன்று மிகத் தொலைவில்.*

*ஆள் நடமாட்டமில்லாத லெஸ்லீதுரையின் பங்களா ஒரு நாள், காலத்தின் போர்வீரனைப் போல சமுத்திரத்திலிருந்து வந்த காற்றில் அலைக்கழிந்தது. மழைக்காலம் வந்ததும் பெருமைக்குரிய லெஸ்லீதுரையின்பங்களா ஒரு வெறும் மண்குவியலாக மாறியது.*

*குறம்பியம்மாவின சமகாலத்தவர்களான லெஸ்லீதுரை, செக்குஷப்பன், ஸெர்பூாம் ஆம் றெத்ரேத் குஞ்ஞிகண்ணேன் முதலியோர் மரணமடைந்து எத்தனையோ ஆண்டுகள் கழிந்து விட்டன அல்லவா. அது மட்டுமல்லாமல் குஞ்சக்கன், குஞ்ஞானன், உன்னிநாயர் முதலிய எத்தனையோ மய்யழி மக்களும் இதற்குள்ளாக மண்மூடிப்போனார்கள்...*

*காலம் மய்யழி ஆற்றின் கரையோரம் அரங்கேற்றிய மகாநாடகம் முடிவுக்கு வந்தது. அந்த மகாநாடகத்தின் நேரடி சாட்சியான குறம்பியம்மா நரைதிரை முதிர்ந்து தன்னுடைய இறுதி நாளுக்காகக் காத்திருந்தாள்.*

*காதுகளைத் தவிர மற்ற எல்லாப் புலன்களும் அவளுக்கு இல்லாதாகிவிட்டிருந்தன.*

*கடைசியில் குறம்பியம்மாவின் நாளும் வந்தது. கௌசுவம்மாவும் கிரிஜாவும் அவளுக்குத் தண்ணீர் நனைத்துக் கொடுத்தார்கள். பார்வை இழந்த கண்கள் மெல்லத் திறந்தன. பலவீனமான குரலில் அவள் கேட்டாள்.*

*"கப்பல் வந்தாச்சா?"*

*"இல்லே."*

*அவளுடைய காலடியிலிருந்த கிரிஜாவின் கண்கள் நிறைந்து தளும்பின.*

*"கப்பல் இனிமே வராது."*

*தன்னுடைய பொடிடப்பியை இறுகப் பிடித்திருந்த குறம்பியம்மாவின் கை தளர்ந்தது. யானைத் தந்தத்தில் செய்த எண்ணற்ற கட்டுக்கதைகளின், இதிகாசங்களின் செப்புக்குடமான டப்பி கீழே விழுந்து உடைந்தது. பஞ்சடைத்த கண்கள் அமைதியாய் அடங்கின. அப்போது இரண்டு சொட்டுக் கண்ணீர் அங்கே திரண்டு வந்தது.*

*பரிசுத்த கன்னிமேரியின் தேவாலயத்தில் துக்க மணிகள் மெல்ல முழங்கின...*

★ ★ ★

***மய்யழி ஆற்றின்மேல் சூரியன் உதித்தெழுந்தான். கிழக்கிலிருந்து பலிகாக்கைகள் மய்யழி நோக்கிப் பறந்து வந்தன. தேவாலயத்திலிருந்து விடிகாலை மணி முழங்கிக்கொண்டிருந்தது.***

அப்போது தாமஸ் ரைட்டர் கண் திறந்தார்.

இரண்டு நாட்களாக அவர் நினைவற்றுப் படுத்திருந்தார். கண் திறந்த ரைட்டர் நாலாபக்கமும் பார்த்தார். சுற்றிக் கூடியிருந்தவர்களை அடையாளம் கண்டுபிடிக்க அவருக்கு சிரமமாக இருந்தது.

"தண்ணீ. . ."

ரைட்டருடைய நீலம் பூத்த உதடுகள் அசைந்தன. காலடியில் உட்கார்ந்திருந்த கௌசல்யா கோப்பையைக் கையிலெடுத்தாள். கிரிஜா அப்பாவின் தலையை உயர்த்திப் பிடித்தாள். கௌசல்யா கரண்டியினால் தண்ணீர் எடுத்து அவருடைய தொண்டையை நனையச் செய்தாள்.

ரைட்டருடைய பாதங்கள் பனிக்கட்டியைப் போலக் குளிரத் தொடங்கியிருந்தன. அவருடைய கண்கள் மீண்டும் ஒருமுறை நாலாபக்கமும் சஞ்சரித்தன. அவர் யாரையோ தேடுவதாகத் தோன்றியது. கடைசியில் ரைட்டரின் பார்வை அச்சுவில் பதிந்தது.

"தாசன். . .!"

கைவிரல்களின் வழியே குளிர்ச்சி மேல்நோக்கி ஏறியது.

"தாசனைக் கூப்பிடு. நான் தோத்திட்டேன்னு சொல்லு. . ."

அதற்குப் பிறகு எதுவும் பேசாமல் கண்மூடி அவர் படுத்திருந்தார். அச்சு வெளியே போனான். வழியில் தென்பட்ட எவரையும் பொருட்படுத்தாமல் அவன் வேகமாக நடந்தான். அவனுடைய உதட்டில் ஒரேயொரு பிரார்த்தனை மட்டுமே. . . .தாசன் வருவதற்கு முன்பு ரைட்டர் கண்மூடிவிடக் கூடாது!

அச்சுவுக்குத் தெரியும் தாசன் எங்கிருக்கிறான் என்று. ஓடிப் பெருமூச்சு விட்டுக்கொண்டு அவன் கடற்கரையைச் சென்றடைந்தான். சட்டென்று அவனுடைய கால்கள் அசைவற்று நின்றன.

தாசன் தினமும் உட்கார்ந்திருக்கும் இடம் வெறுமையாய் இருந்தது.

எல்லையில்லாமல் பரந்து கிடக்கும் சமுத்திரத்தில், வெகுதொலைவில் ஒரு பெரிய கண்ணீர்த் துளிபோல் வெள்ளியாங்கல் தென்பட்டது. அங்கே அப்போதும் ஆத்மாக்கள் தும்பிகளாகப் பறந்துகொண்டிருந்தன. அந்தத் தும்பிகளில் ஒன்று தாசனாக இருந்தது.

**Laser typeset at D.V. Graphic, Karol Bagh, New Delhi-5, and Printed at The Central Electric Press, Naraina Indl. Area Phase-I, New Delhi-28**